ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பூர்வாசார்யர்களின்
வைபவங்களைத் தொகுத்துக் கூறும்

# ஆசார்ய வைபவமஞ்ஜரி

(இரண்டாம்பாகம்)

---


தொகுப்பாசிரியர் & கிடைக்குமிடம் :

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்

[ஸுதர்சனர்]

ஆசிரியர் : ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.


---


ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம
சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்படுகிறது.




---


விலை ரூ. [illegible] 2002 [தபால்கூலி தனி

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பூர்வாசார்யர்களின்

வைபவங்களைத் தோகுத்துக் கூறும்

# ஆசார்ய வைபவமஞ்ஜரி

(இரண்டாம் பாகம்)


கிடைக்குமிடம் & தோகுப்பாசிரியர்

**ஸுதர்சனர்**

S. **கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்**, அட்வகேட்

5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 620 017.



ஸ்ரீ.ரா.ஸ்ரீ.கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.





**விலை ரூ.** **தபாற்கூலி தனி**

**2002**

ஸ்ரீநிவாஸம்பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 17.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஆசார்ய வைபவ மஞ்ஜரீ

## இரண்டாம் பாகம்

[எம்பெருமானுர் சிஷ்யர்கள் தொடக்கமாக உள்ள ஆசார்யர்களின் பெருமையை விளக்கும் பகுதி]

## கூரத்தாழ்வான் வைபவம்

### கூரத்தாழ்வான் தனியன்

ஸ்ரீவத்ஸசிஹ்நமிஶ்ரேப்₄யோ நம உக்திமதீ₄மஹி |
யதுக்₃தயஸ்த்ரயீகண்டே₂ யாந்தி மங்க₃ளஸூத்ரதாம் ||
[ஸ்ரீரங்க₃ராஜஸ்தவம் 1-1]

[எவருடைய ஸூக்திகள் வேதத்தின் கழுத்தில் கட்டப்பட்ட தாலிபோல் விளங்குகின்றனவோ, அத்தகைய ஸ்ரீவத்ஸாங்கமிஶ்ரரைக் குறித்து 'நம:' என்னும் சொல்லை ஓதுகிறோம்.]

எம்பெருமானுருடைய சிஷ்யர்களில் முதல்வராக எண்ணத் தகுந்த கூரத்தாழ்வான், எம்பெருமானுர் அவதரிப்பதற்கு எட்டு வருஷம் முன் ஸௌம்ய வருஷத்தில் தைமாதம் ஹஸ்தநக்ஷத்திரம் க்ருஷ்ண பக்ஷ பஞ்சமி திதி வியாழக்கிழமையில் 'அநந்தர்' என்னும் திருநாமமுடைய கூரத்தாழ்வாருக்கும், அவருடைய தே₃வியான பெருந்தேவி நாயகிக்கும் குமாரராய் யஜுஶ்ஶாகை₂யில் ஆபஸ்தம்ப₃ ஸூத்ரத்தில் ஹாரீத கோ₃த்திரத்தில், 'ஸ்ரீவத்ஸாங்கர்' (திருமறுமார்பன்) என்னும் திருநாமத்துடன் காஞ்சிக்கு அருகிலுள்ள "கூரம்" என்னும் அக்₃ரஹாரத்தில் ராமபிரானுடைய அம்ஶமாக அவதரித்தவர். இவருடைய வைப₄வம் வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாதது என்பது

"அர்வாஞ்சோ யத்பத₃ஸரஸிஜத்₃வந்த்₃ வமாஶ்ரித்யபூர்வே
மூர்த்₄நா யஸ்யாந்வயமுபக₃தா தே₃ஶிகா முக்திமாபு:|
ஸோऽயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தா₂ம்
யத்ஸம்ப₃ந்தா₄த் அமநுத கத₂ம் வர்ண்யதே கூரநாத₂:||"

[பின்னுள்ள ஆசார்யர்கள் எவருடைய திருவடித்தாமரையிணையோடு ஸம்பந்தம் பெற்றும், முன்னுள்ள ஆசார்யர்கள் எவருடைய திருமுடியோடு ஸம்பந்தம் பெற்றும் மோக்ஷம் அடைந்தனரோ அந்த ராமானுஜ முனிவரே எவருடைய ஸம்பந்தத்தாலே தனக்கு மோக்ஷம் கைப்பட்டதாகக் கருதினரோ, அத்தகைய கூரத்தாழ்வான் எப்படி வர்ணிக்கப்படுவார்?] என்னும் ஶ்லோகத்தில் பூர்வர்களால் அநுஸந்தி₄க்கப்பட்டது. இவருடைய தே₃வி ஆண்டாள். குமாரர்கள் ஸ்ரீபராஶர ப₄ட்டரும் ஸ்ரீவேத₃வ்யாஸப₄ட்டர் என்கிற ஸ்ரீராமப்பிள்ளையும். க்ரிமிகண்ட₂னுடைய ஸத₃ஸ்ஸிலே பரதத்வநிர்ணயம் செய்து நம் த₃ர்ஶநத்திற்காகத் (மதத்திற்காகத்) தம் த₃ர்ஶனத்தைக் (கண்ணைக்) கொடுத்த மஹாநுப₄ாவர் இவர். எம்பெருமானாராலே தமது பவித்ரமாக அபி₄மானிக்கப்பெற்றவர் இவர். காஶ்மீரம் சென்று போ₃த₄ாயநவ்ருத்தியை எம்பெருமானாரோடு சேர்ந்து ஸேவித்து, ஸ்ரீப₄ாஷ்யம் பட்டோலைகொள்ள எம்பெருமானாருக்கு உசாத்துணையாயிருந்தார். ஆசார்யலக்ஷண சிஷ்யலக்ஷணங்களுக்கு எல்லைநிலமாயிருந்தவர் இவர் ஒருவரே. ''பஞ்சஸ்தவம்'' எனும் ஐந்து துதிநூல்கள் இவர் அருளியவை. இவர் வைப₄வத்தின் விரிவு யதிராஜவைப₄வத்திலும், பட்டர் வைப₄வத்திலும் காணலாம்.

1. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் இளையாழ்வாரை ஆஶ்ரயித்தல். — முதல் பாகம் பக்கம் 212 காண்க.

2. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்.— (முதல் பாகம் பக்கம் 159 ஐதிஹ்ய நிர்வாஹம் 3 தொடக்கம்) அநந்தரம் ராமானுசனும், கூரத்தாழ்வானுக்கும், முதலியாண்டானுக்கும் மீமாம்ஸா ஶாஸ்த்ரயுக்₃மஶ்ரமம் பண்ணுவித்துக் கொண்டிராநிற்க.

3. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 108, 110, 111 பகுதிகள் காண்க.

4. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 233, 234 பகுதிகள் காண்க.

5. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 241, 242, 243 பகுதிகள் காண்க.

6. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம்.— முதல் பாகம் பக்கம் 249, 250 பகுதிகள் காண்க.

7. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 263 முதல் 272 வரை பகுதிகள் காண்க.

8. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 278 முதல் 284 வரை பகுதிகள் காண்க.

9. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 304, 2 வது பாரா.

10. பெரியதிருமுடியடைவு:— ராமார்யபூ₄தரான கூரத்தாழ்வானுக்குத் திருவவதார ஸ்த₂லம் தொண்டை மண்டலத்தில் பெருமாள்கோயில். ப்ரதே₃ஶம்-ப்₃ரஹ்ம தே₃ஶத்தில் கூரமென்கிற அக்₃ரஹாரம். திருநக்ஷத்ரம் ஸௌம்ய வருஷம் தை மாஸம் பஞ்சமி வியாழக்கிழமை ஹஸ்தம். திருத்தகப்பனுர் அநந்தர். திருத்தாயார் பெருந்தேவி நாயகி. குலம் வடமாள். குடி கூரம். ஹாரீதகோத்ரம். யஜுஶ்ஶாகை₂, ஆபஸ்தம்ப ஸூத்ரம். திருநாமங்கள் கூரத்தாழ்வான், கூரேஶர், கூராதி₄பர், கூராதி₄பதி, கூரநாதர், ஸ்ரீவத்ஸசிஹ்நர், ஸ்ரீவத்ஸாங்கர். தேவியார் ஆண்டாள். குமாரர் பட்டரும், ஸ்ரீராமப்பிள்ளையும், ஆசார்யர் எம்பெருமானுர். திருவாராதனம் அழகிய சிங்கர். இருப்பிடம் கோயில். இவருக்கு வேதஶாஸ்த்ர ப்ரப₃ந்த₄ங்கள் ஸாதித்தருளினவர் திருத்தகப்பனுர். ஸ்ரீபா₄ஷ்யாதி₃ க்₃ரந்த₂ங்களும் ஸகல ரஹஸ்யார்த்த₂ங்களும் ஸாதித்தருளினவர் எம்பெருமானுர். இவர் செய்தருளின க்₃ரந்த₂ங்கள் வரத₃ராஜஸ்தவம், ஸுந்த₃ரபா₃ஹுஸ்தவம், அதிமானுஷஸ்தவம், ஸ்ரீவைகுண்ட₂ஸ்தவம், ஸ்ரீஸ்தவம், யமகரத்நாகரம், கத்₃யத்ரய வ்யாக்₂யானம். இவர் மந்த்ரார்த்த₂த்துக்காக மாஸோபவாஸம் பண்ணினுர். மூன்று குழிகளுங்கடந்து விஹிதவிஷயத்யாக₃ம் பண்ணினுர். எம்பெருமானுருக்கு ஸகோ₃த்ரருமாய், பவித்ரமுமாயிருப்பர். ப₄ட்டர் திருவம்ஶத்துக்கெல்லாம் டஸ்த₂ர். இவருக்கு நம்பெருமாள் ஏழுதரத்துக்கு ஶாபானுக்₃ரஹ ஸாமர்த்₂யம் ஸாதி₃த்தருளினுர். ஶிஷ்யர் பிள்ளைப்பிள்ளையாழ்வானும், திருவரங்கத்தமுதனுரும், நாலூரான் முதலானவர்களும். இவர் நூற்றெட்டு திருநக்ஷத்ரமெழுந்தருளியிருந்தார்.

11. வார்த்தாமாலை:— 59 c. ப்ரபத்தியை ஸக்ருத் என்பர் ஆழ்வான். [விவரணம் — பெரியவாச்சான் பிள்ளையின் தனிஶ்லோகத்தில் ''ஸக்ருதே₃வ'' [ரா-யு 18-33] என்னும் ஶ்லோகத்தின் வ்யாக்₂யானத்தொடக்கத்தில் வாக்யங்களோடு ஸமந்வயப்படுத்திப் பின்வருமாறு பொருள் கொள்ள வேணும்—''ஸஹஸா'' என்னும் ஶப்₃த₃த்துக்கு பதிலாக ''ஸக்ருத்'' என்னும் ஶப்₃த₃ம் வருவதுண்டாகையாலே, ஸக்ருத் என்றதை ஸஹஸா (உடனே) என்று பொருள் கொண்டு ''ஸக்ருதே₃வ ப்ரபந்நாய'' என்றது சடக்கென ஶரணம் புகுந்தவனைச் சொல்லுவதாகக் கொள்ள வேணும். அதாவது-தன்னுடைய தகுதியின்மையைப் பார்த்துத் தயங்காமல், எம்பெருமானுடைய கு₃ணத்தை நம்பிச் சடக்கென ப்ரபந்நனானான் என்று கருத்து. இது கூரத்தாழ்வான் நிர்வாஹம்.

12. வார்த்தாமாலை:— 114 வார்த்தை & விவரணம். நம்பி ஸ்ரீகோ₃வர்த்த₄நதா₃ஸர், ''அர்ஜுநன் ப்ரஶ்நம் பண்ண, ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வஶக்தியுமாயிருக்கிறவன் பண்டுபோல் சொல்ல மாட்டேனென்றதென்?'' என்று கூரத்தாழ்வானைக் கேட்க; ''த்₃ரௌபதி₃ குழல்முடித்த பின்பு பண்டு போலே அவன் வாய் புறப்படுமோ? என்று திருவுள்ளக்கருத்து'' என்றருளிச்செய்தார். §[கீ₃தையைக்கேட்டு நெடுநாளைக்குப்பின் அர்ஜுனன் கீ₃தார்த்த₂ங்களை மறுபடியும் உபதே₃ஶிக்கவேண்டும் என்று கண்ணனைக் கேட்க, கீ₃தையில் தான் சொன்ன பொருள்களெல்லாம் மறந்துவிட்ட அர்ஜுனனைப் பார்த்து ''து₃ர்மேத₄ஸ் சாஸி'' முதலான வார்த்தைகளால் நிந்தி₃த்து, கண்ணன் சுருக்கமான அநுகீ₃தையை உபதே₂ஶித்ததைப் பற்றியது இவ் வார்த்தை. ''ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியுமாயிருக்கும் கண்ணன் முன்போல் விரிவாக கீ₃தையை ஏன் உபதேஶிக்கவில்லை?'' என்பது கேள்வியின் கருத்து. '' 'அர்ஜுனனுக்கு ப்ரபத்த்யுபதே₂ஶம் பண்ணிற்றும் இவளுக்காக' [ஸ்ரீவசனபூ₄ஷணம் 22] என்கிறபடியே த்₃ரௌபதி₃யின் குழல் விரிந்திருப்பதைப் பார்த்து, அதை எப்படியாவது முடிக்கவேண்டும் என்ற ஊற்றத்தாலேயே உபநிஷத்துக்களில் ஆங்காங்கு கிடந்த ரஹஸ்யார்த்த₂ங்களையெல்லாம் யுத்₃த₄களத்திலே கண்ணன் வெளிப்படுத்தினான். அவள் குழல் முடித்தபின்பு அர்ஜுனன் கேட்டாலும் கண்ணனுடைய திருவாய் முன்போல் விரிவாகப் பேசாது'' என்பது பதிலின் கருத்து.]

§ [ ]இவ்வடைப்பில் உள்ளவை விவரணம் எனக் கொள்க.

13. வார்த்தாமாலை:—116 b 'விட்டுப்பற்ற' என்று அருளிச் செய்வர் ஆழ்வான். [விவரணம்:- "முந்துறவுரைக்கேன் விரைக் குழல்மடவார் கலவியைவிடு ... மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே" [பெரியதிரு 9-8-1] என்கிறபடியே விஷயாந்தரங்களை விட்டே எம்பெருமானைப் பற்றவேணும் — என்று கூரத்தாழ்வான் அருளிச்செய்வார்.]

14. வார்த்தாமாலை:— 168 வார்த்தை & விவரணம். அநந்தரம், பிள்ளை கூரத்தாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே சென்று தண்டனிட்டு 'ஆசார்யலக்ஷணமிருக்கும்படி எங்ஙனே?' என்று விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வான் அருளிச்செய்தபடி; "ஶிஷ்யன் விஷயத்தில் ஆசார்யன் ப₄ர்த்ருஸமனுமாய், ஶரீரிஸமனுமாய், த₄ர்மிஸமனுமாயிருக்கக்கடவன்; அதாவது - ஏவிக்கொள்ளுகையும், எடுத்து இடுவிக்கையும். அதாவது – அசேதநத்தைக் கொண்டு நினைத்தபடி விநியோக₃ங்கொள்ளுமாபோலே விநியோக₃ங் கொள்ளுகையும், எடுத்துக்கொள்ளுகையும்" என்று அருளிச் செய்தார். [ஶிஷ்யன் விஷயத்தில் ஆசார்யன் பத்னியை ப₄ர்த்தா நியமித்துக் கார்யங்கொள்வது போலே ஏவிக்கார்யங் கொள்ளுமவனாய், ஶரீரத்தை ஶரீரி (ஆத்மா) நிற்பது இருப்பது கிடப்பது முதலான நிலைகளிலே தான் நினைத்தபடி விநியோகம கொள்வது போலே விநியோக₃ம் கொள்பவனுமாய், த₄ர்மியான ஆத்மா தன் த₄ர்மமான அறிவை எப்போதும் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டு கார்யம்கொள்வது போல் ஶிஷ்யனை எப்போதும் தன்னுடனே வைத்துக் கொண்டு கார்யங் கொள்ளுபவனாயும் இருப்பான் என்று கருத்து.]

15. வார்த்தாமாலை:— 182. முதல் பாகம் பக்கம் 367 ஐதிஹ்ய நிர்வாஹம் 16 காண்க.

16. வார்த்தாமாலை 184. முதல்பாகம் பக்கம் 368 ஐதிஹ்ய நிர்வாஹம் 18 காண்க.

17 வார்த்தாமாலை:— 196 வார்த்தை & விவரணம் — ஆழ்வானுக்கு ப₃ாலமித்ரனாயிருப்பானொரு ப்₃ராஹ்மணனுக்கு அநேககாலம் பிள்ளையின்றிக்கேயிருந்து பின்பு ஒரு பிள்ளை பிறந்தவாறே, கோயிலிலே ஆழ்வானுக்கு வார்த்தையாய்க்கேட்டு அப்போதே பெரியபெருமாள் திருவடிகளிலே சென்று அ-

பிள்ளைக்கு ஹிதத்தை அருளிச்செய்தருளி, வருவாரையெல்லாம் "அந்தப்பிள்ளை செய்வதென்?" என்று வினவுவர்; ஒருநாள் ஆண்டாள் 'போனத்தை வாவென்றழைத்து உறவுகொண்டாடா நின்றீர்; இதுக்கு ஹேதுவென்?' என்ன: 'நான் அவனுக்கொரு நல்வார்த்தை சொன்னேன் காண்' என்ன; a 'அவனெங்கே நீரெங்கே? இப்படி சொல்லுவதொரு வார்த்தையுண்டோ?' என்ன, b 'ஒருவன் விலங்கிலே கிடந்தால் விலங்கு விடுவிக்கும்போது விலங்கில் கிடக்கிறவனுக்குச்சொல்லுமோ விலங்கையிட்ட ராஜாவுக்குச் சொல்லுமோ?' என்றருளிச்செய்தார். அந்தப்பிள்ளை, உபநயனம் பண்ணின ஸமநந்தரத்திலே கோயிலிலே வந்து ஆழ்வான் ஸ்ரீபாதத்திலே வந்து சேர்ந்தான். [a பிறந்த குழந்தையை நீர் பாராமலேயிருக்கும்போது அவனுக்கு நீர் நல்வார்த்தை சொல்லுவது எப்படி? என்பது ஆண்டாள் கேள்வியின் கருத்து. b "விலங்கிடப்பட்டவனை விடுவிக்கும்படி அவனுக்கு வேண்டியவன் ராஜாவிடம் நல்வார்த்தை சொல்வதுபோலே நான் ரங்கராஜாவிடம் அவனை ரக்ஷிக்கும்படி சொன்னேன்; விலங்கிடப்பட்டிருப்பவனை நேரில் பார்க்க வேண்டிய அவசியமில்லை" என்பது ஆழ்வான் பதிலின் கருத்து.]

18. வார்த்தாமாலை — 218 வார்த்தை வ்யாக்யானம் — அப்பன் ஆழ்வானுடைய அந்திமதசையிலே 'ஸ்ரீபாதத்திலே ஸேவிக்கப்பெற்றிலேன்; எனக்கு ஹிதாம்சம் அருளிச்செய்ய வேணும்' என்று பட்டர்க்கு விண்ணப்பஞ்செய்ய; 'ஊரையும் ஸ்வாஸ்த்யத்தையும் விட்டு மேற்குநோக்கி ஓரடியிட்டபோதே ஹிதாம்சமற்றது; சொல்லவேணுமோ?' என்று அருளிச்செய்தார். [திருவரங்கத்துக்குக் கிழக்கே ஓர் ஊரில் செல்வத்துடன் ஸௌகர்யமாக வாழ்ந்து வந்த அப்பன் என்பவர் ஆழ்வானை ஆஸ்ரயிக்கவேணுமென்று திருவரங்கத்துக்கு வந்தவளவில் ஆழ்வானுக்கு அந்திமதசையாயிருக்க, பட்டரைப் பார்த்து "ஆழ்வானிடம் ஆஸ்ரயிக்க முடியவில்லை; என்னுடைய ஹிதத்துக்கு உறுப்பான வார்த்தையை தேவரீர் அருளிச்செய்யவேணும்" என்று கேட்டார். அதற்கு பட்டர் "இருந்த ஊரையும் ஸௌகர்யமாயிருந்த இருப்பையும் விட்டு, ஆழ்வானை ஆஸ்ரயிக்கவேணும் என்னும் எண்ணத்துடன் திருவரங்கத்தை நோக்கி மேற்கே ஓரடியிட்டபோதே உம்முடைய ஹிதத்துக்காகச் செய்யவேண்டியதை நீர் செய்துவிட்டீர். இனி

நான் ஹிதத்துக்காக எதுவும் சொல்லவேண்டியதில்லை'' என்று அருளிச்செய்தார். இதிலிருந்து ''ஒரு ஸதாசார்யனை ஆச்ரயிக்க வேணும் என்னும் எண்ணம் ஏற்பட்டவுடனே ஹிதத்துக்குச் செய்யவேண்டியதைச் செய்தாய் விட்டது; மற்ற செயல்களெல்லாம் காலக்ஷேபத்துக்கு (போதுபோக்குக்கு) உறுப்பானதே'' என்று தேறுகிறது.]

19. வார்த்தாமாலை:— 214 வார்த்தைவிவரணம்:— முதலியாண்டான் a 'ஸ்வாநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யராலே மோக்ஷம்' என்ன, கூரத்தாழ்வான், b 'க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யராலே மோக்ஷம்' என்ன; ஆண்டான், c ''குற்றமின்றிக்குணம்பெருக்கிக் குருக்களுக்கு அநுகூலராய்'' என்று பெரியாழ்வார் அருளிச் செய்கையாலே ஸ்வாநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யராலே ஆக வேணும்—என்ன; ஆழ்வான்,—அங்ஙனன்று, d ''பயனன்றாகிலும், பாங்கலராகிலும், செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான் குயில் நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி'' என்று ஸ்ரீமதுரகவியாழ்வார் அருளிச்செய்கையாலே அவருடைய அடிப்பாட்டிலே நடக்கிற நமக்கு எல்லாருக்கும் ஸ்வாநுவ்ருத்தி கூடாமையாலே, க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யராலே மோக்ஷமாக வேணும்—என்று அருளிச்செய்தார்; ஆண்டானும் 'அப்படியாம்' என்று மிகவும் ப்ரீதரானார். [a ஶிஷ்யர்களுடைய ஶுஶ்ரூஷை முதலானவற்றைக்கண்டு அருள்புரியும் திருக்கோட்டியூர் நம்பி போல்வாரான ஆசார்யர்கள். b ''ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறும்'' [உபதேச 37] என்கிறபடியே நிர்ஹேதுக க்ருபையாலே, ஆசையுடைய ஶிஷ்யர்களுக்கு அருள்புரியும் எம்பெருமானார்போல்வாரான ஆசார்யர்கள். c [பெரியாழ்வார் திரு 4-4-2] d [கண்ணிநுண் சிறுத்தாம்பு 10].

20. வார்த்தாமாலை 234. முதல் பாகம் பக்கம் 97, 98 ஐதிஹ்ய நிர்வாஹம் 13 காண்க.

21. வார்த்தாமாலை 269 வார்த்தை & விவரணம். ஆண்டாள் வார்த்தை. ஆசார்யன் விஷயத்தில் அபசாரம் பண்ணின நாலூரானும் ஈடேறினான். [நாலூரான் க்ருமிகண்டனிடம் மந்திரியாயிருந்து ஆசார்யனை கூரத்தாழ்வான் கண்ணிழக்கக் காரணமாயிருந்தவன். ''நான்பெற்றலோகம் நாலூரானும் பெறவேணும்'' என்று கூரத்தாழ்வான் எம்பெருமானைப் பிரார்த்திக்கையாலே இவனும் ஈடேறினான்]

22 வார்த்தாமாலை 372 வார்த்தை. ஆழ்வான் காலத்திலே ஸந்த்₄யாவந்த₃நம் பண்ண எழுந்தருளாநிற்க, இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அருளிச்செயல் த்₄வநியைக் கேட்டுக்கொண்டு நிற்க, கூட எழுந்தருளினவர்கள் 'அநுஷ்டா₂நத்துக்குக் காலம் தப்புகிறதே' என்ன, 'ஸந்த்₄யாவந்த₃ந வைகல்யம் பிறந்தால் ப்ராயஸ்சித்தம் பண்ணிக்கொள்ளலாம்; ப₄க₃வத₃நுப₄வ வைகல்யம் பிறந்தால் ப்ராயஸ்சித்த ஸாத்₄யமன்று' என்றருளினார்.

23. வார்த்தாமாலை 398 வார்த்தை. ஸர்ப்பாஸ்யக₃தமான மண்டூகத்தினுடைய ஆர்த்தநாத₃த்தைக் கேட்டு ஆழ்வான் மோஹித்தார் என்று பிள்ளை அருளிச்செய்தார். இத்தால்-பரது₃:க்க₂ாஸஹிஷ்ணுத்வமும், பரஸம்ருத்₃த்₄யேக ப்ரயோஜநத்வமும் வைஷ்ணவனுக்கு ஸ்வபா₄வம் என்றபடி.

24. வார்த்தாமாலை 441 வார்த்தை & விவரணம் "பிதற்றென்றே இருந்தேன்" என்றார்- கூரத்தாழ்வான். [ "புலையறமாகி" [திருமாலை 7] என்னும் பாசுரத்தின் வ்யாக்₂யானத்தில் ஆழ்வான் 'இஷ்டஸித்₃தி₄' என்றொரு புறமதநூல் வாசிப்பதைக் கேட்டிருந்ததாகவும், அவருடைய திருத்தகப்பனாரான ஆழ்வார் அதற்கு ப்ராயஸ்சித்தமாக ஸ்ரீபாத₃தீர்த்த₂ம் ஸாதித்ததாகவும் ஓர் ஐதிஹ்யம் எடுக்கப்பட்டுள்ளது; இவ்வைதிஹ்யத்தில் ' நீ அந்த இஷ்டஸித்₃தி₄யை என் நினைத்திருந்தாய்' என்று ஆழ்வார் கேட்க, "பிதற்றென்றே இருந்தேன்" என்று ஆழ்வான் பதில் உரைத்திருக்கக்கூடும்.]

25. வார்த்தாமாலை 445. முதல் பாகம் பக்கம் 380 ஐதிஹ்ய நிர்வாஹம் 34 காண்க.

26. பெரியாழ்வார் திருமொழி வ்யா. 3-8-4. முதல்பாகம் 385 ஐதிஹ்ய நிர்வாஹம் 38 காண்க.

27. பெரியாழ்வார் திருமொழி வ்யா. 4-1-4. (மாயக்குழவியதனை) சிறு வடிவைக்கொண்டு பெரிய லோகங்களை வயிற்றிலே வைத்து ஒரு பவனுன ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின அக₄டிதக₄டநா ஸாமர்த்₂யத்தால் வந்த ஆஸ்சர்யத்தையுடைய அந்தக்குழவியை. "முக்₃த₄ஸ்மிதம் வடத₃ளே ஸயிதோ஽திதந்வா தந்வா ஜக₃ந்தி பிப்₄ருஷே ஸவிகாஸமேவ, ஐஸீமிமாந்து தவ ஸக்திம் அதர்க்கிதவ்யாம் அவ்யாஜத: ப்ரத₂யஸே கிமிஹாவதீர்ண:" என்றாரிறே ஆழ்வான்.

28. பெரியாழ்வார் திருமொழி வ்யா. 4-2-5. (கருவாரணம் ......திரியும்) அழகர் திவ்யாஜ்ஞைக்கு இளைத்துப் போகமாட்டாமல் மீளும். "ஸுந்த₃ரதே₃ார் தி₃வ்யாஜ்ஞாலம்ப₄ந (லங்க₄ந) காதரவஶாநுயாயிநி கரிணி | ப்ரணயஜகலஹஸமாதி₄ர் யத்ர வநாத்₃ரிஸ் ஸ ஏஷ ஸுந்த₃ரதே₃ாஷ்ண: ||" என்று இந்த வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்தாரிறே ஆழ்வான்.

29. பெரியாழ்வார் திருமொழி. வ்யா. 4-4-7. (இருந்த ஊரில் இருக்கும் மானிடர்) ஆழ்வானுக்கு "ஒரு ஸ்ரீவைஷ்ணவர் திருவடிச் சார்ந்தார்" என்று விண்ணப்பம் செய்ய, "ப₄ாக₃வத கைங்கர்யமே யாத்ரையாய்ப் போந்தவரை அப்படி சொல்லலாகாது; 'திருநாட்டுக்குப் போனார்' என்று சொல்லவேணுங்காணும்" என்று அருளிச்செய்தாராம்.

30. பெரியாழ்வார் திருமொழி. வ்யா. 4-4-7. முதல் பாகம் பக்கம் 386 ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க.

31. திருப்பாவை ஆறுயிரப்படி (இளஞ்சிங்கம்) "சிங்கக் குருகு" என்று ஆழ்வான் வார்த்தை. [விவரணம்:— குட்டி குருகு என்பன இளமைப் பெயர்கள். குட்டி என்று விலங்கின் கன்றுக்கும், குருகு என்று பறவைக்குஞ்சுக்கும் கூறவேண்டும். இங்கு "சிங்கக்குருகு" என்றதால், "பறவைபோலே மேலெழப் பறந்துபாயும் சிங்கக்குட்டி." என்றபடி.]

32. திருப்பாவை 2 (நாலாயிரப்படியிலும் ஆறுயிரப்படியிலும்) — ஆழ்வானை "தேவரீர் தே₃வதாந்தரப₄ஜநம் பண்ணுதொழிகிறதென்?" என்ன, "எங்கள் பூர்வர்கள் செய்து போந்திலர்கள்" என்று(ர்)னும்.

33. திருப்பாவை 4—(ஆ) "அவைதான் ஸ்ரீவைஷ்ணவர்களை அநுவர்த்தியாதொழிவதென்? என்று கேளாய்" என்று ஆழ்வான். [விவரணம்:— ஸ்ரீவைஷ்ணவர்கள் தே₃வதாந்தரங்களை அநுவர்த்தியாதொழிவது ஏன்? என்று ஒரு ப₄ட்டன் ஆழ்வானைக் கேட்டதற்கு இது ஆழ்வான் இறுத்த விடையாகும். நாலாயிரப்படியில் இது பின்வருமாறு தெளிவுபடுத்தப்படுகிறது:- ஆழ்வானை ஒரு ப₄ட்டன், 'தே₃வதாந்தரங்களை நீங்கள் கண்டால் பண்ணும் ஆசாரமென்?' என்று கேட்க, 'ஶாஸ்த்ர விரோத₄மாகக் கேளாதே கொள்ளாய்! தே₃வதாந்தரங்கள் உங்களைக் கண்டால் பண்ணுமாசாரமென்? என்று கேளாய்' என்றார். (ஆசாரம்-பணிவிடைகள்)]

34. திருப்பாவை 9 (ஆ) — "ஹிதாம்ஸத்துக்கு ஒரு வைஷ்ண வனுடைய க்₃ருஹயாத்ரையை அநுஸந்தி₄க்க அமையும்" என்றாற் போலே.

35. திருப்பாவை 15 (மூ)— "நீ ஒருவர்க்கும் விரோதி₄யல்லை; நீ புக்குத் திருவடி தொழு" என்ன, ஆழ்வான் வார்த்தையை நினைப்பது. [விவரணம்.— கிருமிகண்ட சோழன் உபத்₃ரவத்தாலே எம்பெருமானர் மேலக்கோட்டைத் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளினபோது ஆழ்வான் நம்பெருமாளை ஸேவிக்க எழுந் தருள; ராஜஸேவகர்கள் திருவாசலிலே இருந்து 'ராமாநுஜஸம் ப₃ந்த₄முடையார் புகுரவொண்ணுது' என்று தடுக்க; வேறுசிலர் "ஆழ்வான் ஆத்மகு₃ணபூர்த்தியுடையவர்; உள்ளே போகவிடுங் கள்" என்று கூற, இதைக்கேட்ட ஆழ்வான் 'ஆத்ம குணங்கள் ஆசார்ய ஸம்ப₃ந்த₄த்துக்கு உடலென்று சொல்லுவர்கள்; ஆனால் என்னுடைய ஆத்மகு₃ணங்கள் எம்பெருமானர் ஸம்ப₃ந்த₄த்தை அறுத்துக் கொள்ளுகைக்குடலாயிற்று' என்று புறப்பட்டருளி, 'நமக்குப் பெருமாள் வேண்டாம்; எம்பெருமானர் ஸம்ப₃ந்த₄மே அமையும்' என்று மீண்டெழுந்தருளினர்.]

36. திருப்பாவை 20 — முதல் பாகம் பக்கம் 70 ஐதிஹ்ய நிர்வாஹம் 27 காண்க.

37. திருப்பாவை 27 (மு) (நா) — "பதிஸம்மாநிதா ஸீதா" என்று பெருமாள் தோளில் மாலையை வாங்கியிட்டார்" என்று ஆழ்வான் பணிக்கும்.

38. நாச்சியார் திருமொழி 10—2. அங்ஙனன்றிக்கே ஆப் பான் பணிக்கும்படி. ஆழ்வான் பணிக்கக் கேட்டிருக்கவுமாமிறே. "அவன் கொடுவரச் சொன்னவர்களைத் தவிர்ந்து 'மாற்றுேலைப்பட்டோம்' என்றவர்கள் திரளிலே என்னை வைக்க வல்லையே என்கிருன்" என்று. [விவரணம்:—கூரத்தாழ்வானுடைய ஶிஷ்யரான ஆப்பான் வேறுவகையாக நிர்வஹிப்பர். ஆழ்வான் இப்படி நிர்வஹிக்கக் கேட்டிருக்கக் கூடியவரன்றே அவர். அவ ரது நிர்வாஹமாவது—ஸர்வேஶ்வரன் என்னை நலிவதற்காக உங் களை அனுப்பியிருக்கிருன். சிலரைத் தானே நேரே நலியவேண்டும் என்னும் திருவுள்ளத்தாலே அவர்களை அழைத்து வரச்சொல்லியும் உங்களை அனுப்பியிருப்பான். உங்களால் நலியப்படவேண்டிய வர்கள் கூட்டத்திலிருந்து என்னை எடுத்து, ஸர்வேஶ்வரன் நேரே நலியவேண்டும் என்று அழைத்துவரச் சொல்லப்பட்டவர்கள்

கூட்டத்திலே என்னைச் சேர்த்து அவன் முன்னே கொண்டு செல்லுங்கள். அவன் "அவனைவிட்டு இவனை ஏன் கொண்டு வந்தீர்கள்" என்று கேட்டால் "ஓலைமாறிப் போய்விட்டது" என்று சொல்லுங்கள். அவன் நேரே என்னை நலிந்தானாகிலும் அவனை நேரில் பார்த்த திருப்தி எனக்கு ஏற்படும் என்று கருத்து. அரும்பதவுரையில் இந்த நிர்வாஹத்துக்கு மற்றும் சில பொருள்கள் உரைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.]

39. நாச்சியார்திருமொழி 12-2. முதல் பாகம் பக்கம் 18 ஐதிஹ்ய நிர்வாஹம் 19 காண்க.

40. திருமாலை 7. — (கலையறக்கற்ற மாந்தர்) ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸபுராணாதிகளில் நிலைநின்றவர்களாய், வேததாத்பர்யம் கைப்பட்டவர்கள். அவர்களாகிறார் — கூரத்தாழ்வான் போல்வாரிறே. (காண்பரோ கேட்பரோதான்) ... ஆழ்வான் இஷ்டஸித்தி வாசிக்கிறவர்களோடே இருந்து தாழ்த்துவர, ஆழ்வார் ஆழ்வானுக்குச் சொன்ன வார்த்தையை அநுஸந்திப்பது. [விவரணம்:— கூரத்தாழ்வான், இஷ்டஸித்தி என்னும் புறச்சமய நூலை அச்சமயத்தைச் சேர்ந்தவர்கள் சிலர் வாசித்து வரும்போது அதைச் சிறிது நேரம் கேட்டுக்கொண்டிருந்து வீட்டுக்குத் தாமதமாக வர, அவரது திருத்தகப்பனாரான கூரத்தாழ்வார் "ஆழ்வான்! 'கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோ தான்' என்று ஆழ்வார் அருளியிருக்க, நீ இதைக்கேட்கலாமோ?" என்று சொல்லி, ஸ்ரீபாததீர்த்த தூளிகள் ஸாதித்துப் பரிஶுத்தப் படுத்தி அவரைச் சேர்த்துக்கொண்டார் என்னும் ஐதிஹ்யம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.]

41. திருமாலை 41. (ஏலும்) பிறருடைய ஆர்த்தி காணில் மோஹிக்கில் மோஹிக்குமத்தனை. ஸர்ப்பாஸ்யத்திலே அகப்பட்ட மண்டூகத்தினுடைய ஆர்த்தியைக்கேட்டு, இது ஆரறிந்துவிடுவிக்கக் கூப்பிடுகிறதென்று ஆழ்வான் மோஹித்தான்; இப்படிப்பட்ட இவன் பரஹிம்ஸையிலே இழிந்தானாகில் ஈஶ்வரன் பண்ணுகிற ஹிம்ஸை யோபாதி ஹிதரூபமாயாயிற்றிருப்பது.

42. திருமாலை 43. (தாம்புலையர்) ஜாதிசண்டாளனுக்கு ஒரு காலத்திலே வைஷ்ணவனாகைக்கு அதிகாரமுண்டு. இவன் உயர ஏறித் தகரவிழுந்தவனாகையாலும், பாகவதாபசாரமாகிற மஹாபாபத்தைப்பண்ணினவனாகையாலும், அவனிலும் தண்ணியன்; கர்மசண்டாளனிறே. பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆத்மஹிதம்

சொன்ன ஸமநந்தரத்திலே ஆழ்வான் பணித்த வார்த்தையை ஸ்மரிப்பது. [விவரணம்:- பிள்ளைப்பிள்ளையாழ்வான் கூரத்தாழ்வானை ஆஶ்ரயித்தவன்று, இவர் பிறப்பு முதலானவற்றில் தமக்குள்ள பெருமையைப் பார்த்து ப4ாக3வதாபசாரப்படுவதைக் கண்ட கூரத்தாழ்வான் இவரைப் படுகுழியில் வீழ்த்திவிடக்கூடிய ப4ாக3வதாபசாரத்தில் ஈடுபடாமல் வேலியிட்டு வைக்க வேணும் என்று திருவுள்ளம் பற்றி ஒரு புண்ய தி3னத்திலே "நீர் எனக்கு ஒரு த3ானம் செய்யவேணும்" என்று கேட்க, "எல்லாம் தேவரீருடையதாயிருக்க அடியேன் எதை தானம் பண்ணுவது?" என்று பிள்ளைப்பிள்ளையாழ்வான் பதில் சொல்ல, "முக்கரணங்களாலும் ப4ாக3வதாபசாரம் பண்ணுமல் வாழக்கடவேன் என்று நம் கையில் நீர்வார்த்துத் தரவேணும்" என்று கூரத்தாழ்வான் அருளிச்செய்ய, இவரும் அப்படியே செய்து கொடுத்தார். பிறகு ஒருநாள், நெடுநாள் பழக்கத்தாலே ஒரு ப4ாக3வதருடைய தே3ாஷத்தைப் பிள்ளைப்பிள்ளையாழ்வான் நினைத்துவிட்டார். உடனே நடுங்கி முட்டாக்கிட்டுக் கொண்டு தம் திருமாளிகையிலேயே இருந்தார். இவர் வரக்காணுத ஆழ்வான் இவரிருக்குமிடம் எழுந்தருளி, 'ஏனிப்படிக் கிடக்கிறீர்?' என்று கேட்டார். தாம் மனத்தாலே ப4ாக3வதாபசாரப்பட்டதை விண்ணப்பம் செய்து "மனோவாக்காயங்கள் மூன்றுலும் ப4ாக3வதாபசாரம் வராதபடி பார்த்துக்கொண்டு இவ்வுடம்போடு வாழ்வது அரிதாயிருக்கிறதே!" என்று ஆழ்வான் திருவடிகளைக் கட்டிக்கொண்டு அழுதார். "இத்தனை அநுதாபம் இவர்க்கு உண்டாகப்பெற்றதே!" என்று உகந்த ஆழ்வான் "மனத்தாலே உண்டான அபசாரத்துக்கு அநுதாபம் பிறந்து விட்டதால், நேரே எம்பெருமான் க்ஷமித்துவிடுவான். மேலே தண்டனை ஏற்பட்டு விடும் என்னும் ப4யத்தாலே நீரே உடம்பைக்கொண்டு ப4ாக3வதாபசாரம் செய்யமாட்டீர். வாய் ஒன்றை மாத்திரம் அதிஜாக்3ரதையாகப் பாதுகாத்துக்கொண்டு ப4ாக3வதவிஷயத்தில் அபவாத3ம் சொல்லித் திரியாதேயிரும்" என்று அருளிச்செய்தார் என்னும் ஐதிஹ்யம் இங்கு அநுஸந்தி4க்கத்தக்கது.]

43. கண்ணிநுண்சிறுத்தாம்பு 4 முதல்பாகம் பக்கம் 389 ஐதிஹ்ய நிர்வாஹம் 50 காண்க.

44. கண்ணிநுண்சிறுத்தாம்பு 4. (நன்மையாலித்யாதி3) நன்மையால் மிகுதியாவது-"அபகாரிஷ்வபி ஸத்3ா ஸாது4ஸ் ஸாத்4வேவ வர்த்ததே" என்கிறபடியே - அந்த அபகார பரரளவிலும்

உபகாரகனுய்ப் போருகை. அதாகிறது-அவர்களளவில் குறைகாணு தொழிகையிறே. இப்படியிருக்கிறவர்களாகிருர்-பிராட்டி கூரத்தாழ்வான் போல்வார்களிறே. [விவரணம்:- "அபசாரம் பண்ணின நாலூரானும், நான் புக்கலோகம் புகவேணும்" என்றிறே ஆழ்வான் அபேக்ஷித்தது]

45. பெரியதிருமொழி 3-8-1. (அளத்தற்கரியாய்) "ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்3ரஹ்ம [தை-ஆந] என்கிருர் காண்" என்று ஆழ்வான் பணிக்கும். [விவரணம்:— "நந்தா" [அழியாத] என்று ஸத்ய ஶப்3த3ார்த்த2த்தையும், "விளக்கே" என்று ஸ்வயம் ப்ரகாஶம் எனக்காட்டும் ஜ்ஞாந ஶப்3த3ார்த்த2த்தையும், "அளத்தற்கரியாய்" என்று அளவிடவொண்ணுமையாகிற அநந்த ஶப்3த3ார்த்த2த்தையும் அதே கிரமத்தில் ஆழ்வார் அருளிச்செய்கிருர் என்று கருத்து,]

46. பெரியதிருமொழி 6-7-4. முதல்பாகம் பக்கம் 39 ஐதிஹ்ய நிர்வாகம் 54 காண்க.

47. பெரியதிருமொழி 6-9 ப்ரவேஶம்—"ஸக்ருதே3வ"வுக்கு "ஸஹஸைவ" என்று ஆழ்வான் நிர்வஹிப்பதொரு பொருளுண்டிறே.

48. பெரியதிருமொழி 7-5-2. [தேரில் பாகனுயூர்ந்த] ஆழ்வானுக்கு மூலம் வாசித்துப் போந்தார் சிலரிலே ஒருவருக்கு க்3ரந்த2ம் பார்க்கவேண்டி, ஆழ்வானேடே திருமுடிக்குறையிலேயிருந்து பாராநிற்கச்செய்தே, அரையன் வந்தானுய், அவ்வளவிலே, அவர்கையில் க்3ரந்த2த்தை ஆழ்வான் தான் வாங்கிப் படித்துக் கொண்டிருந்தானும். [விவரணம்:- வாசிப்பவர் ஆழ்வானிடத்தில் தாம் வாசிப்பதாகப் பிறர்க்குத் தெரியக்கூடாதென்று கருதியிருந்தவராதலால் அவருடைய கருத்திற்கிணங்க, ஆழ்வான் (அரையன் வந்த ஸமயத்திலே) அவர் கையினின்று ஸ்ரீகோஶத்தைத் தாம் வாங்கிக்கொண்டு அவரை ஆசாரியராகவும் தம்மை சிஷ்யராகவும் அபி4நயித்து விட்டாரென்றபடி.]

49. பெரியதிருமொழி 8-1 (சிலையிலங்கு பொன்னாழி) ராஜேந்த்3ர சோழனிலே ஒரு ப்3ராஹ்மணன் மகன், பு3த்3த4ரோடே

ஸம்ப்ரதா₃யமுண்டாய், பூணு நூலையும் குடுமியையும் அறுத்துப் பொகட்டான்; கூரத்தாழ்வான் அங்கே நடந்தவளவிலே, ஶிகா₂ யஜ்ஞோபவீதங்களை த₄ரித்துக்கொண்டுவந்து புகுந்தான்; பிதாவா னவன் "கூரத்தாழ்வானைச் சந்தித்தாயோ?" என்று கேட்டான்; புறப்புள்ளார், 'நீ இதறிந்தபடி எங்ஙனே?' என்று கேட்க, "ஆழ்வான் ஸந்நிதி₄யில் தமோபி₄பூ₄தரும் ஸத்வஸ்த₂ ராவர்கள் காண்!" என்றான்.

50. திருவிருத்தம் 8-ம் வ்யா ஈடு. முதல் பாகம் பக்கம் 118 ஐ நி 20 காண்க.

51. திருவிருத்தம் 99 வ்யா ஈடு. ஆழ்வான் திருவாய் மொழி நிர்வஹிக்கப்புக்கால் பிள்ளையுறங்கா வில்லிதாஸர் கண்ணுங்கண்ணீருமாய் அத்தையித்தை ப்ரஸங்கி₃த்து ஶிதி₂லரா வர்; அத்தைக்கண்டு "கூரத்தாழ்வானும் மஹாபா₄ஷ்யங்கற்று சது ரஸ்ரமாக ஒன்றை நிர்வஹிக்கிற எங்களைப்போலன்றிக்கே ப₄க₃வத்₃ கு₃ணப்ரஸங்க₃த்திலே ஶிதி₂லராம்படி பிறந்த உம்முடைய ஜந்ம மொரு ஜன்மமே!" என்றாரும். ஆழ்வான்தான் வீராணத்திலே ஒரு பெண்பிள்ளை புக்காளாய் மடியிலே வைத்துக்கொண்டிருந்து "கள்வன் கொல் யானறியேன் கரியானொரு காளைவந்து" என்று சந்தைசொல்லுவியாநிற்க மேற்சந்தையிடமாட்டாதே மோஹித்து விழுந்தான். இப்படியிருக்கிறவனிறே தன்னை வன்னெஞ்சனுக்கி வார்த்தை சொன்னான்.

52, திருவிருத்தம் 99. வ்யாக்யானம் ஈடு. முதல் பாகம் பக்கம் 393 ஐதிஹ்ய நிர்வாகம் 67 காண்க.

53. திருவாய்மொழி ஈடு 1-1-1 — (உடையவன்) ஆழ்வான் பிள்ளைப் பிள்ளையைப் பார்த்து, "நிர்க்கு₃ணமென்பார்மிடற்றைப் பிடித்தாற்போலே ஆழ்வார் 'நலமுடையவன்' என்றபடி கண் டாயே" என்று பணித்தான்.

54. திருவாய்மொழி ஈடு 1-2-10 (எண் பெருக்கந் நலத்து) இப்பாட்டாலே திருமந்த்ரத்தை ஸார்த்த₂மாக அருளிச்செய்கிறார். ஆழ்வான் இப்பாட்டளவுமவரப் பணித்து இப்பாட்டளவிலே வந்த வாறே "இத்தை உந்தம்மாசார்யர்கள் பக்கலிலே கேட்டுக்கொள் ளுங்கோள்" என்ன, பட்டரும், சீராமப்பிள்ளையும் எழுந்திருந்து

போகப் புக்கவாறே அவர்களை அழைத்து "இன்னபோது இன்னார் இருப்பார், இன்னார் போவார் என்று தெரியாது; இருந்து கேளுங்கோள்" என்று திருமந்திரத்தை உபதேசித்து, இப்பாட்டை நிர்வஹித்து "இப்பாட்டை இதுக்கு அர்த்தமாக நினைத்திருங்கோள்" என்று பணித்தான்.

55. திருவாய்மொழி 1-5-11 ஈடு. (பாலேய் தமிழர்) ஆழ்வான் ஒருருவிலே "ஸ்ரீபராங்குசநம்பியை 'பாலேய் தமிழர்' என்கிறது; 'இசைகாரர்' என்கிறது ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையரை; 'பத்தர்' என்கிறது பிள்ளையுறங்காவில்லிதாஸரை" என்று பணித்தானும்.

56. திருவாய்மொழி 2-10-4 ஈடு. முதல்பாகம் பக்கம் 396 ஐதிஹ்ய நிர்வாஹம் 85 காண்க.

57. திருவாய்மொழி 3-5-7 ஈடு. முதல்பாகம் பக்கம் 100 ஐதிஹ்ய நிர்வாஹம் 22 காண்க.

58. திருவாய்மொழி 4-4-10 ஈடு. (வல்வினையேனே) இவளை இப்படி காணும்படி மஹாபாபத்தைப் பண்ணினேன். ஆழ்வான் திரு நயனங்கள் நோவுபட்டபின்பு எம்பெருமானார் திருவுள்ளம் நோவுபட்டாற்போலேகாணும் திருத்தாயார் திருவுள்ளமும்படுகிறது.

59. திருவாய்மொழி 4-6-1 ஈடு. (தீர்ப்பாரை—ஓர்ப்பால்) இவள்தான் ஒரு கூரத்தாழ்வானோடு ஒக்குங்காணும்.

60. திருவாய்மொழி 4-7-5 ஈடு. முதல்பாகம் பக்கம் 398 ஐதிஹ்ய நிர்வாஹம் 93 காண்க.

61. திருவாய்மொழி ஈடு 4-9 ப்ரவேசம். ஆழ்வான்தான் ஓரிடத்தே வழிபோகாநிற்க ஒருஸர்ப்பம் தவளையைப்பிடித்து,(அது) கூப்பிடாநிற்க, "இது ஆரறியக் கூப்பிடுகிறது" என்றுமோஹித்தானும், இவ்வாழ்வான் ப்ரக்ருதிக்குச் சேருமே இவர்நிர்வாஹமும்.

62. திருவாய்மொழி ஈடு 4-9 ப்ரவேசம் அரும்பதவுரை. ஆழ்வான் திருக்காவேரியிலே குடம் எடுத்து விடுவாரின்றியிலே க்லேசிக்கிற ஒரு ஸ்த்ரீக்குத் தண்ணீர்க்குடம் எடுத்துவிட்ட கதையையும் அருளிச் செய்வர்.

63. திருவாய்மொழி ஈடு 5-3-7. (தலையில் வணங்கவுமாங்கொலோ தையலார் முன்பே) இத்திருவாய்மொழியை ஆழ்வான் ராஜேந்த்ரசோழனில் ஸந்த்யாஸதஸ்ஸிலே நிர்வஹியாநிற்க, ஆமருவிநிரைமேய்த்தான் நம்பியார் என்று நூறு வயஸ்ஸு போந்திருப்பாரொருவர்நடுங்கநடுங்க எழுந்திருந்துநின்று "ஆழ்வான்! தலைமகள் தலையாலே வணங்கப்பெறுமோ?" என்ன; பெறும், சிஷ்டாசாரமுண்டு காணும், ஸ்ரீஜநகராஜன் திருமகள் அநுஷ்டித்தாள் காணும்:— "ஶிரஸா சாபிவாதய"

64. திருவாய்மொழி 5-5-1 ஈடு. கூரத்தாழ்வார் ஓரளவிலே நங்கையார் திருவடிச்சார்ந்தவாறே இன்னமுமொரு விவாஹம் பண்ணுவோமோவென்று விசாரித்து இதுதான் க்ரமத்தாலே வந்து ஆழ்வானுக்கு விரோத$_4$மாய்த் தலைக்கட்டும்; இனித்தான் 'அநாஶ்ரமீ ந ஸந்திஷ்டே$_2$த்' என்று ஶாஸ்த்ரம் சொல்லாநின்றது; இச்சாஸ்த்ரார்த்த$_2$த்தை அநுஷ்டிப்போமோ? ப$_4$ாக$_3$வதபரிசர்யை பண்ணுவோமோ? என்று விமர்சியா, அந்த ஸாமாந்ய த$_4$ர்மத்திற்காட்டில் இந்த விஶேஷத$_4$ர்மமே ப்ரப$_3$லம் என்று தவிர்ந்தார்.

65. திருவாய்மொழி ஈடு 5-5-7. [ நிறைந்தவித்யாதி$_3$ ] ஆண்டாள் ஒருநாள் பட்டரையும் சீராமப்பிள்ளையையும் காட்டி 'இவர்கள் விவாஹப்ராப்தராணுர்கள், பேசாதே இருக்கிறதென்?" என்ன, 'ஆகில் நாளைப் பெருமாள்பாடே போனவாறே வரக்காட்டு' என்ன, அவர்களையுங் கொண்டு திருமுன்பே நிற்கச் செய்தே பெருமாள் அருளப்பாடிட்டு 'ஒன்று சொல்லுவாய் போலேயிருந்தாயீ!' என்று திருவுள்ளமாக, 'இவர்கள் விவாஹ ப்ராப்தராணுர்களென்று சொல்லாநின்ருர்கள்' என்ன, 'நாமே ஸத்$_3$ருஶமான இடத்தில் ஸம்ப$_3$ந்தி$_4$த்துத் தருகிறோம்' என்றருளிச்செய்து, பிற்றைநாள் மன்னியைக்கொண்டு வந்து நீர்வார்த்தார்கள். ஆக, அத்தலையாலே வருமதொழிய, தாந்தாம் ஒன்றை ஆசைப்படுகையுங்கூடப் பழியென்றிருக்குங் குடிகாணும்.

66. திருவாய்மொழி இருபத்து நாலாயிரப்படி 5-10ப்ரவேசம். அர்ச்சாவதாரத்திலே தம்மபேக்ஷிதம் பெறநிணைத்தவர், அங்குக் கிடையாமையாலே அவதாரங்களிலே போகிருர். விப$_4$வங்களிலுமிழந்தார்க்கு இழவு தீர்க்கிறவிடமாயிருக்க, அவதாரங்களிலே போருகையாவதென்? என்னில் - அர்ச்சாவதாரத்தில், அதீந்த்$_3$ரியனுன தன்னை ஸம்ஸாரிகள் கண்ணுக்கு விஷயமாக்குகையும் ஸர்வாபேக்ஷிதங்களையுங் கொடுக்கையுமொழிய, குளிரநோக்குதல், வினவுதல் செய்யக் கடவதன்ருக ஸங்கல்பித்திருக்கையினுலே, ''ஸத்யஸங்கல்பனுடைய ஸங்கல்பங் குலையும்படி அதிநிர்ப$_3$ந்த$_4$ம் பண்ணக்கடவோமல்லோம்'' என்று ''ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகா$_3$ட$_4$ம் பரிஷஸ்வஜே'' என்ற க்ருஷ்ணுவதாரத்திலே போந்தார் ப்ரத்யாஸத்தியாலே. அதுவும் தீர்த்த$_2$ம் ப்ரஸாதிக்கையாலே, ''பல்லிலே பட்டுத் தெறித்தது'' என்று கூப்பிடுகிருர். இது ஆழ்வான் நிர்வாஹம்.

67. திருவாய்மொழி ஈடு 5-10 ப்ரவேஶம். இவர் அவனுடைய அவதாரங்களையும் ஜக₃த்ஸ்ருஷ்ட்யாதி₃ வ்யாபாரங்களையும் "தாயர்மகிழவொன்னார் தளரத் தளர் நடை நடந்த" என்கிறபடியே ஆஶ்ரிதரை வாழ்விக்கவும் அநாஶ்ரிதரை அழியச்செய்யவும் அடியிட்டு அப்படி வளர்ந்தருளின க்ருஷ்ணாவதாரத்தையும் அநுஸந்தி₄த்து மிகவும் ஶிதி₂லரானவிவர், 'த₄ரித்து நின்று உன்னையநுஸந்தி₄க்க வல்லேனும்படி பண்ணியருளவேணும்' என்று அவனை ஶரணம் புகுகிறார் என்று ஆழ்வான் பணிக்கும்.

68. ஷ அரும்பதவுரை. "கூரத்தாழ்வான் ஆர்த்தராய் ஶரணம் புக, பெருமாளு மிரங்கி 'மூன்று நாளைக்கு வீடு தந்தோம்' என்ன, ஆழ்வான் திருமதிளுக்குப் புறம்பானார்" என்று கேட்டு உடையவரோடிச் சென்று, "ஆழ்வான்! நாமிங்கேயிருக்க உமக்குப் பரமபத₃த்தே போகவேண்டிற்றே" என்ன, "அடியேன், ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பாலே மறந்தேன்" என்ன, 'ஆகில் நாமும் ஶரணம் புகுந்தால் இன்னஞ் சிலநாள் ஆழ்வானை இங்கே வைக்கவிரங்குவர்' என்று திருவாசலளவுஞ் சென்று, 'ஸத்ய ஸங்கல்பனுடைய ஸங்கல்பத்தைக் குலைக்கவேண்டா' என்று மீண்டருளினார் — என்று ப்ரஸாதிப்பர். அதாவது 'நாமொருவன் தோன்றிப் பெருமாளை இரண்டு வார்த்தை சொல்லுவாராகப் பண்ணலாமோ' என்று கருத்து.

69. திருவாய்மொழி ஈடு 6-8-1. [பொன்னுலகாளீரோ, புவனிமுழுதாளீரோ] அருளாளப்பெருமாளெம்பெருமானார் நோவிலே பிள்ளையுறங்காவில்லிதாஸரைக்கொண்டு ஆழ்வான் புக, "ஆழ்வான் பண்ணின நெஞ்சாறல் ஆறுவது ஆளவந்தார் ஸ்ரீ பாத₃த்தேறப் போனாலிறே" என்ற வார்த்தையை நினைப்பது. (அதாவது— ஆழ்வான் பெருமாள் திருவடிகளிலே ஒரு வார்த்தை விண்ணப்பஞ் செய்தாராகில் அபி₄மதஸித்₃தி₄யாம் என்கை) [விவரணம் :- ஆழ்வான் பண்ணின நெஞ்சாறலாவது :- ஆழ்வான் தானே எனக்குப் பரமபதம் அருள ஶக்தியுடையராயிருக்க, அப்படி அருளாமல் என்னுடைய மரணாவஸ்தை₂யைக் கண்டு கொண்டிருந்ததால் ஏற்பட்ட மனத்துன்பம்.]

70. திருவாய்மொழி ஈடு 7-2 ப்ரவேசம். ஆண்டாள் ஒரு நாள் ஆழ்வானுக்கு 'பிள்ளைகள் விவாஹப்ராப்தரானார்கள்; இவ் விடையாட்டமொன்றும் ஆராயாதிருக்கிறதென்?' என்ன; 'ப₄க₃வத்குடும்பத்துக்கு என்னை இன்றிருந்து கரையச்சொல்லுகிறாயோ? நானோ நான் வாசித்துச் சமையக்கொள்ள அங்கே வரக்காட்டு' என்ன, பட்டரையும் சீராமப்பிள்ளையையும் கொடுத்துப்போக விட, வாசித்துச் சமைந்து பெருமாள் திருவடிகளிலே நிற்க,'ஒன்று சொல்லுவாய் போலேயிருந்தாயீ!' என்று திருவுள்ளமாக, 'இவர்கள் விவாஹப்ராப்தரானார்களென்று நின்றார்கள்' என்று விண்ணப்பஞ் செய்ய, 'எல்லாம் செய்கிறோம்' என்று திருவுள்ளமானார்; பிற்றை நாளே மன்னியைக்கொண்டு வந்து கொடுத்தார்கள்.

71. திருவாய்மொழி 7-5 ப்ரவேசம். இருபத்து நாலாயிரப் படிசீஈடு. ஆழ்வான் பத்துப்பாட்டையும் ராம விஷயமாக நிர் வஹித்து போரும், ராமாவதாரத்தில் பக்ஷபாதத்தாலே. ''பேரெயில் சூழ் கடற்றென்னிலங்கை செற்ற பிரான்' என்றும், 'மாறுநிரைத் திரைக்கும் சரங்கள்' என்றும் ப்ரஸ்துதமான ராம வ்ருத்தாந் தத்தை அநுஸந்தி₄த்து, அவ்வவதாரத்தில் உண்டான கு₃ண சேஷ்டிதாதி₃களிலே ஓரோ நீர்மைகளையுடைய மற்றையவதாரங் களையும் இக்கு₃ணப்ரஸங்க₃த்தாலே அநுஸந்தி₄த்தும், இப்படி யாலே ராமவ்ருத்தாந்தத்தைப் பேசுகிறார்'' என்று ஆழ்வான் நிர்வாஹம். ஈடு-ஆழ்வான் ஒருகால், இத்திருவாய்மொழியடங் கலும் ராமாவதார விஷயமாக்கி நிர்வஹித்தானும். அதுக்கடி: ஆயிரத்திலொன்றும் கடலில் குளப்படியும் போலே, பெருமாளு டைய கு₃ணத்தில் ஏகதேசங்களிறே அல்லாத அவதாரங்கள் எல்லாவற்றிலுமுள்ளதென்று.

72. திருவாய்மொழி ஈடு 7-10-5. முதல்பாகம் பக்கம்100 ஐதிஹ்ய நிர்வாஹம் 23 காண்க.

73. திருவாய்மொழி ஈடு 8-8-2. முதல் பாகம் பக்கம் 100 ஐ நி 25 காண்க.

74. திருவாய்மொழி ஈடு 8-9 ப்ரவேசம். ''ப்ரீதியில் அந்யா பதே₃ஶம் உள்ளது இத்திருவாய்மொழியொன்றுமே'' என்று ஆழ்வான் நிர்வஹிக்கும்படி.

75. திருவாய்மொழி ஈடு 8 10-3. (சிறுமாமனிசராய்) ''சிறுமை பெருமையாகிற விருத்₃த₄ த₄ர்மத்₃வயத்துக்கு ஏகத₄ர்மியில் ஸமா

வேஶம் கூடினபடி எங்ஙனே?" என்று ப4ட்டர் பா3ல்யத்திலே ஆழ்வானைக் கேட்க, "நம்மோடொக்க அந்நபாநாதி3கள் த4ாரகம் என்னலாய், ப4க3வத்3விஷயத்தில் அவகா3ஹநம் பார்த்தால் நித்ய ஸூரிகளோடொப்பர்கள் என்னலாயிருக்கிற ஆண்டான், அருளாளப்பெருமாள், ஸ்ரீகோவிந்தப்பெருமாள் இவர்கள் காண் சிறு மாமனிசராகிறார்கள்" என்று பணித்தான்.

76. திருவாய்மொழி ஈடு 9-1 ப்ரவேஶம். ஆப்பான் திருவழுந்தூரரையர் ஆஶ்ரயித்ததும் திருவாய்மொழி கேட்டதும் ஆழ்வானோடேயிறே. "'சயமே அடிமை தலைநின்றார்' என்றது ஸ்ரீப4ரதாழ்வான் போல்வாரை; 'நீக்கமில்லாவடியார்' என்றது இளைய பெருமாள் போல்வாரை; 'கோதிலடியார்' என்றது ஸ்ரீ ஶத்ருக்4நாழ்வான் போல்வாரைக்காணும்" என்று ஆழ்வான் பணித்தானாகப் பணிப்பர்.

77. திருவாய்மொழி ஈடு 10-10-1. இருபத்துநாலாயிரப்படி. (என் கள்வா) "நிர்ஹேதுகமாக உன் வடிவழகைக் காட்டி என்னை விஷயீகரித்தவனே!" என்று ஆழ்வான் நிர்வாஹம்.

78. திருவாய்மொழி 4-7-5 (ஏழையேன்) என்னுமிடத்தில் அடையவளைந்தான் அரும்பதவுரை:- எம்பெருமானாரித்யாதி3:— அதாவது — எம்பெருமானார் ஆழ்வானுக்கு வந்த ஆபத்தைக்கண்டு திருவுள்ளம் மிகவும் புண்பட்டு ஆழ்வானைப் பார்த்தருளி, 'ஆழ்வான்! நான் உம்மை இப்படி காணமாட்டுகிறேனில்லை; ஸ்வரூபவிருத்3த4மானாலும் ஆகியிடுக. நீர் பெருமாள் ஸந்நிதி4யிலே சென்று ஸ்தோத்ரம்பண்ணி நம் அபீ4ஷ்டத்தைப் பெற்றுவாரீர்' என்ன, இவரும் சென்று ஸ்தோத்ரம் பண்ணித் திரும்பியெழுந்தருள, 'இரங்கியருளினாரோ?' என்று கேட்டருள, 'இரங்கியருளினாரில்லை' என்று விண்ணப்பஞ்செய்ய, 'உம்முடைய அபேக்ஷைதோற்ற விண்ணப்பஞ் செய்தீரோ?' என்ன, 'அப்படியே விண்ணப்பஞ் செய்தேன்' என்ன, ஆனால், அதிலே ஒரு ஶ்லோகஞ் சொல்லீரென்று அத்தைக்கேட்டருளி 'இப்பாசுரம் கேட்டால் பெருமாள் இரங்காமையில்லை; ஆழ்வான்! முகத்தைக்காட்டிக்காணாய்' என்று பார்த்தருளினாராம். இது சாபலாதிஶயமிறே. விண்ணப்பஞ் செய்த ஶ்லோகமாவது—'த்வாமுதா3ரபு4ஜம்' [வரத3-11] என்ற இதுவும்.

79. ஸ்ரீவசநபூஷணம் 413. "வடுகநம்பி ஆழ்வானையும் ஆண்டானையும் இருகரையர் என்பர்" இதன் மாமுனிகள் வ்யாக்யானம்:- அதாவது—ஆழ்வார் திருவடிகளில் ஸ்ரீமது4ரகவிகளிருந்

தாப்போலே, ப்ராப்யப்ராபகங்களிரண்டும் எம்பெருமானார் திருவடிகளே என்று ப்ரதிபத்திபண்ணி ''தேவுமற்றறியேன்'' என்றிருக்கும் வடுகநம்பி, எம்பெருமானார்க்கு நிழலுமடிதாறும்போலே அவிநாபூ₄தராய் ''ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்₃யே'' ''ராமாநுஜார்யவஶக₃: பரிவர்த்திஷீய'' என்று உபாயோபேயங்கள் அவர் திருவடிகளும் அத்திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமுமென்றிருக்கும் கூரத்தாழ்வானையும், தா₃ஶரதி₂யான முதலியாண்டானையும், ஸம்ஸாரத்திலிருப்பில் அடிக்கொதிப்பாலே வந்த ஆர்த்தியின் மிகுதியாலே கலங்கி காத₃ராசித்தமாகப் பெருமாள் பக்கலிலும் சென்று பற்காட்டுவது, தத்₃வைலக்ஷண்யங்கண்டவாறே ப்ரவணராய்ப் போருவதாமிவ்வளவைக்கொண்டு, 'எம்பெருமானார் திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமானால் ''தேவுமற்றறியேன்'' என்றிருக்க வேண்டாவோ! அங்ஙனன்றிக்கே சரமாவதி₄யிலும் ப்ரத₂மாவதி₄யிலும் கைவைத்து நிற்கிறவிவர்கள் இருகரையரென்றருளிச்செய்வர்' என்றபடி.

80. பரந்தபடி (திருமந்த்ர) '''ராஜ புருஷ:' என்கிற விடத்தில் ராஜாவும் ப்ரஸ்துதனாய், புருஷனும் ப்ரஸ்துதனாயிருக்கச்செய்தே, ஶப்₃த₃த்தாலே புருஷன் ப்ரத₄ானனாய், அர்த்த₂த: ராஜா ப்ரத₄ானனாயிருக்கும். அப்படியே இவ்விடத்திலும் ஶப்₃த₃த்தாலே சேதனன் ப்ரத₄ானனாய், அர்த்த₂த்தாலே ஈஶ்வரன் ப்ரத₄ானனாயிருக்கும்'' என்று ஆழ்வான் அருளிச்செய்யும்.

81. பரந்தபடி (சரமஶ்லோக) '''அநாதி₃காலம் அனுபாயங்களிலே உபாயபு₃த்₃தி₄ பண்ணிப் போந்தோம்' என்று லஜ்ஜா புரஸ்ஸரமான த்யாக₃த்தைச் சொல்லுகிறது'' என்று ஆழ்வான் பணிக்கும்.

82. தனித்₃வயம்—அவ. ஆழ்வான் பரமபத₃த்தேறப் போகைக்குப் பெருமாள்பாடே வீடுபெற்றுக் கூட்டத்திலே வந்திருக்கசெய்தே ''இனிப்பெருமானை நம்மால் விலக்கப்போகாது. இனி அந்திமகாலத்திலே என்னை அழைத்து வாருங்கோள்'' என்று அந்திமஸமயத்திலே எழுந்தருளி ஆழ்வானுக்குச் செவியில் த்₃வயத்தை அருளிச்செய்தார். அருகிருந்த முதலிகள் ''இஸ்ஸமயத்திலே த்₃வயத்தைச் சொல்லவேணுமோ'' என்று கேட்க, ''ஆழ்வான்ப்ரக்ருதி அறியீர்களோ? இத்த₃ஶையிலே த்₃வயத்தைச் சொன்னால் கர்ப்பூர நிகரத்தை நாவிலேயிட்டாப் போலே இருக்குங்காண்'' என்றருளிச்செய்தார்.

83. ஸ்ரீவசநபூ₄ஷண வ்யாக்யானம் 17. "பு₃த்₃த்₄வா ச நோ ச" [வரதராஜ 79]..." இத்யாதி₃ப்படியே......

84. ஸ்ரீவசநபூ₄ஷண வ்யாக்யானம் 78. திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீ பாத₃த்திலே ஆழ்வான் ஆறுமாஸம் ஸேவித்து நின்று மஹாநிதி₄யாகப் பெற்ற அர்த்த₂மிறே இது.

85. ஸ்ரீவசநபூ₄ஷணவ்யாக்யானம் 145. "யத் த்வத்ப்ரியம் ததி₃ஹ புண்யமபுண்யமந்யத்" [அதிமாநுஷ 53] என்றிறே புண்யபாபலக்ஷணம்.

86. ஸ்ரீவசநபூ₄ஷண வ்யாக்யானம் 203. பிள்ளைப் பிள்ளையாழ்வானை (ஆழ்வான்) அங்கீ₃கரித்த நாளிலே இவர் ஆபி₄ஜாத்யாதி₃களாலே உத்க்ருஷ்டராகையாலே ப₄க₃வத விஷயங்களில் அவிநயமாக வர்த்தித்துக்கொண்டு போருகிறபடியைக் கண்டு "இவர்க்கு இப்ப₄க₃வதாபசாரம் இவருடைய ஜ்ஞாநாநுஷ்டா₂னங்களெல்லாவற்றையும் கீழ்ப்படுத்தி, தானே மேலாய் விநாச பர்யந்தமாக்கிவிடும். அதுக்கு வேலி இட்டுவைக்கவேணும்" என்று திருவுள்ளம் பற்றி, ஓரயனத்தினன்று நீராடியேறினவளவிலே இவரைப்பார்த்து "எல்லாரும் த₃ானம் பண்ணுகிற காலத்திலே நீரும் நமக்கொரு த₃ானம் பண்ணமாட்டீரோ" என்ன, 'அடியேன் எத்தை த₃ானம் பண்ணுவது? எல்லாம் அங்குத்தையாயிருந்ததே' என்ன, "அர்த்த₂ஸ்தி₂தியன்றோ அது, அவ்வளவு போராது. 'கரணத்ரயத்தாலும் ப₄க₃வதாபசாரம் பண்ணாமல் வர்த்திக்கக்கடவேன்' என்று நம் கையிலே உத₃கம் பண்ணித் தரவேணும்" என்ன; அப்படி இவருமுத₃கம் பண்ணிக்கொடுத்தவனந்தரம் ஒருநாள் ப₄க₃வததே₃ாஷத்தைப் பூர்வவாஸனையாலே நினைத்து 'நாமினி முடிந்தோம்' என்று பயப்பட்டு மூடிக்கொண்டு தம்திருமாளிகையிலே கண்வளர, இவர் முன்பு வருகிற காலத்தில் வரக்காணாமையாலே ஆழ்வான், இவர் திருமாளிகையிலே எழுந்தருளி, 'என்தான்? முசிப்பென்?' என்று வினவியருள, தாம் மனஸ்ஸால் நினைத்தத்தை விண்ணப்பம் செய்து "கரணத்ரயத்தாலும் அபசாரம் புகுராதபடி இத்தே₃ஹத்தோடு வர்த்திக்கை அரிதாயிராநின்றது. என் செய்யக்கடவேன்?" என்று திருவடிகளைக் கட்டிக்கொண்டு கிடந்து க்லேசிக்க, 'இத்தனை அனுதாபமிவர்க்குண்டாகப்பெற்றோமே' என்று உகந்தருளி, 'மனஸ்ஸாலே நினைத்ததுக்கு அநுதாபமுண்டாகவே ஈஶ்வரன் க்ஷமித்தருளும்; ப்ரத்யக்ஷத₃ண்ட₃ ப₄யத்தாலே காயிகமாக ஒருவரையும் நலியக்

கூடாது, ஆன பின்பு அவையிரண்டுமுமக்குக் கழித்துத்தந்தோம். இனி வாக்கொன்றையும் நன்ருகக் குறிக்கொண்டு வர்த்தித்துப் போரும்' என்றருளிச்செய்தது.

87. ஷ 291 "ஸத்கர்ம நைவ கில கிஞ்சந ஸஞ்சிநோமி" [வைகுண்ட 88] இத்யாதியிற்படியே பேற்றுக்கு ஹேதுவாகக் கொள்ளலாவதொரு ஸுக்ருதாதிகளொன்றும் தனக்கில்லாமை யாகிற ஆகிஞ்சந்யத்தைப் புரஸ்கரிக்கை.

88. ஷ 358 "வித்வேஷமாநமதுராகவிலோபமோஹாத் யாஜாநபூமி:" [வரதராஜ 76] இத்யாதிகளில் சொல்லுகிற படியே......

89. தத்வத்ரயவ்யாக்யானம் (சித் 39). இவ்வர்த்தத்தை "இச்சாத ஏவ தவ விஶ்வபதார்த்தஸத்தா" [வைகுண்ட ஸ்தவம் 36] என்கிற ஶ்லோகத்தாலே அபியுக்தர் விவேகித்தார்.*

90. தத்வத்ரயவ்யாக்யானம் (சித் 45) "வநாத்ரிநாதஸ்ய ஸுஸுந்தரஸ்ய வை ப்ரபுக்தஶிஷ்டாஶ்யத ஸைந்யஸத்பதி:" [ஸுந்தரபாஹு 74] என்று ஆழ்வானுமருளிச்செய்தார்.

91. தத்வத்ரய வ்யாக்யானம்(அசித்8) ஸீமையில்லாததொன்றுக்கு ஸீமையறியாமை ஸர்வஜ்ஞதைக்கு அநுகுணமென்னுமிடம் "தேவி! த்வந்மஹிமாவதிர் ந ஹரிணா" [8] என்று ஶ்ரீஸ்தவத்திலே ஆழ்வானருளிச்செய்தார்.

92. தத்வத்ரயவ்யாக்யானம் (ஈஶ்வர 8) "யேஷ்வேகஸ்ய குணஸ்ய விப்ருடபி வை...வநாத்ரீஶ்வரம்" [ஸுந்தர பாஹு 26] என்கிற ஶ்லோகத்திலே குணங்களினுடைய நித்ய நிஸ்ஸீம நிஸ்ஸங்க்யத்வங்களை அருளிச்செய்தாரிறே ஆழ்வான்.

93. ஷ (ஈஶ்வர 9). 'ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம்..." [வரத ராஜஸ்தவம் 15] என்றும் சொல்லுகிறபடியே அவற்றுக்கு ஊற்று வாயாயிருக்கை.

94. ஷ (ஈஶ்வர 11) "வரத ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்தம் சகர்த்த" [வரதராஜ 68] என்கிறபடியே......

---

* இது ரஹஸ்யத்ரயஸாரமேற்கோள். ஐ. நி 100 காண்க.

95. ஷை (ஈஶ்வர 22) "ரூபப்ரகாஶ......" (வைகுண்ட$_2$ 55) என்கிறபடியே.

96, ஷை (ஈஶ்வர 33) "ஸுரநரதிரஶ்சாமவதரந்" [வரத$_3$ராஜ 17] "எந்நின்றயோனியுமாய்ப் பிறந்தாய்" [திருவிருத்தம் 1] என்கிறபடியே அநேக அவதாரங்களைப் பண்ணி...

97. ஷை (ஈஶ்வர 45) "கு$_3$ணைஷ்ஷட்$_3$பி$_4$ஸ்த்வேதை: ... அக$_3$ணித மஹாமங்க$_3$ள கு$_3$ணா:" [வரத$_3$ராஜ 16] என்று இதுதன்னை ஆழ்வானருளிச்செய்தாரிறே.

98. ஷை (ஈஶ்வர 54) "இயம்வையூஹீவை" [வரத$_3$ராஜ 17] என்றும், "ஏவம் ஸ்தி$_2$தே..." [அதிமாநுஷ 9] என்றும் அவதார ஹேது இச்சை$_2$யென்னுமிடத்தை ஆழ்வான் விஶத$_3$மாக அருளிச் செய்தாரிறே.

99. ஷை (ஈஶ்வர 55) "யே ப$_4$ந்தாப$_4$வதே$_3$கபே$_4$ாக$_3$ மநஸ:......" [ஸுந்த$_3$ரபா$_3$ஹு 86] என்றிறே ஆழ்வானும் அருளிச்செய்தது.

100. ரஹஸ்யத்ரயஸாரம்—ப்ரத$_4$மநப்ரதிதந்த்ராதி$_4$காரம்— இவ்வர்த்த$_2$த்தை "இச்ச$_2$ாத ஏவ தவ விஶ்வபதா$_3$ர்த்த$_2$ஸத்தா" [வைகுண்ட$_2$ 36] என்கிற ஶ்லோகத்தாலே அபி$_4$யுக்தர் விவேகித்தார்.

101. ஷை தத்வத்ரயசிந்தநாதி$_4$காரம். இப்பாசுரத்தை "கு$_3$ணைஷ்ஷட்$_3$பி$_4$ஸத்வேதை:......" [வரதராஜ 16] என்கிற ஶ்லோகத்திலே ஸங்க்$_3$ரஹித்தார்கள்.

102. ஷை பரதே$_3$வதாபாரமார்த்$_2$யாதி$_4$காரம். இந்நியமங்களெல்லாம் "ஸ்வாதந்த்ர்யமைஶ்வரமபர்யநுயோஜ்யமாஹு:" [வைகுண்ட$_2$ 55] என்கிற நிரங்குஶஸ்வச்ச$_2$ந்த$_3$தையாலே ஸித்$_3$த$_4$ங்கள் என்று ப்ரமாணபரதந்த்ரர்க்கு ஸித்$_3$த$_4$ம்.

103. ஷை அதி$_4$காரிவிபா$_4$க$_3$ாதி$_4$காரம். இவ்வர்த்த$_2$த்தை "பாபீயஸோபி ஶரணாக$_3$திஶப்$_3$த$_3$பா$_4$ஜ: [அதிமாநுஷ 61] என்றும், "ஶரணவரணவாகி$_3$யம் யோதி$_3$தா ந ப$_4$வதி ப$_3$த ஸாऽபி தீ$_4$பூர்விகா" [வரத$_3$ராஜ 84] என்றும், "ப்ரபத்திவாசைவ நிரீக்ஷிதும் வ்ருணே" [வரத$_3$ராஜ 92] என்றும் அபி$_4$யுக்தர் பேசினார்கள்.

104: ஷ உத்தரக்ருத்யாதி4காரம். "யத்3ப்3ரஹ்மகல்ப நியுதாநுப4வேऽப்யநாஶ்யம்..." [வைகுண்ட2 61] என்றும்......

105. ஷ புருஷார்த்த2காஷ்டா2தி4காரம். இப்ப4கவத்3 ஶேஷத்வம் ஸ்வாபா4விகமோ ஔபாதி4கமோ என்னில்: கர்மாத்3யுபாதி4களற "நித்யாபி4வாஞ்சி2த பரஸ்பர நீசபா4வை:" [வைகுண்ட2ஸ்தவம் 77] என்கிறபடியே யாவதா3த்மபா4வியாய்க்கொண்டு முக்தத3ஶையிலும் அநுவர்த்திப்பதொன்றாகையாலே ஸ்வாபா4விகம் என்னவுமாம்; ப4க3வத் ஸம்ப3ந்த4 ஜ்ஞாநவிஶேஷ நிப3ந்த4நமாகையாலே ஔபாதி4கம் என்னவுமாம்.

106. ஷ ஸித்3தோ4பாயஶோத4நாதி4காரம். இவ்வர்த்த2த்தை "இச்சா2த ஏவ தவ விஶ்வபதா3ர்த்த2ஸத்தா" [வைகுண்ட2 36] என்று அபி4யுக்தர் ஸங்க்3ரஹித்தார்கள்.

107. ஷ-ஷ கூரத்தாழ்வானும் "ஸ்வஸ்திஶ்ரீ:...[ஶ்ரீஸ்தவம் 1] என்று ஸங்க்3ரஹித்த அர்த்த2த்தை "தே3வி! த்வந்மஹிமாவதி4:......" [ஶ்ரீஸ்தவம் 8] என்று தொடங்கி விஸ்தரித்தார்.

108. ஷ சரமஶ்லோகாதி4காரம். உக்தமான ஶரண்யகு3ணங்களில் ஆஶ்ரிதஸம்ரக்ஷணத்துக்கு ப்ரதா4நதமங்கள் "ஸர்வஜ்ஞோऽபி ஹி விஶ்வேஶ: ஸதா3 காருணிகோऽபி ஸந்" [லக்ஷ்மீ தந்த்ரம் 17-78] என்று ப4க3வச்சா2ஸ்த்ரத்திலும், "த்வத்3 ஜ்ஞாநஶக்தி கருணாஸு ஸதீஷு" [அதிமாநுஷ 61] என்கிற அபி4யுக்த வாக்யத்திலும் ஸங்க்3ரஹிக்கப்பட்டன.

109. ஷ—ஷ "கரிஶ! தேஷாமபி தாவகீ த3யா தத2ா த்வக்ருத் ஸைவ து மே ப3லம் மதம்" [வரத3ராஜ 94] என்றும் இப்ரகாரங்களிலே இக்ருபாகு3ணத்தைத் தஞ்சமாக அநுஸந்தி4த்து, ஸம்ப3ந்த4த்தையும், கு3ணாந்தரங்களையும் காருண்யத்திற்குச் சொல்லிற்றுச் செய்வனவாக்கி, தாங்கள் காருண்யைகாந்திகளாய்ப் போந்தார்கள்.

110. ஷ—ஷ ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டா2நம் பண்ணிற்று "வரத3 தவ க2லு ப்ரஸாதா3த்3ருதே ஶரணமிதி வசோऽபி மே நோதி3யாத்" [வரத3ராஜ 88] என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால்......

111. ஷெ ஷெ "யே ந கேநாபி ப்ரகாரேண த்3வயவக்தா த்வம்" [ஶரணாக3திக3த்3யம்] என்றும், "ப்ரபத்தி வாசைவ நிரீக்ஷி தும் வ்நணே" [வரதராஜஸ்தவம் 92] என்றும் சொல்லுகிறபடியே பூர்ணப்ரபத்திக்கு அபேக்ஷிதமான தெளிவு இல்லாவிடிலும் யத2ா கத2ஞ்சித3னுஷ்ட2ானத்தாலே கார்யம் செய்கிற இவ்வுபாயத்துக்கு வேறொரு பரிகரத்தைத்தேட ப்ரஸங்க3மில்லையிறே.

112. ஷெ ஷெஸ்வாத்மாநுபூ4திரிதி யா கில முக்திருக்தா" [வரதராஜஸ்தவம் 81] இத்யாதி3களிலே ப்ரயுக்தமான[முக்திஶப்3த3மும், "விக3தேச்ச2ாப4யக்ரோத4: ய: ஸதா3 முக்த ஏவ ஸ:" [கீ3தை 5-28] இத்யாதி3களிற்போலே நிர்வாஹ்யம்.

113 பெரியவாச்சான்பிள்ளை அருளிய பரந்தரஹஸ்யம்—த்3வய ப்ரகரணம். "ஸக்ருதே3வ ப்ரபந்நாய" என்கிறது.- 'ஸஹஸைவ ப்ரபந்நாய' என்கிறபடி" என்று ஆழ்வான் பணிக்கும். அதாகிறது ஸம்ஸாரத்தில் ப4யாதிஶயத்தாலும், ப4க3வத்3விஷயத்தில் ருச்யதிஶயத்தாலும், "ஶ்ரத்3த4யா ஶரணம் யதி3" "ஆஜக3ாம முஹூர்த்தேந" என்று சொல்லுகிறபடியே ஸத்வனுய்க்கொண்டு ஆஶ்ரயிக்கை.

114. தனிச்லோகம்—அப4யப்ரத3ானஸாரம் [ரா-யு 18-33] (ஸக்ருதே3வ ப்ரபந்நாய) ஸக்ருச்ச2ப்3த3த்துக்கு 'ஸஹஸா' ஆதே3ஶமாய் "ஸஹஸைவ ப்ரபந்நாய" என்கிறபடி. அதாவது— தன் அயோக்3யதையைப் பார்த்துத் தேங்காதே, நம் கு3ணத்தை விஶ்வஸித்து ப்ரபந்நனுகை. இது ஆழ்வான் நிர்வாஹம்.

115. பெரியவாச்சான்பிள்ளை அருளிய மாணிக்கமாலை. கூரத்தாழ்வான் எம்பெருமானுர் திருவுள்ளத்திலே சீறியருளினுரென்று கேட்டு "இவ்வாத்மா அவருக்கே ஶேஷமாயிருந்ததாகில் அவருடைய இஷ்டவிநியோக3ப்ரகாரம் கொண்டு கார்யமென்?" என்ருர். தன்னை ஆஶ்ரயித்துவைத்துத் தன் திறத்திலே தீங்கு நினைத்து த்3ரோஹியான நாலூரானைப் பெருமாள் "ந க்ஷமாமி" என்று முனிந்தருள, பெருமாளோடே எதிரிட்டு "அவன் நான் பெற்ற லோகம் பெறவேணும்" என்று விண்ணப்பம் செய்தார். ஆக, இவ்விரண்டர்த்த2த்தாலும் சிஷ்யாசார்யக்ரமத்துக்கு ஸீமா பூ4மி கூரத்தாழ்வான் என்று அருளிச்செய்வர்.

116. ப்ரமேயரத்னம்—முதல்ப்ரகரணம் தொடக்கம். "தவ த3ாஸ்ய மஹாரஸஜ்ஞ:" [வரதராஜஸ்தவம் 81] என்று ஆழ்வான் அநுஸந்த4ாநம்.

117. ப்ரமேயரத்னம் முதல்ப்ரகரணம். முதல் பாகம் பக்கம் 102 ஐதிஹ்ய நிர்வாஹம் 30 காண்க.

118. ப்ரமேயரத்னம் - முதல்ப்ரகரணம் இறுதிப்பகுதி— ஆழ்வானும் ஆண்டாளும் கோயில் நின்றும் தே3ஶாந்தரத்துக்குப் போய் மீண்டும்வருகிறவளவிலே வழியில் அவஸரிக்க இடமில்லாமல் கோயிலுக்கணித்தாக உபவாஸத்தோடே வந்து புகுந்து ஒரு மௌஷ்டிகன் வாசலிலே சடக்கென அமுது செய்தார். ஆண்டாளை அழைத்து ப்ரஸாத3ம் கூடச்சொன்னவளவில் "அவருடைய ரூபநாமம் கொண்டு அமுது செய்தீர். அவர் எதிலே நிஷ்ட2ரென்று தெரியாது. நானதுசெய்வதில்லை" என்றாள். ஆழ்வான் "உம்முடைய வ்யவஸாயத்தைப் பெருமாள் எனக்குத் தந்தருள வேணும்" என்று வேண்டிக்கொண்டார். ஆகையாலே கேவலரூபநாமமுடையரான ஸாத4னாந்தர நிஷ்ட2ரகங்களில் ப்ரஸாத3ப்படுவானன்று.

119. ப்ரமேயரத்னம் 2 வது ப்ரகரணம் தொடக்கம். சிஷ்யாசார்ய க்ரமத்துக்கு ஸீமாபூ4மி கூரத்தாழ்வான். எங்ஙனேயென்னில்: தமமளவிலே உடையவர் நிக்3ரஹம் பண்ணினாரென்று கேட்டு 'இவ்வாத்மா அவருக்கே ஶேஷமாயிருந்ததாகில் விநியோக3ப்ரகாரம் கொண்டு கார்யமென்?' என்று அருளிச்செய்கையாலே சிஷ்யர்க்கு ஸீமாபூ4மி. ஸாபராத4னை நாலூரானை 'நான் பெற்ற லோகம் நாலூரானும் பெறவேணும்' என்கையாலே ஆசார்யர்களுக்கு ஸீமாபூ4மி.

120. ப்ரமேயரத்னம் 2 வது ப்ரகரணம். இப்படி தே3ாஷம் பாராமல் ஹிதப்ரவர்த்தகத்வம் உள்ளது பிராட்டிக்கும் கூரத்தாழ்வானுக்குமிறே.

121. ப்ரமேயரத்னம் 2 வது ப்ரகரணம். முதல் பாகம் பக்கம் 424 ஐதிஹ்ய நிர்வாஹம் 208 காண்க.

122. ப்ரமேயரத்னம் 3 வது ப்ரகரணம். "கீழ்ச்சொன்ன உபாயங்கள் ஸாத்4யங்களாயிருக்கும்; இது ஸித்3த4மாயிருக்கும். அவை அசேதனங்களாயிருக்கும்; (இது பரமசேதனமாயிருக்கும், அவை பலவாயிருக்கும்;)? இது அத்3விதீயமாயிருக்கும். அவை த்யாஜ்யங்களாயிருக்கும்; இது த்யாக3விஶிஷ்டமாயிருக்கும்" என்று ஆழ்வான் பணிப்பர்.

123 ப்ரமேயரத்நம் 3 வது ப்ரகரணம். "ப₄க்தி ப்ரபத்திகள் இரண்டும் துல்ய விகல்பங்கள்" என்று ஆழ்வான் பணிக்கும்.

124. ப்ரமேயரத்னம்— 4வது ப்ரகரணம். உபாயவ்யவஸாயத்துக்குப்படிமா கூரத்தாழ்வான், ஆண்டாள். எங்ஙனேயென்னில்—பட்டர் ஓர் ஆர்த்தி விசேஷத்திலே பெருமாளே சரணமென்ன வேண்டியிராநின்றதென்ன 'இக்குடிக்கு இது தான்' என்றான்.

125. ப்ரமேயரத்னம்— 4 வது ப்ரகரணம். "க்ருபாமாத்ர ப்ரஸன்னாசார்யாங்கீ₃காரத்துக்கொழிய உபேயஸித்₃தி₄யில்லை" என்று ஆழ்வான் பணிப்பர்,

126. நாயனாராச்சான்பிள்ளை அருளிய சரமோபாயநிர்ணயம். கூரத்தாழ்வானும்—உடையவருடைய நியோக₃த்தாலே பேரருளாளன் விஷயமாக வரத₃ராஜஸ்தவம் அருளிச்செய்து நிறைவேற்றினவுடனே, ஆழ்வானும் உடையவர் ஸன்னிதி₄யிலே ஸமர்ப்பித்து, "தேவரீருடைய நியமனப்ரகாரத்திலே வரத₃ராஜஸ்தவத்தை தேவப்பெருமாள் திருமுன்பே விண்ணப்பம் செய்தேன். திருவுள்ளமுகந்து, அவர் பெருவிசும்பருளும் பேரருளாளராகையாலே அடியேன் கேட்டபடியே, 'வைகுண்டே₂ து பரே லோகே ஶ்ரியா ஸார்த்த₄ம் ஜக₃த்பதி:| ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா ப₄க்தைர் பா₄க₃வதைஸ் ஸஹ||' என்று சொல்லுகிற பரமபத₃த்தை ப்ரஸாதி₃த்தோமென்று அருளிச்செய்து, 'நாம் *வானிளவரசாகையாலே நமக்கு ஸ்வாதந்த்ர்யம் மட்டமாயிருக்கும்; நம் முதன்மையிலே அடிமை செய்வாரில் தலைவரிலே ஒருத்தரான நம்மிராமாநுசனை அநுமதிகொண்டு அவர் தந்தோமென்றால் போய்வாரும்' என்றருளிச்செய்தார். "அப்படியே தேவரீரும் திருவுள்ளம்பற்றியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்ய, உடையவரும் ஆழ்வான் திருவுள்ளத்தையறிந்து அவருடைய வலத்திருச்செவியிலே த்₃வயத்தையும் ப்ரஸாதி₃த்தருளி, "நலமந்தமில்லதோர் நாடு புகுவீர்" என்றருளிச்செய்ய, ஆழ்வானும் 'நான் பெற்ற பேறு நாலூரானும் பெறவேணும்' என்று விண்ணப்பம்செய்ய, "க்ருஷ்ணன் க₄ண்டாகர்ணன் பக்கல் பண்ணின விஷயீகாரம் அவனுடன் பிறந்தவனளவும் சென்றாப்போலே, நாம் உம்முடைய பக்கல் பண்ணின விஷயீகாரம் நாலூரானளவும் செல்லத் தட்டில்லை காணும்" என்று அருளிச்செய்தார். பின்பிறே *கலங்காப் பெருநகரை ப்ராபித்தது

127· நாலூராச்சான்பிள்ளை அருளிய சரமோபாய தாத்பர்யம். முதல் பாகம் பக்கம் 352 ல் ப₄ட்டருடைய கு₃ருப்ரப₄ாவ தீ₃பிகாவாக்யம் காண்க.

128. பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் அருளிய அந்திமோபாய நிஷ்டை. வடுகநம்பி ஆழ்வானையும் ஆண்டானையும் இரு கரையர் என்பர்,

129. பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் அருளிய அந்திமோபாய நிஷ்டை. உடையவர் எழுந்தருளியிருக்கிற காலத்திலே அருளாளப்பெருமாள் எம்பெருமானார் ஒருகால் திருமேனி பாங்கன்றிக்கே கண்வளருகிற போது கூரத்தாழ்வான் அவரை அப்போதைக்கப்போது எழுந்தருளி ஆராயாமல் நாலுநாள் விளம்பித்து எழுந்தருளி 'தேவர் திருமேனியில் பாங்கல்லாமை செய்த படி எப்படி' என்று கேட்டருள, அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஆழ்வானைப் பார்த்து 'தேவரும் அடியேனும் இத்தனை நாளும் இருந்த ஸ்நேஹத்துக்கு அடியேன் ஒரு நாள் தலை நொந்திருந்தேனென்று கேட்டால் அப்போதே எழுந்தருளி க்ருபை பண்ணியருளாமல், ஆழ்வான்! தேவரீர் இவ்வாத்மாவை உபேக்ஷித்திருந்த நெஞ்சாரல், அடியேன் போய் ஆளவந்தார் திருவடிகளிலே ஸேவித்தன்றி தீரும்'' என்று அருளிச்செய்தார் இந்த ப்ரஸங்கம் 'பொன்னுலகாளீரோ' என்கிற திருவாய்மொழி ஈட்டில் ஸுஸ்பஷ்டம். [ஐ. நி 69ல், அரும்பதவுரையை அனுஸரித்து ஈட்டு ஐதிஹ்யம் வேறுவகையாக விவரிக்கப்பட்டுள்ளது.]

130. அந்திமோபாய நிஷ்டை. ஐதிஹ்ய நிர்வாஹம் 14, 19ல் எடுக்கப்பட்ட வார்த்தாமாலை வாக்யங்களும், ஐதிஹ்ய நிர்வாஹம் 115 ல் எடுக்கப்பட்ட மாணிக்கமாலை வாக்யங்களும் இதிலும் எடுக்கப்பட்டுள்ளன.

131. அந்திமோபாய நிஷ்டை. ஆகையாலேயிறே, "நசேத்₃ராமாநுஜேத்யேஷா சதுரா சதுரக்ஷரீ | காமவஸ்தா₂ம் ப்ரபத்₃யந்தே ஜந்தவோ ஹந்த மாத்₃ருஶ:" என்று கூரத்தாழ்வான் நாராயண ராமாநுஜ என்கிற திருமந்த்ரங்கள் இரண்டுக்கும் வாசி பந்த மோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயும் மோக்ஷைகஹேது வாயும் இருக்குமென்னுமிடம் தோற்ற (சதுரா சதுரக்ஷரீ) என்று அருளிச்செய்தார்.

132. அந்திமோபாயநிஷ்டை. ஆகையாலே தம்முடைய சிஷ்யனை நாலூரானும் க்ரிமிகண்ட₂னோடே கூடித் தம்முடைய விஷயத்திலே மஹாபராத₄த்தைப்பண்ண, பெருமாள் அவனை 'ந க்ஷமாமி' என்று முனிந்தருள, அவரோடே மறுதலைத்து 'நாம்

பெற்ற லோகம் நாலூரானும் பெறவேணும்' என்று கூரத்தாழ்வானும்.

133. திவ்யஸூரிசரிதம். பதினெட்டாவது ஸர்க்கம் 77 முதல் 82 வரை க்ருமிகண்டன் கூரத்தாழ்வானுக்குச் செய்த அபராத₄மும், 92, 93 ஶ்லோகங்களில் ஸ்ரீரங்கநாதன் கூரத்தாழ்வானுக்குப் பரமபத₃மளித்ததும் வர்ணிக்கப்பட்டுள்ளன.

134. பன்னீராயிரப்படி கு₃ருபரம்பராப்ரபாவம் (அடிக்குறிப்பு) [கூரத்தாழ்வானுடைய பூர்வவ்ருத்தாந்தம்]:-இவர் பெருமாள் கோவிலுக்கடுத்த திருக்கூரமென்கிற நகரத்துக்கு அதி₄பதியாகி அரசு செலுத்திக்கொண்டிருந்த ஹாரீத கோ₃த்ரம் யஜுஶ்ஶாகை₂ ஆபஸ்தம்ப₃ ஸூத்ரத்தையுடைய நந்த₃ர் என்கிற டைம ப்₃ராஹ்மணருக்கும் அவர் பத்னியாகிய பெருந்தேவி நாயகியம்மையாருக்கும் புத்ரராக அவதரித்துத் திருமறுமார்பன் என்னும் அபி₄த₄ானம்பெற்று ஸகலஶாஸ்த்ரங்களிலும் மஹா நிபுணராய் வர்த்திக்கும் நாளையில், பிதாவானவர் இவருக்குத் திருக்கல்யாணஞ் செய்வதாக எத்தனிக்க, அதை நிராகரித்து ப்₃ரஹ்மசர்ய வ்ரதியாய் அதிதி₂ அப்₄யாக₃தர்களை ஸத்கரித்து அனவரதம் அருளாளன் திருவடிகளில் அந்தரங்க₃ ப₄க்தியாயிருக்கும் திருக்கச்சிநம்பிகளின் அபி₄மானத்தைப் பெற்று நாளுக்குநாள் ஜ்ஞானாதி₄கராகிப் போருகையில், இவருடைய பிதா இவருக்கு ராஜ்யாபி₄ஷேகஞ் செய்துவைத்துத் தாம் திருமலையையடைந்து உஜ்ஜீவிக்கவிரும்பி பத்நீஸஹிதராய்ப் புறப்பட்டுப் போய்விட, அனந்தரம், இவர் ஸிம்ஹாஸனமேறிச் சிறியதைப் பெரியது நலியாதபடி நியதி தவறுமல் ராஜ்யபரிபாலனஞ் செய்து போந்தார்.

ஒருநாள், நள்ளிருளில் மத்₄யராத்ரியில் நகரஶோத₄னார்த்த₂மாகத் தன்னந்தனியே எழுந்தருளி வீதிகள்தோறும் புக; அக்₃ரஹாரவீதியில் ஒரு க்₃ருஹத்தில் தலைவாசற்கதவைத் தாளிட்டுக் கொண்டு ஒரு அறைக்குள்ளே நாலிரண்டுபேர் சேர்ந்து பேசத் தொடங்க; இவர் அவ்வரவங்கேட்டுச் சுவர்ப்புறத்திலிருந்து செவி கொடுத்து நிற்கையில்; அவர்களில் ஒரு ப்₃ராஹ்மணனுக்கு ஒரு பெண்குழந்தையுண்டாக, அதற்கு ஜ்யோதிஷர்களைக் கொண்டு ஜாதகங்கணித்துப் பார்க்கையில், 'அந்தப் பெண்ணை மணம்புணர்பவனுக்கு அப்போதே நிர்யாணம் ப்ராப்தமாம்' என்றிருந்ததால், அவள் தனக்கு ருதுப்ராய மடையுங்காலம் வந்தும்

ஒருவர்க்கும் பேச்சுப்படாதவளாக; அவளுடைய தாய் தந்தையரும் உற்றார் உகந்தாருமாகச் சேர்ந்து, 'இப்படி பேச்சுப் படாத பெண்ணைக் குடியில் வைத்திருந்தால் உலகம் பழிக்குமே! இதற்குச் செய்யப்படுவதென்?' என்று ஆலோசித்து அவளை முடித்து விடுவதே உத்தமமென்று தங்களுக்குள்ளே தீர்மானித்து அவ்விதம் முடிப்பதற்கு நாளும் வேளையுங் குறிப்பிட்டுக் கொண்டார்கள். இவரிவையனைத்துங் கேட்டு "ஓஒ உலகினதியல்வே" என்கிறபடியே உலகத்தியல்புக்கு பயந்து ஒன்றுந்தோன்றுதவராய்ப் படைவீட்டுக்கு வந்து, ஜீவஹிம்ஸைசெய்ய யத்னித்திருப்பவர்களுடைய தைர்யத்தை நினைந்தும், 'அந்த ஜீவன் இவர்களிட்ட வழக்காய் முடிவதோ?' என்கிற ஐயத்தையடைந்தும், அவ்விரவெல்லாம் படுக்கையிற் பொருந்தாதவராய் உலாவிக் கொண்டே, அந்த ஸ்த்ரீரத்னத்தினுயிரைக் காப்பதற்கு விரகேதென்று தம்மில்தாமே யோசிக்கலானார்.

அனந்தரம் 'அப்பெண்மணியைத் தற்காலத்தில் அவ்வாபத்திலிருந்து மீட்டுவைத்தாலும், அவளுடைய ஜாதகத்தைப்பற்ற, ஒருவரும் அவளை அண்டக்கொடாதவர்களாகி, மற்றொரு காலத்தில் வேறெந்தவிதத்திலாவது முடித்துவிட வகை தேடாதொழியார்களன்றோ' என்றும், 'அவ்வித இடர் நேர்படாதபடிக்கும் காக்க வேண்டுவதானால் தாமே அப்பெண்ணைப் பாணிக்ரஹணஞ் செய்து கொண்டு காப்பதுதான் கூடிவரும் கார்யமாமென்றும் எண்ணி ஸூர்யோதயமானவாறே அறிக்கைக்காரர்களை ஏவி அப்பெண்ணின் தாய்தந்தையரை அழைப்பித்து 'நேற்றை இரவில் உங்கள் அகத்தில் நடந்த சேதியை ஒளிக்காமல் சொல்லுங்கோள்' என்ன; அவர்கள் பயந்து, நடந்ததை விண்ணப்பஞ் செய்துவிட; இவர் நகைத்து, 'ஈச்வராந்தர்ப்பூதரான ஜீவர்களில் ஹிதமில்லாத உங்களுக்கு ப்ராஹ்மணத்வமும் ஸத்கதியும் எங்ஙனமுண்டாகுமென்றெண்ணுகிறீர்கள்' என்றுரைத்து, 'அப்பெண்ணை நாமே பாணிக்ரஹணம் பண்ணிக்கொள்ள விரும்பியிருக்கிறோமாகையால், உங்கள் கருத்தைச் சொல்லுங்கள்' என்று கேட்டருள; அவர்கள் திடுக்கிட்டுக் கையை முறித்துக் கொண்டு, 'ஒரு பெண்ணைப்பற்றி உத்க்ருஷ்ட ஜாதகராயிருக்கிற எங்கள் அரசை இழப்பதானால் நாடடங்க இழவு படாதோ' என்று மறுத்தார்கள்.

இவர் தாம் 'விஷயாரோக்₃யம் வேண்டி க்₃ரஹிக்கவெண்ணி லன்றோ அங்ஙனம் அமையும்; அப்படிக்கின்றி, ஈஶ்வர முகோ₂ல் லாஸத்திற்காகக் கைப்பிடிக்குமத்தனைமாத்ரமே நாம் தினைத்தி ருப்பதுகிடீர்' என்ன, அதற்கு அவர்கள் ஸம்மதிக்க; அனந்தரம் முஹூர்த்தமிட்டுப்பாணிக்₃ரஹணம்பண்ணிக்கொண்டு, தே₃வியாரி டத்தில் ஸ்த்ரீபுத்₃தி₄பண்ணி அவரிலரென்று வார்த்தையாடும் மர்யாதைகொண்டிருக்க, தே₃வியாரும், இவரைத் தன்பக்ஷத்தில் ப்ரத்யக்ஷமாகச் சரரூபியாய்வந்து (க₃ஜேந்த்₃ரனை ரக்ஷித்ததுபோலே) ரக்ஷித்தருளின ஈஶ்வரனே யென்றும் ஆசார்யனே என்றும் ப₄ாவித்து விஷயவைராக்₃யம் பூண்டு ஶுஶ்ரூஷைசெய்து கொண்டு வாழுநாளில். ஒருநாளில் ஸூர்யன் அஸ்தமித்த ஒரு ஜாமப் பொழுதுக்குமேல் இவருடைய ஸ்பாமண்டபத்தின் தலைவாசற் கதவு சாததப்படுகையில் அதிலிருக்கும் வெண்கலமணிகள் கணா கணவென்று ஒலிக்க, அவ்வோசையைப் பெருந்தேவித்தாயார் கேட்டுப்பேரருளாளனைப் பார்த்து 'இவ்வோசை எங்குநின்றும் எழு ந்தது?' என்று கேட்டருள, அருளாளன ஸந்தோஷத்துடனே, 'திருக்கூரத்து அரண்மனைத் தலைவாசலிற் கதவிலுள்ள வெண்கல மணி ஒலியாகும்; நங்கூரேசன் இந்நேரமளவும் நியதி நடத் தினாற்போல் காண்கிறது' என்றருளிச்செய்ய, பிராட்டி மகிழ் வெய்தியிருந்தார்.

அதை மற்றைநாள் நம்பிகள் ஒரு ப்ரஸ்தாவத்தில் இவருக் கருளிச்செய்ய, இவர் நெஞ்சங்குழைந்து எண்ணுதனகளெண்ணி, "நம் அருளாளனுடைய செல்வத்தை ப்₃ரஹ்மாதி₃களும் அளவிட அஶக்தர்களாயிருக்க, அகிஞ்சனனாய் அவனுடைய படைப்பில் ஒரு கீடப்ராயமாயிருக்கிற இவனுடைய செல்வத்தைக் கண்டு அவனும் பிராட்டியும் மெச்சினார்களென்பது கூடுவதோ! இது இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபஹானியையுண்டாக்காதோ?" என்று உடனே தம்முடைய ஸர்வஸ்வத்தையும் நாட்டையும் அருளாளன் திருவடிகளில் ஸமர்ப்பித்துவிட்டுப் புண்யகோடி விமானச்சா₂ யையில் வாஸஞ்செய்யத் திருவுள்ளங்கொண்டு தேவியாரும் தாமு மாய் உடுத்த வஸ்த்ரங்களோடு புறப்பட்டுப் பெருமாள்கோயிலை நோக்கி வாராநிற்க, ஸந்த்₄யாவேளையானவாறே, தேவியார் இவரை நோக்கி, வழியில் கள்ளர்பயமுண்டோவென்ன, 'மடியில் ஏதேனும் கனத்திருக்குமோ வழியில் ப₄யமுண்டோவென்று கேட் கைக்கு?' என்ன, அவர் தம்முடைய மடியிலிருந்ததொரு பொன் வட்டிலையெடுத்துக்காட்டி 'இதைத் தேவரீருக்குப் பாலமுதுசெய்

விக்ஷைக்காக எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன்" என்று விண்ணப்பஞ்செய்ய, அதையும் வாங்கி விட்டெறிந்து, 'இனி பயமின்றி நடக்கலாகும் வா' என்று கூட்டிக்கொண்டு பெருமாள் கோயிலைச் சேர்ந்து, திருக்கச்சி நம்பியைத் திருவடி தொழுது, "அடியோங்கள் செய்ய அடுப்பதொரு கைங்கர்யத்தை நியமித்தருளி ஹிதஉபதேசங்கள் செய்து உஜ்ஜீவிப்பிக்க வேண்டும்" என்று ப்ரார்த்திக்க, அவர் இவருக்கிரங்கிக் 'கூரேசரே! நமக்கும் நமக்கு முற்பாடருக்கும் பிற்பாடருக்கும் நாயகராய் நமாய் வீற்றிருக்கிற ராமாநுஜரை ஆச்ரயித்து வழிபடுவதே உமக்கு அடுத்தது' என்றருளிச்செய்ய, 'ஆகில் தேவரீரே புருஷகாரஞ் செய்ய வேண்டும்' என்று ப்ரார்த்தித்து அவரை முன்னிட்டுக் கொண்டு யதிசேகரரான ராமாநுஜரிடத்தில் ஆச்ரயித்துக் கூரத்தாழ்வானென்றும் கூரத்தாண்டானென்றும் தாஸ்யநாமங்கள் பெற்று வாழ்ந்தார்கள்.

135. பட்டர் அருளிய பகவத்குண தர்ப்பணம் (ஸஹஸ்ரநாம பாஷ்யம்) மங்களச்லோகம்.

வந்தே கோவிந்ததாதௌ முநிமத மநவை
லக்ஷ்மணார்யம் மஹாந்தம்
த்யாயேயம் யாமுநார்யம் மம ஹ்ருதி தநவை
ராமமேவாபியாயாம் |
பத்மாக்ஷம் ப்ரேக்ஷிஷீய ப்ரதமமபிமுநிம் நாதமீடே சடாரிம்
ஸ்தௌமி ப்ரேக்ஷிய லக்ஷ்மீம் சரணமசரண:
ச்ரீதரம் ஸம்ச்ரயேயம் ||

[அடியேனது ஆசார்யரான கோவிந்தர் என்னும் எம்பாரையும் திருத்தகப்பனாரான கூரத்தாழ்வானையும் வணங்குகிறேன். (அவர்களது ஆசார்யரான) ஸ்ரீராமாநுஜமுநி என்னும் மஹாத்மாவை மனனம் செய்கிறேன். (அவரது ப்ராசார்யரான) யாமுநாசார்யரை தியானிக்கிறேன். (அவரது ஆசார்யரான) ராமன் என்னும் மணக்கால் நம்பியை நெஞ்சில் கொள்கிறேன். (அவரது ஆசார்யரான) புண்டரீகாக்ஷர் என்னும் உய்யக்கொண்டாரைச் சரணமடைகிறேன். ப்ரதமாசார்யரான நாதமுனியை பக்தியுடன் ஆச்ரயிக்கிறேன். (அவரது ஆசார்யரான) நம்மாழ்வாரைத் துதிக்கிறேன். (அவரது ப்ராசார்யையான) லக்ஷ்மீதேவியை பக்தி செய்து துதிக்கிறேன். (ஸர்வாசார்யனாய்) லக்ஷ்மீநாதனான எம்பெருமானைப் புகலற்ற அடியேன் புகலாகக் கொள்கிறேன்.]

136. இராமாநுசநூற்றந்தாதி—7—ம் பாட்டு.

**மொழியைக் கடக்கும் பெரும்புகழான்* வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும் நம்கூரத்தாழ்வான் சரண் கூடியபின்
பழியைக்கடத்து மிராமாநுசன் புகழ்பாடி யல்லா
வழியைக்கடத்தல்* எனக்கினி யாதும் வருத்தமன்றே.

137. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபா₄வம் (கூரத்தாழ்வான் தனிச்சிறப்புகள்). ப்ராப்யதே₃ஶத்திலும் ஆசார்யஶேஷத்வம் முறைதவறவொண்ணாதென்னும் த்வரையும், சரமத₃ஶையிலும் ப்ராண ப்ரயாண பாதே₂யமாக ஸ்வாசார்யன் தானே த்₃வயத்தை விடாய்கெட உபதே₃ஶிக்கப்பெற்ற தன்னேற்றமும், ப₄காகு₃வதாபி₄மாநஸ்த₂லத்திலும் ததீ₃யாபி₄மாநஸ்த₂லமே சரமதே₃ஶமாகப்பெற்ற தன்னேற்றமும், சரமாதி₄காரபாக விஶேஷமும் ஆழ்வான் பக்கலிலே அநுஷ்டா₂ந ஶேஷமாகக் கண்டதிறே.

138. கூரத்தாழ்வான் அருளிய பொதுத் தனியன்கள். ''லக்ஷ்மீநாத₂'' ''யோநித்யம்'' என்று தொடங்கும் தனியன்கள்.

139. கூரத்தாழ்வான் அருளிய பெரியதிருமொழித் தனியன்

நெஞ்சுக்கிருள்கடிதீபம் அடங்காநெடும் பிறவி
நஞ்சுக்குநல்லவமுதம் *தமிழநன்னூல் துறைகள்
அஞ்சுக்கிலக்கியம் ஆரணசாரம் * பரசமயப்
பஞ்சுக்கனலின்பொறி * பரகாலன்பனுவல்களே.

140. கூரத்தாழ்வான் வாழித்திருநாமம்.

சீராருந் திருப்பதிகள் சிறக்கவந்தோன் வாழியே *
தென்னரங்கர் சீருரைச் சேருமவன் வாழியே *
பாராருமெதிராசர் பதம்பணிந்தோன் வாழியே *
பாடியத்தி னுட்பொருளைப் பகருமவன் வாழியே*
நாராயணன் சமயம் நாட்டினான் வாழியே *
நாலூரான் தனக்கு முத்தி நல்கினான் வாழியே *
ஏராருந் தையிலத்தத் திங்கு வந்தான் வாழியே *
எழில்கூரத் தாழ்வான் தன் னிணையடிகள் வாழியே *

141. கூரத்தாழ்வான் திருநக்ஷத்ரத் தனியன்.

மகரே ஹஸ்தநக்ஷத்ரே ஸர்ப்பநேத்ராம்ஶஸம்ப₄வம் |
ஸ்ரீமத் கூரகுலாதீ₄ஶம் ஸ்ரீவத்ஸாங்கமுபாஸ்மஹே ||

[தை மாதத்தில் ஹஸ்தநக்ஷத்ரத்தில் 'ஸர்ப்பநேத்ரர்'என்னும் நித்யஸூரியின் அம்சமாகப் பிறந்தவரும், சிறப்புமிக்க கூரகுலத்திற்குத் தலைவருமான 'ஸ்ரீவத்ஸாங்கர்' (திருமறுமார்பர்) என்னும் கூரத்தாழ்வானை உபாஸிக்கிறோம்]

# முதலியாண்டான் வைபவம்

பாதுகே யதிராஜஸ்ய கத₂யந்தி யதா₃க்₂யயா।
தஸ்ய தா₃ஸரதே₂: பாதௌ ஸிரஸா தா₄ரயாம்யஹம் ॥

[யதிராஜருடைய பாது₃கைகள் எவருடைய பெயராலே (முதலியாண்டான் என்று) வழங்கப்படுகின்றனவோ, தா₃ஸரதி₂ எனும் திருநாமமுடைய அந்த முதலியாண்டானின் திருவடிகளை யான் தலையாலே தா₄ரிக்கிறேன்.]

எம்பெருமானுர் அவதரித்துப் பத்துவருடங்களுக்குப்பின் ப்ரப₄வ வருஷத்தில் (கி, பி. 1027) பூவிருந்தவல்லிக்கும் திருமழிசைக்கும் இடையே 'புருஷமங்க₃லம்' 'வரத₃ராஜபுரம்' என்னும் பச்சைப்பெருமாள் கோயிலில் சித்திரை மாதம் புனர்வஸு நக்ஷத்திரத்தில். ஆனந்த₃தீ₃க்ஷிதருக்கும், ஸ்ரீராமாநுஜரின் ஸஹோத₃ரியான நாச்சியார் அம்மனுக்கும் திருக்குமாரராய், யஜுஸ்ஸாகை, ஆபஸ்தம்ப₃ஸூத்ரம் வாதூ₄ல கோ₃த்ரத்தில் எம்பெருமானுருக்கு மருமகனுகவும், ப₄ரதனின் அம்ஸமாகவும், "தா₃ஸ₂ரதி₂" என்னும் திருநாமத்தோடு அவதரித்தவர் முதலியாண்டான். எம்பெருமானுருடைய சிஷ்யர்கள் அனைவருக்கும் நிர்வாஹகராயிருந்தமையால் "முதலியாண்டான்" என்று அழைக்கப்பெற்ருர். எம்பெருமானுருடைய திருவடி ஸ்தா₂னமாயிருந்து அவருக்கு அந்தரங்க₃ கைங்கர்யங்கள் செய்தமையால் எம்பெருமானுருடைய திருவடி நிலை இன்றளவும் "முதலியாண்டான்" என்றே அழைக்கப்படுகிறது. எம்பெருமானுர் நியமனத்தாலே, பெரிய நம்பிகள் திருக்குமாரத்தியான அத்துழாய்க்குச் சீதன வெள்ளாட்டியாகி தா₃ஸவ்ருத்திகள் செய்த பெரியவர் இவர். எம்பெருமானுர் இவரைத் தமது த்ரித₃ண்ட₃மாக அபி₄மானித்தார். இவருடைய குமாரரான கந்தாடையாண்டான்

ஸ்வாவதாரஸ்த₂லேऽர்ச்சாபூ₄த் ஸ்ரீரங்கே₃ ச யதீஸ்வர:।
யந்முதே₃ தம் கு₃ணவாஸம் ராமாநுஜகு₃ரும் ப₄ஜே॥

[தம்முடைய அவதார ஸ்த₂லமான ஸ்ரீபெரும்பூதூரிலும், ஸ்ரீரங்க₃த்திலும் எவருடைய உகப்புக்காக யதிராஜர் அர்ச்சாவதாரமாக எழுந்தருளினுரோ, கு₃ணங்களுக்கு இருப்பிடமான அந்த ராமாநுஜாசார்யர் என்னும் கந்தாடையாண்டானிடம் ப₄க்தி செய்கிறேன்.] என்னும் தனியனை உடையவர்; ராமாநுசன் என்னும் திருநாமமுடையவர்; ஸத்ருக்₄நனின் அம்ஸமானவர்; ஸ்ரீபெரும்பூதூ

சிலும், ஸ்ரீரங்க$_3$த்திலும் எம்பெருமானுருடைய அர்ச்சாவிக்$_3$ரஹத்தை ப்ரதிஷ்டை$_2$ செய்தவர் இவரே. இவருடைய குமாரரே நம்பிள்ளை யின் சிஷ்யரான கந்தாடை தோழப்பர். திருவாய்மொழி (8-8-5... 8) பாசுரங்களுக்கு முதலியாண்டான் செய்திருக்கும் நிர்வாஹம் பஞ்சாக்$_3$நிவித்$_3$யா நிஷ்ட$_2$னே கைவல்யநிஷ்ட$_2$ன் என்று பிற் காலத்தில் ஏற்பட்ட கலக்கத்தைத் தெளிவுபடுத்துகிறது.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 212 காண்க.

2 ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 157 ஐதிஹ்ய நிர்வாஹம் 3 காண்க.

3. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம் முதல் பாகம் பக்கம் 106—111 ஐதிஹ்ய நிர்வாஹம் 1 காண்க.

4. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 246, 247 காண்க.

5. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 255 காண்க.

6. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 278 காண்க.

7. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதலியாண்டான் திருநக்ஷத்ரம், சித்திரையில் புனர்வஸு. அவர் தனியன்- ''பாது$_3$கே யதிராஜஸ்ய கத$_2$யந்தி யதா$_3$க்$_2$யயா। தஸ்ய தா$_3$ஸரதே$_2$: பாதௌ$_3$ ஸிரஸா தா$_4$ரயாம்யஹம்॥'' ''அஜஹத்$_3$ பா$_4$கி$_3$நேயத்வம் பாது$_3$காத்வம் த்ரித$_3$ண்ட$_3$தாம்। ஸம்ப்ராப்தோ யதிராஜஸ்ய கு$_3$ணைஸ்தத்ப்ரீதிஹேதுபி$_4$:॥ ஸ்ரீவைஷ்ணவாநாம் தா$_3$ஸத்வம் ஸ்வாமித்வம் ப்ரபு$_4$தாம் ஸ்வயம்। வாதூ$_4$ல குல தௌ$_4$ரேயம் வந்தே$_3$ தா$_3$ஸரதி$_2$ம் கு$_3$ரும்॥'' [எம்பெருமானுருடைய உகப்புக்கு உறுப்பான கு$_3$ணங்களாலே அவருக்கு விடவொண்ணாத மருமகனுயிருக்கும் மேன்மையையும், பாதுகையாயிருக்கும் பெருமையையும், திரிதண்டமாயிருக்கும் தன்மையையும் பெற்றவராகவும், (தம் திருவுள்ளத்தால்) ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு தாஸனுயிருக்கும் தன்மையையும், (அவர்கள் திருவுள்ளத்தால்) ஸ்வாமியாகவும், தலைவனுகவுமிருக்கும் சீர்மையையும் தாம் ஒருவரே பெற்றவராகவும், வாதூ$_4$லகுலத்தின் தலைவராகவும் உள்ள தா$_3$ஸரதியாகிற முதலியாண்டானை வணங்குகிறேன்]

8. பெரிய திருமுடியடைவு. பரதாம்ஶ பூதரான முதலியாண்டானுக்குத் திருவவதார ஸ்தலம் தொண்டைமண்டலத்தில் பெருமாள் கோயிலுக்குப் பூர்வபாகத்தில் ஸ்ரீ புருஷமங்கலம். திருநக்ஷத்ரம் ப்ரபவ வருஷம் மாசிமாஸம் இருபத்தஞ்சாந்தேதி க்ருஷ்ணபக்ஷத்தில் தஶமி வியாழக்கிழமை புனர்பூசம் ஸௌபாக்ய நாமயோகம் கரஜாகரணம் கும்பலக்னம். திருத்தகப்பனுர் ஆநந்த தீக்ஷிதர். திருத்தாயார் நாச்சியாரம்மன், குலம் வடமாள். வாதூலகோத்ரம் யஜுஶ்ஶாகை. ஆபஸ்தம்பஸூத்ரம். திருநாமங்கள் தாஶரதி, ராமானுஜன் பொன்னடி, ஸ்ரீவைஷ்ணவதாஸர், திருமறுமார்பன், முதலியாண்டான். குமாரர் கந்தாடையாண்டான்; ஆசார்யர் எம்பெருமானுர். இவருக்கு வேதஶாஸ்த்ர ப்ரபந்தரஹஸ்யம், ஸ்ரீபாஷ்யாதி ஸகல ரஹஸ்யார்த்தங்களும் ஸாதித்தருளினவர் எம்பெருமானுர். திருவாராதனம் அழகிய சிங்கர். இருப்பிடம் கோயில். ப்ரபந்தங்கள் அருளிச்செய்தருளினவர் திருத்தகப்பனுர். இவர் எம்பெருமானுருக்குத் திருமருமகனுராய், திருவடிகளுமாய், த்ரிதண்டமுமாயிருப்பார். இவர் மந்த்ரார்த்தத்துக்காக அத்துழாயம்மன் திருமாளிகையிலே ஸகலவித கைங்கர்யங்களும் செய்தருளினுர். இவர் அருளிச்செய்தருளின ப்ரபந்தம் ரஹஸ்யத்ரயம். இவர் கந்தாடை திருவம்ஶத்துக்கெல்லாம் கூடஸ்தர். இவர் நூற்றைந்து திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார்.

9. வார்த்தாமாலை (18) வார்த்தை விவரணம். உபய விபூதியும் ஈஶ்வரனுக்கு ஶேஷமாயிருக்கும்; இதிலிருக்குமவர்கள் பத்தரும், நித்யரும், முக்தரும்; பத்தர் இரண்டுபடி:- முமுக்ஷுக்களும், ஸம்ஸாரிகளும். இவர்கள்தான்-அஹங்கார மமகாரம் கழிந்திருப்பாரும், 'அஹங்கார மமகாரங்களிலே அகப்பட்டோம்' என்றிருப்பாரும், அஹங்கார மமகாரங்களோடு உடன்பட்டிருப்பாருப்பாருமாயிருக்கும், இதில் கழிந்திருப்பார்-நித்யரும், முக்தரும்; அகப்பட்டோம் என்றிருப்பார் முமுக்ஷுக்கள்; உடன்பட்டிருப்பார்-நித்ய ஸம்ஸாரிகள். இதில் கழிந்திருப்பாரை எம்பெருமான் தன் இனிமைக்கு விஷயமாக்கும்; 'அகப்பட்டோம்' என்றிருப்பாரைத் தன் இரக்கத்துக்கு விஷயமாக்கும்; உடன்பட்டிருப்பாரைத் தன் லீலைக்கு விஷயமாக்கும்-என்று முதலியாண்டான். [இனிமைக்கு விஷயமாக்கும்-நித்யமுக்தர்களை எம்பெருமான் தனக்கு போக்ய பதார்த்தங்கள்போலே அநுபவிப்பான். இரக்கத்துக்கு விஷயமாக்கும் - முமுக்ஷுக்களை நிர்ஹேதுக க்ருபையாலே முக்தர்களாக்குவான்.

லீலைக்கு விஷயமாக்கும் - ஸம்ஸாரிகளை, படைத்தல், அளித்தல், அழித்தல் முதலான செயல்களுக்கு உட்படுத்தித் தான் லீலாரஸமநுபவிப்பான்]

10. வார்த்தாமாலை(15)வார்த்தைச் விவரணம். ஸ்வஸ்வரூபம்-ஜ்ஞாநப்ரதா₄நம்; உபாயம்-வ்யவஸாய ப்ரதா₄நம்; ப்ராப்யம்- அபேக்ஷாப்ரதா₄நம்; விரோதி₄- அருசிப்ரதா₄நம்-என்று முதலியாண்டான் அருளிச்செய்வர். [ஸ்வஸ்வரூபம் ஜ்ஞான ப்ரதா₄னம்-ஆத்மஸ்வரூபம் தன்னுடையசேஷத்வபாரதந்த்ர்ய ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவதை முக்₂யமாகக் கொண்டிருக்கும். உபாயம் வ்யவஸாயப்ரதா₄னம் - உபாயமாகிற எம்பெருமான் தன்னையே உபாயமாக உறுதி பூண்டவர்களையே நிர்ஹேதுகமாக ரக்ஷித்தருள்வான். ஆகையால் உபாயத்துக்கு வேண்டியது உறுதியே என்று கருத்து. ப்ராப்யம் அபேக்ஷாப்ரதா₄னம் - ப்ராப்யமான கைங்கர்யம் "ஒழிவில் காலமெல்லாம்" [திருவாய் 3-3-1] "உனக்கே நாமாட்செய்வோம்" [திருப்பாவை 29] என்கிறபடியே ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் உசிதமான ஸகலவித₄பரார்த்த₂ கைங்கர்யங்களையும் செய்யவேணும் என்ற ப்ரார்த்த₂னையை] முக்₂யமாகக் கொண்டதாயிருக்கும் என்று கருத்து. விரோதி₄ அருசிப்ரதா₄னம் - விரோதி₄களான அவித்₃யா, கர்ம, வாஸநா, ருசி, ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம் என்னும் ஐந்திலும் சேதனனுக்கு ருசி (விருப்பு) இல்லாமலிருக்கை விரோதி₄ விரோதி₄யாகாமைக்கு முக்₂யம் என்று கருத்து ]

11. வார்த்தாமாலை (36f) வார்த்தைச் விவரணம். ஸ்வரூபத்தில் உணர்த்தியையும், 'ஸ்வரக்ஷணத்தில் அஶக்தியையும், எம்பெருமானைப் பேணுகையையுஞ் சொல்லுகிறதென்று முதலியாண்டான் அநுஸந்தி₄த்தருளுவர். [திருமந்த்ரத்தில் முதற் பத₃மான ப்ரணவம் ஸ்வரூபஜ்ஞானமுடைமையையும், இரண்டாம் பத₃மான நம: பத₃ம் தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தனக்கு அஶக்தியையும், மூன்றும் பத₃மான நாராயணாயபத₃ம் எம்பெருமானுக்குப் பரிந்து கைங்கர்யம் செய்வதையும் சொல்லுகிறது என்பது முதலியாண்டான் நிர்வாஹம்.]

12. வார்த்தாமாலை (50) வார்த்தைச் விவரணம். அழுக்கடைந்த மாணிக்கத்தை நேர்சாணையிலே ஏறிட்டுக்கடைந்தால் பளபளக்கை வடிவாயிருக்குமாபோலே, அஜ்ஞான சேதநனுக்கு திரோதா₄நநிவ்ருத்தியிலே அடியேனென்கை வடிவாயிருக்குமென்று

முதலியாண்டான். [ரஹஸ்யத்ரயஜ்ஞானமாகிற சாணையிலிட்டுக் கடைவதாலே- ஶரீரஸம்பந்தத்தால் ஏற்பட்ட அஜ்ஞானம், கர்மம், வாஸனை, ருசி முதலானவை கழிந்தால், ஜீவனாகிற ரத்னத்துக்கு பகவச்சேஷத்வமாகிற ஒளி ப்ரகாஶிக்கும் என்று கருத்து]

13. வார்த்தாமாலை (59c) வார்த்தை ௭ விவரணம். "ஸதா" என்பர் முதலியாண்டான். ["ஸக்ருதேவ" என்றதில் "ஸக்ருத்" என்பதற்கு 'ஒரு தரம்' என்றே பொருள்கொண்டு "இதற்கு முன் அநாதிகாலம் ஸம்ஸாரக் கடலில் மூழ்கியிருந்தவன் இனிமேல் முடிவில்லாத காலம் பகவதநுபவமாகிற பலத்தை அநுபவிக்கப் போகிறானாகையாலே, ஆயுள் உள்ளவரை எம்பெருமானை ஶரணம் புகுந்துகொண்டேயிருந்தாலும் ஒரு தடவைதான் என்று சொல்லலாமாகையாலே, நாம் எப்போதும் த்வயத்தை அநுஸந்திப்பதற்கும், ஸ்ரீராம சரமஶ்லோகத்தில் ஒரு தடவை என்று சொன்னதற்கும் முரண்பாடில்லை என்று முதலியாண்டான் நிர்வாஹம்]

14. வார்த்தாமாலை (116) b வார்த்தை ௮ விவரணம். 'பற்றிவிட' என்றருளிச்செய்வர் முதலியாண்டான். பிச்சுந்தெளிந்து கண்விழிக்கை என்று ஆண்டான். ["விட்டுப்பற்றுவது ஆழ்வானைப்போன்ற வைராக்யஶீலர்க்குக் கூடுமேயொழிய ஸாமான்யர்களுக்குக் கூடாது" என்று திருவுள்ளம் பற்றிய முதலியாண்டான் "விஷயாந்தரங்களை விடாவிடிலும், எம்பெருமானைப் பற்றினால் 'மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு' [மூன்-திருவ 14] என்கிறபடியே, அவனுடைய இனிமை இவனைப் படிப்படியாக விஷயாந்தரங்களை விடச்செய்துவிடும். பால் குடித்துப் பித்தத்தைத் தீர்த்துக்கொள்வதுபோன்றது இது. ஸாமான்ய ஜனங்களுக்கு விஷயாந்தரங்களைவிட்டே எம்பெருமானைப் பற்றுவது என்பது பால் முதலான மருந்துகளைக் குடிக்காமலே பைத்தியம் தெளிந்து அறிவு ஏற்படுவதுபோல இயலாத கார்யம்" என்று அருளிச்செய்வர்.]

15. வார்த்தமாலை (136 | ) வார்த்தை ௯ விவரணம். குருபரம்பரையையொழிந்த ப்ரபத்தியும் ஸாதநாந்தரத்தோடொக்குமென்றருளிச்செய்வர் முதலியாண்டான். ["குருபரம்பரையை அநுஸந்திக்காமல் ப்ரபத்தி மந்த்ரமான த்வயத்தை உச்சரிப்பது ஸாதநாந்தராநுஷ்டானம்போல ஸ்வரூபவிருத்தமானது" என்று முதலியாண்டான் அருளிச்செய்வர்.]

16. வார்த்தாமாலை (160) வார்த்தை ச விவரணம். ஈஶ்வரனாகிற கர்ஷகன், சேதநனாகிற திருப்பள்ளித்தாங்கன்றை ஶேஷத்வஜ்ஞாநமாகிற க்ஷேத்ரத்திலே ஊன்றி, ததீ3யாபராத4மும் விபரீதஜ்ஞாநமுமாகிற புழுக்கடியாமல் நோக்கி, கைங்கர்யாநுவர்த்தநமாகிற மடையாலே ஆசார்யனருளாகிற நீர்பாய்ச்சி, அஹங்கார மமகாரமாகிற களை மண்டாமே, பா4க3வத3விஷயமாகிற களைக்கொட்டாலே சேற்றையெடுத்து, விபரீதாங்கீ3காரமாகிற மாடும், ஶப்3தா3தி3விஷயமாகிற பேய்க்காற்றும் புகுராமே, ப்ரபந்நத்வமாகிற வேலியையிட்டு, ஸ்ரீவைஷ்ணவர்களாகிற வர்ஷத்தையுண்டாக்கித் தளிரும் முறியும் மொட்டும் செலுந்துமாய் அதின் ஒளிமொட்டெடுத்துக் கட்டின மாலையிறே பரமைகாந்தி. [கர்ஷகன் - "பத்தியுழவன்" [நான் திருவ 28] என்கிறபடியே சேதனனை விதையாயிருக்கும் நிலையிலிருந்து படிப்படியாக முயற்சி செய்து, தான் அணிந்துகொள்ளும் மாலைபோன்ற பரமைகாந்தியாகும் நிலைக்கு மாற்றும் உழவன். திருப்பள்ளித்தாங்கன்று - விதை. க்ஷேத்ரம் - நிலம். விபரீதஜ்ஞானம் - தே3ஹாத்மாபி4மானம், ஸ்வஸ்வாதந்த்ர்யம், அந்யஶேஷத்வஜ்ஞானம் முதலானவை, கைங்கர்யாநுவர்த்தனம் - ஆசார்யவிஷயத்தில் கைங்கர்யமும் அவனைப் பின்செல்வதும். விபரீதாங்கீ3காரம் - முற்கூறிய விபரீதஜ்ஞானமுடையவர்களோடு ஸஹவாஸம். செலுந்து - கொழுந்து.]

17. வார்த்தாமாலை (161) வார்த்தை ச விவரணம். பரமசேதநனாகிற பசியன், ஆசார்யமுக2த்தாலே அவகா4தனாய் சேதநனாகிற சிறுநெல் பொறுக்கி, வேதா3ந்தமாகிற உரலிலே உபதே3ஶமாகிற உலக்கையாலே ஶ்ரவணமாகிற தலைத்துகை துகைத்து, உடம்பாகிற உமிகழித்து, மனனமாகிற அடுக்கலிட்டு, நிதி3த்4யாஸநமாகிற சுளகாலே விவேகமாகிற கொழி கொழித்து, அஹங்காரமமகாரமாகிற அடிக்கழித்து, அந்யஶேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யமாகிற நுனிக்கொழித்து, ருசிவாஸனையாகிற தவிடறக்குத்தி, ஶேஷத்வஜ்ஞாநமாகிற வெளுப்பையுண்டாக்கி, அத்4யவஸாயமாகிற அரிக்குஞ்சட்டியிலே ப்ரபத்தியாகிற நீரை வார்த்து, ஸாத4நாந்தரமாகிற தவிடறக்கழுவி, ப்ரயோஜநாந்தரமாகிற கல்லற அரித்து, பரப4க்தியாகிற பானையிலே பரஜ்ஞாநமாகிற உலைகட்டி, அநுப4வமாகிற அடுப்பிலே விஶ்லேஷமாகிற நெருப்பையிட்டு, இருவினையாகிற விறகை மடுத்து, த்வரையாகிற ஊத்தூதி, ஆற்றாமையாகிற கொதி கொதித்து, பரமப4க்தியாகிற பொங்கினாலே, ஸூக்ஷ்ம ஶரீரமாகிற

கரிக்கலத்தோடே ஸுஷும்நையாகிய வாசலாலே புறப்பட்டு, அர்ச்சிராதி₃யாகிற படியொழுங்காலே மாகவைகுந்தமாகிற மச்சிலேற்றி, அப்ராக்ருதமாகிற பொற்கலத்தோடே "அஹமந்நம்" என்கிற சோற்றையிட்டு, "அஹமந்நாத₃:" என்று பூ₄ஜியாநிற்கும்; இவையிரண்டும் முதலியாண்டான் அருளிச்செய்த வார்த்தை [முந்தின வார்த்தையும் இதுவும் முதலியாண்டான் வார்த்தை. முந்தின வார்த்தையில் - ஸர்வேஶ்வரன் சேதனனைப் பரமைகாந்தியாகத் திருத்துவதை ஓர் உழவன் விதையை ஊன்றி, பாதுகாத்து, நீர் பாய்ச்சி, வேலியிட்டு, பூப்பறித்து, மாலை கட்டி அணிவதாக உருவகப்படுத்தினர். இவ்வார்த்தையில் சேதன லாப₄மாகிற பசியையுடைய பரம சேதனன். சேதனனாகிற நெல்லைப் பொறுக்கி உரலிலிட்டுக் குத்திப்புடைத்துக் கொழித்துக் களைந்து கழுவிக் கல்லரித்து, பானையிலிட்டு உலைகட்டி அடுப்பிலிட்டுப் பொங்கவைத்து அன்னமாக்கி, கரிப்பானையோடே படி ஏறி மச்சுக்குச் சென்று பொற்கலத்திலிட்டு பூ₄ஜிப்பதாக உருவகப்படுத்துகிறார். ஆசார்யோபதே₃ஶத்தாலே குத்தினபின்பு அறிவுடைய சேதனனாகிற அரிசியாகும் சிறு நெல் ஆசார்யனிடமிருந்து முதலில் கேட்பதாகிற ஶ்ரவணம் நெல்லை முதலில் உரலிலிட்டுக் குத்தும் குத்தலாகிறது. அதனாலே தே₃ஹாத்மாபி₄மானமாகிற உமி கழிகிறது. ஶ்ரவணத்துக்கு அடுத்தபடி சேதனன் பல முறை செய்யும் மனனம் முற்கூறிய நெல்லை அடுத்தபடி பல முறை குத்தும் அடுக்கலாகிறது. மனனத்துக்குப் பிறகு சேதனன் செய்கிற நிதி₃த்₄யாஸனமாகிற த்₄யானம் சுளகாகவும் அதனால் பிறக்கும் விவேகம் (பகுத்தறிவு) கொழித்தலாகவும் உருவகப்படுத்தப்படுகிறது இப்படி சுளகெனப்படும் முறத்திலேயிட்டுக் கொழிக்கும்போது, முறத்தில் அடியிலேயிருக்கும் நெல்லைக் கழித்து நுனியிலே இருக்கும் குருணையைக்கொழித்து நடுவில் அரிசியை எடுப்பதுபோலே, அஹங்கார மமகாரங்களாகிற அடிப்பகுதியைக் கழித்து, அந்யஶேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்களாகிற நுனிப்பகுதியைக் கொழித்துவிட்டு, சேதனனாகிற அரிசியை எடுத்துக்கொள்ளுகிறான் என்று கருத்து. அந்த அரிசி தவிட்டோடு சேர்ந்திருக்குமாகையாலே சிவந்திருக்கும். அதை மறுபடி குத்தி வெளுப்பாக்குவது போலே இந்தச் சேதனனாகிற அரிசியையும் ருசி வாஸனைகளாகிற தவிடு போகும்படி மறுபடியும் வேதா₃ந்தமாகிற உரலிலே ஆசார்யோபதே₃ஶமாகிற உலக்கையாலே குத்தி ப₄க₃வச்சே₂ஷத்வ ஜ்ஞானமாகிற வெளுப்பை உண்டாக்குகிறான் என்று கருத்து.

இப்படித் தவிடறக்குத்தி வெளுப்பான அரிசியை அரிக்குஞ்சட்டியிலே இட்டு நீர் வார்த்துக் களைந்து அதில் ஸௌக்ஷ்மமாக ஒட்டிக்கொண்டிருக்கும் தவிடுபோம்படி கழுவி, அரிசியோடு சேர்ந்திருக்கும் கற்களை முழுவதும் அரித்தெடுப்பதுபோலே, 'எம்பெருமானே உபாயமாயும் உபேயமாயுமிருப்பவன்' என்னும் உறுதியாகிற அரிக்குஞ்சட்டியிலே இச்சேதனனாகிய அரிசியையிட்டு, ஶரணாக$_3$தியாகிற நீரைவார்த்து, ஸாத$_4$நாந்தரங்களாகிற ஸௌக்ஷ்மத் தவிடு போம்படி கழுவி, ப்ரயோஜநாந்தரங்களாகிற கற்களை முழுவதும் அரிக்கிறான் என்று கருத்து. அரிக்குஞ்சட்டியில் கழுவிக் கல்லரித்த பின்பு அரிசியைப்பானையிலே உலை கட்டி, அடுப்பிலே நெருப்பையிட்டு விறகையடுக்கி, ஊதுகுழலால் ஊதி, உலையிற் கொதிவந்த பின்பு பொங்கின சோறு பக்குவமாகும். அதுபோலே சேதனனாகிற அரிசியை, பரப$_4$க்தியாகிற பானையிலே பரஜ்ஞானமாகிற உலைகட்டி, ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வமாகிற அடுப்பிலே தன்னை (எம்பெருமானைப்) பிரிவதாகிற நெருப்பையிட்டு, புண்யபாபங்களாகிற விறகையடுக்கி, 'எம்பெருமானைப் பெறவேணும்' என்னும் த்வரையாகிற ஊதுகுழலைக் கொண்டு ஊதி, பிரிவாற்றாமையாகிற கொதிகொதித்து, பரமப$_4$க்தியாகிற பொங்கின நிலையை (பக்குவ நிலையை) சேதனனாகிற அவ்வரிசிக்கு விளைக்கிறான் என்று கருத்து. பொங்கின சோற்றைக் கரிக்கலத்தோடு சமையல் அறை வாசல் வழியாக வெளியில் கொண்டு வந்து மச்சுப்படி வழியாக மச்சிலேறி அழகான கலத்திலிட்டு, பசியுடைய சக்ரவர்த்திகள் நிலாச் சாப்பாடு சாப்பிடுவார்கள். அது போலே, சேதனலாப$_4$மாகிற பெரும் பசியையுடைய மூற்கூறிய ஸர்வலோக சக்ரவர்த்தியான எம்பெருமான், இச்சேதனனாகிற பக்வாந்நத்தை ஸௌக்ஷ்ம ஶரீரமாகிற கரிக்கலத்தோடே எடுத்துக் கொண்டு ஸுஷும்நா நாடியாகிற வாசலாலே புறப்பட்டு அர்ச்சிராதிக$_3$தியாகிற மச்சுப்படி வழியாக "மாகவைகுந்தம்" [திருவாய்9-3-7] எனப்படும் வைகுண்ட$_2$மாகிற மச்சிலேற்றி அப்ராக்ருத ஶரீரமாகிற பொற்கலத்திலே "அஹமந்நம்" [தை-ப்$_4$ருகு$_3$ 10] [நான் பரமாத்மா பு$_4$ஜிக்கும் அன்னமாயிருக்கிறேன்] எனப்படும் இச்சேதனனாகிற அறுசுவை அன்னத்தையிட்டு "அஹமந்நாத$_3$:" [தை-ப்$_4$ருகு$_3$ 10] [நான் சேதனனாகிற அன்னத்தை பு$_4$ஜிக்கிறேன்] என்று அநுப$_4$விக்கிறான் என்று கருத்து.

18. வார்த்தாமாலை (167) வார்த்தைச்விவரணம். பிள்ளையுறங்காவில்லிதாஸர், முதலியாண்டான் ஸ்ரீபாதத்திலே சென்று தண்டனிட்டு 'ஶிஷ்யலக்ஷணமிருக்கும்படியென்?' என்று விண்ணப்பம் செய்ய; ஆண்டானருளிச்செய்தபடி;— "ஆசார்ய விஷயத்திலே ஶிஷ்யன் பார்யாஸமனுமாய், ஶரீரஸமனுமாய், தர்மஸமனுமாயிருக்கும்; அதாவது-சொன்னத்தைச் செய்கையும், நினைத்தத்தைச் செய்கையும், நினைவாயிருக்கையும்" என்றருளிச்செய்தார். [ஆசார்யன் விஷயத்தில் ஶிஷ்யன் பதிவ்ரதையான பார்யையைப்போலே சொன்னதைக் கேட்பவனுகவும், ஶரீரம் போலே நினைத்ததைச் செய்பவனுகவும், அறிவு போலே நினைவாகவேயிருப்பவனுகவும் இருப்பான் என்று கருத்து ]

19. வார்த்தாமாலை [170] முதல்பாகம் பக்கம் 366 ஐதிஹ்ய நிர்வாகம் 13 காண்க.

20. வார்த்தாமாலை (196c) போசலராஜ்யத்து ஸ்ரீஸாளக்ராமத்துக்கு உடையவரெழுந்தருள, ஊரடைய ஶைவராகையாலே ஆதரியாதேயிருக்க, உடையவர், முதலியாண்டானைப்பார்த்து 'இவ்வூரார் நீர்முகக்குமிடத்திலே உன்னுடைய ஸ்ரீபாதத்தை விளக்கி வா' என்றருளிச்செய்ய; அவரும் அப்படியே செய்ய, பிற்றைநாள் அவ்வூராரடைய உடையவர் ஸ்ரீபாதத்தை ஆஶ்ரயித்தார்கள்; அதுக்குப்பின்பு ஸ்ரீஸாளக்ராமமென்று பேராய்த்து.

21. வார்த்தாமாலை (205) முதல் பாகம் பக்கம் 116 ஐதிஹ்ய நிர்வாகம் 13 காண்க.

22. வார்த்தாமாலை(211) முதல் பாகம் பக்கம் 97 ஐதிஹ்ய நிர்வாஹம் 12 காண்க.

23. வார்த்தாமாலை (214) கூரத்தாழ்வான் வைபவம் ஐதிஹ்ய நிர்வாகம் 19 காண்க.

24. வார்த்தாமாலை (225) வார்த்தைச்விவரணம். முதலியாண்டான் அருளிச்செய்த வார்த்தை; ப்ரபந்நன் யாவச்சரீரம் காலயாபநம் பண்ணும்படி எங்ஙனேயென்னில்;-தேஹத்தில் ஆத்மபுத்தி தவிர்கையும், a தேஹாநுபந்திகளானபதார்த்தங்களிலே மமதாபுத்தி தவிர்கையும், b தேஹாத்பரனுன ஆத்மாவைத் தானுக நினைத்திருக்கையும், ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத பாரதந்த்ர்யமே ஸ்வரூபமென்றிருக்கையும். பாரதந்த்ர்யத்துக்கு எல்லை

ஏதென்னில், ததீ₃யஶேஷத்வபர்யந்தமென்றிருக்கையும், உத்₃தே₃ஶ்யரான ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்திலும், மஹோபகாரகனான ஆசார்யன் விஷயத்திலும், ஸர்வப்ரகார ரக்ஷகனான எம்பெருமான் விஷயத்திலும், கரணத்ரயத்தாலும் ஆனவளவும் அநுகூலனாய்ப் போரவும், c வருந்தியும் ப்ராதிகூல்யம் தவிரவும், ஆசார்யருசி பரிக்₃ருஹீதமான த்₃வயார்த்த₂ம் நெஞ்சிலே பட அநுஸந்தி₄க்கவும், உகந்தருளின நிலங்களிலே பலகாலும்புக்கு முகங்காட்டவும், அருளிச்செயலைக்கொண்டு போதுபோக்கவும், d ந்யாயார்ஜிதமான த்₃ரவ்யத்தாலே க்ஷுந்நிவ்ருத்திமாத்ரத்திலே பர்யாப்திபிறக்கவும், தே₃ஹாத்மாபி₄மாந நிவ்ருத்தி பூர்வகமாக ஸம்ஸாரபீ₄தனாகவும், பரதே₃வதா ப்ரதிபத்தியும், ப்ரயோஜநாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக ப்ராப்யருசியும், e ஸாத₄நாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக ஸித்₃தே₄ாபாய வ்யவஸ்த்தை₂யும், இவை இத்தனையும் ஆசார்யகடாக்ஷத்தாலும், எம்பெருமான் விஷயீகாரத்தாலும் ஸித்₃தி₄க்குமென்று அத்₄யவஸித்திருக்கையும், f ஆசார்யஸந்நிதி₄யில்லாதபோது, விடாய்த்தவன் தண்ணீர்பெற்றானாகிலோ என்னுமாபோலே இருக்கவும், ப₄க₃வத்ஸந்நிதி₄யில்லாதபோது நடுவழியிலே பசித்தவன் ஊரைச் சேரப்போமாபோலேயிருக்கவும்.

இவ்வதி₄காரிக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாத₃தீர்த்த₂ம் g ஜாதமான ப்ரஜைக்குத் தாய்முலைப்பால்போலே; எம்பெருமானுடைய தீர்த்த₂ம் பசுவின் பாலும் நெய்யும்போலே; ஆழ்வார்கள் அருளிச்செயல் அம்ருதபாநம்போலே; ஸாமாந்ய ஶாஸ்த்ரஶ்ரவணம் h அநபி₄மதபே₄ாஜநம்போலே; i விவித₄ப₂லங்களான நாநாவித₄ ப₄க₃வந்மந்த்ரஜபாதி₃கள் ரஸநா ப₃லத்தாலே வந்ததாகில், ஸம்ஸாரத₄ர்மாநுவர்த்தநம் போலே; j த்₃வயார்த்த₂ாநுஸந்த₄ாநம் ப்ராப்யதே₃ஶவாஸ ஸுக₂ஸமாநம் என்னலாமித்தனையிறே; மற்றுச்சொல்லலாவதில்லை. [a தே₃ஹத்தோடு தொடர்பு கொண்ட பெண்டிர், பிள்ளைகள், வீடு, வயல், பணம் முதலியவற்றில் என்னுடையவை என்ற எண்ணம் நீங்குகையும். b தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டு ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபமாயிருப்பது ஆத்மா என்று நினைத்திருக்கையும். c வருந்தியும் - மிகமுயன்றாவது ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆசார்யன் எம்பெருமான் விஷயங்களில் மனோவாக்காயங்களாகிற முக்கரணங்களாலும் அபசாரங்களைத் தவிரவும். d ந்யாயமான வழிகளிலே தேடப்பட்ட பொருளைக் கொண்டு பசியில்லாமல் வாழுமளவோடு த்ருப்திபெறவும். e மற்ற

ஸாத₄னங்களாகிற கர்மஜ்ஞானப₄க்தியோக₃ங்களை வாஸனையோடு கைவிட்டு ஸித்₃தோ₄பாயமான எம்பெருமானே உபாயமென்று உறுதிபூண்டிருக்கையும். f ஆசார்யனைவிட்டுப் பிரிந்தபோது தாகத்தால் வருந்தினவன் ஒருவாய் தண்ணீர்பெற்றால் உயிர் த₄ரித்திருக்கலாம் என்று கண்டார் நினைக்கும்படி இருப்பதுபோலே ஆசார்யனோடு கூடுவதில் பேரவாக்கொண்டவனாய் இருக்க வேணும்; எம்பெருமானைவிட்டுப் பிரிந்திருக்கும் போது நடுவழியில் பசித்தவன் விரைந்து ஊர் சென்று பசியாற நினைப்பதுபோலே எம்பெருமானை விரைவில் அடைய நினைக்க வேண்டும் பசியைக் காட்டிலும் தாகம் அஸஹ்யமாயிருப்பதுபோலே எம்பெருமானைப் பிரிந்திருப்பதைக்காட்டிலும ஆசார்யனைப் பிரிந்திருப்பது மிகவும் பொறுக்கவொண்ணாதது என்று கருத்து. g ஜாதமான ப்ரஜை - அப்போது பிறந்த குழந்தை. h அநபி₄மதபோ₄ஜனம் - வேண்டாத சாப்பாடு. i ப₄க₃வத்₃ப₄ாக₃வத கைங்கர்யங்களையொழிந்த ப₂லங்களின் பொருட்டு அஷ்டாக்ஷர ஸுத₃ர்ஶன மந்த்ர ஜப ஹோமாதி₃கள் முதலான ப₄க₃வந் மந்த்ரஜபஹோமாதி₃கள் அநாதி₃வாஸநாப₃லத்தாலே ப்ரபந்நனுக்கு ஏற்பட்டதாகில், தினப்படி வாழ்க்கையில் பெண்டுபிள்ளைகளைப் பின் சென்று வாழ்வதுபோலே இதுவும் தவிர்க்கவொண்ணாமல் வந்துவிட்டது என்று நினைக்க வேணும். j த்₃வயமந்த்ரத்தைப் பொருளோடு அநுஸந்தி₄ப்பது ஸ்ரீவைகுண்ட₂த்தில் வாழ்ந்து ப்₃ரஹ்மாநந்த₃த்தையநுப₄விப்பதை ஒக்கும் என்று நினைக்கவேண்டும். ஆக, இவ்வார்த்தையில் ஸ்ரீ வைஷ்ணவன் உயிருள்ளவரை பொழுதுபோக்கும் வழி சொல்லப்பட்டது.]

25. வார்த்தாமாலை 324. வார்த்தைசிவிவரணம். முதலியாண்டான் மிளகாழ்வானுக்கு அருளிச்செய்தவார்த்தை; கன்னக்கள்ளர் நால்வர். அவர்களைப்பரிஹரித்து வர்த்திக்கவேண்டும். அவர்களாரென்னில். ஆத்மாபஹாரி. விபூ₄த்யபஹாரி, கு₃ணித்வாபஹாரி, பரத்வாபஹாரி. ஆத்மாபஹாரியாகிறான் - திருமார்பில் கௌஸ்துப₄த்தைக் களவு கண்டவன்; எங்ஙனேயென்னில் - ஸ்வதந்த்ரனாயிருக்கை. விபூ₄த்யபஹாரியாகிறான் ஏகாயநன்; எங்ஙனேயென்னில்; - மாத்ருஹீநன். கு₃ணித்வாபஹாரியாகிறான் - மாயாவாதி₃; எங்ஙனேயென்னில் - நிர்க்குணமென்கையாலே. பரத்வாபஹாரியாகிறான் - ருத்₃ரபரத்வ ப்ரமாண நிஷ்ட₂ன். இவர்களுக்கு அஜ்ஞாநமும், அந்யதா₂ஜ்ஞாநமும், விபரீதஜ்ஞாநமும் விஞ்சியிருக்கும், [பிறர் சொத்துக்களைக்

கன்னம் வைத்துக் கொள்ளையிடும் கள்வர்களைப்போலே எம்பெருமானுடையசெல்வங்களை துர்வாதங்களைச் செய்து அபஹரிக்கும் கள்வர்கள் நால்வர், அவர்களைக்கண்டால் தூரவிலகிச்செல்லவேண்டும். அவர்களாவார் (1) எம்பெருமானுக்குத் திருமார்பில் ஸ்ரீகௌஸ்துப₄ மணி போலே விலைமதிப்பற்ற செல்வமாயிருக்கும் ஆத்மாவை அவனுக்கு ஶேஷமாயிராமல் தனக்கே உரியது என்னும் ஸ்வஸ்வாதந்த்ர்ய நினைவாலே அபஹரிக்கும் ஆத்மாபஹாரி, "யோऽந்யதா₂ ஸந்தமாத்மாநம் அந்யதா₂ ப்ரதிபத்₃யதே। கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா॥ [பார-உத் 42-35] [எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கும் ஆத்மாவை, தனக்குரியதாக நினைத்து ஆத்மாவையே அபஹரிக்கும் அக்கள்வனால் செய்யப்படாத குற்றம் எது?] என்று இவன் செய்யும் குற்றத்தின் கொடுமை கூறப்பட்டது. (2) எம்பெருமானுடைய செல்வங்களில் தலையான செல்வமான லோகமாதாவான ஸ்ரீதே₃வியை இல்லைசெய்து ப்₃ரஹ்மசாரி நாராயணனையே ஶேஷியாகக்கொள்ளும் ஏகாயநன் எம்பெருமானுடைய விபூ₄தியை (செல்வத்தை) அபஹரிப்பவனாகிறான். (3) ஸகல கல்யாண கு₃ணங்களும் நிறைந்தவனான நாராயணனை ஒரு கு₃ணமும் அற்றவன் என்கையாலே மாயாவாதியாகிற அத்₃வைதி கு₃ணங்களை அபஹரிப்பவனாகிறான். (4) ஶிவனுக்குப் பரத்வம் கூறும் ஶைவாகம ஶைவபுராணங்களிலே ஊன்றி நிற்கும் ஶைவன் எம்பெருமானுடைய பரத்வத்தை அபஹரிப்பவனாகையாலே பரத்வாபஹாரியாகிறான். இவர்கள் அனைவர்க்கும் அஜ்ஞானமும் (ஜ்ஞானமின்மையும்), அந்யதா₂ ஜ்ஞானமும் (ஸ்வபா₄வங்களைத் தவறாக நினைப்பதும்), விபரீதஜ்ஞானமும் (த₄ர்மிஸ்வரூபத்தையே தவறாக நினைப்பதும்)—மிகுதியாயிருக்கும்.

26. வார்த்தாமாலை (340a) வார்த்தை. பா₄க₃வதஶேஷத்வ விது₄ரமான ப₄க₃வச்சேஷத்வமும், தே₃ஹாத்மாபி₄மாநம் போலே பொல்லாதென்று முதலியாண்டான்.

27. வார்த்தாமாலை (373). முதல் பாகம் பக்கம் 379 ஐதிஹ்ய நிர்வாஹம் 81 காண்க.

28. வார்த்தாமாலை (441 I) வார்த்தைச்விவரணம். "ஸர்வம் ப₃லவத: பத்₂யம்" என்றார்-முதலியாண்டான். ['ப₃லமுடையவனுக்கு அபத்₂யமான ஆஹாரமும் பத்₂யமாகும்' என்று இந்த ப்ரமாணத்துக்குப் பொருள். இது எம்பெருமானாரைப்பற்றி முதலியாண்டான் அருளிச்செய்தது. "த்₃ருஷ்டோ த₄ர்மவ்யதிக்ரம:

ஸாஹஸம் ச பூர்வேஷாம்; தேஷாம் தேஜோ விஶேஷேண ப்ரத்யவாயோ ந வித்3யதே'' [கௌதமதர்ம 1-3, 4] [பூர்வர்களான பெரியவர்கள் சில ஸமயங்களில் தர்மத்துக்கு மாறுபட்ட கார்யங்களையும் ஸாஹஸமான கார்யங்களையும் செய்திருப்பதைக் காண்கிறோம். மிகுதியான தேஜஸ் உண்டாகையாலே அவர்களுக்கு அவை தவறில்லை] என்ற ஸ்ம்ருதி வசனமும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. ஆபத்துக்காலத்தில் வெள்ளை சாத்திக் கொண்டு எழுந்தருளியது போன்ற எம்பெருமானுருடைய கார்யத்தைப்பற்றியதாய் இது இருக்கலாம்.]

29. வார்த்தாமாலை (450). முதல்பாகம் பக்கம் 380 ஐதிஹ்ய நிர்வாஹம் 35 காண்க.

30. வார்த்தாமாலை 451. முதல் பாகம் பக்கம் 384 ஐதிஹ்ய நிர்வாகம் 36 காண்க.

31. நாச்சியார்திருமொழி 12-2. முதல் பாகம் 118 ஐதிஹ்ய நிர்வாஹம் 9 காண்க.

32. பெருமாள் திருமொழி 5-1. (மற்றவள் தன் அருள் நினைந்தேயழுங்குழவி) நம்பி திருவழுதி வளநாடுதாஸரை முதலியாண்டான் கோபித்து, கையாலும் காலாலும் துகைத்து இழுத்தவாறே திண்ணையிலேபட்டினியே யொருநாள் போகாதே கிடந்தார். ஆண்டான் மற்றை நாள் அமுது செய்யப் புகுகிறுர், ''அவன் செய்ததென்?'' என்று கேட்டவாறே ''பட்டினியே வாசலிலே கிடந்தான்'' என்று கேட்டு அழைத்து ''நீ போகாதே கிடந்ததேன்'' என்ன, ''ஒரு நாள் ஒருபிடி சோறிட்டவன் எல்லாப்படியாலும் தண்டித்தாலும் வாசல்விட்டுப் போகிறதில்லை; நான் எங்கே போவது'' என்றுர்.

33. பகவத்விஷயம் ஈடு 2-9-2 (ஞானக்கைதா) இங்கே எம்பார்க்கு ஆண்டான் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது. அதாவது, ''ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கை கொடுத்தால் எடுக்குமவர்களுக்குமெளிதாய், ஏறுமவனுக்குமெளிதாயிருக்குமிறே; அப்படியே யாகிறது'' என்று. [விவரணம்: ஏற்கனவே ஆண்டான் சிஷ்யர் என்பது தெரியாமல் எம்பார் ஒருவருக்குப் பஞ்சஸம்ஸ்காரம் செய்ய, தெரிந்தபிறகு எம்பார் ஆண்டானிடம்அபசார க்ஷாமணம் வேண்ட, ஆண்டான் சொன்ன வார்த்தை இது.]

34. பகவத்விஷயம் ஈடு 3-2-10. [அலப்புறுணுண்ணும்] 'அவ் வல்லல்' என்னுமித்தனை. த்₃ருஷ்டாந்தமில்லை. அதெல்லாம் காணக்காண விட்டுக் கடக்க நிற்க, 'அத்தோடு ஸஜாதீயமான அல்லல்' என்று எம்பார் அருளிச்செய்வது; அவ்வோபாதி க்லேசம் பேருமாயிற்று ப₄க₃வத்₃விஶ்லேஷத்தால் வருமது இவர்க்கு. அன்றிக்கே, 'ப₄க₃வதலாப₄மேயான பின்பு யமவஶ்யதையும் வந்ததேயன்றோ? என்று அந்த யமவஶ்யதை போம்படியாக' என்று ஆண்டான் நிர்வஹிக்கும்படி. [இவ்வைதிஹ்யம் இருபத்து நாலாயிரப்படியிலும் உள்ளது]

35. பகவத்விஷயம் 3-6-9 ஈடு & இருபத்துநாலாயிரப்படி. (அவனுகும் நீள்கடல் வண்ணனே)"...... அங்குத்தைக்கு உகந் தருளின விடத்தை விபூ₄தியாகநினையாதே, இங்குத்தைக்கு அவ்வி டத்தை விபூ₄தியாக நினையுங்கோள்" என்று பணிக்கும் ஆண்டான்.

36. பகவத்விஷயம் ஈடு 5-6-7. [உற்றார்களையழிப்பேனும்] அவர்களுக்கு ப்ரயோஜநாந்தரங்களிலே ருசியுண்டானால் அந்த ப்ர யோஜநங்களைக் கொடுத்து என்பக்கலில்நின்றும் அகற்றுவேன் நானென்னும்; அன்றிக்கே, ஆண்டான் பணித்தானாக இளையபெரு மாள் 'அவர்களை ஸௌந்த₃ர்யாதி₃களாலே அழிப்பேனும் நானென் றுநின்றான்' என்றருளிச்செய்வர்.]

37. பகவத்விஷயம் 5-8-4 ஈடு & இருபத்துநாலாயிரப்படி [ஆகாசத்தைநோக்கி] என்னுடைய நிராலம்ப₃நதையைப் பார்த்து' என்று ஆண்டான் வார்த்தை.

38. பகவத்விஷயம் ஈடு 6-4-10. (விண்மிசைத்தனதாமமே புக)"ஒரு தீர்த்த₂தி₃னத்தன்று நாயிறுபாடு ஆண்டானும் எம்பாரும் தங்களிலே சந்தித்து 'அஹங்கார மமகார தூ₃ஷிதராயிருப்பார் பத்துக்கோடிபேர் நடுவே அதிஸுகுமாரமான திருமேனியைக் கொண்டு பத்துநாளெழுந்தருளி நிரபாயமாகப் புக்கருளப்பெற்ற படி கண்டதே!' என்று ஒருவரையொருவர் தெண்டனிட்டுத் தழு விக்கொள்ளாநிற்கக் கண்டேன்" என்றருளிச்செய்வர் ஜீயர்.

39. பகவத்விஷயம் 6-7-5 ஆச்சானும் ஆண்டானுமாகக் கிழக்கே நடக்கிறபோது திருப்பேருக்குக் கிழக்கு போகவும் மாட்டாதே, ஏறித்திருவடி தொழவும் மாட்டாதே திருப்பேர் நகரான கோயிலைப்பார்த்துக்கொண்டு இருந்தார்களாம்.

40. பகவத்விஷயம் 8-8-5 ஈடு. "'எம்பெம்மானோடு' என்கிற பாட்டளவும் கேவல ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது" என்று எம்பார் அருளிச்செய்யும்படி; ஆண்டான் 'ப்ரகாரமான வேஷத்திலே சொல்லுகிறது' என்னும்.

41. பகவத்விஷயம் ஈடு 8-8-8 இருபத்துநாலாயிரப்படி (நல்லுறைப்பு) ஆண்டான் பணிக்கும்படி- "நின்றவொன்றை உணர்ந்தேனுக்கு என்னும்பாட்டுத்தொடங்கி நிஷ்க்ருஷ்டாத்மாநுஸந்தா₄ன மாத்ரமேயன்றிக்கே ப₄க₃வச்சே₂ஷத்வபர்யந்தமாக அநுஸந்தி₄க்கிறது; இப்பாட்டில் 'எம்பெம்மானேடொத்தே சென்றங்குள்ளங்கூடக்கூடிற்றாகில்' என்கிற அந்திமஸ்ம்ருதியும் எம்பெருமான் தனக்கு சேஷமாக இவ்வாத்மவஸ்துவை நினைத்திருக்குமாபோலே இவனும் அவனேடொத்து-அவன் நினைவோடொத்து அத்தசையிலே சேஷத்வாநுஸந்தா₄னம் கூடுமாகில் நல்ல வாய்ப்பு" என்று.

42. பகவத்விஷயம் ஈடு 8-10-3. (சிறுமாமனிசராய்) 'சிறுமை பெருமையாகிற விருத்₃த₄ த₄ர்மத்₃வயத்துக்கு ஏகத₄ர்மியில் ஸமாவேஶம் கூடினபடி எங்ஙனே?' என்று பட்டர் பா₃ல்யத்திலே ஆழ்வானைக்கேட்க, 'நம்மோடொக்க அந்நபாநாதி₃கள் தா₄ரகம் என்னலாய் ப₄க₃வத்₃விஷயத்திலவகா₃ஹநம் பார்த்தால் நித்யஸூரிகளோடொப்பர்கள் என்னலாயிருக்கிற ஆண்டான், அருளாளப்பெருமாள், ஸ்ரீகோவிந்தப்பெருமாள் இவர்கள் காண் சிறுமாமனிசராகிறுர்கள்' என்று பணித்தான்.

43. பகவத்விஷயம் 9-2-8. "நூறு பிராயம் புகுவீர் பொன்னூலே பூணுநூலிடுவீர்" என்றாற்போலே சொல்லுகை. வங்கிப்புரத்து நம்பி 'விஜயஸ்வ' என்ன ஆண்டான் சொன்ன வார்த்தையை நினைப்பது. அடையவளைந்தானில் — அறிந்தவறிந்தவளவுகளிலே சொல்லுகையாவதேதென்ன, (அதாவது-இத்யாதி₃) இந்த ப்ரஸங்க₃த்திலேஐதிஹ்யம் (வங்கிப்புரத்துநம்பிஇத்யாதி₃) அதாவது-வங்கிப்புரத்து நம்பி பெருமாளை ஸேவிக்க எழுந்தருளினவளவிலே, இடைச்சிகளண்டையிலேயிருந்து ஸேவித்தாராய், அத்தை ஆண்டான் கண்டருளி, "ப்ராப்யமான ஸ்ரீ வைஷ்ணவ ஸமுதா₃யமிருக்க அவர்களண்டைக் கெழுந்தருளுவானேன்?" என்ன, "நாம் அல்பம் விரதமாயிருப்போம். இவர்களொன்றுமறியாத கொச்சைகளாகையாலே, 'யஞ்சராமோ ந பஶ்யதி' என்கிறபடியே ஈஶ்வரனுடைய கடாக்ஷம் இவர்களிடத்திலே பள்ளமடையாயிருக்குங்காணும் என்று அங்கேயிருந்தேன்" என்ன; "அவர்கள் சொன்னதேது. தேவரீரருளிச்செய்ததேது" என்று ஆண்டான் கேட்க; "பாலுண்பீர், பழமுண்பீர், பொன்னூலே பூணுநூலிடுவீர், நூறு பிராயம் புகுவீர், அழுத்த இரட்டையுடுப்பீர்" என்கிற இது அவர்கள் சொன்ன வார்த்தை. 'விஜயஸ்வ, விஜயீப₄வ' என்று நான் சொன்ன வார்த்தை" என்று நம்பி அருளிச்செய்ய, "அங்கே போயும் முரட்டு ஸம்ஸ்க்ருதம் விட்டீரில்லையே. எங்கேயிருந்தாலும் நாம் நாங்காணும், இங்கே எழுந்தருளீர்" என்று ஆண்டான் அருளிச்செய்த வார்த்தை.

44. ஸ்ரீவசநபூஷணம் 413. பக்கம் 19 ஐதிஹ்ய நிர்வாஹம் 79 காண்க.

45. தனிசரமம். முதல் பாகம் பக்கம் 414 ஐதிஹ்ய நிர்வாஹம் 188 காண்க.

46 ப்ரமேயரத்நம் 4-வது ப்ரகரணம். ''ஸ்வாநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யாங்கீ3காரத்துக்கொழியஉபேயஸித்3தி4யில்லை'' என்று முதலியாண்டான் நிர்வஹிப்பர். [வார்த்தாமாலை 214-ம் கூரத்தாழ்வான் ஐதிஹ்ய நிர்வாஹம் 125ம் காணத்தக்கது]

47. கோயிலொழுகு. முதல் பாகம் ஐதிஹ்ய நிர்வாஹம் 215ல் பக்கம் 426, 427, 435 முதல் 439 வரை காண்க.

48. ப்ரமேயஸாரவ்யாக்2யானம். முதல்பாகம் பக்கம் 498 ஐதிஹ்ய நிர்வாஹம் 265 காண்க.

49. ரஹஸ்யத்ரயஸாரம் அதி4காரிவிப4ாகஜ3ாதி4காரம். முதல் பாகம் பக்கம் 465 ஐதிஹ்ய நிர்வாஹம் 256 காண்க.

50. திவ்யஸூரிசரிதம். ஸர்க்கம் 18-69 காண்க.

51. முதலியாண்டான் பற்றிய மற்றும் சில முக்தக ஶ்லோகங்கள்

ஸ்ரீமத்3தா3ஶரதி2ம் வந்தே3 ராமாநுஜபதா3ஹ்வயம்|
வாதூ4லாநமலங்காரம் த்ரிதண்3டாஹ்வயதே3ஶிகம் ||

['ஸ்ரீராமானுஜருடைய திருவடி' என்னும் திருநாமம் உடையவரும், வாதூ4லகோ3த்ரத்தவர்களுக்கு பூ4ஷணமானவரும், (ஸ்ரீராமானுஜரின்) த்ரித3ண்ட3மாகச் சொல்லப்படுபவருமான தா3ஶரதி2 என்னும் முதலியாண்டானை வணங்குகிறேன்]

அநந்தநாராயண கே3ாதா3ம்பி3கா கூர்ப்ப4ஸம்ப4வம் |
ப4ாகி3நேயம் யதீந்த்3ரஸ்ய ப4ஜே தா3ஶரதி2ம் கு3ரும் ||
மேஷே புநர்வஸௌ ஜாதம் தா3ஶரத்2யம்ஶஸம்ப4வம் |
யதீந்த்3ரபாது3காபி4க்2யம் வந்தே3 தா3ஶரதி2ம் கு3ரும் ||

[அநந்தநாராயண தீ3க்ஷிதருக்கும், கே3ாதா3ம்பி3கைக்கும் புத்ரனாகத் தோன்றியவராய், யதிராஜர்க்கு மருமகனான தா3ஶரதி2 என்னும் முதலியாண்டானை வணங்குகிறேன். சித்திரைப் புநர்

வஸுவில் ராமனுடைய அம்ஶமாகப் பிறந்தவராய், யதிராஜருடைய பாது₃கை எனப்படுபவரான தா₃ஶரதி₂யை வணங்குகிறேன். ('' தா₃ஶரத்₂யம்ஶ '' என்பதற்கு பதில் '' பாஞ்சஜந்யாம்ஶ '' என்றும் பாட₂ம் காண்கிறது)]

யஃ பூர்வம் ப₄ரதார்த்தி₂த: ப்ரதிநிதி₄ம் ஶ்ரீபாது₃காமாத்மந:
ராஜ்யாய ப்ரத₃தௌ₃ ஸ ஏவ ஹி கு₃ரு: ஶ்ரீதா₃ஶரத்₂யாஹ்வய: |
பூ₄த்வா லக்ஷ்மணபாது₃காந்திமயுகே₃ஸர்வாத்மநாம்ஶ்ரேயஸே
ஸாம்ராஜ்யம் ஸ்வயமத்ர நிர்வஹதி நோ தை₃வம்
குலஸ்யோத்தமம் ||

[எவனொருவன் முற்காலத்தில் ப₄ரதனால் பிரார்த்தி₂க்கப் பட்டு அரசாளுவதற்குத் திருப்பாதுகையைத் தனக்குப் பிரதிநிதியாகக் கொடுத்தானோ, அந்த ராமனே தா₃ஶரதி₂ (முதலியாண்டான்) எனப் பெயருள்ள ஆசார்யனாய், கலிகாலத்தில் நம் குலத்திற்கு உத்தம தெய்வமான ஸ்ரீராமானுஜபாது₃கையாகி எல்லா ஆத்மாக்களும் உஜ்ஜீவிக்கும்படி ஸ்ரீவைஷ்ணவ ஸாம்ராஜ்யத்தைத் தானே இங்கு நடத்திக்கொண்டிருக்கிறான்]

ஸ்ரீவைஷ்ணவ ஶிரோபூ₄ஷா ஸ்ரீராமாநுஜபாது₃கா |
ஸ்ரீவாதூ₄ல குலோத்தம்ஸ: ஸ்ரீதா₃ஶரதி₂ரேத₄தாம் ||

[ஸ்ரீவைஷ்ணவர்களின் தலைக்கு அலங்காரமாயிருக்கும் ஸ்ரீராமானுஜரின் பாது₃கையாய், ஸ்ரீ வாதூ₄ல குலத்திற்குச் சிறந்த அலங்காரமான ஸ்ரீ தா₃ஶரதி₂யெனும் முதலியாண்டான் வெற்றிபெறுவாராக]

ஸ்ரீராமாம்ஶ ஸமாஶ்லிஷ்டம் பாஞ்சஜந்யாம்ஶ ஸம்ப₄வம் |
பஞ்சநாராயணஸ்தா₂நஸ்தா₂பகம் கு₃ருமாஶ்ரயே ||

[ஸ்ரீராமனின் அம்ஶத்தோடு கூடியவராய், பாஞ்சஜந்யாம்ஶமாக அவதரித்தவராய், ஐந்து நாராயண ஸ்தா₂லங்களை ஸ்தா₂பித்தவரான முதலியாண்டானை ஆச்ரயிக்கிறேன்.]

யஶ்சக்ரே ப₄க்தநக₃ரே தா₄டீபஞ்சக முத்தமம் ||
ராமாநுஜார்ய ஸச்சா₂த்ரம் வந்தே₃ தா₃ஶரதி₂ம் கு₃ரும் |

[ப₄க்தநகரத்தில் எவரொருவர் சிறந்த தா₄டீபஞ்சக ஸ்தோத்ரத்தை இயற்றினாரோ, ராமானுஜாசார்யரின் நல்ல சிஷ்யரான அந்த முதலியாண்டானை வணங்குகிறேன்.]

52. யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்தில் முதலியாண்டான் வம்ச ப்ரபாவ ஶ்லோகங்கள்.

வித்₃யா விமுக்திஜநநீ விநயாதி₄கத்வம்
ஆசாரஸம்பத் அநுவேலவிகாஸஶீலம் ।
ஸ்ரீலக்ஷ்மணார்ய கருணா விஷயீக்ருதாநாம்
சித்ரம் ந தா₃ஶரதி₂வம்ஶ ஸமுத்₃ப₄வாநாம்॥

[மோக்ஷத்துக்கு உறுப்பான ஜ்ஞாநம், சிறந்த அடக்கம், அநுஷ்டா₂னச் செல்வம், மேன்மேலும் வளரும் கு₃ணம் ஆகியவை எம்பெருமானார் கருணைக்கு இலக்கான முதலியாண்டான் வம்சத்தினர்க்கு வாய்த்துள்ளதில் வியப்பில்லை.]

ஸ்ரீராமாநுஜயோகீ₃ந்த்₃ர கருணா பரிப்₃ரும்ஹிதாம்।
ஶ்ரேயஸீமநக₄ாம் வந்தே₃ ஸ்ரீமத்₃வாதூ₄ல ஸந்ததிம்॥

[யதீந்த்₃ரரான ஸ்ரீராமானுஜருடைய கருணையால் பெருகியதும், சிறந்ததும், குற்றமற்றதுமான ஸ்ரீவாதூ₄ல வம்ஶத்தை வணங்குகிறேன்]
[51, 52 ல் உள்ள ஶ்லோகங்கள் முதலியாண்டான் திருமாளிகைப் பத்திரிகையான யதிராஜபாதுகாவில் வெளிவந்தவை.]

53. முதலியாண்டான் அருளிய முதல் திருவந்தாதித் தனியன்.

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த*
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு*—வையத்
தடியவர்கள் வாழ வருந்தமிழ்நூற் றந்தாதி*
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

54. முதலியாண்டான் வாழித்திருநாமம்.

அத்திகிரி யருளாளர் அடிபணிந்தோன் வாழியே*
அருட்பச்சை வாரணத்தி லவதரித்தோன் வாழியே*
சித்திரையில் புனர்பூசம் சிறக்கவந்தோன் வாழியே*
சீபாடிய மீடுமுதல் சீர்பெறுவோன் வாழியே*
உத்தமமாம் வாதூல முயரவந்தோன் வாழியே*
ஊர்திருந்தச் சீர்பாத முன்றினன் வாழியே*
முத்திரையும் செங்கோலும் முடிபெறுவோன் வாழியே
முதலியாண்டான் பொற்பதங்கள் ஊழிதோறும் வாழியே.

# எம்பார் வைபவம்

ராமாநுஜ பத₃ச்ச₂ாயா கோ₃விந்தா₃ஹ்வாநபாயிநீ ।
தத₃ாயத்தஸ்வருபா ஸா ஜீயாந்மத்₃விஶ்ரமஸ்த₂லீ ॥
[ஸ்ரீரங்க₃ராஜஸ்தவம் 1—2]

[எம்பெருமானுரை ஒருபோதும் விட்டு நீங்காத திருவடி நிழல், அத்திருவடிகளால் ஸ்வரூபம் பெற்றிருப்பதாயும், 'கோ₃விந்த₃ பட்டர்' என்னும் திருநாமம் உடையதாயும், எனக்கு இளைப்பாறுமிடமாயுமிருக்கிறது. அத்தகைய எம்பார் வெற்றிபெறுவாராக]

எம்பெருமானுர் அவதரித்து நாலு வருஷங்கள் கழித்து து₃ர்மதி வருஷத்தில் (கி, பி. 1021) ஸ்ரீபெரும்பூதூரையடுத்த மது₄ரமங்க₃லத்தில் வட்டமணிக்குடியில், ப₄ாரத்₃வாஜ கோ₃த்திரத்திலே எம்பெருமானுருடைய சிறியதாயாரான ஸ்ரீதே₃விக்கும் அவருடைய ப₄ர்த்தாவான கமலநயனப₄ட்டருக்கும் குமாரராக கோ₃விந்த₃ன் என்னும் திருநாமத்துடன் அவதரித்தவர் எம்பார். இவர் ஸ்ரீராமானுஜருடன் கூட யாத₃வப்ரகாஶனிடத்தில் கல்வி பயின்றவர். ஸ்ரீராமானுஜரிடம் த்₃வேஷத்தாலே அவரை கங்கையில் தள்ளிக் கொன்றுவிடுவதற்காகக் காசியாத்ரைக்கு யாத₃வப்ரகாஶன் சிஷ்யர்களை அழைத்துச் சென்றபோது, தமது தம்பியான கோ₃விந்த₃ர் மூலமாகவே ஸ்ரீராமானுஜர் அச்சதித் திட்டத்தை அறிந்து யாத்திரையிலிருந்து மீண்டு, பேரருளாளன் பேரருளாலே காஞ்சிக்குத் திரும்பினுர். யாத₃வ ப்ரகாஶனேடு காசிக்குச் சென்ற கோ₃விந்த₃ர் கங்கையில் மூழ்கி எழும்போது அவருடைய உள்ளங்கையில் ஓர் லிங்கம் அகப்பட்டது. யாத₃வப்ரகாஶனுல்"உள்ளங்கைகொணர்ந்த நாயனுர்" என்று பெயரிடப்பெற்று சைவராகி, அந்த லிங்க₃த்தை மது₄ரமங்க₃லத்தில் ப்ரதிஷ்டை செய்து காளஹஸ்திச் சிவன் கோயிலில் தொண்டுசெய்து வந்தார் இவர். ஸ்ரீராமானுஜருடைய பிரார்த்தனைக்கிணங்க மாதுலரான பெரியதிருமலைநம்பி காளஹஸ்திக்குச் சென்று கோ₃விந்த₃ரை மறுபடியும் வைஷ்ணவராகத் திருத்தினுர். எம்பெருமானுர் முதல்முறை திருமலைக்குச் சென்றபோது கோ₃விந்த₃ரை த₃ானமாகப்பெற்று, தம் சிஷ்யராக அழைத்துச்சென்ருர். கோ₃விந்த₃ர் பரமவைராக்₃யமுடையவராயிருந்தபடியாலே ஸந்யாஸாஶ்ரமத்தைப் பெற்று "எம்பார்" என்னும் திருநாமத்தை அடைந்தார். "ராமாநுஜ பத₃ச்ச₂ாயா" (ஸ்ரீராமானுஜருடைய திருவடி நிழலாயிருப்பவர்) என்று பெயர் பெற்று, எம்பெருமானுரைவிட்டுப் பிரியாமல் இருந்து வந்தார். திருவாய்மொழி

முதலான திவ்யப்ரபந்தங்களில் இவர் அருளிச்செய்திருக்கும் நிர்வாஹங்கள் இவர் பரமரஸிகர் என்பதைக் காட்டுகின்றன. கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டர் அவதரித்தவுடன் அக் குழந்தையைக் கடாக்ஷிப்பதற்காக எடுத்துவரும்படி எம்பெருமானாரால் நியமிக்கப்பெற்ற எம்பார், குலக்கொழுந்தான அக்குமாரரைத் தம் மார்பிலே அணைத்துக்கொண்டு குழந்தைக்கு ரக்ஷையாக த்வயாநுஸந்தானம் செய்து கொண்டுவந்து எம்பெருமானாரிடம் காட்டினார். எம்பெருமானாரும் "எம்பாரே த்வயம் பரிமளியா நின்றது, என் செய்தீர்?" என்று கேட்க, அவரும் "குழந்தைக்குக் காப்பாக த்வயாநுஸந்தானம் பண்ணிக்கொண்டு எடுத்து வந்தேன்" என்றுகூற, "இவருடைய ஹிதத்திற்கு நீர் முற்பட்டீரானகையாலே நீரே இவருக்கு ஆசார்யராகக் கடவீர்" என்று நியமித்தார் எம்பெருமானார். அதன்படியே எம்பார் பட்டருக்கு ஆசார்யரானார். இவர் வைபவத்தின் விரிவு யதிராஜவைபவத்திலும் பட்டர் வைபவத்திலும் காணலாம்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 198, 199 காண்க.

2. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 200 காண்க.

3. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 203, 204 காண்க.

4. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல்பாகம், பக்கம் 144 முதல் 150 வரை காண்க.

5. ஆறாயிரப்படி குருபரம்பரப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 227 முதல் 232 வரை காண்க.

6. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 242, 243 காண்க.

7. ஆளுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம். எம்பார், உடையவர் திருநாட்டுக்கு எழுந்தருளும்போது அவர் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு "நாயந்தே! பெரியதிருமலைநம்பி, ஸாக்ஷிகையிலே ரஜதபுத்₃தி₄ பண்ணுவாரைப்போலே அபரமாத்ம விஷயே பரமாத்மபுத்₃தி₄ பண்ணி விபரீத ஜ்ஞாந நிஷ்டனாய்க் காளஹஸ்தியாகிற கடுங்காட்டிலேயிருந்த என்னைப் * போதரேயென்று சொல்லிப் புந்தியில் புகுந்து தன்பால் ஆதரம் பெருகும்படி திருத்தி *மாயப் பற்றறுத்து, அடியேனுடைய து₃ர்வாஸநாச்சே₂த₃நத்தைப் பண்ணியருளி,*பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமைகொண்டருளி. "தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்" என்கிறபடியே ஸர்வவித₄ப₃ந்து₄வும் த்₃ருஷ்டாத்₃ருஷ்டங்களிரண்டும் தேவரீர் திருவடிகளென்று காட்டிக்கொடுத்தருளினர்; தேவரீரும் அப்படியே அடியேன் நம்பிதிருவடிகளையகன்ற இழவெல்லாம் தீர ஸர்வவிதே₄ாத்தாரக ப₃ந்து₄வுமாய் நிற்க, தேவரீர் திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமென்று அத்₄யவஸித்திருந்த அடியேன் "ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராக₄வ | முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்₃த்₄ருதௌ ||" [ராகவரே! உம்மைப் பிரிந்த ஸீதையும் உளளாகாள்; (உம்மைப்பிரிந்த) நானும் ஸத்தை பெறமாட்டேன். (ஒருகால் ஜீவித்தாலும்) ஜலத்தைப் பிரிந்த மீன்போலே முஹூர்த்தநேரமே ஜீவிப்போம்.] என்கிறபடியே என் உயிர்நிலையான தேவரீர் திருவடிகளை அகன்று ஒரு க்ஷண மாத்ரமும் த₄ரிக்கமாட்டேன்; தே₃ஹிவிட்டுப்போனல் தே₃ஹம் நிற்குமோ? "நிழலும் அடிதாறும் ஆனோம்" என்கிறபடியே ஸ்ரீபாத₃ச்ச₂ாயாபந்நனை அடியேன் எங்ஙனே த₄ரித்திருப்பேன்?' என்று திருவடிகளிலே போர ஆர்த்தியோடே விழுந்து எழுந்திராமல் கிடக்க, உடையவரும் எம்பாரைக் குளிர நோக்கியருளி "நாம் நம்பிதிருக்கையாலே உம்மை உத₃க பூர்வகமாகப் பரிக்₃ரஹித்தபின்பு நமக்கும் உம்மைப் பிரியக்கூடுமோ? நம்முடைய வைகுண்ட₂நாத₂னும் அப்படியே செய்தருளுகிறான்; பதறுதேகொள்ளும்" என்று எம்பாரை வாரியெடுத்து அணைத்துக் கொண்டு, தம் * பொன்னங்கழற்றாமரைப் பூக்களாலே அவர் திருமுடியை அலங்கரித்தருளித் திருநாட்டுக்கு எழுந்தருள, எம்பாரும் தாயைப்பிரிந்த ஸ்தநந்த₄ய ப்ரஜையைப்போலே ஸிதி₂லாந்த:கரணராய்ப் பெரிய ஆர்த்தியோடே உடையவர் ப்ரஸாதி₃த்தருளின அர்த்த₂ விஸேஷங்களை பட்டர் முதலான முதலிகளுக்கு ப்ரஸாதி₃த்துக்கொண்டு எழுந்தருளியிரா நிற்க;

ஒருநாளாக உடையவர் திருவடிகளைத் திருவுள்ளத்தே * நினைந்து நைந்து உள்கரைந்துருகி, * தாய்நாடுகன்றே போல் 'எப்போது காணப்பெறுவேன்?' என்று த்வரை விஞ்சி ஆசார்ய விஶ்லேஷம் பொறுக்கமாட்டாமல் "அவனை விட்டகன்று உயிராற்றகில்லா" என்கிறபடியே உடையவரையகன்று இருக்க மாட்டாத ஆற்றாமை கரைபுரண்டு மிகவும் விஞ்சி, பெரியபெருமாள் ஸந்நிதி₄யிற்சென்று 'நாயன்தே! அடியேன் உடையவர் திருவடிகளேறப்போக நினையாநின்றேன்; தேவரீர் விடைப்ரஸாதி₃த்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்படியே செய்யும்' என்று திருவுள்ளம்பற்றியருளி, எம்பாருக்குத் தீர்த்த₂ப்ரஸாத₃மும் ஸ்ரீசடகோபனும் இரங்கி ப்ரஸாதி₃த்தருள, "இவரும் திருப்பொலிந்தசேவடி என்சென்னியின் மேற் பொறித்தாய்" என்று அங்கீ₃கரித்தருளி, அமலனாதி பிரானிற்படியே பாத₃ாதி₃கேஶாந்தமாக அநுப₄வித்தருளி, "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று கொண்டு * அணியார்பொழில் சூழரங்கநகரப்பனைத் தம் * கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நீங்காதபடியாக நிறைத்துக்கொண்டு புறப்பட்டருளி உடையவர் மடத்தேற எழுந்தருளி, "யோ நித்யம்" என்று தொடங்கி "ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்₃யே" [தனியன்] என்று அநுஸந்தி₄த்துக்கொண்டு த₃ண்ட₃ன் ஸமர்ப்பித்து, மடமேயெழுந்தருளித் தம் திருவாராத₄நமான அரங்கநகரப்பனைத் திருவடிவிளக்கி பட்டரையழைத்தருளி "வாரீர் பட்டரே! நாம் ஆழ்வான்குமாரர்; அகி₂லஶாஸ்த்ரங்களையும் அதி₄கரித்தோம்; நம் பெருமாள் நம்மைப் புத்ரஸ்வீகாரம் பண்ணியருளினாரென்னும் மேன்மைகளை நினைத்து இறுமாந்திராதே, நம்மாணை! 'எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயம்' என்று அத்₄யவஸித்திரும்" என்று அருளிச்செய்து, 'கணியனூர்ச்சிறியாச்சான் சட்டம்பள்ளிச்சீயர் ஈச்சம்பாடிச்சீயர் முதலானார்க்கும் மற்றுமுள்ள முதலிகளுக்கும் உடையவர் ப்ரஸாதி₃த்தருளின அர்த்த₂விஶேஷங்களையும் ப்ரஸாதி₃த்துக்கொண்டு த₃ர்ஶநம் நிர்வஹித்து வாழ்ந்தருளவேணும்' என்று மங்க₃ளாஶாஸநம் செய்தருளி, அவர்களை பட்டர் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளி, 'ஸர்வாபராத₄ங்களையும் பொறுத்தருளவேணும்' என்று த₃ண்ட₃ன் ஸமர்ப்பித்து, பட்டர் முதலான முதலிகளைத் தீர்த்த₂ங்கொண்டு அமுது செய்யப்பண்ணி, * அரங்கத்துறையும் இன்துணைவனே வழித்துணையாக நினைத்துக்கொண்டு உடையவர் திருவடிகளை த்₄யானித்துக்கொண்டு திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

பட்டரும் ஆசார்ய விஶ்லேஷம் பொறுக்கமாட்டாமல் மிகவும் ஶோகார்த்தராய் க்லேஶிக்க, அருகிருந்த முதலிகளும் "வாரீர் பட்டரே! தேவரீர் இப்படி க்லேஶிக்கலாமோ?" என்று தேற்றவிட, பட்டரும் தம்மிலே தெளிந்து கொண்டிருக்கிறவளவிலே, பெருமாள், சாத்திக்களைந்த திருமாலை திருப்பரியட்டம் முதலானவற்றையுங் கொண்டு அணைத்துக் கொத்திலவர்களும் வர, சிறிய கோவிந்தப் பெருமாள் திருக்கையாலே ப்₃ரஹ்மமேத₄விதி₄யடங்கச் செய்வித்து எம்பாருடைய விமலசரம விக்₃ரஹத்தைப் பீட₂யாநத்திலே எழுந்தருளுவித்துக்கொண்டு போய் யதிஸம்ஸ்கார விதி₄யுக்தப்ரகாரேண ஸம்ஸ்கரித்துக் க₂நித்துப் பள்ளிபடுத்து அவப்₄ருத₂ங்கொண்டாடிப் பெருக்கத் திருவத்₄யயநமும் நடத்தியருளினர்.

ஆசார்ய கைங்கர்யமே பரமப்ரயோஜநமாய்த் தன்னைப் பேணாமையும், ஆசார்ய விஷயத்தில் க்ரயவிக்ரயார்ஹராய் ஸ்வவ்யாபாரமற்றிருந்தபடியும், ஆசார்யன் திறத்தில் ச₂ாயாவத் பாரதந்த்ரியமும் ஆசார்யனையகன்று த₄ரியாத அநுஷ்ட₂ாநமும் இவர்க்கே உள்ளதொன்றிறே.

எம்பார் திருநக்ஷத்ரம்—தையில் புநர்பூசம்.

இவர் தனியன்- "ராமாநுஜபத₃ச்ச₂ாயா கோ₃விந்தா₃ஹ்வாநபாயிநீ | தத₃ாயத்தஸ்வரூபா ஸா ஜீயாந்மத்₃விஶ்ரமஸ்த₂லீ||" "எம்பார்மலர்க்கண்ணை கண்ணூந்தாலுமேவுமாதர்விழி, அம்பாலிடரொன்றிலனொருகாலு மரிவையர்க்குத், தம்பாலொருகாலு மேகாந்தமில்லென்று தாமுரைத்த, எம்பாரடி சரணென்பாரடி சரணமெங்களுக்கே" "ப₄ட்டார்யாய ப்ரபத்திம் வ்யபதி₃ஶத₃துலம் த்₃ராவிட₃ாம்நாயமௌலேரர்த்த₂ம் ஶ்ரீபா₄ஷ்யமந்யாநபி ச யதிவராதே₃ஶதோऽந்யாந் ரஹஸ்யாந் | யஶ்சோக்தோ தே₃ஶிகேந்த்₃ரோ யதிபதிசரணச்ச₂ாயநாமார்யவர்யஸ்தம் கோ₃விந்தா₃ர்யமஸ்மத்குலகு₃ருமமிதஜ்ஞாந வைராக்₃யமீடே₃||" [எம்பெருமானாருடைய ஆஜ்ஞையினாலே ஸ்ரீபட்டரின் பொருட்டு ப்ரபத்தி ஶாஸ்த்ரத்தையும், ஒப்பற்ற திருவாய்மொழியின் அர்த்தத்தையும், ஸ்ரீபாஷ்யத்தையும், மற்ற க்ரந்தங்களையும், மற்ற ரஹஸ்யங்களையும் எந்த ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ர் உபதேசித்தருளினாரோ, எந்தப் பேராசிரியர் யதிராஜருடைய திருவடி நிழலாகக் கூறப்படுகிறாரோ, எம் குலகுருவும், அளவற்ற ஜ்ஞான வைராக்₃யங்களை உடையவருமான அத்தகைய கோவிந்தார்யரை(எம்பாரை)த்துதிக்கிறேன்.] "ஹ்ருதி₃ நாராயணம் பஶ்யந் நாப்₄யக₃ச்ச₂த்₃ரஹஸ்ஸதா₃ | யஸ்ஸ்வதா₃ராநதௌ சாபி கோ₃விந்த₃ம் தமுபாஸ்மஹே ||", [எவரொருவர் தம் நெஞ்சில் நாராயணனைக் காண்கின்றவராய், தன் மனைவியோடு இன்புறுவதற்கும் எப்போதும் ரஹஸ்யப்ரதே₃ஶத்தைக் காணவில்லையோ, அத்தகைய கோ₃விந்த₃ரை உபாஸிக்கிறோம்.]

8 பெரியதிருமுடியடைவு எம்பாருக்குத் திருவவதார ஸ்த₂லம் தொண்டை மண்டலத்தில் நிரந்தரவக்ரம். திருநக்ஷத்ரம் து₃ர்மதிவருஷம் வைகாசி மாஸம் விசாகம். திருத்தகப்பனார் கமல நயனபட்டர். திருத்தாயார் பெரிய பிராட்டியார். திருத்தம்பியார் சிறிய கோவிந்தப் பெருமாள். குலம் வடமாள். குடி வட்டமணி. கோ₃த்ரம் ப₄ரத்₃வாஜம். தா₃ஸ்ய நாமம் ஸ்ரீகோ₃விந்த₃தா₃ஸர், ராமாநுஜபது₃ச்ச₂ாயையார். புருஷகாரர் பெரியதிருமலை நம்பி ஆசார்யர் எம்பெருமானார். திருவாராத₄னம் அழகிய சிங்கர். சிஷ்யர் பட்டர், ஸ்ரீராமப்பிள்ளை, இவர் நூற்றைந்து திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். இவர் பாஶநிர்முக்தராகையாலே இவருக்கு இருப்பிடம் எம்பெருமானார் ஸந்நிதி₄. இவரருளிச்செய்தருளின ப்ரப₃ந்த₄ங்கள் விஜ்ஞானஸ்துதி. இவர் பெரிய திருமலை நம்பிக்கு மருமகனார்.

## இவருக்குத் தனியன்

ராமாநுஜ பது₃ச்ச₂ாயா கோ₃விந்தா₃ஹ்வாநபாயிநீ ।
தத₃ாயத்தஸ்வரூபா ஸா ஜீயாந்மத்₃விஶ்ரமஸ்த₂லீ ॥

சிறிய கோவிந்தப் பெருமாளுக்குத் திருநக்ஷத்ரம் ஐப்பசி அஶ்வினி.

## தனியன்

ஸ்ரீப₄ாஷ்யகார ஸச்சிஷ்யம் புண்டரீகாக்ஷ நந்த₃நம் ।
கோ₃விந்தா₃ர்யாநுஜம் வந்தே₃ கோ₃விந்தா₃ர்யம் த₃யாநிதி₄ம் ॥

[ஸ்ரீபாஷ்யகாரருக்கு நல்ல சீடராய், கமலநயனபட்டருடைய குமாரராய், எம்பாரின் தம்பியாய், கருணைக்கு இருப்பிடமான சிறிய கோவிந்தப் பெருமாளை வணங்குகிறேன்.]

9. வார்த்தாமாலை 36. (திருமந்த்ரம்) இவ்வாத்மாவினுடைய பாரதந்த்ர்யம் சொல்லுகிறதென்று எம்பார் அநுஸந்தித்தருளுவர்.

10. வார்த்தாமாலை 68. க(ண்)ணியனூர் சிறியாச்சான், எம்பாரைத் தண்டனிட்டு, 'திருவுள்ளத்தில் தஞ்சமாக நினைத்திருக்குமத்தை எனக்கு அருளிச்செய்ய வேணும்' என்ன; ''தா₃ஶரதி₂! எம்பெருமானார் ஸ்ரீபாத₃த்₃வயமொழியத் தஞ்சமாயிருப்பதில்லை'' என்று அருளிச்செய்தார்.

11. வார்த்தாமாலை 83 வார்த்தை ஃ விவரணம். a. வ்யாமோஹம் உபாயம்: b முகமலர்த்தி உபேயம் என்று எம்பார் அருளிச்செய்வர். [ a எம்பெருமானுக்குத் தன் உடைமையான ஜீவனிடமுள்ள பேரன்பே ஜீவனைக் கடைத்தேற்றும் உபாயமாகிறது; அவ்வன்பினாலேயே ஸ்ருஷ்டி அவதாரம் முதலான முயற்சிகளைச் செய்து படாதனபட்டு எம்பெருமான் ஜீவனைக் கடைத்தேற்றுகிறான் என்று கருத்து. b ஜீவனுக்குத் தான் எம்பெருமானை அநுப₄வித்துக் கைங்கர்யம் செய்வதாலுண்டான ஆநந்த₃ம் உத்₃தே₃ஶ்யமல்ல; தன்னைப்பெற்று எம்பெருமான் அடையும் முகமலர்த்தியே உத்₃தே₃ஶ்யமாகவும் உபேயமாகவும் (அடையத்தக்கதாகவும்) இருக்கிறது என்று கருத்து.]

12. வார்த்தாமாலை 102 வார்த்தை ஃ விவரணம். எம்பார் வார்த்தை:- a ஸ்வரூபஜ்ஞன், ஸ்வயம் ஸ்வரூப நிரூபணம் பண்ணுமதிலும் ஸ்வயம் ஸ்வதே₃ாஷ த₃ர்ஶநம் பண்ணுகை ஸ்வஸாமர்த்₂யம். b ஸ்வரூபஜ்ஞன் ஸ்வயம் ஸ்வரூபநிரூபணம் பண்ணினால் ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனுக்குங்கூடக் கூடாதபடியான ஸ்வப₄ாவமுண்டாயிருக்கும்; c புருஷனுக்குப் பும்ஸ்த்வ நிவ்ருத்தி பூர்வகமான புருஷார்த்த₂நிரூபணம் பண்ணுமதிலும் புருஷதே₃ஹ நிரூபணம் பண்ணுகையே புருஷார்த்த₂ம்; d ஸ்வரூபஜ்ஞனுக்கு அவித்₃யாஸம்ப₃ந்த₄நிவ்ருத்தி பூர்வகமான அப்ராக்ருத தே₃ஶ விஶேஷத்திலும் அவித்₃யாஸம்ப₃ந்த₄த்தில் ஆர்த்தி அத்யந்தாபேக்ஷிதம். e ஸ்வரூபவைஶத்₃ய த₃ஶையாவது - பரஸ்வரூப விஷயத்தில் ஸ்வீகார ப்ரதிபத்தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியில் அவ்யவஸிதனாய்ப் போருகை, f ஸ்வரூபஜ்ஞனுக்கு ஸ்தூ₂லதே₃ஹாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக ஸ்வதே₃ஹபரிக்₃ரஹேச்ச₂ாதிஶயமும் தே₃ஹ போ₄க்₃யதையும் ஸத்₃ருஶம்; g ஸ்வஸ்வரூபவிஷய ஜ்ஞாநபூர்த்தி நிஷ்டை₂யாவது - பரஸ்வரூபவிஷயத₃ர்ஶநாதி₃ ப்ரகார ப்ரதிபத்தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி பூர்வகமாக பரஸ்வரூபத்தில் ஆர்த்தி விஶேஷ ப்ரவ்ருத்தி நிவ்ருத்திவிஶேஷ நிஷ்டை; h ஸ்வரூபயாத₂ாத்ம்ய ஜ்ஞாநமாவது — பரஸ்வரூபவைஶத்₃ய ஸ்மரண பூர்வகமாக பரஸ்வரூப (விஷய) வ்யதிரிக்தவிஷய கைங்கர்யருசிநிவ்ருத்தி பிறக்கை; i ஸ்வகத₃தஜ்ஞாநம் - ஸ்வரூபம்; பரகத₃தஜ்ஞாநம்-உபாயம்; j இதர ப₂லபோ₄க்த்ருத்வ ப்ரதிபத்தி நிவ்ருத்தி பூர்வகமான ஸம்யக் ப₂லபோ₄க்த்ருத்வ ப்ரதிபத்தி விஶேஷ நிஷ்ட₂னானவன், ஸர்வோத்க்ருஷ்ட ஜாதனுமாய், ஸர்வவிஸஜாதீயனுமாய், ஸர்வோபாய நிவ்ருத்தி பூர்வகமாகவித்₃தே₄ாபாயாந்தர்க₃தனானவன். ஸஜாதீயத்வ

ப்ரதிபத்தியும் ஸஜாதீயத்வவ்யாவ்ருத்தி விஶேஷ நிஷ்டை₂யுமுண்டென்று பு₃த்₃தி₄ பண்ணிக்கொண்டு போரக்கடவன்;k இவ்வார்த்தையால் அஞ்சர்த்த₂ம் ப்ரதிபாதி₃க்கப்படுகிறது— இதர விஷயராக₃ நிவ்ருத்தியும், விஹிதவிஷயராக₃ப்ரவ்ருத்தியும், இதரோபாயத்யாக₃மும் ஸித்₃தே₄பாய ஸ்வீகாரமும், ஹிதபரன்பக்கல் யதா₂ ப்ரதிபத்தியும். [a ஸ்வரூபத்தை அறிந்தவனுடைய அறிவு அளவுபட்டதாகையாலே அவன் தானாகத் தன்னுடைய ஶேஷத்வ பாரதந்த்ர்யங்களை ஆராய்ந்து உள்ளபடி அறிவது அரிது. ஆகையாலே இவன் தன் ஸ்வரூபஜ்ஞானத்தாலே எம்பெருமானுடைய க்ருபைக்கு விஷயமாவதுமரிது. ஆனால் அநாதி₃காலமாக இவனிடம் உள்ள குற்றங்கள் ஏராளமாயுள்ளன. அவற்றையறிந்து எம்பெருமான் திருமுன்பே விண்ணப்பிப்பது மிக எளிது; அப்படி விண்ணப்பிப்பதால் எம்பெருமானுடைய திருவுள்ளம் மிகவும் இரங்கும். ஆகையால் ஸ்வரூபத்தை ஆராய்வதைக் காட்டிலும் தன் குற்றங்களைக் கண்டு எம்பெருமான் திருமுன்பே விண்ணப்பிப்பதே திறமைமிக்கவன் செய்யவேண்டியதாகும். b முன்வாக்யத்தில் சொன்னபடி தன்னுடைய ஶேஷத்வ பாரதந்த்ர்ய ஸ்வரூபங்களைத் தானே ஆராய்ச்சிசெய்யத் தொடங்கினால் இப்படி ஆராய்பவன் எம்பெருமானைப்போலே இயல்வான ஸர்வஜ்ஞத்வத்தை உடையவனானாலும் இவனுடைய ஶேஷத்வபாரதந்த்ர்யங்களாகிற ஸ்வபா₄வம் அளவிட்டு அறியமுடியாதபடி இருக்கும். c ஜீவனுக்கு-தன்னுடைய ஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியை முன்னிட்டு ஏற்படும் எம்பெருமானுகப்புக்கேயான அநுப₄வகைங்கர்யங்களாகிற புருஷார்த்த₂த்தை ஆராய்வதைக் காட்டிலும், பரமபுருஷனான எம்பெருமான் உகந்து வாழும் தே₃ஹங்களான ப₄ாக₃வதர்களின் பெருமையைப் பற்றி ஆராய்வதே மேலான புருஷார்த்த₂மாகும். dஸ்வரூபமறிந்தவனுக்கு-இவ்வுலகிலுள்ள அஜ்ஞானம் நீங்கிய பின்பே அடையப்படும் அப்ராக்ருதமான பரமபத₃த்தை அடைவதில் விருப்பத்தைக் காட்டிலும், அந்த அஜ்ஞானம் நீங்குவதில் விருப்பமே மிகவும் அவஶ்யம். அஜ்ஞானமும் அதனாலே ஏற்படும் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மும் நீங்குவதில் முழுவிருப்பமில்லாமல் பரமபத₃மடைவதில் மிகவும் விருப்பமிருந்தாலும் எம்பெருமான் அதை அருளமாட்டானென்று கருத்து e ஸ்வரூபத்தைத் தெளிவாக அறியும் நிலையாவது – எம்பெருமானைத் தான் உபாயமாகப் பற்றும் ஸ்வக₃தஸ்வீகாரம் தன்னை உய்விக்கும் என்னும் நினைவு இல்லாமலிருக்கையும், "உடையவன் உடைமையை ஏற்றுக்கொண்டால் ஏற்றுக்கொள்ளட்டும்; கைவிட்

டாலும் விடட்டும்; ஏற்றுக்கொள்வதும் கைவிடுவதும் போ₄க்தா வான அவனுக்கே பொறுப்பு'' என்று எம்பெருமானுடைய ப்ர வ்ருத்தி நிவ்ருத்திகளில் தான் பொறுப்பு ஏற்காதவனாயிருக்கையு மாகும். அருளாளப்பெருமாளெம் பெருமானார் ஞானசாரத்தில் அரு ளியபடியே, சாதகம்போல் நாதன் தனதருளே பார்த்திருக்க வேண்டும் என்று கருத்து. f ஸ்வரூபமறிந்தவனுக்கு ப்ராக்ருதமான மற்றொரு தே₃ஹத்தை அடையாமல் தனது ஸ்வரூபத்துக்குத் தகுந்த அப்ராக்ருத தே₃ஹத்தைப் பரமபத₃த்தில் பெறுவதில் மிகுந்த விருப்பமும், அந்த தே₃ஹம் மிக இனிது என்னும் எண் ணமும் ஒக்க இருப்பது தகும். g தன் ஸ்வரூபவிஷயத்தில் நிறைந்த ஜ்ஞானத்தோடு ஊன்றியிருக்கையாவது — எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை எண்ணெய்த்தாரைபோலே இடைவிடாமல் கண் டுகக்கும் அன்புத்தொடராயிருக்கும் ப₄க்தியாகிற உபாயாந்தர ப்ரவ்ருத்தியிலிருந்து நீங்குவதை முன்னிட்டுக்கொண்டு பரஸ்வ ரூபத்தைப் பெறவேணுமென்னும் பெருவிருப்பத்தோடு தன் ஆநந் த₃த்துக்காகத் தான் முயல்வதினின்றும் நீங்குவதில் ஊன்றி நிற்பதேயாகும். h ஸ்வரூபத்தை உள்ளபடி அறிகையாவது—எம் பெருமானுடைய ஸ்வரூபத்தைத் தெளிவாக நினைத்துக்கொண்டு, எம்பெருமானுடைய ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுபட்டவர் களான ப்ராக்ருதர் விஷயத்தில் கைங்கர்யம் செய்யவேணும் என் னும் விருப்பம் நீங்கப்பெறுகை. i எம்பெருமானே உபாயம் என்னும் தன்னிடமுள்ள அறிவு அநந்யஶரணத்வமாகிற ஸ்வரூபத்தில் சேருமே ஒழிய உபாயமாகாது; எம்பெருமானிடமுள்ள ஜ்ஞானம் ஶக்தி முத₃லியவையே உபாயமாகும். j ஸ்வரூபத்துக்குத் தகாத ஶப்₃த₃ா தி₃விஷயானுப₄வம் தொடக்கமாக மோக்ஷத்தில் ஸ்வார்த்த₂ போ₄க₃ம் ஈறாக உள்ள எல்லா அநுப₄வங்களையும் அனுப₄விக்க வேணும் என்னும் எண்ணத்திலிருந்து நீங்கப்பெற்று, பரார்த்த₂ா நுப₄வகைங்கர்யரூபமான ஒப்பற்ற அனுப₄வத்தை அனுப₄விக்க வேணும் என்று ஆசைப்படுமவன், இவ்வுலகிலுள்ள எல்லாச் சேத னர்களைக்காட்டிலும், "பிறந்தார் உயர்ந்தே" [திருவாய் 10-10-11] என்கிறபடியே மிகச் சிறப்புற்றவன். இத்தகைய பெருமையை உடையவனும், மற்ற உபாயங்கள் அனைத்தையும் கைவிட்டு ஸித்₃தோ₄பாயமான எம்பெருமான் அபி₄மானத்திலே அடங்கின இவன் எம்பெருமானும் நித்யமுக்தர்களும் தன்னைத் தங்களோடு ஒரு கோவையாக நினைப்பரென்றும், தங்களைக்காட்டிலும் சிறந்த வன் என்றும் நினைப்பர் என்றும் அனுஸந்தி₄த்துக்கொண்டு

வாழலாம். ஸாத்விகாஹங்காரமாகையாலே இதில் தவறில்லை. "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" [கீதை 7-18] ["ஜ்ஞானியானவன் எனக்கே தாரகன்" என்பது என் ஸித்தாந்தம்.] "வானவர்க்காவர் நற்கோவையோ" [திருவாய் 4-2-11] "தீர்த்தங்களே என்று பூசித்து நல்கியுரைப்பர் தம் தேவியர்க்கே" [திருவாய் 7—10—11] "சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே" [திருவிருத்தம் 79] முதலான ப்ரமாணங்களை இங்கு அநுஸந்திப்பது. K இவ்வார்த்தையால் ஐந்து அர்த்தங்கள் சொல்லப்படுகின்றன. (1) பரார்த்தாநுபவகைங்கர்யம் தவிர்ந்த அநுபவங்களில் விருப்பமின்மை. (2) ஸ்வரூபத்துக்குத் தகுந்ததான பரார்த்தாநுபவகைங்கர்யங்களில் விருப்பு ஈடுபடுகை. (3) மற்ற உபாயங்களைக் கைவிடுகை. (4) ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றுகை, (5) "வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாத காதல் நோயாளன்போல்" [பெருமாள் திரு 5-4] என்கிறபடியே இச்சேதனனுக்கு நன்மையே செய்யும் எம்பெருமான் நமக்கு என்றும் ரக்ஷகனாகவே இருப்பான் என்னும் எண்ணம் மாறாமலிருக்கை ]

13. வார்த்தாமாலை 136 i வார்த்தை ச விவரணம். 'ஸம்ஸாரத்தில் இவ்வுபாயவிசேஷம் விலங்கைவிட்டவன் தலையிலே முடியை வைத்தாற்போலே' என்றருளிச்செய்வர் எம்பார். ["அநாதிகாலமாக ஸம்ஸாரத்தில் கட்டுண்டு கிடக்கும் நமக்கு எம்பெருமானை உபாயமாகத் தெளிவுபடுத்தும் இந்த த்வயம் விலங்கிடப்பட்டவனுக்கு விலங்கை வெட்டிவிட்டு அவன் தலையிலே முடியை வைத்ததுபோலே" என்று எம்பார் அருளிச்செய்வர் ]

14. வார்த்தாமாலை 150 வார்த்தை ச விவரணம். திருக்கச்சிநம்பி ஸ்ரீபாதத்திலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஆஶ்ரயித்து 'அடியேனை அங்கீகரித்தருளவேணும்' என்ன; நம்பி, பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, a பெருமாளும், 'நம்மை அவனுக்குச் சொல்லும்' என்ன, b நம்பியும் பெருமாள் ப்ரபத்தியை அருளிச்செய்ய, ஸ்ரீவைஷ்ணவரும் க்ருதார்த்தராய் க்ஷணகாலமும் நம்பியைப் பிரியாதே ஸேவிக்க, c இவருடைய ப்ரக்ருதிபந்துக்கள் இதுகண்டு பொறுக்கமாட்டாமல் இவரைப் பிரித்துக்கொண்டுபோய் ப்ராயஶ்சித்தம் பண்ணவேணுமென்ன, d இவரும் 'ஆகில், அநந்தஸரஸ்ஸில் தீர்த்தமாடிவாராநின்றேன்' என்று போந்து, நம்பி ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு நிற்க, 'நீர் போகாவிட்டதென்

அவர்கள் பொல்லாங்கு சொல்லாமே?' என்ன, 'அத்தனையோ அடியேனுக்கு' என்று சோகம் பொறுக்கமாட்டாமல், சோகார்த்தராய்ப் பரமபத₃த்திற்கு எழுந்தருளினார். [இவ்வார்த்தை ஆசார்யவிஶ்லேஷ ப்ரஸங்க₃த்தில் மூச்சடங்கப்பெற்ற ஒரு பரம பா₄க₃வதரின் வ்ருத்தாந்தத்தை விளக்குகிறது. a "ப்ராப்ய ப்ராபகங்களாயிருப்பது நாமே என்று அந்த ஸ்ரீவைஷ்ணவருக்குச் சொல்லும்" என்று பெருமாள் அருளிச்செய்தார் என்றபடி. b திருக்கச்சிநம்பி பெருமாள் அருளிச்செய்த ராம க்ருஷ்ண வராஹ சரமஶ்லோகங்களை அந்த ஸ்ரீவைஷ்ணவருக்கு அர்த்த₂த்தோடே கூட உபதே₃ஶித்தார் என்று கருத்து. c அந்தணர் குலத்தைச் சேர்ந்த அந்த ஸ்ரீவைஷ்ணவருடைய தே₃ஹப₃ந்து₄க்கள் நம்பியினுடைய ப்ரப₄ாவமறியாமல், அவர் வைஶ்யர் என்பதையே பார்த்து, வைஶ்யரை ஆஶ்ரயித்ததற்கு ப்ராயஶ்சித்தம் பண்ண முயன்றார்கள் என்று கருத்து. d அந்த ஸ்ரீவைஷ்ணவரும் அவர்களிடமிருந்து தப்புவதற்காக, தேவப்பெருமாள் கோவிலின் முன் புறமிருக்கும் அநந்தஸரஸ்ஸில் நீராடி ப்ராயஶ்சித்தம் செய்து கொள்ள வருவதாகப் பொய்கூறி, நம்பி திருவடிவாரத்தை அடைந்து வணங்கி, அவரை அகலமாட்டாமல் நிற்க, நம்பியும் 'தே₃ஹப₃ந்து₄க்களோடு விரோதி₄த்துக் கொண்டு அவர்களிடம் போகாமல் நீர் இங்கிருப்பது தவறு' என்று நிர்ப₃ந்த₄மாக அவரைப் போகச் சொல்ல, நம்பியின் விஶ்லேஷம் (பிரிவு) பொறுக்கமாட்டாமல் பெருவருத்தமுற்றவராய், அப்போதே மூச்சடங்கிப் பரம பத₃மடைந்தார் என்று கருத்து.]

15. வார்த்தாமாலை 188 வார்த்தை 8 விவரணம். "நித்யஸம்ஸாரிகளிலே ஒருவனை உப₄யவிபூ₄தி விலக்ஷணனாம்படி எம்பெருமான் ஆக்கினான்" என்று எம்பார் அருளிச்செய்வர். ["மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து" [திருவாய் 2-6-8] முதலான பாசுரங்களில், பொய்யில் பாடல்களைப் பாடிய நம்மாழ்வாரே தம்மை அநாதி₃ காலமாகப் பல பிறவியெடுத்த நித்ய ஸம்ஸாரியாக அநுஸந்தி₄த்துக் கொண்டிருக்கையாலே "ஒரு நித்ய ஸம்ஸாரியை விண்ணுளாரிலும் சீரியராக ஆக்கினான் எம்பெருமான் என்பதே உண்மை நிலை. 'யத்₃யத்₃விபூ₄திமத்ஸத்த்வம் ஸ்ரீமதூ₃ர்ஜிதமேவ வா | தத்ததே₃வாவக₃ச்ச₂ த்வம் மம தேஜோம்ஶஸம்ப₄வம் ||' [கீதை 10-41] [எந்தெந்த ஜந்துக்கள் செல்வம், காந்தி, நற்செயல்களில் உறுதி முதலான சிறப்புக்களையுடையவையாக இருக்கின்றனவோ, அந்தந்த ஜீவராசிகள் என்னுடைய நியமன

ஶக்தியின் ஒரு பகுதியாலே உண்டானவை என்று நீ அறியாயாக.] என்கிற ரீதியிலே எம்பெருமானுடைய அம்ஶத்தாலுண்டானவர் நம்மாழ்வார் என்பதையிட்டுப் பூர்வாசார்யர்கள் அவரை பு₄க்₃வத₃வதாரமாக அருளிச்செய்கிறார்கள்'' என்பது எம்பார் திருவுள்ளம். திருவிருத்தம் ப்ரவேஶத்தில் இந்த நிஷ்கர்ஷம் பின்பற்றப்பட்டுள்ளது.]

16. வார்த்தாமாலை 210 வார்த்தை எம்பார் திருமலைநம்பி திருமாளிகைக்கு ஸர்வவித₄ கைங்கர்யங்களும் பண்ணிக்கொண்டு போருகிறபடியைக்கண்டு உடையவர் ப்ரீதராய்க்கொண்டு எழுந்தருளியிருக்கிறவளவிலே, ஒருநாள் நம்பிக்குத் திருப்படுக்கை படுத்து, எம்பார் முதலில் அதிலே படுத்துக்கொண்டுபார்க்க, இத்தை ஒருநாள் உடையவர் கண்டு 'இவருடைய பரிமாற்றமிருந்த பொல்லாங்கென்?' என்று இக்ரமத்தைத் திருமலைநம்பிக்கு அருளிச்செய்ய, திருமலைநம்பி எம்பாரை அழைத்து, 'ஸ்ரீகோவிந்தப்பெருமாளே! நீர் நமக்குப்படுத்த படுக்கையிலே படுத்துக்கொண்டீரென்று கேட்டோம், இப்படி செய்யலாமோ? இதுக்கு ப₂லம் ஏது?' என்ன; 'நரகம்' என்ன; 'இப்படியறிந்திருந்து செய்வானென்?' என்ன, 'தேவரீர் திருமேனியிலே ஒன்று உறுத்துதல் ஊன்றுதல், கடித்தல் செய்யாமல் கண்வளரப்பெற்றால் அடியேனுக்கு நரகமேயமையும்'என்று விண்ணப்பஞ்செய்ய, இத்தை உடையவர் கேட்டருளி, 'இதொரு ப்ரதிபத்தி விஶேஷமிருந்தபடியென்!' என்று உகந்தருளினார்.

17. வார்த்தாமாலை 312 வார்த்தைசவிவரணம். ப₄ட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை a —''நீர் ஒருகாலும் உடம்போடுண்டான உறவுக்கு உளைந்து போருகிறீரில்லை; இதுக்கடி உற்றானை எம்பெருமான் பக்கலில் உறுதியை உணர்ந்தோ? அன்றியே உம்முடைய பக்கலுண்டான உறுதியை உணர்ந்தோ?'' என்று கேட்க; b "அடியேனுக்கு இவையிரண்டுமுண்டோ? உள்ள உறவித்தனையும் உடம்போடுண்டான ஊற்றத்தாலேயன்றோ?'' என்று விண்ணப்பஞ்செய்ய; c எம்பாரும் இதுகேட்டு க்ருதார்த்த₂ராய், ''நீர் இங்ஙனே சொல்லுவானென்? ஆழ்வானோடுண்டான குடல் துடக்காலே அந்தரங்க₃மான அர்த்த₂ங்களை ஆராயும்படியான ஆகாரங்களையுடையீர்; உடையவராலே உண்டான ஜ்ஞானமுடையீர். அதடியாக எங்களோடுண்டான உறவறிவீர்; இப்படியிருக்க, எங்களை நீர் இங்ஙன் உழைப் பிக்கலாமோ? இவ்வாகாரங்களில் உமக்குண்டான உறவுறுதி சொல்லீர்'' என்று உறுத்திக் கேட்க,

d ப4ட்டர் விண்ணப்பஞ்செய்தபடி: — "என்னுடைய உயிர்க்கு உடைமையாகையன்றோ உறுதியாவது; அங்ஙனன்றியே இவ்வுயிருக்கு ஒரு உறுதியுண்டாகில் அவ்வுயிருக்கு உறுதியுண்டோ? ஆகையால் அவ்வுயிரை உணர்ந்த ஆநந்த3த்தாலே பிறந்த உறுதியன்றோ உண்டாகிலுள்ளது" என்று விண்ணப்பஞ்செய்ய; e எம்பாரும் "இதிலொரு குறையில்லை; சொன்னபடி அழகிது; ஆனாலும் அவ்விஷய ஸ்பர்ஶத்தை உணர்ந்த ஆநந்த3த்திலுங்காட்டில் இவ்விஷயத்திலே அநாத3ராதிஶயங் காணும் அபேக்ஷிதமாயிருப்பது ஆகையால் உடம்போடுண்டான உறவுக்கு உலைந்துபோரீர்" என்றருளிச்செய்ய, f ப4ட்டரும், க்லேஶஹேதுவான ப்ரக்ருதியை உணர்ந்து ஶோகிக்கத் தொடங்கினார்:—எம்பாரும், 'அருளிச்செய்த கார்யம் ப2லிப்பதே!' என்று ப்ரீதரானார். [யௌவன வயஸ்ஸில் ப4ட்டர் மிகச்சிறந்த ஜ்ஞான ப4க்திகளையுடையவராயிருந்தும், தே3ஹத்தில் அநாதரவாகிற வைராக்3யமில்லாமலிருப்பதைப் பார்த்து, அவரைத் திருத்துவதற்காக அவரது ஆசார்யரான எம்பார் அவரோடு நடத்திய ஸம்வாத3த்தைக் காட்டுகிறது இந்த வார்த்தை. a ப4ட்டரைக் குறித்து எம்பாருடைய கேள்வி:—"நீர் தே3ஹஸம்ப3ந்த4த்தை நினைத்து ஒருபோதும் வருத்தப்படுவதாகத் தெரியவில்லை; இதற்குக் காரணம் ப4க3வத்ஸம்ப3ந்த4த்தில் உள்ள உறுதியை உணர்ந்தமையோ, அல்லது உம்முடைய ஆத்மாவிடமுள்ள உறுதியை உணர்ந்தமையோ?" என்று, b ப4ட்டருடைய பதில்;— "ப4க3வத்ஸம்ப3ந்த4த்தின் உறுதியையோ, ஆத்மாவின் உறுதியையோ, அடியேன் உணர்ந்தேனல்லேன்; அநாதி3 காலமாக உடம்பிலுண்டான விருப்பத்தாலேயே உடம்பிலே அநாத3ரமில்லாமல் உறவுபூண்டிருக்கிறேன்" என்பது. c இதுகேட்ட எம்பார் சிறிது ஸமாதா4னம் அடைந்து, மேலும் தெளிவுறுத்துவதற்காக மறுபடியும் கேட்கிறார்—"நீர் இப்படிச் சொல்லலாமோ? ஆழ்வான் குமாரராகையாலே ஸூக்ஷ்மமான ஶாஸ்த்ரார்த்த2ங்களை ஆராயும்படியான மேதா4விலாஸங்களையுடையவராயிருக்கிறீர். உடையவருடைய கடாக்ஷத்தாலே உமக்கு ஜ்ஞானமுண்டாயிருக்கிறது. அதுகாரணமாக எங்களை ஆசார்யராகப் பற்றியிருக்கிறீர். இப்படியிருக்க, 'தே3ஹத்தில் எனக்கு இன்னும் பற்று அறவில்லை' என்று கூறி எங்களை வருத்தலாமா. ஜீவாத்ம பரமாத்ம ஜ்ஞானங்களில் உமக்குண்டான உறுதியைச் சொல்லுவீராக" என்று வலியுறுத்திக் கேட்டார்.

d இதற்கு ப₄ட்டருடைய பதில்—"எம்பெருமானுக்கு உடைமையாயிருப்பதே என்னுடைய ஆத்மாவுக்கு உறுதியாகும். இப்படியல்லாமல் என்னுடைய ஆத்மாவுக்குத் தனி உறுதியுண்டாகில் எம்பெருமானுடைய ப்ராப்யத்வ ப்ராபகத்வ ஶேஷித்வாதி₃களுக்கு உறுதியில்லாமல் போய்விடுமே. ஆகையால் என் ஆத்மாவுக்கு ஏதேனும் உறுதியுண்டு என்ருல், எம்பெருமானுடைய ப்ராப்யத்வ ப்ராபகத்வ ஶேஷித்வாதி₃களை உணர்ந்த ஆநந்த₃த்தாலே பிறந்த உறுதியேயுள்ளது" என்று. e இதற்கு எம்பாருடைய பதில்—"இவ்வார்த்தையில் எக்குறையுமில்லை. அழகாகச் சொன்னீர். ஆனாலும், எம்பெருமானேடுள்ள ஸம்ப₃ந்த₄ங்களை உணர்ந்ததாலுண்டான ஆநந்த₃த்தைக் காட்டிலும், தே₃ஹத்தில் மிக்க அநாத₃ரவு காட்டவேண்டியது ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்கு அவஶ்யம் தேவை. ஆகையால் தே₃ஹஸம்ப₃ந்த₄த்தை நினைத்து நீர் வருத்தத்தையும் அடையவேணும்" என்று. f இதைக் கேட்ட பின்பு ப₄ட்டர் வருத்தத்துக்குக் காரணமான ஶரீரஸம்ப₃ந்த₄த்தை நினைத்து வருந்தத் தொடங்கினுர். எம்பாரும் தாம் உபதே₃ஶித்தது பயனுடையதானதைக் கண்டு உகந்தார்.

18. வார்த்தாமாலை 365 வார்த்தை & விவரணம்:— வீரஸுந்த₃ரனுக்குப் பயப்பட்டு எம்பாரடிமையான ஜக₃ந்நாத₂ப்₃ரஹ்மராயருடைய வேஶ்யை மட₂த்திலே வந்திருக்க, இவளை அவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு ப₄யத்தாலே உடையவர், 'எம்பாரே! இவளை இங்கு நின்றும் போகவிடவேண்டும்' என்ன, எம்பாரும், "ப₄யார்த்தையான இவளை ரக்ஷிக்கவே த₄ர்மம் தானே ரக்ஷிக்கும்; எம்பெருமான் ரக்ஷகன் என்னுமிடம் ஆஸ்தீகபா₃லமும் அறியுமே; அவனே ரக்ஷகனென்கிற அவத₄ாரணமறிகைக்கன்ரே ஆசார்யஸேவை பண்ணுகிறது" என்று விண்ணப்பஞ் செய்தார். [வீரஸுந்த₃ரன் என்னும் சிற்றரசன் எம்பாருடைய சீடரான ஜக₃ந்நாத₂ப்₃ரஹ்மராயருடைய வேஶ்யையை (த₃ாஸியை)த் தன் வஶப்படவேண்டும் என்று நிர்ப₃ந்தி₄த்து வந்தான். அவள் அவனுக்கு பயந்து ஆசார்யரான எம்பாருடைய மட₂த்தில் தஞ்சம் புகுந்தாள். 'இவள் எங்கு போனுலும் இவளை விடமாட்டேன்' என்று வீரஸுந்த₃ரன் சொன்னதைக் கேள்விப்பட்ட உடையவர் 'அவனுல் மட₂த்துக்கு ஏதாவது தீங்குவருமோ' என்று ப₄யப்பட்டு, அவளை வெளியே போகச் சொல்லவேண்டுமென்று

எம்பாரிடம் நியமித்தார். அப்போது எம்பார்சொன்ன பதிலாவது— "ப₄யத்தாலே தஞ்சம் புகுந்த இவனை ரக்ஷித்தால் அந்த ஆஶ்ரிதரக்ஷண த₄ர்மமே நமது மட₂த்தை ரக்ஷிக்கும். எம்பெருமானே அனைவர்க்கும் ரக்ஷகன் என்னும் விஷயம் தேவரீர் ஸம்ப₃ந்த₄ம்பெற்ற பெண்களும் குழந்தைகளுங்கூட அறிவார்களே. எம்பெருமான் ஒருவனே ரக்ஷகன் என்கிற ஏகாரப் பொருளை யறிவதற்கன்றோ சிஷ்யர்கள் ஆசார்யர்களை ஆஶ்ரயித்திருப்பது. மட₂த்துக்குத் தீங்குவருமோ என்று அஸ்த₂ானே ப₄யஶங்கை பண்ணவேண்டா" என்று.]

19. வார்த்தாமாலை 374 வார்த்தை 8 விவரணம்: — 'ஆழ்வார்கள் மடலூர்ந்தும், நோன்புநோற்றும், தூதுவிட்டும் ஸ்வாமிக்கு அஸஹ்யமாம்படி செய்கை ஸ்வரூபவிருத்₃த₄மன்றோ?' என்று எம்பாரை முதலிகள்கேட்க, எம்பாரும் "இவர்கள் செய்வதென் ஜ்ஞாநம் தலைமண்டையிடும்படி அவனுடைய ஸௌந்த₃ர்யம் இப்படிச்செய்யுமாகில், அது அவன் ஸௌந்தர்யத்தின் குற்றமன்றோ? எங்ஙனே யென்னில்;-சக்ரவர்த்தி 'வாய்திறப்பதற்கு முன்னே நீங்களெல்லாரும் பெருமாளைத் திருவபி₄ஷேகம் பண்ணவேண்டுமென்பானென்? என்பக்கல் குறையுண்டோ?' என்ன, "நாங்கள் செய்வதென்? 'ப₃ஹவோ ந்ருப! கல்யாண கு₃ணா: புத்ரஸ்ய ஸந்தி தே | கு₃ணாந் கு₃ணவதோ தே₃வ! தே₃வகல்பஸ்ய தீ₄மத: ||' என்று இப்படிப்பட்ட பிள்ளையைப் பெற்ற உன் குறையன்றோ என்றார்கள்" என்றருளிச்செய்தார். [இவ்வார்த்தையில் கேள்வியின்பொருள் தெளிவாயுள்ளது. பதிலின் கருத்து பின்வருமாறு—ஆழ்வார்களின் ஜ்ஞாநமானது முற்றி ப்ரேமமாகப் பரிணமித்து அதனால் எம்பெருமானை வழியல்லாவழியிலாகிலும் சென்று பெற்றுவிடவேண்டும் என்னும் த்வரைவிளைந்து, மடலூர்தல், நோன்புநோற்றல், தூதுவிடுதல் முதலான ஸ்வரூபவிருத்₃த₄மான கார்யங்களில் ஈடுபடும்படி எம்பெருமானுடைய ஸௌந்த₃ர்யம் இவர்களை ஆக்கிவிடுகிறது. இது அவனுடைய ஸௌந்த₃ர்யத்தின் குற்றமேயொழிய இவர்களுடைய குற்றமல்ல. இதற்கு ஸ்ரீராமாயணத்தில் ஒரு த்₃ருஷ்டாந்தமுண்டு, அதாவது – 'ராமனுக்குப் பட்டாபி₄ஷேகம் செய்யப்போகிறேன்' என்று சொல்லத் தொடங்கியவுடன் அயோத்₄யா வாஸிகள் அதைப் பேராதரவோடு ஆமோதி₃த்தார்கள். அதைக்கண்டு, 'நான் வாய்திறப்பதற்குமுன் நீங்கள் எல்லோரும் ராமனுக்குப் பட்டாபி₄ஷேகம் செய்யவேண்டுமென்று முழங்குகிறீர்களே; என் ஆட்

சியில் ஏதேனும் குறையுண்டோ' என்று கேட்டான் த₃ஶரத₂ன். அதற்கு அவர்கள் “ 'அரசனே! உன்னுடைய பிள்ளைக்குப் பல கல்யாண கு₃ணங்கள் உள்ளன. தே₃வனைப் போன்றவனும், பேரறிவாளனும், கு₃ணங்களுக்கெல்லாம் கொள்கலமான அவனுடைய கு₃ணங்களைச் சொல்வோம் கேட்பாயாக' [ரா-அ 2-26,27] என்று இப்படிப்பட்ட கு₃ணஶாலியான பிள்ளையை நீ பெற்றதே குற்றம்; (இது தவிர வேறு குற்றம் உன்னிடமில்லை)” என்றது இவ்விடத்தில் த்₃ருஷ்டாந்தம்.]

20. வார்த்தாமாலை 402. முதல் பாகம் ஐதிஹ்ய நிர்வாஹம் 32ல் காண்க.

21. வார்த்தாமாலை 441 c வார்த்தை 6 விவரணம்:— c 'ஆளவந்தார்க்கு எம்பெருமானார் ஏகலவ்யனன்றோ' என்றார் - எம்பார் [நேரில் வில்வித்தை பயிலாமல் கு₃ருப₄க்தியாலேயே த்₃ரோணருடைய அர்ச்சையை முன்வைத்துக்கொண்டு அவருக்குத் தெரிந்த வில்வித்தை முழுவதையும் கற்ற ஏகலவ்யனைப்போலே, நேரில் ஒரு வார்த்தையும் பேசாவிடினும் ஆளவந்தார் அறிந்ததனைத்தையும் அவருடைய பத₃ாம்பே₄ாருஹ (திருவடித்தாமரை) த்₄யானத்தாலே எம்பெருமானார் அறிவர் என்று கருத்து. எம்பெருமானாரே தம்மை ஆளவந்தாருக்கு ஏகலவ்யனாக அருளிச்செய்தார் என்று பல பூர்வாசார்யக்₃ரந்த₂ங்களில் உள்ளது.]

22. பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யானம் 2-1-1. முதல் பாகம் பக்கம் 385-ஐதிஹ்ய நிர்வாஹம் 37ல் காண்க.

23. பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யானம் 4-4-9. (நம்பனை நரசிங்கனை) எம்பார் அருளிச்செய்யும் வார்த்தை—ஈஶ்வரனுக்கு மூன்று ஆபத்து வந்து கழிந்ததென்று அருளிச்செய்வர். அதாவது — த்₃ரௌபதிக்கும் ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கும் ஸ்ரீ ப்ரஹ்லாத₃னுக்கும் உதவிற்றிலனாகில் ஸம்ஸாரிகள் ஈஶ்வரத்வமில்லையென்றெழுதியெழுத்திடுவர்களிறே.

24. பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யானம் 5-4-11. (சாயைபோலப் பாட வல்லார் தாமுமணுக்கர்களே) எம்பாரைச் சிலர் இப்பத₃த்துக்குப் பொருளென்? என்று கேட்க, “நான் உடையவர் ஸ்ரீ பாதத்தில் இதுகேட்டிலேன், ஆகிலும் நீங்கள் கேட்டவர்த்த₂ம் போராதென்னவெண்ணாது; இப்போதே கேட்டு

உங்களுக்குச் சொல்லவொண்ணுதபடி உடையவரும் திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாத₃த்தேறவெழுந்தருளினுர்; ஆகிலும் உங்களுக்கு இப்போதே சொன்னேனுகவேணும்......'' என்று உடையவர் திருவடி நிலைகளையெடுத்துத் தம் திருமுடியிலே வைத்துக் கொண்டு, ''இப்போது உடையவரெனக்கருளிச்செய்தார். கேட்கலாகாதோ'' என்று ''பாடவல்லார், சாயைபோலத் தாமும் அணுக்கர்களே'' என்றருளிச்செய்தார்.

25. திருப்பாவை 14 (ஆறுயிரப்படி) முதல் பாகம் பக்கம் 150 ஐதிஹ்ய நிர்வாஹம் 6 காண்க.

26. நாச்சியார் திருமொழி 4-11. (நீடுநின்ற நிறைபுகழாய்ச்சியர்)... நிறை புகழாய்ச்சியர் என்கிறதுக்கு எம்பார், இவர்களுக்கு நிறைபுகழாவது க்ருஷ்ணனை இன்னுள் நாலுபட்டினி கொண்டாள், இன்னுள் பத்துப்பட்டினி கொண்டாள் என்னும் புகழ்காணும் என்றருளிச்செய்வர். [விவரணம்: — ''தன்னைத்தேடி வரும்போது கண்ணனுக்கு முகம் கொடுக்காமல் ஒருத்தி நாலு நாள் அவன் தன்வீட்டு வாசலிலே பட்டினிகிடக்கும்படி செய்தாள், மற்றொருத்தி பத்து நாள் அவன் பட்டினி கிடக்கும்படி செய்தாள்'' என்னும் ரீதியில் அதிகநாள் கண்ணனைப் பட்டினி கிடக்கச் செய்வதே இவர்களுக்கு நிறைபுகழாகும் என்று கருத்து.]

27. நாச்சியார் திருமொழி 10-2. (மாற்றுலைப்பட்டவர் கூட்டத்து.) இதுக்குத் திருமலைநம்பி பணிக்கும்படி—தான் பிரிவாலே நொந்தபடியாலே * ஜராமரண மோக்ஷாய * என்று ஆச்ரயிக்கும் திரளின் நடுவே என்னைக் கொடுபோய் வைக்க வல்லையேயென்கிருள் — என்றருளிச்செய்வர். ... கேவலர் தனித் தனியேயாய்த்து அநுபவிப்பது; திரளாயிருக்கக் கூடாது என்று எம்பாரருளிச் செய்யும்படி. மாற்றுலைப்பட்டவர் கூட்டமாகிறது—அடியார்கள் குழாங்களாய், என்னை அத்திரளின் நடுவே கொடுபோய் வைக்கவல்லையே என்கிருளென்று. [விவரணம்:— எம்பார் இவ்விடத்தில் வேறுவித₄மாக நிர்வஹிப்பர். ''கேவலர் தனித்தனியே இருந்து தத்தம் ஆத்மாக்களை அனுப₄விப்பார்கள்; திரளாயிருந்து அனுப₄விப்பதில்லை. இங்கு 'கூட்டம்' என்கையாலே கேவலரைச் சொல்லுவதில் ஸ்வாரஸ்யமில்லை. ஆகையால் ஸம்ஸாரத்திலிருந்து ஓலைமாற்றப்பட்டவர்களாகையாலே மாற்றுலைப்பட்டவர்கள் எனத்தக்க முக்தர்கள் கூட்டத்தின் நடுவே

என்னைக் கொண்டுபோய் வைக்கவல்லையே என்கிறாள்'' என்று. ''அடியார்கள் குழாங்கள்'' [திருவாய் 2-3-10] நடுவே தன்னைக் கொண்டுபோய் வைக்கச்சொல்லுகிறாள் என்று கருத்து.]

28. நாச்சியார் திருமொழி 11-6. ஒரு நாள் பரத்வமே பிடித்து ஸௌலப்₄யத்தளவும் செல்ல (எம்பெருமானார்) உபபாதி₃த்தருள, அத்தைக்கேட்டு எம்பார், கண்ணுங்கண்ணீருமாய் வித்₃த₄ராயிருக்க, அவரைப் பார்த்தருளி, ''அவனுடைய ஸௌலப்₄யத்தைச் சொன்னவாறே நாட்டார் 'இத்தனை எளியவனோ' என்று கைவிட்டுப்போனார்கள் ப₄ாக்₃யஹாநியாலே. 'அறப்பெரியவன் இப்படி எளியவனாவதே!' என்று நெருங்கு கைக்குடலாயிற்று உமக்கொருவர்க்கும்'' என்றருளிச்செய்தருளினாராம்.

29. பெருமாள் திருமொழி 6-8 (என் சினம் தீர்வன் நானே) உயந்தபிள்ளை பாடாநிற்க, எம்பார் பார்த்தெழுந்தருளியிருக்க, இவ்விடத்துக்கு அபி₄நயிக்கிறார்;— காலாலே பாய்ந்து தள்ளுவதாகக் காட்ட; அது கண்டருளி, ''கெடுவாய்! அங்ஙனே செய்தாளாகில் அவனுக்குப் பொல்லாதோ? அவனுக்கு அதன்றோ தேட்டம்; அங்ஙனன்று காணும்'' என்று, கையையிட்டு முகத்தை மறைத்துத் திரியவைத்தருளிக் காட்டினார்.

30. பெரிய திருமொழி 2-3-6. ''ஆண்பிள்ளைகளான பர்த்தாக்கள் ஸந்நிஹிதராயிருக்க தூ₃ரஸ்த்த₂னான க்ருஷ்ணன் பேரைச் சொல்லுவானென்!'' என்று எம்பாரைக் கேட்க, அறிந்தோமே! முன்பே சில ஸ்ருஸ்ரு கேட்டு வைத்தாள் போலே காணும் * மஹத்யாபதி₃ ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ ப₄க₃வாந் ஹரி: * என்று.

31. பெரிய திருமொழி 6-9. ''ஒரு ஜந்மமாக ப்ரபத்தி பண்ணுமது சாலவும் அஸக்ருத்தாயிருந்ததோ, பெறுகிறபேற்றைப் பார்த்தால்?'' என்றருளிச்செய்தார் எம்பார்.

32. திருநெடுந்தாண்டகம் 6. எம்பார் இவ்விடத்திலே ''நடுவே மதுவநமொன்றில்லையாகில் முதலிகளுடைய கிளர்த்தி ராஜகுமாரர்களுடைய முதுகோடே போமித்தனை காண்'' என்று அருளிச்செய்வர்.

33. திருவிருத்தம் 28. வீர ஸுந்த₃ரனோடே எம்பார் விரோதித்திருக்க, அவ்வூரிலுள்ளானொருவன் அவனோடே எதிரியாய் அவனுக்கஞ்சி எம்பார் திருவடிகளிலே வந்து சரணம் புக, ஸ்ரீபாதத்திலே வர்த்திக்கிறவர்கள், "அவனோடே பண்டே விரோத₄முண்டாயிருக்கச்செய்தே இவனையுங்கைக்கொள்ளக்கடவதோ" என்ன, "நம்மை சரணம் என்று புகுந்தவனை நாம் கைக்கொண்டால் ஶரணாக₃தி த₄ர்மமே எல்லாரையும் ரக்ஷிக்க வற்றுகாண்" என்றருளிச்செய்தார்.

34. திருவிருத்தம் 36. (இலங்கையித்யாதி—இடித்தபிரானார் கொடுமைகளே) "ஒருத்திக்காகக் கடலையடைத்து லங்கையை ராமனென்றும் லக்ஷ்மணனென்றும் எழுத்துவெட்டின அம்புகளாப்புகவிட்டுக் குட்டிச்சுவரும் மட்டைத்தெங்குமாக்கி மூலையடிப்போகப்பண்ணின இந்த உபகாரகனுடைய இந்த நீர்மையெல்லாம் எங்கே குடிபோயிற்றதோ?" என்று எம்பாரருளிச்செய்வர்.

35. திருவிருத்தம் 38 "யோகி₃கள் யோகா₃ப்₄யாஸம் பண்ணும்போது யோக₃ம் ஸாத்மிக்கைக்காக லோகயாத்ரையிலே ஒன்றுவர்கள். அதுபோலே இவரும் ப₄க₃வத₃நுப₄வம் ஸாத்மிக்கைக்காக லோகங்களில் பதா₃ர்த்த₂ங்களிலே கண்வைத்தார். அவையும் ப₄க₃வத்₃விஷயத்துக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி. மயர்வற மதிநலம்பெற்றவராகையாலே நம்மை லோகயாத்ரையினின்றும் வேத₃யாத்ரையில் மூட்டுந்தனையருமைபோரும் ஆழ்வார்களை வேத₃யாத்ரையிலே நின்றும் லோகயாத்ரையிலே மூட்டுகை. நம்மை ஸம்ஸாரத்திலுண்டான ருசிவாஸனையைத் தவிர்த்து ப₄க₃வத்₃விஷயத்திலே உண்டாக்குகைக்குள்ள அருமைபோரும் ஆழ்வார்கள் பகவத் விஷயத்தில் ருசிவாசனையைத் தவிர்த்து ஸம்ஸாரத்திலே அதையுண்டாக்குகைக்கு" என்று எம்பாரருளிச்செய்தார்.

36. திருவிருத்தம் 62. (முகில்வண்ணனே) இத்தை எம்பாரருளிச் செய்கிறபோது இதைச் சொல்லுகிறவரைப் பார்த்து "இவ்வளவில் முகங்காட்டாதே செங்கற் சீரைகட்டவிருக்கிறவர் முதலிகளாயிருப்பர்; தலையிலே பிரப்புகள் விழிலும், 'முகில் வண்ணரே! என்னீர்' என்றருளிச்செய்தார். [ விவரணம்:— "இந்நிலையிலும் இப்பிராட்டிக்கு இரங்காமல் பட்டுடுத்துத்திரிகிறவர் மிகப்பெரியவராயிருப்பர்; "முகில்வண்ணன்" என்று ஏக

வசனத்தில் சொன்னால் நம் தலையில் பிரப்பு விழுந்தாலும் விழும்; ஆகையால் 'முகில் வண்ணரே' என்று சொல்லும்'' என்று எம்பார் மூலத்தைப் படிப்பவரைப் பார்த்து ரஸமாகச் சொன்னார் என்று கருத்து.]

37. திருவிருத்தம் 36 ஈடு: முதல் பாகம் பக்கம் 151 ஐதிஹ்ய நிர்வாஹம் 9ல் காண்க.

38 பகவத்விஷயம் 1-1-1. ''ஆழ்வார் ப்ரபன்னரோ? ப₄க்திநிஷ்டரோ?'' என்று எம்பாரைச் சிலர் கேட்க, ''ஆழ்வார் ப்ரபன்னர், ப₄க்தி இவர்க்கு தே₃ஹயாத்ராஶேஷம்'' என்றருளிச் செய்தார்; என்போலவென்னில்; நாமுமெல்லாம் ப்ரபன்னரா யிருக்கச்செய்தே ஆண்டாறுமாஸத்துக்கு ஜீவனம் தேடுகிறுப் போலே; உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணனிறே இவருக்கு.

39. பகவத்விஷயம் 1-1-6. 'ப்ரவ்ருத்தி அவனதீனையாகிறது வேணுமாகில்; நிவ்ருத்திக்கு அவன் வேணுமோ?' என்று எம்பாரைக் கேட்க; ''ஸ்வர்க்க₃த்தில் நின்றும் விழுகிற த்ரிஶங்குவை ஶக்தி மான் நிற்கச்சொல்ல நிற்கவேண்டிற்றுக் கண்டாயே; அப்படியே நிவ்ருத்திக்கும் அவன் வேணுங்காண்'' என்றருளிச்செய்தார்.

40. பகவத்விஷயம் 1-2 ப்ரவேசம். முதல்பாகம் பக்கம்72 ஐதிஹ்ய நிர்வாஹம் 39 காண்க.

41. பகவத்விஷயம் 1-2-9. எம்பார் ஓருருவிலே ''பின்னு மாக்கை விடும்பொழுதெண்ணே'' என்று, இங்ஙனே காரண மானது கழிந்தபோதே கார்யமும் தன்னடையே கழிந்ததே யன்றோ; ப்ராப்தியு மினிக் கைபுகுந்ததேயன்றோ; இனி சிந்தா விஷயமுண்டோ?'' என்றருளிச்செய்தார்.

42. பகவத்விஷயம் 1-2-9. கூரத்தாழ்வான் வைபவம் பக்கம் 14 ஐதிஹ்ய நிர்வாஹம் 54 காண்க.

43. பகவத்விஷயம் 1-3 ப்ரவேசம். முதல் பாகம் பக்கம் 395 ஐதிஹ்ய நிர்வாஹம் 76 காண்க.

44. பகவத்விஷயம் 2-3-2. இப்பாட்டு ப்ரஸ்துதமான வளவிலே எம்பார் கோஷ்டியிலே ''இவ்வாத்மாவுக்கு ப்ரத₂ம கு₃ருவார்'' என்று பிறந்ததாய், இருந்த முதலிகளிற் சிலர் ''ஆசார்யனன்றோ'' என்றார்கள்; சிலர் ''ஆசார்யன் ஸ்ரீபாதத் திலே ஆச்ரயிக்கப்போரு என்று அழைத்துக் கொண்டு

போய்ச் சேரவிட்ட ஸ்ரீவைஷ்ணவன் ப்ரத₂மகு₃ரு'' என்றுர்கள்; ''அங்ஙனன்றுகாண், அவனிவனையழைத்தாலும் இவன் அல்லேன் என்றதபடி 'இசைவித்தென்னை' என்கிறபடியே அகவாயிலேயிருந்திசைவித்த ஸர்வேச்வரன்காண் ப்ரத₂மகு₃ரு'' என்றருளிச்செய்தார்.

45. பகவத்விஷயம் 2-4-5. (தவளவண்ணர் தகவுகளே) ''ஶாத்₃த₄ஸ்வப₄ாவரான உம்முடைய தகவுகளெங்கே போயிற்றின?'' என்று எம்பாரருளிச்செய்யும்படி. அன்றிக்கே, பட்டர், ''உம்மைப்போலே நாலு ஶிஷ்டர்களமையுமிறே அப₃லைகள் குடிகெட'' என்றுர்.

46. பகவத்விஷயம் 2-7 ப்ரவேசம். எம்பார் இத்திருவாய்மொழி அருளிச்செய்யப்புக்கால், ''ஸ்ரீவைஷ்ணவனுனேனென்கிருர்'' என்பராம்; வைஷ்ணவத்வசின்னமிறே திருத்₃வாத₃ஶநாமம். ஆழ்வாருடைய நெடுமாற்கடிமையும், எம்பெருமானுடைய நெடுமாற்கடிமையும், இரண்டாயிற்று நெடுமாற்கடிமை; அதில் எம்பெருமானுடைய நெடுமாற்கடிமை இத்திருவாய்மொழி.

47. பகவத்விஷயம் 2-9 ப்ரவேசம். எம்பார் இத்திருவாய்மொழி அருளிச்செய்யப் புக்கால், இருந்தவர்களை ''யார்'' என்று கேட்டுக் கதவுகளையுமடைப்பித்து கு₃ஹ்யமாகவாமருளிச்செய்வது.

48. பகவத் விஷயம் 2-9-2. முதலியாண்டான் வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 33 காண்க.

49 பகவத்விஷயம் 2-9-4. இத்திருவாய்மொழியில் இவர் நிஷ்கர்ஷித்த ப்ராப்யமாவது - ஸ்ரக்சந்த₃நாதி₃களோபாதி தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே என்றிறே; இவ்விடத்திலே எம்பார் அருளிச்செய்யும்படி-''ஸர்வேஶ்வரன் த்ரிவித₄சேதநரையும் ஸ்வரூபாநுரூபமாக அடிமை கொள்ளாநின்றுன். நாமும் இப்படி பெறுவோமேயென்று முக்தரும், நித்யரும் தாங்களும் ஆநந்தித்து அவனையும் ஆநந்தி₃ப்பிப்பர்கள். ப₃த்₃த₄ர் தாங்கள் ஆநந்தி₃யாதே அவனை ஆநந்தி₃ப்பிப்பர்கள்; இன்புறும் இவ் விளையாட்டுடையானிறே. ''மயர்வற மதிநல மருளப் பெற்றவர் 'தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே' என்று ப்ரார்த்தி₂ப்பானேன், 'திருவுள்ளமானபடி செய்கிறுன்' என்றிராதே?'' என்று பிள்ளை திருநறையூரரையர் எம்பாரைக்கேட்க, ''அது கேளீர்; முன்பு பிரிந்தன்று, பின்பு பிரிவுக்கு ப்ரஸங்க₃ முண்டாயன்று, இரண்டுமின்றியிருக்கத் திருமார்விலேயிருக்கச்செய்தே. 'அகலகில்லேன் அகலகில்லேன்' என்னப்பண்ணுகிறது விஷயஸ்வப₄ாவமிறே; அப்படியே ப்ராப்யருசி ப்ரார்த்தி₂க்கப் பண்ணுகிறது'' என்று அருளிச்செய்தார்.

50 பகவத்விஷயம் 3-2-1 (ஆக்கையின் வழியுழல்வேன்) "நீ ஒன்றை நினைத்துத் தந்தாய்; நான் அதின் வழியே போந்தேன். தெப்பத்தை நூக்கிப்போய்ப் பெருமாளை அநுபவிக்கலாயிருக்க, 'சரீரம் பாங்கன்று' என்று நீர்வாக்காலே போய்க் கடலிலே புகுவாரைப் போலே, இதர விஷயப்ராவண்யத்துக்கு உடலாக்கி அநர்த்தத்தை விளைத்துக்கொண்டேன்" என்றார் எம்பார்.

51. பகவத் விஷயம் 3-2-8 "ஓவுதலின்றி மேவுதுன்ப வினைகளை விடுத்துமிலேன்; ஓவுதலின்றி உன்கழல் வணங்கிற்றிலேன்" என்று எம்பார் அருளிச்செய்யும்படி. 'கண்ணுலப் பெண்டாட்டிக்கு உண்ண அவஸரமில்லை' என்னுமாபோலே இந்த்ரியங்களுக்கு இரையிட்டுத் திரிந்தேனித்தனை; எனக்கொன்றும் ஹிதம்பார்த்திலேன். [ஓவுதலின்றி என்பதற்கு ஓய்வில்லாமையினுலே யென்று எம்பார் திருவுள்ளம்பற்றின பொருள்.]

52. பகவத்விஷயம் 3-2-10 முதலியாண்டான் வைபவம் பக்கம் 47 ஐதிஹ்யநிர்வாகம் 34ல் காண்க.

53. பகவத்விஷயம் 3-9-6. [நும் மெய்வருத்திக் கை செய்து உய்ம்மினோ] இதுக்கு எம்பாரருளிச் செய்யும்படி;— கோட்டை சுமத்தல், புல் சிரைத்தல் செய்யமாட்டீர்களோ என்று.

54. பகவத்விஷயம் 4-3 ப்ரவேசம். முதல் பாகம் பக்கம் ஐதிஹ்ய நிர்வாகம் 13ல் காண்க.

55. பகவத்விஷயம் 4-6 ப்ரவேசம். கீழ் *வீற்றிருந்தேழுலகாயிருக்க, அனந்தரம் * தீர்ப்பாரையாமினியாயிருக்கிறதிறே. எம்பார் கீழில் திருவாய்மொழியையும் இத்திருவாய்மொழியையும் அநுஸந்தித்து, "மோருள்ளதனையும் சோறேயோ? அதிலே அப்படி நிரவதிகப்ரீதியாய்ச் சென்றது; இதில் இப்படி மோஹந்தோடே தலைக்கட்டிற்று; இதுக்கு இருந்து அடைவு சொல்லுவேனோ? இதுக்கு * அஸங்கதிரேவ ஸங்கதி:" என்று அருளிச்செய்வாராம். [விவரணம்:- ஒருவன் ஒருநாழி அரிசியையும், ஒரு பாத்திரத்தில் மோரையும் எடுத்து வந்து, ஓர் அம்மையாரிடம் அரிசியைச் சமைத்து இடச் சொல்லி, மோர்விட்டுச் சாப்பிடத் தொடங்கியும், பசியடங்காமையாலே அன்னம் முழுவதையும் உண்டுவிட்டு, "மோர் மீதியிருக்கிறது; சோறிடும்" என்றானும். அம்மையார் அலுத்துப்போய்

''மோருள்ள வரையிலும் சோறிடமுடியுமோ'' என்று சொன்னகதை இங்கு கையாளப்பட்டுள்ளது.]

56. ப₄க₃வத்₃விஷயம் 4-9 ப்ரவேஶம். எம்பார் ''உன்னைப் பிரிந்திருந்து படுகிற க்லேசத்தினளவல்ல உன்னை யொழியப் புறம்பே பேறுமிழவுமாயிருக்கிற ஸம்ஸாரிகள் நடுவேயிருக்கிற இருப்பால் படுகிற க்லேசம்; இத்தைத் தவிர்த்தருளவேணு மென்கிறார்'' என்றருளிச்செய்வர்.

57. ப₄க₃வத்₃விஷயம் 4-10 ப்ரவேஶம். எம்பார் ''ஸகல வேத₃சாஸ்த்ரங்களையும் அதி₄கரித்துவைத்து, பரதத்வமின்ன தென்று அறுதியிடமாட்டாதே சேப்புக்குக் கூராச் சிற்றறிவாளுண்டோவென்று கண்டவிடமெங்கும் புக்குத் தலைசாய்த்துத் தடுமாறித் திரியாநிற்க, எம்பெருமானார் த₃ர்ஶநஸ்த₂ரில் எத்தனையேனும் கல்வியில்லாத ஸ்த்ரீப்ராயரும் தே₃வதாந்தரங்களை அடுப்பிடு கல்லோபாதியாக நினைத்திருக்கிறது இவ்வொன்றும்தேயும் இப் பக்ஷத்திலேயுண்டாகையிறே'' என்றருளிச்செய்வர். [விவரணம்:— சேப்புக்குக் கூராச் சிற்றறிவாளுண்டோ?—சேப்பங்கிழங்கை அறுப்பதற்கு எந்தச் சிற்றறிவாளும் போதும் அதுபோல் நம்கஷ்டத்தைத் தீர்க்க எந்த தெய்வமும் போதும்''என்று தே₃வதாந்தரபரர்களுக்குக் கருத்து.]

58. ப₄க₃வத்₃விஷயம் 5-1-1. [காரப்பாரார்]............மித்ர பா₄வேந என்கிற ஶ்லோகத்தில், எம்பார், 'ஸர்வஜ்ஞனுக்கு ஒரு அஜ்ஞானமும் விஸ்ம்ருதியும், ஸர்வஶக்திக்கு ஒரு அஶக்தியும் உண்டு' என்றருளிச்செய்வர். ஒருவன் தன்னை ஆஶ்ரயித்தால், முன்பு பு₃த்₃தி₄பூர்வம் பண்ணின குற்றத்திலே விஸ்ம்ருதிபண்ணி ஜ்ஞாநம் பிறந்தால் ப்ராமாதி₃கமாய், வருமவற்றிலே அஜ்ஞனாய்; அவனை விடவேண்டி வருமளவிலே அஶக்தி; இப்படி இருக்கைக்கு அடி ஸ்வாபா₄விகமான குடல் துடக்கு.

59. ப₄க₃வத்₃விஷயம் 5 9-1. ஜநநாத ப்ரஹ்மராயர் திருமுடிக்குறையிலே ஒரு மரம் வெட்டப்புக, அத்தை எம்பார் கேட்டு ''அல்லாளப்பெருமாளே! ஈஶ்வர விபூ₄தியை அழிக்கப் பார்த்தாயோ?'' என்ன, இவர் சொல்லும் வார்த்தை கேட்கைக்காக 'ஈஶ்வரவிபூ₄தியல்லாத விடமுண்டோ' என்ன, 'அவைபோலன்று காண் இவை; ஸார்வபௌ₄மனான ராஜாவும் மஹிஷியுமாக முற்றூட்டாகக் குடநீர்வார்த்து ஆக்கும்சோலைபோலே பெருமாளும் பெரியபிராட்டியாரும்கூடக் கைதொட்டு ஆக்குமவைகாண்' என்றருளிச்செய்தார்.

60. ப₄க₃வத்₃விஷயம் 6-2-2 "இன்னமென்கையகத்தீங்கொருநாள் வருதியேலென்சினம் தீர்வன் நானே" என்று இத்தை உய்ந்த பிள்ளை (அரையர்) பாடாநிற்கச்செய்தே—காலாலே உதைப்பது கையாலே தள்ளுவதாய் அபி₄நயித்துக் காட்டினார். இத்தை எம்பார் கேட்டருளி "அங்ஙனன்று; அது பின்னை பெற்றாளாகில் அவன் நெடுநாள் ப்ரார்த்தி₂த்துக் கிடந்ததன்றோ; ஆனபின்பு அதன்று பொருள்" என்று, முகத்தைத்திரியவைத்துக் காட்டினார்; "நீ அகல நின்று பண்ணினவையெல்லாம் உன் ஸந்நிதி₄யிலே உன்னைப் பண்ணுவேன் என்கிறாள்" என்று அருளிச்செய்தார். எம்பார் தாம் பா₃ஹ்யவிஷயங்களில் ருசியில்லாமையாலே பதா₃ர்த்த₂ஜ்ஞானமின்றிக்கேயிருப்பர்; இப்படி இருக்கையாலே 'ஸ்த்ரீகளுக்கு அஸாதா₄ரணமான சிஹ்நங்கள் எங்ஙனே இருக்கும்படி' என்று சிங்கப்பிரானைக் கேட்டருளினார் என்று ப்ரஸித்₃த₄மாயிருக்கும். இப்படியிருக்கிறவர்தாம் மின்னிடை மடவார் அருளிச்செய்யப்புக்கால் இந்த ஸந்யாஸி பிரட்டுப்பாடத்தொடங்கினார் என்பராம் பிள்ளையுறங்கா வில்லிதாஸர். இவருடைய ப₄க₃வத்₃விஷயத்தில் அவகா₃ஹநமிருக்கும்படி; எம்பார் "ஈஶ்வரன் முன்னே வந்து நின்றாலும் வா' என்பாரையும் கிடையாத ஸம்ஸாரத்திலே அவன் அல்பம் தாழ்த்தானென்று, 'போ' என்பாரைப் பெறுவதே!" என்பர்.

61. ப₄க₃வத்₃விஷயம் 6-2-7, (எம்மை நீ விளையாடுதி) 'இவன் சொன்ன மர்மம் எது?' என்று எம்பாரைச் சிலர் கேட்க, "மயர்வற மதிநலமருளப்பெற்றவர் பாசுரமிடமாட்டாமல் 'வன்மம்' என்று நின்றார்; என்னைப் பாசுரமிடச் சொல்லுகிறிகோளோ" என்றருளிச்செய்தார்.

62. ப₄க₃வத்₃விஷயம் 6-4-10 முதலியாண்டான் வைபவம் பக்கம் 47 ஐதிஹ்ய நிர்வாஹம் 38 காண்க.

63 ப₄க₃வத்₃விஷயம் 6-5-9 (மரங்களுமிரங்கும் வகை) எம்பாரை 'மரங்களுமிரங்கக்கூடுமோ?' என்று கேட்க, "இது அருளிச்செய்த அன்று தொடங்கி எத்தனை ப₄ாவஶுத்₃தி₄யில்லாதார் வாயிலே புக்கதென்று தெரியாது; இங்ஙனே இருக்கச்செய்தே ஒமநியமாதிக்ரமத்தாலே பதஞ்செய்யப் பார்த்தாலும் சுக்கான் பருக்கைபோலே நெகிழாதேயிருக்கிற நெஞ்சுகளும் இன்று அழிகிறபடி கண்டால் ஸமகாலத்தில் மரங்கள் இரங்கச்சொல்ல வேணுமோ?" என்றருளிச்செய்தார்,

64. ப4க3வத்3விஷயம் 6-7-5, (ஆவியுள்குளிர) இவ்விடத்தை பட்4டர் அருளிச்செய்யாநிற்கச்செய்தே மேலெழ அருளிச்செய்தாராய், சீராமப்பிள்ளை இருந்தவர் "ஜீயா! எம்பார் அருளிச்செய்யும்போது ஆவியு(3)ள்குளிர என்று முகந்துகொண்டருளிச்செய்யும்படி கேட்டறிகையில்லையோ" என்றருளிச்செய்தார்.

65. ப4க3வத்3விஷயம் 7-3-1. (நெஞ்சினூடே) நஞ்சீயர் கோயிலுக்கெழுந்தருளாநிற்க வழியிலே பிள்ளானைக்கண்டு 'ஈஶ்வரனுக்கு ஸ்வரூப வ்யாப்தியேயோ? விக்3ரஹ வ்யாப்தியும் உண்டோ?' என்று கேட்க; "பா4ஷ்யகாரர் தோற்றவருளிச்செய்து கொண்டுபோந்தது ஸ்வரூபவ்யாப்தியாயிருக்கும்; ஆகிலும் எம்பார் ஒருநாள் 'உபாஸகாநுக்3ரஹார்த்த2மாக ஆஶ்ரிதருடைய நெஞ்சிலே விக்3ரஹத்தோடே வ்யாபித்திருக்கும்' என்று அருளிச்செய்யக்கேட்டேன்" என்று பணித்தான்.

66. ப4க3வத்3விஷயம் 7-9-4. (என்னாகியே) இவ்விடத்துக்கு எம்பாரருளிச்செய்யும்படி — "தான் பாடினாகில் நிரவத்3யமாய்த் தலைக்கட்டும்; நான் பாடினேனாகிலும் வருந்தியொருபடி தலைக்கட்டும்; என்னையுபகரணமாகக்கொண்டு கவிபாடாநிற்கச்செய்தேயும் என்னோட்டை ஸ்பர்ஶத்தால் வந்த தோஷம் தட்டாதபடி கவிபாடித் தலைக்கட்டினான்" என்று.

67. ப4க3வத்3விஷயம் 8-8-5. முதலியாண்டான் வைபவம் பக்கம் 47 ஐதிஹ்ய நிர்வாஹம் 40 காண்க.

68. ப4க3வத்3விஷயம் 9-6-2. (உனக்கு) "'நானுனக்காட்செய்யும் நீர்மை" என்பானென்? நீ எனக்காட்செய்யும் நீர்மை என்னுமல்?' என்ன "இச்சொலவையுமிழப்பரோ பாவியார்?" என்று எம்பார்.

69 ப4க3வத்3விஷயம் 9-9-9. (இடையிடை அதுமொழிந்து) எம்பார் இவ்விடத்தேவந்தவாறே "மோருள்ளதனையும் சோறேயோ தேசிகருங்கூடப் பாசுரமிட்டுச் சொல்லமாட்டாதே 'அது' என்னா நிற்க, மத்4யஸ்த2ரான நாம் இதுக்கு என்ன பாசுரமிட்டுச் சொல்லுவது?" என்றருளிச்செய்தாராம்.

70. ப4க3வத்3விஷயம் 10-2-2, (சேர்செருந்தி) பிள்ளைஜநநாதப்3ரஹ்மராயர் திருமுடிக்குறையிலே மரம்வெட்டுவியாநிற்க எம்பார் அருளிச்செய்த வார்த்தையை நினைப்பது. [59-வது ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க.]

71. ப₄க₃வத்₃விஷயம் 10-8-9. முதல் பாகம் பக்கம் 40 ஐதிஹ்ய நிர்வாஹம் 127 காண்க.

72. முமுக்ஷுப்படி 275 ஆ வ்யாக்யானம். (முமுக்ஷுப்படி.) "ஆஸ்திகனாய் இவ்வர்த்த₂த்தில் ருசி விஶ்வாஸங்களுடையனாய் உஜ்ஜீவித்தல், நாஸ்திகனாய் நசித்தலொழிய நடுவில் நிலையில்லை" என்று பட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை. —"அதாவது — இவ்வர்த்த₂த்தில் [சரமச்லோகார்த்தத்தில்] அந்வி தனானவன் ப₄க₃வத்ப்ரபா₄வத்தால் இது ஸத்யமென்று ஆஸ்தி கனாய் இவ்வர்த்த₂த்தில் ருசியும், இது தப்பாதென்கிற விஶ்வாஸமு முடையவனாய் உஜ்ஜீவித்தல், 'சாஸ்த்ரங்களெல்லாம் ஒருதலையும் இது ஒரு தலையுமாய் இப்படியிருப்பதொன்றுண்டோ' என்று நாஸ் திகனாய்- இத்தை அநாதரித்து நசித்தலித்தனையொழிய நடுவொரு நிலையில்லை" என்று ஸகலசாஸ்த்ர வித்தமரான ப₄ட்டருக்கு ஆப்த தமரான எம்பார் அருளிச்செய்த வார்த்தை என்கை.

73. தவரித்வயம். சிறியாத்தான் எம்பார் ஸ்ரீபாத₃த்திலே ஸ்ரீபா₄ஷ்யம் வாசித்துச்சமைந்து போகக்காலமானவாறே தீர்த்த₂ மாடி ஈரப்புடவையோடே த₃ண்டனிட்டுக் கிடந்தான். 'இது வென் தா₃ஶரதி₂! எழுந்திராய்; உனக்கு அபேக்ஷையென்' என்று கேட்டருள, "ம்லேச்ச₂தே₃ஶத்தேறப் போகப்புகாநின்றேன்; அங்கு நமக்குத் தஞ்சமாக ஒருவார்த்தை கேட்கலாவாரில்லை; திருவுள்ளத்தில் ப்ரியதமமாகவும், ஹிததமமாகவும் அறுதியிட்டி ருக்கும் அர்த்த₂த்தை எனக்கு அருளிச்செய்யவேணும்" என்ன, '(எம்பெருமானார் ஸ்ரீபாதமே. பெரியபிராட்டியார் ஸ்ரீபாத₃மே, பெருமாள் ஸ்ரீபாதமே)த்₃வயத்தில் அறுதியிட்டிருக்கும் அர்த்த₂த் துக்கு மேற்பட ஶ்ரேஷ்ட₂மாயிருப்பதொரு அர்த்த₂மில்லை' என்று அருளிச்செய்தார்.

சிறியாத்தானை அழைத்து "திருக்கண்ணபுரத்திலே ஆய்ச்சி ஸ்ரீபாத₃த்தேறப்போய் வரவல்லையே. உனக்குக் கூலிகொடுக்கும்" என்று அருளிச்செய்தார். அப்படியே அவ்வருகே போய் ஆய்ச்சி ஸ்ரீபாத₃த்திலே ஸேவித்து விடைகொண்டு போரப்புக்கவாறே சிறியாத்தானுக்கருளிச்செய்தவார்த்தை,—"எம்பெருமான் நாராய ணனாயிருக்க, அநாதி₃காலம் அவ்வுறவையறுத்துக் கொண்டிருந்த சேதநனை அவன் திருவடிகளிலே பிணைக்கைக்குப் பற்றுசு பிராட்டி யுண்டென்று நிர்ப்ப₄ரனாயிரு" என்று அருளிச்செய்தார். இத்தைக்

கேட்டருளி எம்பார் "தட்டுக்கூலிக்கும் அவ்வருகே போய்த்து" என்றருளிச்செய்தார், "இப்படியேயிருப்பதொரு அர்த்தமில்லையாகில் ஸம்ஸாரிசேதநனுக்குள்ளதடைய எம்பெருமானுடைய நிக்ரஹத்துக்கு ஹேதுக்களாய்க் கிடக்க எம்பெருமானை ப்ராபிக்க வேறொரு பொருளில்லை" என்று அருளிச்செய்தார்.

74. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 1. "முக்தரை பேதாகாநுகுணமாகவும், முமுக்ஷுக்களை ஸ்வரூபாநுகுணமாகவும், பத்தரைக் கர்மாநுகுணமாகவும் ரக்ஷிக்கும்" என்று எம்பார் அருளிச்செய்வர். ஆகவித்தாலிறே ஈஶ்வரனுக்கு ஸர்வரக்ஷகத்வம்.

75. ப்ரமேயரத்னம்-ப்ரகரணம் 1. "எம்பெருமானில் தாழ்ந்தானொரு ஸ்ரீவைஷ்ணவனில்லை" என்று எம்பார் அருளிச்செய்வர்.

76. ப்ரமேயரத்னம்-ப்ரகரணம் 1. அஜ்ஞானத்தை அகலும்படிபண்ணி, ஜ்ஞானத்தைக் குடிபுகுரும்படிபண்ணி, ருசியைக் கொழுந்தோடும்படி பண்ணுகை ஆசார்யக்ருத்யமென்று எம்பார் அருளிச்செய்வர்.

77. ப்ரமேயரத்னம்-ப்ரகரணம் 2. "நவத்வாரபுரியானலங்கையிலே ராக்ஷஸிகளாலே இடிபடாநிற்கிற பிராட்டிக்குத் திருவடியினுடைய தோற்றரவுபோலே நவத்வாரபுரமான தேஹத்திலே தாபத்ரயங்களாலே இடிபடாநிற்கிற சேதனனுக்கு ஆசார்யனுடைய தோற்றரவு" என்று எம்பார் அருளிச்செய்வர்.

78. ப்ரமேயரத்னம்-ப்ரகரணம் 2. "ப்ரபத்தியில் பூர்வவாக்ய உத்தரவாக்யபேதத்தோபாதியிறே த்வயத்துக்கும் திருவாய்மொழிக்குமுள்ள வாசி" என்று எம்பார் அருளிச்செய்வர்.

79. ப்ரமேயரத்னம்-ப்ரகரணம் 2, முதல்பாகம் பக்கம் 135 ஐதிஹ்ய நிர்வாஹம் 36 காண்க.

80. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 2. எம்பார் திருமலைநம்பி ஸ்ரீபாதத்தில் ஆஶ்ரயித்து, பாஷ்யகாரர் பக்கலிலே ஜ்ஞாநோபஜீவநம் பண்ணினர்.

81. ப்ரமேயரத்னம் - ப்ரகரணம்2 முதல் பாகம் பக்கம் 153 ஐதிஹ்ய நிர்வாஹம் 34 காண்க.

82. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 3. "ப்ரபத்தாவும் உபாயமல்ல; ப்ரபத்தியும் உபாயமல்ல; ப்ரபத்தவ்யனே உபாயம்" என்று இளையாழ்வாரான திருமாலையாண்டான் அருளிச்செய்வர்.

83. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 3. "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று எம்பாரநுஸந்த₄நர்; 'புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கு'என்று ஸம்ஸாரஸாக₃ரத்துக்கு உத்தா₄ரகன் அவனே.

84. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 3. பொற்குடத்திலே தீர்த்த₂த்தை நிறைத்து அதில் ஸுராபி₃ந்து₃பதிதமானால் அதனடைய அபஹதமாமோபாதி அந்த உபாயங்கள் ஸ்வாதந்த்ர்ய க₃ர்ப்ப₄ங்களாயிருக்கும்; இந்த உபாயம் ஸ்வாதந்த்ரிய நிவ்ருத்திபூர்வகமான ப₄க₃வத்₂பாரதந்த்ரிய யுக்தமாயிருக்கும்" என்று எம்பார் அருளிச்செய்வர்.

85. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 4. உபாய ப்ரார்த்த₂னையும் உபேய ப்ரார்த்த₂னையும் அதி₄காரி க்ருத்யமென்று எம்பார் அருளிச்செய்வர்.

86. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 4. தானுகந்த விக்₃ரஹத்தை ஆராதி₄க்கும்போது ராஜவது₃பசாரமும், புத்ரவத் ஸ்நேஹமும், ஸர்ப்பவத் பீ₄தியும் உண்டாக வேண்டுமென்று எம்பார் அருளிச்செய்வர்.

87. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 4. முதல் பாகம் பக்கம் 136 ஐதிஹ்ய நிர்வாஹம் 39 காண்க.

88. ப்ரமேயரத்னம் ப்ரகரணம்4 "உபாயத்துக்கு முற்பாடனாகையாலும், உபேயத்துக்கு எல்லைநிலமாகையாலும், இருந்த நாளைக்கு உசாத்துணையாகையாலும் பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேன்" என்று ப₄ட்டருக்கு எம்பார் அருளிச்செய்வர்.

89. சரமோபாய நிர்ணயம். எம்பாரும் வடுகநம்பியும் உடையவர் ஏகாந்தத்திலே எழுந்தருளியிருக்கிறவளவிலே அவர் திருவடிகளிலே சென்று த₃ண்ட₃ம் ஸமர்ப்பித்து, மது₄ரகவியாழ்வார் "தேவுமற்றறியேன்" என்று ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்கள் மூன்றையும் ஆழ்வாரிடத்திலே அறுதியிட்டுத் ததே₃க நிஷ்ட₂ராய் ப்ரத₂மபர்வத்திலே கண்வையாதே எழுந்தருளியிருந்த நிலை அடியோங்களுக்கு உண்டாம்படி க்ருபைபண்ணியருளவேணுமென்ன, மது₄ரகவியாழ்வார் ஆழ்வாரிடத்திலேபண்ணின ப்ரதிபத்தி உங்களுக்கு நம்பக்கலிலே உண்டாம்படி பண்ணினோமே. இனி உங்களுக்குச் செய்யவேண்டும் அம்ஶம் ஏதென்ன, இந்த ப்ரதிபத்தி யாவதா₃த்மபா₄வியாய் நடக்கும்படி பண்ணியருளவேணுமென்ன, 'ஆசார்யாபி₄மான நிஷ்ட₂னுகில் இங்ஙனிருக்க வேண்டாவோ'

என்று மிகவும் உகந்தருளி, "உபாயோபேயபா₄வேந தமேவ ஶரணம் வ்ரஜேத்" என்கிறபடியே நமக்கிரண்டாகாரமுண்டாகை யாலே, இரண்டிடத்திலும் நம் பக்கலிலே இரண்டையும் அறுதி யிட்டு, "தேவுமற்றறியேன்" என்றிருக்கக் குறையில்லை. இதுதான் உங்களளவுமாத்ரமன்று; நம்முடைய ஸம்ப₃ந்தி₄ ஸம்ப₃ந்தி₄களுக் கும் இந்த ப்ரதிபத்தியேயாயிற்று கார்யகரமாவதென்று அருளிச் செய்தார்.

90. சரமோபாய நிர்ணயம். எம்பார் ஒருராத்ரி திருவீதியிலே கு₃ணாநுப₄வத்துடனே உலாவியருளாநிற்க, பட்டர் பார்த்தருள, எம்பாரை ஸேவித்து—ஆசார்யத்வமும் த்₃விவித₄மாய், தத்₃விஷய ஸ்வீகாரமும் த்₃விவித₄மாயன்றோ இருப்பது; எதிலே தேவரீர் அறுதியிட்டிருப்பதென்ன, எம்பாரும்—"க்ருபா மாத்ரப்ரஸந்நா சார்யனே முக்₂யன்; பரக₃தஸ்வீகாரமே பேற்றுக்கு உடல். இவை இரண்டையும் நான் எம்பெருமானாரிடத்திலே அறுதியிட்டிருப்பன். நீரும் 'பெருமாள் நம்மை புத்ரஸ்வீகாரம் பண்ணியருளினார்; ஆழ் வானுடைய பிள்ளை; ஸகல வித்₃யைகளை அப்₄யஸித்தோம்; நமக்கு ஏது குறை' என்று இறுமாந்திராதே என்னைப்போலே எம்பெருமானா ரிடத்திலே உத்தாரகத்வ ப்ரதிபத்திபண்ணி அவரே உத்தாரக ரென்று நினைத்திரும்" என்று அருளிச்செய்தார்.

91. எம்பார் முக்தக ஶ்லோகம்:—

லக்ஷ்மீநாத₂ஸமாக்₂யஸிந்தௌ₄ ஶட₂ரிபுஜலத₃:
ப்ராப்ய காருண்யநீரம்
நாத₂த்₃ராவப்₄யஷிஞ்சத் தத₃நு
ரகு₄வராம்போ₄ஜசக்ஷுர்ஜ₂ராப்₄யாம் |
க₃த்வா தாம் யாமுநாக்₂யாம் ஸரிதமத₂
யதீந்த்₃ராக்₂யபத்₃மாகரேந்த்₃ரம்
ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி
ப₃ஹுஶோ த₄ தே₃ஶிகேந்த்₃ர ப்₄ரமௌகை₄: ||

[லக்ஷ்மீ நாத₂னுகிற பெருங்கடலில் சடகோபராகிய மேகம் கருணை நீரைப்பருகி, நாத₂முனிகளாகிற மலையிலே பொழிந்தது; அந்நீர் புண்ட₃ரீகாக்ஷரென்னும் உய்யக்கொண்டார், ராமமிஶ்ரர் எனும் மணக்கால்நம்பி ஆகிய இரு அருவிகளின் மூலம் யாமுநாசார்யர் எனும் ஆளவந்தாராகிய பேராற்றை அடைந்து,(அதிலிருந்துபெரிய நம்பிகள் முதலான ஐந்து ஆசார்யர்களாகிற கால்வாய்கள் மூலம்) யதிராஜராகிற பெரிய ஏரியை அடைந்து (எழுபத்து நாலு) ஆசார் யர்களாகிற மதகுகளாலே உயிர்களாகிற பயிர்களின் பொருட்டுப் பெருகுகிறது.]

92. ப்ரபந்நாம்ருதம் அத்தியாயம் 3,4,6,18,19,31,68 பகுதிகள்

93 எம்பார் அருளிய எம்பெருமானாருடைய வடிவழகுப் பாட்டு

பற்பமெனத் திகழ் பைங்கழலுன்றன் பல்லவமே விரலும்
பாவனமாகிய பைந்துவராடை பதிந்த மருங்கழகும்
முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல் தன்னழகும்
முன்னவர் தந்திடு மொழிகள் நிறைந்திடு முறுவல்
நிலாவழகும்
கற்பகமே விழிகருணை பொழிந்திடு கமலக் கண்ணழகும்
காரிசுதன் கழல் சூடிய முடியும் கனநற்சிகை முடியும்
எப்பொழுதும் எதிராசன் வடிவழ கென்னிதயத்துளதால்
இல்லையெனக்கெதி ரில்லையெனக்கெதி
ரில்லையெனக்கெதிரே.

94. எம்பார் அருளிய பெரிய திருமொழித்தனியன்

எங்கள்கதியே! இராமாநுசமுனியே!*
சங்கைகெடுத்தாண்ட தவராசா! *—பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்தமறையாயிரமனைத்தும்*
தங்குமனம் நீயெனக்குத் தா.

95. எம்பார் திருநக்ஷத்திரத்தனியன்.

புஷ்யே புநர்வஸு'திநே ஜாதம் கோ₃விந்த₃தே₃ஶிகம் [மாஶ்ரயே] |
ராமாநுஜ பத₃ாம்போ₄ஜத்₃வந்த்₃வ ப்ரவணமாநஸம் ||

[தைமாதத்தில் புநர்வஸு நக்ஷத்திரத்தில் அவதரித்தவராய், ஸ்ரீ ராமாநுஜருடைய திருவடித்தாமரையில் ஈடுபட்ட நெஞ்சுடையவரான கோவிந்தர் என்னும் ஆசார்யரை ஆஶ்ரயிக்கிறேன்.]

96 எம்பார் வாழித்திருநாமம்

பூவளரும் திருமகளாற் பொலிவுற்றோன் வாழியே*
பொய்கைமுதல் பதின்மர்கலைப் பொருளுரைப்போன்
[வாழியே*
மாவளரும் பூதூரன் மலர்ப்பதத்தோன் வாழியே*
மகரத்தில் புனர்பூசம் வந்துதித்தான் வாழியே*
தேவு மெப்பொருளும் படைக்கத் திருந்தினன் வாழியே*
திருமலை நம்பிக் கடிமை செய்யுமவன் வாழியே*
பாவையர்கள் கலவி யிருள் பகலென்றான் வாழியே*
பட்டர்தொழு மெம்பார் பொற்பத மிரண்டும் வாழியே.

# திருக்குருகைப்பிரான் பிள்ளான் வைபவம்

த்3ராவிட3ாக3மஸாரஜ்ஞம் ராமாநுஜபதா3ஶ்ரிதம் |
ஸுதி4யம் குருகேஶார்யம் நமாமி ஶிரஸாऽந்வஹம் ||

[திராவிடவேத3த்தின ஸாரத்தை அறிந்தவராய், எம்பெருமானாரின் திருவடிகளை ஆஶ்ரயித்தவராய், பேரறிவாளரான திருக்குருகைப்பிரான்பிள்ளானைத் தினந்தோறும் தலையால் வணங்குகிறேன்]

பெரிய திருமலைநம்பிக்கு, "பிள்ளை திருமலைநம்பி" "ராமானுஜன்" "பிள்ளான்" என மூன்று குமாரர்கள். எம்பெருமானார் நம்பியிடம் கோ3விந்த3ரை யாசித்துப் பெற்றபோது, பெரியதிருமலைநம்பி தாமே தம் குமாரரான பிள்ளானை, அபி4மான புத்திரராக வைத்துக் கொள்ளும்படி யதிராஜரிடம் அளித்தார். அவரும் பிள்ளானிடம் பேரபி4மானம் கொண்டவராய்த் தமக்கு அவரை ஜ்ஞாநபுத்திரராகக்கொண்டு அவரைத் திருவாய்மொழிக்கு 'ஆறுயிரப்படி' வ்யாக்2யாநம் செய்யும்படி நியமித்தார். நம்மாழ்வாருக்கும், தமது ஆசார்யரான திருக்கோட்டியூர் நம்பிக்கும் திருநாமமான "திருக்குருகைப்பிரான்" என்னும் திருநாமத்தை அவருக்கு இட்டு, "திருக்குருகைப்பிரான் பிள்ளான்" என்று அவரை அழைத்து, அவர் அருளிய ஆறுயிரப்படி வ்யாக்2யாநத்தையும் அரங்கேற்றி, ஆளவந்தாரின் மூன்றாவது மனோரத2த்தை நிறைவேற்றினார் யதிராஜர். எம்பெருமானாரை ஆஶ்ரயித்து, ஆழ்வான் காலத்திற்குப்பின் ஶ்ரீபா4ஷ்யாதி3களை எழுதுவதில் அவருக்கு உசாத்துணையாயிருந்து "எங்களாழ்வான்" என்று எம்பெருமானாரால் அபி4மானிக்கப்பெற்று, எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி4பதிகளில் ஒருவராக நியமிக்கப்பெற்றவராய், திருவெள்ளறையில் அவதரித்தவரான ஶ்ரீவிஷ்ணுசித்தர் — எம்பெருமானார் காலத்திற்குப் பின் பிள்ளானை ஆஶ்ரயித்திருந்து, அவரிடம் திவ்யப்ரப3ந்த4ங்களுக்கு அர்த்த2ம் கேட்டவர். பிள்ளான் ஐப்பசியில் பூராடத்தில் அவதரித்தவர். விஷ்ணுபுராணக் கணக்கிலே ஆறுயிரம் க்3ரந்த2ங்களுள்ளதாகத் திருவாய்மொழிக்கு இவர் அருளிய ஆறுயிரப்படி வ்யாக்2யானம் — ஒன்பதினாயிரப்படி தொடக்கமாக முப்பத்தாறாயிரப்படி யீருகவுள்ள திருவாய்மொழி வ்யாக்2யானங்களுக்கு வழிகாட்டியாய் அமைந்தது; இவர் வேறு க்3ரந்த2ம் எதுவும் அருளியதாகத் தெரியவில்லை.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1 ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 293 காண்க

2. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். திருக்குருகைப் பிரான் பிள்ளான் தனியன்.

யః பர்யாப்தகல: க்₂யாதோ யதிராஜாப்₃தி₄சந்த்₃ரமா: |
குஶலம் தி₃ஶதாம் மேऽஸௌ குருகேஶ்வரதே₃ஶிக: ||

[எவரொருவர் யதிராஜராகிற கடலுக்கு நிறைந்த கலைகளை (1. சாஸ்திரங்களை. 2. சந்திரகலைகளை) உடைய (பூர்ண) சந்திரனைப் புகழ்பெற்றிருக்கிருரோ, குருகேஶ்வரர் என்னும் திருநாமமுடைய ஆசார்யரான அந்தத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் எனக்கு நல் வழியைக் காட்டுவாராக.]

விக்₂யாதோ யதிஸார்வபௌ₄ளமஜலதே₄ஶ்
சந்த்₃ரோபமத்வேநய:
ஶ்ரீ ப₄ாஷ்யே ச யத₃ந்வயாஸ்ஸுவிதி₃தாஶ்
ஶ்ரீ விஷ்ணுசித்தாத₃ய: |
வ்யாக்₂யாம் ப₄ாஷ்யக்ருத₃ாஜ்ஞயோபநிஷத₃ாம்
யோ த்₃ராமிடோ₃நாம் வ்யத₄ாத்
பூர்வம் தம் குருகேஶ்வரம் கு₃ருவரம்
காருண்யபூர்ணம் ப₄ஜே ||

[எவரொருவர் யதிராஜராகிற கடலுக்குச் சந்திரனென்று புகழ் பெற்றவரோ, எவருடைய சிஷ்யர்களான ஸ்ரீவிஷ்ணுசித்தரெனும் எங்களாழ்வான் முதலானோர் ஸ்ரீப₄ாஷ்யபாண்டித்யத்தில் மிக்க புகழ் பெற்று விளங்குகின்றனரோ, எவரொருவர் ஸ்ரீப₄ாஷ்யகாரருடைய ஆணையாலே தமிழ் வேதமான திருவாய்மொழிக்கு முதன் முதலில் (ஆருயிரப்படி எனும்) வியாக்கியானமிட்டருளினரோ, கருணை நிறைந்தவரான அத்தகைய திருக்குருகைப்பிரான் பிள்ளானை ஶரணடைகிறேன்]

3. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 324 ல் "கிடாம்பியாச்சான், கிடாம்பிப்பெருமாள், எங்களாழ்வான், நடாதூராழ்வான் முதலானவர்களைத் திருக்குருகைப் பிரான் பிள்ளான் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும்" என்னும் பகுதி.

4. பெரிய திருமுடியடைவு. திருக்குருகைப்பிரான் பிள்ளானுக்குத் திருவவதார ஸ்த₂லம் திருக்குருகை. திருநாமங்கள் குருகேஶர், குருகாதி₄நாத₂ர். திருவாராதனம் பொலிந்து நின்ற

பிரான். திருநக்ஷத்ரம் ஐப்பசி மாஸம் பூராடம். திருத்தகப்பனர் பெரிய திருமலை நம்பிகள், ஆசார்யரெம்பெருமானர். சிஷ்யன் எங்களாழ்வான். இருப்பிடம் கோயில். இவர் திருவாய் மொழிக்கு ஆருயிரம் வ்யாக்யானம் செய்தருளினர்.

இவருக்குத் தனியன்

த்ராவிடாகமஸாரஜ்ஞம் ராமாநுஜபதாஸ்ரிதம் |
ஸுதியம் குருகேஸார்யம் நமாமி ஸிரஸாऽந்வஹம் ||

5. சரமோபாய நிர்ணயம். உடையவர் திருக்குருகைப் பிரான் பிள்ளானுக்குத் திருவாய்மொழி ப்ரஸாதிக்கிறபோது "பொலிக பொலிக" வந்தவாறே திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஹர்ஷபுலகித காத்ரராய் விஸ்மயாவிஷ்டசித்தராய் எழுந்தருளி யிருக்க, உடையவரும் அத்தைக்கண்டு 'இதென்ன வேறுபாடு தோற்றியிராநின்றீர்' என்று கேட்டருள, "ஆழ்வார் தேவரீரு டைய திருவவதாரத்தைக் கடாக்ஷித்தருளி 'கலியும் கெடும் கண்டு கொண்மின்' என்று அருளிச்செய்தார். அப்படியே தேவரீரும் உருக்கள்தோறும் நாமே இதுக்கு விஷயமென்று தொட்டுக்காட்டியருளிற்று. அத்தை எல்லாம் இப்போது நினைத்து ஹர்ஷபரவஸனய், 'ஆழ்வார் அருளிச்செய்தபடியே ஸர்வோத் தாரகராய் நாடடங்க வாழும்படி திருவவதரித்த தேவரீரிடத் திலே ஸம்பந்தமும் பெற்று, தேவரீர் திருப்பவளத்தாலே திரு வாய்மொழிக்குப் பொருள் கேட்கும்படிக்கு ஒரு ஸுக்ருதம் நேர்படுவதே!' என்று விஸ்மயப்பட்டிருந்தேன்" என்ன, உடை யவர் மிகவும் உகந்தருளி, அன்று ராத்ரிகாலத்திலே பிள்ளானை அழைத்தருளி, அவர் திருக்கையைப் பிடித்துக்கொண்டு பேரரு ளாளர் ஸன்னிதியிலே அழைத்துக்கொண்டு எழுந்தருளித் தம் முடைய திருவடிகளிரண்டையும் அவர் முடியிலே வைத்தருளி, "இத்தையே தஞ்சமாகப்பற்றி விஸ்வஸித்திரும்; உம்மை அடைந் தார்க்கும் இத்தையே காட்டிக் கொடும்" என்றருளிச்செய்து, "நானை பேரருளாளர் ஸன்னிதியிலே தொடங்கி திருவாய்மொ ழிக்கு, ஸ்ரீவிஷ்ணு புராண ஸங்க்யையிலே ஆருயிரம் க்ரந்த மாக வ்யாக்யானம் பண்ணும்" என்று நியமித்தருளினர். இத் தால் தம்முடைய உத்தாரகத்வத்தை வெளியிட்டபடியிறே.

6. யதிராஜ வைபவம். முதல் பாகம் பக்கம் 187 ஸ்லோ கம் 65-67, பக்கம் 189 ஸ்லோகம் 77, 78, 81, 82 பக்கம்

190 ஶ்லோகம் 83, 84 ஆகிய ஶ்லோகங்களின் பொருள் காண்க.

7. வார்த்தாமாலை 36. திருமந்த்ரம் ஸ்வரூபம் சொல்லுகிற தென்று திருக்குருகைப் பிரான் பிள்ளான்.

8. வார்த்தாமாலை 47. வார்த்தை 6 விவரணம். திருக்குருகைப் பிரான்பிள்ளான் அருளிச்செய்த வார்த்தை:—ப்ரணவத்தில் மத்₄ய மாக்ஷரத்தை ஶிக்ஷித்துவைத்தும் ராஜத்₃வாரங்களிலே நுழையாநின்றுர்கள்; மத்₄யமபத₃த்தை ஶிக்ஷித்துவைத்தும் இடைவேலிக்குப் பிணங்கி நின்றுர்கள்; த்ருதீயபத₃த்தை ஶிக்ஷித்துவைத்தும் தாம் தாம் போ₄க்தாக்களாகாநின்றுர்கள். [ப்ரணவத்தில் நடு அக்ஷரமான உகாரம் அநந்யார்ஹஶேஷத்வத்தைச் சொல்லியிருக்கிறது என்று அறிந்தும், ராஜஸேவைக்கு ஆசைப்பட்டு ராஜத்₃வாரங்களிலே நுழைகின்றுர்கள் பலர். மத்₄யமபத₃மான நமஸ்ஸு மகாரத்தை அடியோடு அறுக்கிறது என்று உணர்ந்தும் தம் நிலத்துக்கும் அண்டை நிலத்துக்கும் இடையிலுள்ள வேலியைப்பற்றிய வழக்கில் பலர் ஈடுபடுகிருர்கள். நாராயணனே போ₄க்தா என்பதை உணர்த்தும் மூன்றுவது பத₃த்தைக் கற்றறிந்த பின்பும், பலர் தம்மையே போ₄க்தாக்களாக அபி₄மானித்து வாழ்க்கை நடத்துகிருர்கள் என்று கருத்து.]

9. வார்த்தாமாலை 136 K வார்த்தை 6 விவரணம். எலுமிச்சம்பழம் கொடுத்து ராஜ்யம் பெறுவாரைப்போலே என்று பணிப்பர் திருக்குருகைப்பிரான் பிள்ளான்; [" உதா₃ரனுன சக்ரவர்த்தியைப் பார்க்கச் செல்லும்போது, வெறுங்கையோடு செல்லலாகாது என்று அவன் மோந்து பார்ப்பதற்காக ஓர் எலுமிச்சம்பழத்தை எடுத்துச் சென்று கொடுத்து அவனுடைய வண்மையாலே ராஜ்யத்தைப் பரிசாகப் பெறுமிடத்திற்போலே த்₃வயத்தை உச்சரித்து, பரம புருஷார்த்த₂லக்ஷண மோக்ஷத்தைப் பெறுவது வ்யாஜமென்றும் சொல்லத்தகாததாயிருப்பது" என்று திருக்குருகைப் பிரான் பிள்ளான் அருளிச்செய்வர்]

10. வார்த்தாமாலை 336. வார்த்தை 6 விவரணம். மூன்று வஸ்துவிலே ப₄க₃வத்₃வஸ்து வளருமென்று பிள்ளான் பணிக்கும்; திருவநந்தாழ்வான் மடியிலும், பெரியதிருவடி திருமுதுகிலும், ஸேனை முதலியார் திருப்பிரம்பின் கீழும்; நாய்ச்சிமாரோடே எம்பெருமான் லீலைகொண்டாடாநிற்க, 'லீலையாலே ஜக₃ந்நிர்வஹணத்தை

மறக்கிறானே' என்று நியமிக்கைக்காக ஸேனைமுதலியார் எழுந்தருளினவாறே. "இந்தானும் ஐயர் வந்தார்" என்று நாய்ச்சிமார் உள்ளே புக்கருளுவராம். [எம்பெருமான் நித்யஸூரிகளோடே பரிமாறும்போது தன்னை ஸ்வாமியாகவும் நித்யஸூரிகளைத் தன் அடிமைகளாகவும் நினைத்துப்பரிமாறுவதில்லை; தன்னை ஓர் இளவரசனைப்போலவும், நித்யஸூரிகளை—தன்னை மடியிலும் முதுகிலும, சுமந்து வளர்க்கும் தாய்மார்களைப்போலவும், தன்னை நியமித்து ராஜ்யகார்யங்களில் புத்திமதிசொல்லி நடத்திச்செல்லும் மூதறிஞர்களான மந்திரிகளைப் போலவும் நினைத்தே பரிமாறுவான் எம்பெருமான். இதையே "வாலசிவரசு" (பெரியாழ்திரு 3—6—3) என்று அருளினார் பெரியாழ்வார், அந்த நித்ய ஸூரிகளும் எம்பெருமானுடைய திருவுள்ளமறிந்து, இளவரசனை மடியிலும், முதுகிலும் சுமந்து வளர்க்கும் தாய்மார்களைப் போலவும், அவனை நியமிக்கும் மூதறிஞரான மந்திரிகளைப் போலவுமே நடந்து கொள்வார்கள். ஓர் இளவரசனைப் போஷித்துக் கொண்டாடி நியமித்து வளர்க்கும் தாய்மார்களைப்போலே, எம்பெருமானைத் திருவநந்தாழ்வான் தம் மடியிலே வைத்துச் சீராட்டி வளர்ப்பார்; பெரியதிருவடியான கருடன் குழந்தையை முதுகில் சுமந்து செல்வது போலே எம்பெருமானை முதுகில் சுமந்து சென்று கொண்டாடி வளர்ப்பர். ஸேனை முதலியார் பிரம்பும் கையுமாக நின்று உபாத்தியாயர் பிள்ளைகளைப்போலே நியமித்து வளர்ப்பார் —என்று பிள்ளான் அருளிச்செய்வராம். எம்பெருமான் நாச்சிமாரோடே விளையாடி லீலாரஸங்களை அநுபவிக்கும்போது "லீலையாலே ஜகந்நிர்வாஹத்தை மறந்துவிடப் போகிறானே" என்று எண்ணி அவனை நினைவுறுத்துவதற்காக ஸேனை முதலியார் அவ்விடத்திற்கு வந்தவுடன் "இதோ பாருங்காணும்; பெரியவர் வந்திருக்கிறார்" என்று அருளிச்செய்து நாச்சிமார்கள் மாமனாரைக் கண்ட மருமட்டுப் பெண்களைப்போலே அடங்கி ஒடுங்கி உள்ளே புகுந்தருளுவார்களாம்,]

11. பெரியாழ்வார் திருமொழி 4—4—1. (நாவகாரியஞ் சொல்லிலாதவர்) கொங்கிலே திருக்குருகைப்பிரான் பிள்ளான் எழுந்தருளி ஒரு ஸ்ரீவைஷ்ணவர் திருமாளிகையிலே விட்டவளவிலே பிறந்த வார்த்தையை ஸ்மரிப்பது.

12. நாச்சியார் திருமொழி 10-6: அம்மணியாழ்வான், ஒருவனுக்கு ஹிதத்தைச் சொல்லி அவன் காலிலே தண்டனாகக் கிடக்குமாம்—"நாம் ஒருவனை வைஷ்ணவனென்றன்றோ ஆதரிக்கிறது; நம் நெஞ்சறிந்த வைஷ்ணவனன்றோ இவன்" என்று,

அதற்கு ஜீயர் கேட்டருளி, "அது அவன் செய்தானேயாகிலும் ஶிஷ்யனுக்கு அநர்த்தம்" என்றாராம்; இவன் தண்டனிடாதவனாக அவனை இழந்தானாகத் தொடங்குமிறே அவிவேகியாகையாலே "அதுவென்? இவன் விவேகியாயன்றோ தன்னை அவனுக்கு இஷ்ட விநியோகார்ஹமாக்குகிறது. 'அவனுடைய விநியோகப்ரகாரங்கொண்டு காரியமென் நமக்கு' என்று தன்னை அங்கே நிவேதித்ததன்றோ வைப்பது" என்றானாம் பிள்ளான். [ அதாவது- அம்மணியாழ்வான் ஒரு ஶிஷ்யனுக்கு நல்வழி காட்டிய பிறகு அவன காலிலே தண்டனிட்டுக் கிடப்பராம். "நாம் ஒருவனை வைஷ்ணவன் என்றன்றோ ஆதரிக்கிறது. நம் நெஞ்சமறிந்த வைஷ்ணவனன்றோ இவன்" என்று அம்மணியாழ்வான் திருவுள்ளம். இதைக்கேட்ட நஞ்சீயர் "அம்மணியாழ்வான் அப்படிச் செய்தானாகிலும் அது ஶிஷ்யனுக்கு அனர்த்தம்" என்று அருளிச் செய்தாராம். "ஒருநாள் ஆசார்யன் தண்டனிடாவிட்டால் அவிவேகியாகையாலே ஶிஷ்யன் வருந்தத் தொடங்குவானன்றோ" என்று நஞ்சீயர் திருவுள்ளம். இதைக்கேட்ட திருக்குருகைப்பிரான் பிள்ளான் 'இது சரியல்லவே; ஶிஷ்யன் விவேகியாயிருப்பதாலன்றோ ஆசார்யன் தன்னை அவனுக்கு இஷ்டப்படி செய்து கொள்ளும்படி ஆக்கிவைக்கிறான். ஶிஷ்யனும் ஆசார்யன் எப்படித் தன்னை ஆக்கிவைத்தாலும் நமக்கு அதில் அந்வயமில்லை என்று தன்னை ஆசார்யனிடம் ஸமர்ப்பித்தன்றோ கிடக்கிறான்; அத்தகையவன் ஆசார்யன் தண்டனிடாதவன்று வருந்தமாட்டானே' என்று அருளிச்செய்தாராம் ]

13. பெரியதிருமொழி 4—9—9. (சித்தைதன்னுள் முந்தி நிற்றி) "அணைக்கைக்கீடாகக் கைக்கெட்டாதேயிருக்கிற நீர் இத்தனைப் போர வளர்க்கிறதென்?" என்று பிள்ளான்.

14 திருவிருத்தம் 80 ஈடு வ்யாக்யானம். (எம்மைநீத்து வஞ்சித்தோரரசே) "உபயவிபூதிக்கும் தனித்தனியே கடவனாவோபாதி, என்னையகற்றி முடிக்கைக்கும் தனிமுடிசூடியிருக்கிறவனே!" என்று பிள்ளான்.

15. பகவத்விஷயம் 1—3—1. (மத்துறு கடைவெண்ணெய்) "கடையாநிற்கச்செய்தே பசியராயிருக்குமவர்கள் சோறுசமையப் பற்றாமல் வெந்தது கொத்தையாக வாயிலிடுமாபோலே, கடையப் பற்றாமல் நடுவே அள்ளி அமுதுசெய்யும்படியைச் சொல்லுகிறது" என்று பிள்ளான் பணிக்கும்படி.

16 ப4க3வத்3விஷயம் 1—3—10 (பொருநிலமித்யாதி3) "மனோ வாக்காயங்களாலே அநுப4விக்கப்பெற்றேனென்கிறார்" என்று பிள்ளான் பணிக்கும்படி. "இவற்றாலே அனுப4விக்கப் பாரிக்கிறார்" என்று ஜீயரருளிச்செய்யும்படி.

17. ப4க3வத்3விஷயம் 1—4—7. (அருளாததிருமாலார்க்கு) "ந கஶ்சிந்நாபராத்4யதி யென்பாரும் அருகேயிருக்க, எங்கள் குற்றம் பார்த்து அவள் பக்கல் முகம்பெற விருக்கிறாரே!" என்று நஞ்ஜீயர் அருளிச்செய்யும்படி; "நானிப்படி நோவுபட வேண்டுகிறது-அவனுக்கவள் முகங்கொடுத்து அங்கே துவக்குகையிறே யென்று இன்னாதாகிறான்" என்று பிள்ளான் பணிக்கும்படி.

18. ப4க3வத்3விஷயம் 1—7—7. (பின்னையாளொட்டுவேனோ) "எப்ரகாரத்தாலுமிரேன்" என்னுமாகில், பின்னை, அவன்போக்கை இசைவேனோ? என்னுடைய கர்மபாரதந்த்ர்யம்போலே அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்துக்கும் ஏதேனும் கண்ணழிவுண்டோ? என்னிசைவின்றிக்கேயிருக்க, அவனாலே போகப்போமோ? அன்றியே "நான் தொங்குவேனோ" என்று பிள்ளான் பணிக்கும்படி.

19. ப4க3வத்3விஷயம் 2—2 ப்ரவேசம். "(மூவா முதல்வா) என்று காரணத்வம் ப்ரஸ்துதமாகையாலே அந்தக் காரணத்வத்தை உபபாதி3க்கிறார்" என்று பணிக்கும் பிள்ளான்.

20. ப4க3வத்3விஷயம் 2—4—1. (மல்கி) மிக்கு. (கிமர்த்த2ம் தவ நேத்ராப்4யாம் வாரி ஸ்ரவதி ஶோகஜம்) "ஆனந்தா3ஶ்ருவுக்கு யோக்3யமான கண்களாலே ஶோகாஶ்ரு ப்ரவஹிக்கிறது ஆர்குடி வேரற?" என்று பட்டரருளிச்செய்யும்படி; அன்றிக்கே, பிள்ளான் "ஆரைச் சேதநராகக்கொண்டு" என்று பணிக்கும்.

21. ப4க3வத்3விஷயம் 2—10—7. (மலமறுமதிசேர்) சந்த்3ர பத3த்துக்கவ்வருகே வளர்ந்து நிற்கையாலே, அவன் போம்போது ஶிக2ரங்களிலே தேய்ப்புண்டு சாணையிலேயிட்டாப்போலே களங்கமறுநிற்குமென்னுதல்; அன்றிக்கே, 'திருமலையாழ்வார்தாம் ஜ்ஞாநலாப4த்தையுண்டாக்குவர்' என்று பிள்ளான் வார்த்தை.

22. ப4க3வத்3விஷயம் 4—4—4, (நெடுமாலே வாவென்று கூவும்) "வடிவில் பெருமையைக் கண்டவாறே. ஜக3த்தையடைய தன் திருவடிகளின் கீழே யிட்டுக்கொள்ளும்படி பெரிய வடிவை யுடைய திருவுலகளந்தருளின ஸர்வேஶ்வரன் என்று நினைத்து இங்ஙனே வாராயோவென்றழைக்கும்" என்று பிள்ளான்பணிக்கும்.

23. ப₄க₃வத்₃விஷயம் 5—3—5. [அவனென்றே கிடக்கும்] இதுக்குப் பிள்ளான் பணிக்கும்படி— இத்தோ₃ஷங்கள் அவனின வனன்றோ என்று. அவன் கடியனென்றால் அவன் கடுமை இப்போதே காணவேணும்; கொடியனென்றால் அவன் கொடுமை இப்போதே காணவேணும்; அவன் து₃ஷ்ப்ராபனென்றால் அவன் து₃ஷ்ப்ராபனுனபடியை இப்போதே காணவேணும்; அவன் ஸர்வ ஸ்வாபஹாரியென்றால் அவன் ஸர்வஸ்வாபஹாரம் பண்ண நான் இழந்திருக்கக் காணவேணும்; அவன் து₃ர்ஜ்ஞேயனென்றால் அவன் து₃ர்ஜ்ஞேயதை இப்போதேயறியவேணுமென்றும்; *அன்றிக்கே, [அவனென்றேகிடக்கும்] என்னெஞ்சுக்கு மாயாவாத₃ ருசியுண்டாகிலுமறியேன்; அதாவது, விஶேஷணம்ஶத்தில் தாத்பர்யமின்றிக்கே விஶேஷ்யத்துக்கு அவ்வருகு அறிகிறதில்லை. இத்தால் அவன் கு₃ண நிப₃ந்த₄னமன்று அவனோட்டை ஸம்ப₃ந்த₄ம்; ஸத்தாப்ரயுக்தமென்கை.

24. ப₄க₃வத்₃விஷயம் 5—7—10. (ஆறெனக்கு இத்யாதி₃) உபாயோபேயங்களிரண்டும் உன் திருவடிகளேயாம்படி பண்ணித் தந்தாயே என்று பிள்ளான் பணிக்கும்.

25. ப₄க₃வத்₃விஷயம் 5—9—1. [மானேய் நோக்கு நல்லீர்] நான் திருவல்லவாழிலே போய்ப்புகும்படி உங்கள் கண்ணாலே குளிரநோக்கி ப்ரஸாதி₃க்க வேணுமென்கிறாளென்று பிள்ளான் பணிக்கும். [இது இருபத்து நாலாயிரத்திலுமுள்ளது.]

26. ப₄க₃வத்₃விஷயம் 5—9—8. [சூடுமலர்க்குழலீர்] உங்களை சூடுமலர்க்குழலாராக நான் காண்பதென்றோ? என்று பிள்ளான். அதாவது:— இவள் பூவுக்கு இருய்க்க, அவர்கள் பூச்சூடியிரார்களிறே என்றாயிற்று அபி₄ப்ராயம். அங்ஙனன்றிக்கே, அவன் தான் வந்து இவள் பக்கல் ப₄ாவப₃ந்த₄முறைக்கவுறைக்கக் கொண்டாடுவது இவர்களையாகையாலே, பெரிய திருநாள் ஸேவித்தார் இரட்டைகள் அழுக்கானாலும் மடிகுலையாமே வைக்குமாபோலே இவர்களும் அவன் கொடுத்த மாலையில் செவ்வியழிந்ததேயாகிலும் மாறாதே வைத்துக்கொண்டிருப்பர்களிறே.

27. ப₄க₃வத்₃விஷயம் 5—9—4. (நிச்சலுந்தோழிமீரித்யாதி₃) "மாசறு சோதி தொடங்கி இவ்வளவும் வர ஹிதஞ்சொல்லுகிற நீங்கள் என்ன ப்ரயோஜநம் பெற்றீகோள்?" என்று பிள்ளான்.

*இது நஞ்சீயர் நிர்வாஹம். இருபத்து நாலாயிரம் காண்க.

28. ப₄க₃வத்₃விஷயம் 5—10 ப்ரவேசம். அங்ஙனன்றிக்கே, "ஸர்வேஶ்வரன் க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம் பண்ணித் திருவாய்ப்பாடியிலே வளர்ந்தருளாநின்றான்" என்று கேட்டு, 'அங்கே யதா₂மநோரத₂ம் நமக்குக் கலந்து பரிமாறலாம்' என்று தெற்குத் திருவாசலாலே சென்றுபுக, இப்போது இங்ஙனே வடக்குத் திருவாசலாலே புறப்பட்டுத் தன்னுடைச் சோதியேற எழுந்தருளினானென்று கேட்டு விழுந்து கிடந்து கூப்பிடுகிறாரென்று பிள்ளான் பணிக்கும் என்றருளிச்செய்வர்.

29. ப₄க₃வத்₃விஷயம் 5—10—2. (அதுவிதுவுது இத்யாதி₃) இத்தால் சொல்லிற்றாயிற்று—இப்பாட்டில் மூன்றர்த்த₂ம் சொல்லாநின்றது; அதாவது—அநுகூல ஸம்ஶ்லேஷமும் ப்ரதிகூல நிரஸநமும் மத்₄யஸ்த₂ரக்ஷணமுமான இவற்றை அதுவிதுவுது என்கிறது என்னும் பிள்ளான்.

30. ப₄க₃வத்₃விஷயம் 6—3 ப்ரவேசம். "இப்படி தாழ நின்றவன் ஸர்வேஶ்வரன்" என்கிறார் என்று பிள்ளான் பணிக்கும் என்றருளிச்செய்வர்.

31. ப₄க₃வத்₃விஷயம் 6—4—8. (அப்பன் தன் மாயங்களே காணும் நெஞ்சுடையேன்) * முடியானேயிற் கரணங்களையுடைய ஆழ்வாராகையாலே நெஞ்சுதானே நினைக்கவும்வற்றாய்க் காணவும் வற்றாயிருக்கும் என்று பிள்ளான் பணிக்கும் என்றருளிச் செய்வர். அத₂வா கட்கண் என்றும், உட்கண் என்றும் சொல்லுகிறபடியே நெஞ்சுதன்னையும் கண்ணாகச் சொல்லக்கடவதிறே; அதாகவுமாம்.

32. ப₄க₃வத்₃விஷயம் 6-8 ப்ரவேசம். செல்ல வைத்தனளே என்றது செல்லுகையிலே ஒருப்பட்டாளென்றதாய் முட்டப் போகாமல் கிடந்து ஐகரஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள் என்று பட்டர். பல பாட்டுக்களிலும் "இதுவோ தக்கவாறு" என்கையாலே ஆத்ருஶம்ஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள் என்று பிள்ளான் பணிக்கும்படி. "பு₄ஞ்ஜாநா ஶமாநுஷாந் போ₄கா₃ந் ஸர்வகாமஸம்ருத்₃தி₄நீ, ஸமா த்₃வாத₃ஶ தத்ராஹம்" என்கிறபடியே பன்னிரண்டாண்டு தண்ணீர்த் துரும்பறக்கலந்து பிரிந்த பிராட்டியைப்போலே அங்கே நெடுங்காலம் அவனையநுப₄வித்துப் பிரிந்து தூதுவிடுகிறாள் என்று பிள்ளான். புறப்பட்டவள் முடியப் போகமாட்டாதே நக₃ரோபவனத்திலே கிடந்து தூதுவிடுகிறாள் என்று பட்டரருளிச்செய்யும்படி.

33. ப₄க₃வத்₃விஷயம் 6—8—2. (மெய்யமர்காதல்) "தம்மைப் போலே பொய்யுமாய் நிலைநில்லாத காதலன்று எங்களது என்று சொல்லுங்கோள்" என்று பிள்ளான் பணிக்கும். அன்றிக்கே மெய் யமர் காதல்-ஆத்மாநுப₃ந்தி₄யான காதல்; மெய்யென்று ஆத்மா வாய், ஆத்மாவோடே பொருந்தினகாதல் என்றுமாம். (இது இரு பத்து நாலாயிரத்திலும் உள்ளது)

34. ப₄க₃வத்₃விஷயம் 6—9—9. (தடந்தாமரைகட்கே) பிள் ளானுடைய அந்திம த₃ஶையிலே நஞ்சீயர் நோவறியப்புக்கிருக்க *கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ* என்று பலகால் சொல்ல, இத்தைக்கேட்டு ஜீயர் அழ. 'ஜீயரே! நீர்கிடந்தழுகிற தென்? அங்குப்போய்ப் பெறப் புகுகிற பேறு இதிலும் தண்ணிது என்று தோன்றியிருந்ததோ?' என்று பணித்தான்.

35. ப₄க₃வத்₃விஷயம்7—1—1. (எண்ணிலாப் பெருமாயனே) "அஸ்மாந் மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத்" என்றும், "மம மாயா து₃ரத்யயா" என்றும் சொல்லுகிறபடியே எண்ணிறந்த செயல் களைச் செய்யவற்றாய் நீ வேண்டாதாரைச் சிறையிட்டு நலியக்கட வதான ப்ரக்ருதியைப் பரிகரமாகவுடையவனே! என்று பிள்ளான் பணிக்கும்படி.

36. ப₄க₃வத்₃விஷயம் 7—2—7. "ஆஶ்ரிதரை வாழ்விக்கை யும் அநாஶ்ரிதரை நலிகையுமன்றிக்கே இப்போது விபரீதமாயிற்றே உம்முடைய படி" என்கிறாள் என்று பிள்ளான்.

37. ப₄க₃வத்₃விஷயம் 7—8 ப்ரவேசம். அங்ஙனன்றிக்கே பிள்ளான் பணிக்கும்படி—(முகில் வண்ணனடியே இவளணுகி யடைந்தனள் என்றதாகையாலே) * ஸமா த்₄வாத₃ஶ தத்ராஹம்* என்கிறபடியே பெரியபெருமாளோடே சிரகாலம் உந்மஸ்தகரஸ மான ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய், பிரிந்து கூடாவிடில் இரண்டு தலைக்கும் அழிவுவருமளவாச்சுதாய், இனியெல்லாவளவிலும் ஒரு நீராகக் கலக்கிறது த₄ர்மியிரண்டும் கூடியிறே. ஆகையாலே பிரியாவிடில் த₄ர்மிலோபபர்யந்தமாகப் புக,இவ்வளவில் நாயகனை இவன் இரண்டு தலையும் ஜீவிக்கப் பார்ப்பானொருவனாகையாலே பிரிவை ப்ரஸங்கிக்க இவளும் விஶ்லேஷத்தில் வாஸநை யில்லாதாளொருத்தியாகையாலே, 'இதுதானும் கலவி யிலே யொருவகையோ' என்றுகொண்டு அனுமதி பண்ண; அவனும் அவ்வேட்டை நிமித்தமாகப் புறப்பட இவ ளும் திருவணுக்கன் திருவாசலளவும் ஒருப்படுத்தி மீள; எல்லா வளவிலும் பிரிவு தன் காரியம் செய்தன்றி நில்லாதிறே. அநந்த ரம் இவள் நோவுபட, இத்தைக்கண்ட தோழிமாரும் தாய்மாரும்

உனக்கோடுகிறதென்? என்று கேட்க; 'ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் காட்டிலே கூடப்போய் அவரிருந்தவிடம் நின்றவிடம் உலாவின விடந்தோறும் கூடவிருந்து அநுப₄வித்தாப்போலே நானும் அவனிருந்தவிடத்தேபோய்ப் புக்கல்லது நில்லேன்' என்ன; 'உனக்கு இது தலைமைக்குப் போராது; நீ சொல்லுகிறவை வார்த்தையன்று' என்ன; அவர்களை 'நீங்கள் நிரோதி₄க்கிறத்தால் பெற்றதென்? நான் போகை தவிரேன்; நீங்களே என்னைக் கொடுபோய் விடுங்கோள்' என்ன; அவர்கள் 'அதுக்கு நாங்கள் வழிப்படோம்' என்ன; ஆகில், நானேயாகிலும் போகை தவிரேனென்கிருள் என்று.

38. ப₄க₃வத்₃விஷயம் 7–3–1 எம்பார்வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 65 காண்க. (இவ்வைதிஹ்யம் சில பதவேறுபாடுகளுடன் 5–5–7 ஈட்டிலும் உள்ளது)

39 ப₄க₃வத்₃விஷயம் 7–8–2. (அங்கண்மலரித்யாதி₃) கீழ்த்திருவாய்மொழியிலே *விள்கின்ற பூந்தண்டுழாய் விரைநாற வந்து* என்று சொன்னத்தை ஸ்மரிக்கிருர் என்று பிள்ளான் பணிக்கும்,

40. ப₄க₃வத்₃விஷயம் 7–8–4. (கள்ளவிழித்யாதி₃) கீழில் திருவாய்மொழியிலே * சூழவுந்தாமரை நாண்மலர் போல் வந்து தோன்றும் என்றத்தை ஸ்மரிக்கிருர் என்று பிள்ளான் பணிக்கும்; அத்தை ஜீயர் கேட்டருளி, கீழோடுகிற ரீதியின்படியே இதுவுமாகப் பெற்றதாகில் அழகிது; அங்ஙனன்றிக்கே இது ரஸாந்தரமாய் அறிவுண்டானபின்பு ப்ரகரணத்தோடு பொருந்தமாட்டாது என்று அருளிச்செய்தாராம்.

41. ப₄க₃வத்₃விஷயம் 7–8–7. (சுடர்நீண்முடியாய்) *முற்றவிம்மூவுலகும் விரிகின்ற சுடர்முடிக்கே யொற்றுமை கொண்டது* என்றது பின்னுட்டுகிறது என்று பிள்ளான்.

42. ப₄க₃வத்₃விஷயம் 7–9–9. (தன்னை உறப்பல இன்கவி சொன்ன) என்றதுக்கு ஜீயரருளிச்செய்யும்படி — "(யதோ வாசோ நிவர்த்தந்தே) என்று வேத₃ங்கள் மீண்ட விஷயத்தை மறுபாடுறுருவச்சொன்ன" என்று. அன்றிக்கே பிள்ளான் பணிக்கும்படி "ஸர்வேஶ்வரனுக்கு சாலவுற்றதென்கிருர்" என்று.

43. ப₄க₃வத்₃விஷயம் 7–10–10. இதுதான் ஒருக்திமாத்ரமாய் உம்முடைய நெஞ்சு பரமபத₃த்தை விரும்பினுலோ என்ன;

அத்தை என் நினைவுக்கு வாய்த்ததலையிலேயிருக்கிற ஸர்வேஶ்வ ரனைக் கேட்டுக்கொள்வது என்று இங்ஙனே அருளிச்செய்வர் ஜீயர்; அன்றிக்கே, பிள்ளான் "நீர் திருவாறன்விளையே ப்ராப்யம் என்றிருக்கிறீர்; ஈஶ்வரன் ஸ்வதந்த்ரனன்றோ, அவன் பரமபதத்தைத் தரிலோ என்ன; அவன் ஸர்வஜ்ஞனன்றோ; அறியானோ வென்கிறார்" என்று.

44. பகவத்விஷயம் 8—1—6. (இன்னேயானால் எங்கு வந்துறுகோ) 'மங்கிய அருவாம் நேர்ப்பம்' என்று பத்தஸமஷ்டி என்றும், வான்புலனிறந்ததென்று முக்தஸ்வரூபத்தைச் சொல்லு கிறது என்றும் பிள்ளான். அப்போது அஸத்ஸமமாய் ஸூக்ஷ்ம மான ஆத்மஸமஷ்டியென்றும், பரமபதத்திலேயாய் அதீந்த்ரிய மான முக்தாத்ம ஸ்வரூபமென்றும் நிர்வாஹம்.

45. பகவத்விஷயம் 8-5-2 (நன்றாடு) பிள்ளான் 'எம்பெரு மானைப்பெற்று அநுபவிக்கும் நாடுகாண்' என்னுமாம்; இல்லை யாகில் கூப்பிடார்களோ என்று.

46. பகவத்விஷயம் 8-7-1. (அழைத்தேற்கு) "இவன் ப்ரணயித்வத்தையறியாதே தாழ்த்தானாகவும், நாம் அபிநிவிஷ் டராகவும் நினைத்துக்கூப்பிட்டு என்ன கார்யஞ் செய்தோமென் கிறார்காண்" என்னும் பிள்ளான்.

47. பகவத்விஷயம் 9-5-3. (தவஞ்செய்திலா) அவனைப் போலே பிரிவுக்குச் சிளையாதபடி பாக்யத்தைப் பண்ணப்பெற் றிலேன் என்று பிள்ளான் பணிக்கும்.

48. பகவத்விஷயம் 9-8-8. (தென்திருநாவாயென்தேவே தெருளேதரு) என்று க்ரியை; அன்றிக்கே "'மருளேயின்றியுன்னை எந்நெஞ்சத்திருத்தும் தெருளேதரு தென் திருநாவாயென் தேவே அருளாதொழிவாய் அருள்செய்தடியேனைப் பொருளாக்கியுன் பொன்னடிக்கீழ் புகவைப்பாய்' திருவுள்ளமானபடி செய்" என்றும் பிள்ளான் பணிப்பது.

49. பகவத்விஷயம் 10-4 ப்ரவேசம். பிள்ளான் ஓருருவிலே "'நீ பசுமேய்க்கப் போகவேண்டா' என்றாள். 'ஆகில் தவிர்ந்தேன்' என்றான். இவன்தனை ஸௌலபனில்லை கிடீர்; இவன் பக்திலப் யனென்னுமிடம் நிஶ்சிதமென்கிறார்" என்று பணித்தான்.

50. இருபத்து நாலாயிரம் 1-4-6. (அருளாத நீர்) "அவள் பக்கல் அருளக்கடவோமல்லோம்" என்று ஸங்கல்பித்திருக்கிறு நீர். "மயர்வற மதிநலமருளினன்" என்று ஓரடி போகமாட்டாதே நெஞ்சுருகின இவர், 'அருளாத நீர்' என்னும்போதைக்கு என்ன அபஸ்மார விஶேஷம்? அறிகிலோம்" என்று பிள்ளான் 'அருளாத நீர் என்று திருநாமம் சாற்றுகிருன்' என்று சீயர்.

51. இருபத்துநாலாயிரம் 2-4-5. (என) "என்னெஞ்சினை எங்கே போயிற்று?" என்னும் பிள்ளான்.

52. இருபத்துநாலாயிரம் 5-3-5. (அவனென்றே கிடக்கும்) "இத்தோ₃ஷங்களை உடையவனன்றோ என்று தத்ஸம்ப₃ந்த₄த்தாலே மேல் விழாநிற்கும்" என்று பிள்ளான். (இதன் விவரணம் ஐதிஹ்ய நிர்வாகம் 23ல் காண்க.)

53. ஸ்ரீவசனபூஷணம் 122. திருக்குருகைப் பிரான் பிள்ளான் பணிக்கும்படி—"மதி₃ரா பி₃ந்து₃மிஶ்ரமான ஶாதகும்ப₄மய கும்ப₄க₃த தீர்த்த₂ ஸலிலம் போலே, அஹங்கார மிஶ்ரமான உபாயாந்தரம்"

54 ஸ்ரீவசநபூஷணம் 178. 'தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே, அவனால் வரும் நன்மை முலைப்பால் போலே' — என்று பிள்ளான் வார்த்தை.

55. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 1. ப₄க₃வதா₃ஶ்ரயணத்துக்கு முன்பு காளராத்ரி, பின்பு ஸுப்ரபா₄தம். தாய்மடியிலே கிடந்துறங்குகிற ப்ரஜை ஸ்வப்னத்திலே புலியின்கையிலே அகப்பட்டு க்லேஶித்துக் கூப்பிடுமாபோலே எம்பெருமானை உணராத த₃ஶை. தாய்மடியிலே கிடந்துறங்குகிற ப்ரஜை கண்விழித்துத் தாய் முக₂த்தைப்பார்த்து நிர்ப₄யமாயிருக்குமாபோலே எம்பெருமானை உணர்ந்த த₃ஶை என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர்.

56. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 2. ஆசார்யபத₃மென்று தனியே ஒன்றுண்டு அது உள்ளது எம்பெருமானுருக்கு என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர்.

57. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 3. "தான் தனக்குப் பார்க்கும் நன்மை காலன் கொண்டு மோதிரமிடுமாபோலே;

எம்பெருமானாலே வரும் நன்மை மாதாபிதாக்கள் பொன்பூட்டு மாப்போலே, தான் தனக்குப் பார்க்கும் நன்மை ஸ்தனந்த₄ய ப்ரஜையைத் தாய் மடியினின்று பறித்து க₂ாதுகனுன ஆட்டு வாணியன் கையிலே கொடுக்குமாபோலே" என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர்.

58. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 3. "பதிவ்ரதையானவள் ராத்ரி தன் ப₄ர்த்தாவோடே ஸம்ஶ்லேஷித்து விடிந்தவாறே கூலி தரவேணுமென்று வழக்குப் பேசுமா போலே ப₄க்தியை உபாயமாக்கிக் கொள்ளுகை" என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர்.

59. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 3. "ப₄க்தி ஆனைத்தொழிலோபாதி. ப்ரபத்தி எலுமிச்சம் பழம் கொடுத்து ராஜ்யம் கொள்ளுமோபாதி" என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர்.

60. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 3. "தாய் முலைப்பாலுக்குக் கூலிகொடுக்குமாபோலேயாகையாலே கொடுக்கைக்கு ப்ராப்தியில்லை கொடுக்கைக்கு ப்ராப்தியில்லாதாப் போலே பறிக்கவும் ப்ராப்தியில்லை. பறிக்கையாவது ப்₄ரமிக்கை. கொடுக்கையாவது ப்₄ரமம் தீருகை" என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர்.

61 ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 4. "கரைகட்டாக்காவேரி போலே ப₄க₃வத்₃ கு₃ணங்கள்" என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர்.

62. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 4. அங்ஙனன்றியே, உபாஸகர்க்கு ஶுபா₄ஶ்ரயமான விக்₃ரஹத்தோடே ஹ்ருத₃ய புண்டரீகத்திலே நிற்பதொரு ஆகாரமுண்டு. அர்ச்சாவதாரங்கள் கோயில் திருமலைகள் தொடக்கமான ப்ராப்யஸ்த₂லங்கள். நாடழியாநிற்க மேல்நிலமாகிற நீணிலாமுற்றத்திலே இனிய சந்த₃னகுஸுமதாம்பூ₃லாதி₃களாலே அலங்கரித்து சத்ரசாமராதி₃கள் பணிமாற அத்தேசவாஸிகளுக்கு முகம் கொடுத்து த்ரிபு₄வனசக்ரவர்த்தியென்று விருது பிடிக்குமாபோலவும், பயிர் உலராநிற்க கடலிலே வர்ஷிக்கும் காளமேக₄ம் போலவும், த்ருஷார்த்தன் நாக்கு வற்றிச் சாவாநிற்க மத்ஸ்யத்துக்குத் தண்ணீர்வார்க்கும் தா₄ர்மிகனைப்போலவும் பரத்வத்திலிருப்பு. பரமோதா₃ரனாயிருப்பானொரு தா₄ர்மிகன் ஒரு க்₃ராமத்துக்குக் கொடுத்த த்₃ரவ்யத்தை நாலு க்₃ராமணிகள் வாங்கி விப₄ஜித்துக் கொள்ளுமோபாதி க்ஷீரவ்யூஹமான

க்ஷீராப்3தி4; கு3ண ஹீன ப்ரஜைகளைத் தள்ளி கு3ணவான்களைக் கைக்கொள்ளும் பிதாவோபாதியுமா, மண்டலவர்ஷப்போலவும் அவதாரங்கள். நாம் அழிக்க நினைத்தாலும் அழியாதபடி நம்மையும் தன்னையும் நோக்கிக் கொண்டு நாமாக நினைத்தவன்று அதுக்கானவிடத்திலே முகம் காட்டியும் பித்தர் கழுத்திலே சுனிக்கியிட்டுக் கொண்டால் பின்னே நின்று அறுத்துவிடும் மாதாவைப் போலவும், மதம்பட்ட ஆனை கொல்லப்புக்கால் அதின் கழுத்திலே இருந்த பாகன் அதன் செவியையிட்டு அதன் கண்ணை மறைக்குமாபோலவும், இராமடமூட்டுவாரைப் போலவும், உணரில் கையைக்கடிக்குமென்று உறக்கத்தில் பாலுஞ்சோறும் பு4ஜிப்பிக்கும் மாதாவைப்போலவும் அந்தர்யாமித்வம். ராஜமஹிஷி தன் ப4ர்த்தாவினுடைய பூம்படுக்கையிற் காட்டில் ப்ரஜையினுடைய தொட்டிற்காற்கடை பே4ாக்3யமாக வந்து கிடக்குமாபோலவும் கோயில் திருமலை பெருமாள் கோவில் தொடக்கமான அர்ச்சாஸ்த்த2லங்கள். முத்துத்துறையிலே குடில்கட்டிக்கிடக்கிற கர்ஷகனைப் போலவும், க்3ராமாதி4தே3வதையும் க்3ருஹார்ச்சனையுமென்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர்.

63. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 4. ஸம்ப3ந்த4ம் ஸம்பாத்3யமன்று, தடைவிடுகை ஸம்பாத்3யம் என்று பிள்ளான் பணிக்கும்.

64. ரஹஸ்யத்ரயஸாரம் - சரமஶ்லோகாதி4காரம். இப்படி ப4க்த்யாதி3கள் போலவே ஶரணாக3திதர்மமும் கர்த்தவ்யமாக விதி4க்கப்படுகையால், "தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே; ஈஶ்வரனால் வரும் நன்மை முலைப்பால்போலே" என்று பிள்ளான் வார்த்தைக்கு ப4க்திப்ரபத்த்யாதி3கள் எல்லாம் அவனாலே வருகிறன என்று நினைக்கவேண்டும் என்று தன்னுடைய பராதீ4நகர்த்ருத்வத்திலே தாத்பர்யம்.

65. ரஹஸ்யத்ரயஸாரம் - சரமஶ்லோகாதி4காரம்.

மத்3யோபஹத பாத்ரஸ்த2 தீர்த்த2த்3ருஷ்டாந்தவர்ணநம் ||
அஹங்காராந்வயே து ஸ்யாத் ப்ரபத்தாவபி ப4க்திவத் ||

["மதி3ராபி3ந்து3மிஶ்ரமான ஶாதகும்ப4மய கும்ப4க3த தீர்த்த2 ஸலிலம் போலே அஹங்காரமிஶ்ரமான உபாயாந்தரம்" என்று பிள்ளான் கள்ளில் ஒருதுளி கலந்த தீர்த்தத்தை ப4க்தி முதலான உபாயாந்தரங்களுக்கு த்3ருஷ்டாந்தமாக்கிச் சொல்லிய குற்றம் அஹங்காரம் கலந்திருந்தால் ப்ரபத்திக்கும் உண்டாகும்.]

66. ஸ்ரீவசநபூஷணம் 122 (ஐ நி 58) மாமுனிகள் வ்யாக்யானம். அவ:— இப்படி ஸ்வரூப நாஶகமான உபாயாந்தரத்தினுடைய அத்யந்த நிஷித்$_3$த$_4$த்வத்தை அபி$_4$யுக்த வசநத்தாலே த$_3$ர்ஶிப்பிக்கிறார்--(திருக்குருகைப்பிரான்பிள்ளான் என்று தொடங்கி)

திருக்குருகைப்பிரான்பிள்ளான் பணிக்கும்படி - மதி$_3$ரா பி$_3$ந்து$_3$ மிஶ்ரமான ஶாதகும்ப$_4$மய கும்ப$_4$க$_3$த தீர்த்த$_2$ ஸலிலம் போலே அஹங்கார மிஶ்ரமான உபாயாந்தரம்.

திருக்குருகைப்பிரான் பிள்ளானுகிறார் - ஸர்வஜ்ஞரான ப$_4$ாஷ்யகாரர் திருவடிகளிலே ஸேவித்து தத$_3$பி$_4$மத விஷயமாய், ஸகலஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்து அறுதியிட்டிருக்குமவராகையாலே, ஆப்ததமராயிருக்குமவரிறே. (பணிக்கும்படி) என்றது - அருளிச்செய்யும் ப்ரகாரமென்றபடி (மதிரையானது) -அத்யந்த நிஷித்$_3$த$_4$த்$_3$ரவ்யமாய் ஸ்வஸ்பர்ஶ லேஶமுள்ள வஸ்துக்களையும் தன்னைப்போலே நிஷித்$_3$த$_4$மாக்குமதிறே; இத்தை அஹங்காரத்துக்கு த்$_3$ருஷ்டாந்தமாக்குகையாலே - அதினுடைய அத்யந்த நிஷித்$_3$த$_4$த்வமும், தத்ஸ்பர்ஶலேஶமுள்ள வஸ்துவும் தத்$_3$வத் நிஷித்$_3$த$_4$மென்னுமிடமும் தோற்றுகிறது. (ஶாதகும்ப$_4$மானது)-ஸுவர்ணம். (தந்மய கும்ப$_4$ம்) என்றது - உள்ளு த்$_3$ரவ்யாந்தரமாய் ஸுவர்ணம் மேல்பூச்சாயிருக்கையன்றிக்கே, அதுதானே உபாத$_3$ாநமாகப் பண்ணின குடமென்றபடி; இத்தால் - பாத்ரஶுத்$_3$தி$_4$ சொல்லுகிறது. (தத்$_3$க$_3$த தீர்த்த$_2$ ஸலிலம்) என்கையாலே -அதுக்குள்ளிருக்கிற ஜலத்தின் பாவநத்வம் சொல்லுகிறது (அதுபோலே அஹங்கார மிஶ்ரமான உபாயாந்தரம்) என்கையாலே-இங்கும் பாத்ர ஶுத்$_3$தி$_4$யும் தத்$_3$க$_3$த பதா$_3$ர்த்த$_2$ ஶுத்$_3$தி$_4$யும் சொல்லவேணும். அதாவது "ஆத்மா ஜ்ஞாந மயோऽமல:" என்கிற ஸ்வதோ நிர்மலதையாலும் ப$_4$க$_3$வத$_3$நந்யார்ஹஶேஷதையாலும் பரிஶுத்$_3$த$_4$மாயிறே ப$_4$க்த்யாஶ்ரயமான ஆத்மவஸ்துவிருப்பது; தத்$_3$க$_3$த ப$_4$க்தியும் ப$_4$க$_3$வதே$_3$கா க்$_3$ரதயா பரிஶுத்$_3$தை$_4$யிறே; அஹங்காரம் கலசிற்றில்லையாகில் ஒரு குறையில்லையே. ஆக, இத்தால் சொல்லிற்றாய்த்தது என்னென்னில்; ஸுவர்ணபாத்ர க$_3$தமான தீர்த்த$_2$ஜலம் பாத்ர ஶுத்$_3$தி$_4$யுமுண்டாய்த் தானும் பரிஶுத்$_3$த$_4$மாயிருக்க, ஸுராபி$_3$ந்து$_3$ மிஶ்ரதையாலே நிஷித்$_3$த$_4$மாமாப்போலே, ஸ்வதோ நிர்மலத்வாதி$_3$களாலே பரிஶுத்$_3$த$_4$மான ஆத்மவஸ்து க$_3$தையாய் ப$_4$க$_3$வதே$_3$க விஷயதயா பரிஶுத்$_3$தை$_4$யாயிருக்கிற ப$_4$க்திதான், ஸ்வயத்ந மூலமான அஹங்கார ஸ்பர்ஶத்தாலே ஜ்ஞாநிகள் அங்கீ$_3$கரியாதபடி நிஷித்$_3$தை$_4$யா யிருக்குமென்றதாய்த்து. (பணிக்கும்படி) என்றத்

துக்குச் சேர, வாக்யத்தின் முடிவிலே, என்று என்கிறவித்தனை யும் கூட்டி நிர்வஹிப்பது.

67. ஸ்ரீவசநபூஷணம் 177 (ஐ நி 54) மாமுனிகள் வ்யாக் யானம். அவ:— ஆக, (நன்மைதானே தீமையாய்த்து) [145] என்றும், (தனக்குத்தான் தேடும் நன்மை தீமையோபாதி விலக்கா யிருக்கும்) [160] என்றும், தோ₃ஷ நிவ்ருத்திதானே தோ₃ஷமா மிறே) [176] என்றும் தான் தனக்குத் தேடும் நன்மை ஹேயமென் னுமிடம் சொல்லுகையாலே, அவன் தேடும் நன்மையே உபாதே₃ய மென்னுமிடம் ப₂லித்ததிறே; இப்படி தான் தனக்குத் தேடும் நன்மை ஹேயம், அவன் தேடும் நன்மை உபாதேயமென்னும் இடத்தை ஆப்த வசநத்தாலே த₃ர்ஶிப்பிக்கிறார் மேல் (தன்னால் என்று தொடங்கி)

"தன்னால் வரும் நன்மை விலைப்பால்போலே, அவனால் வரும் நன்மை முலைப்பால்போலே" என்று பிள் ளான் வார்த்தை.

(தன்னால் வரும் நன்மையாவது) - ஸ்வயத்நத் தாலே தான் தனக்குண்டாக்கிக்கொள்ளும் நன்மை. (விலைப்பால் போலே) என்றது-ஔபாதி₄கமுமாய் விரஸமுமாய் அப்ராப்தமு மாயிருக்குமென்கை, (அவனால் வரும் நன்மையாவது) - நிருபாதி₄க ஸ்வாமியான அவன்றானே இவனுக்கிது வேணும் என்றுண்டாக்கும் நன்மை, (முலைப்பால்போலே) என்றது-நிருபாதி₄கமுமாய், ஸரஸ முமாய், ப்ராப்தமுமாயிருக்குமென்கை.

68. உபதேசரத்தினமாலை.

பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை
தெள்ளார் வடக்குத் திருவீதிப்—பிள்ளை
மணவாளயோகி திருவாய்மொழியைக்காத்த
குணவாளரென்று நெஞ்சே கூறு. 39.

முந்துறவே பிள்ளான் முதலானோர் செய்தருளும்
அந்த வியாக்கியைகளன்றாகில் — அந்தோ
திருவாய்மொழிப் பொருளைத் தேர்ந்துரைக்கவல்ல
குருவார் இக்காலம் நெஞ்சே கூறு. 40.

தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப்பிரான்
பிள்ளான் எதிராசர் பேரருளால்—உள்ளாரும்
அன்புடனே மாறன் மறைப் பொருளை யன்றுரைத்தது
இன்பமிகுமாறாயிரம். 41.

69. ப்ரமேயரத்னம் அருளிய யாமுநாசார்யர் அருளிய தத்வ பூஷணத்தில் த்வயவைபவம். ஆகையால் இப்படி வாக்ய த்3வ யாத்மகமாயிருக்கிறது. ஶ்ரிய:பதி உபேயங்களுக்கு அவதி4யா யிருக்குமோபாதி இது உபாயங்களுக்கு அவதி4யாயிருக்கும். அவன் ஜ்ஞான ஶக்த்யாதி3 ஷட்3கு3ணங்களையும் உடையவனாயிருக்குமோ பாதிஇதுவும் கார்ப்பண்யாதி3 ஷட்3ங்க3த்தையும் உடைத்தாயிருக் கும். அவன் தே3வகிபுத்ரரத்னமாயிருக்குமோபாதிஇதுவும்மந்த்ரரத்ன மாயிருக்கும். இம்மந்த்ரந்தான் ஸ்ரீமந்நாத2முனிகள், உய்யக்கொண் டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார் என்று சொல்லுகிற பரமா சார்யர்களுடைய நெஞ்சாகிற செப்பிலே வைத்துச் சேமிக்கப் பட்டிருக்கும். "அர்த்தே2ா விஷ்ணு:" என்று சொல்லப்படுகிற அர்த்த2வான்களுக்குக் காட்டக் கடவதாய் அறப்பெருவிலைய தாயிருக்கும், ஸர்வோபாய த3ரித்3ரருக்கு ஸர்வஸ்வமாயிருக்கும். இந்த உபாயம் அஜ்ஞருக்கும் அசக்தருக்கும் வைத்த தண்ணீர்ப் பந்தலாயிருக்கும். ஆசார்யன் ப்ரமாதா என்றும், அர்ச்சாவதாரம் ப்ரமேயமென்றும் த்3வயம் ப்ரமாணம் என்றும் அருளிச்செய்வர் உய்யக்கொண்டார். இது ஸம்ஸாரவிஷத3ஷ்டனுக்கு ரஸாயனமா யிருக்கும் என்று அருளிச்செய்வர் மணக்கால் நம்பி. அந்த4னுக்கு மஹாநிதி4போலே இருக்குமென்று அருளிச்செய்வர் பெரிய முதலி யார். க்ஷுத4ார்த்தனுக்கு அம்ருதபானம்போலே இருக்குமென்று அருளிச்செய்வர் திருமாலையாண்டான். ஸ்தனந்த4யப்ரஜைக்கு ஸ்தன்யம்போலே இருக்குமென்று அருளிச்செய்வர் திருக்கோட்டியூர் நம்பி. ராஜகுமாரனுக்கு முடியும் மாலையும்போலே ப்ரபந்நனுக்கு த்3வயோச்சாரணம் என்று அருளிச்செய்வர் ப4ாஷ்யகாரர். ஸம்ஸாரத் தில் இந்த உபாய விசேஷம் விலங்கிடப்பட்டவன் தலையிலே முடியை வைத்தாப்போலே என்றருளிச்செய்வர் எம்பார். வாச்யங் களில் எம்பெருமானுக்கு அவ்வருகில்லாதாப்போலே, வாசகங் களில் ப்ரபத்தியிற் காட்டில் அவ்வருகில்லை என்று அருளிச் செய்வர் நஞ்சீயர். ராஜகுமாரனுக்குக் கர்ப்பூரநிகரம்போலே இவ னுக்கு ப்ரபத்தியை விடில் நாக்குவற்றும் என்றருளிச்செய்வர் நம்பிள்ளை. எலுமிச்சம்பழம் கொடுத்து ராஜ்யம் பெறுவாரோபாதி என்று பணிக்கும் திருக்குருகைப்பிரான் பிள்ளான். கு3ருபரம்பரை யையொழிந்த ப்ரபத்தியும் ஸாத4நாந்தரங்களோடொக்கும் என்று நிர்வஹிப்பர் முதலியாண்டான். பிறவி மிடியன் கையில் சிந்தாமணி புகுந்தாற்போலே என்று நிர்வஹிப்பர் பிள்ளையுறங்காவில்லி தாஸர். (இது பெரும்பாலும் வார்த்தாமாலை 136ல் உள்ளது.)

70. ராமானுஜார்ய திவ்யசரிதை. இவரும் 'வகுளத4வளமாலா'' என்று தொடங்கி 'சக்ரஹஸ்தேப4சக்ரம்' என்று அநுஸந்தித்துக் கொண்டு நிற்கிறவளவிலே, உடையவரும் ''அவர் செய்தருளின மஹோபகாரத்துக்கு அவர் திருநாமம் சாத்துகைக்கர்ஹமான ஒருவர் வேணும்'' என்று தத3நுகு3ணமான அதி4காரிகளை ஆராய்ந்து போருமிடத்து அப்போது அவருக்குப் பிள்ளையாம்படி பிள்ளான் திருவடிகளிலே ஸேவித்து ''அடியேனை அப்படி விநியோக3ம் கொண்டருள'' என்று விண்ணப்பஞ்செய்ய, உகந்தருளி ''திருக்குருகைப்பிரான் பிள்ளான்'' என்று திருநாமம் சாத்தியருளி, ''ஆழ்வார் திருநாமத்தோடே திருக்கோட்டியூர் நம்பி திருநாமமுங் கூடப்பெற்றதே'' என்று உகந்தருளினார். நம்பிக்குத் ''திருக்குருகைப்பிரான்'' என்றய்த்துத் திருநாமம். இப்படியான திருநாமமுடைய இவரை அன்று தொடங்கி, ஆசார்ய குமாரராக கௌ3ரவித்து ப்ரதிபத்தி பண்ணிக் கொண்டு போருவர்களாய்த்து முத3லிகளெல்லாரும்.

அநந்தரம் ''சடகோபனைச் சிந்தையுள்ளே பெய்தற்கிசையும் பெரியவர்'' என்னும்படி வைத்துக்கொண்டு புறப்பட்டருளி அவருக்கு உத்3தே3ஶ்யரான ஆதிப்பிரான் ஸந்நிதியிலே எழுந்தருளி ஸேவித்து ''ஶ்ரிய:காந்தோநந்தோ பரகு3ணகு3ணைகாஸ்பத3வபுர் ஹதாமேஶாவத்3ய: பரமக2பதே3ர் வாங்மநஸயோ:| அபூ4மிர்பூ4மிர் யோநதஜநத்3ருஶாமாதிபுருஷோமநஸ்தத்பாத3ாப்3ஜே பரிசரண ஸக்தாப4வதுமே||'' என்று ஒன்றுந்தேவுந்தொடங்கிப்பத்துப் பத்தாகப்பரேசத்வத்தைப்பொலியும்படி பொலிந்துநின்ற பிரானிடத்திலே ஸ்த2ாபித்து இத்திருவாய்மொழி முகே2ந பாமரரெல்லாருந் திருந்தி த3ர்ஶனத்திலே பிரவேசிக்கும்படி மேலும் செய்தருளுவதாகப் பராமர்சியா நிற்கிற தசையிலே பரம சேஷியானவனும் அப்படி நடத்தும்படிக்குத் திருவுள்ளமாய்த் தீர்த்தம், திருமாலை, திருப்பரியட்டம் சடகோபன் முத3லான வரிசைகளையும் ப்ரஸாதி3க்க ஸ்வீகரித்து,

71. ராமானுஜார்ய திவ்யசரிதை. விசேஷித்து ஆழ்வார் திருநாமத்தையுடையவராய்த் தமக்கு சிஷ்ய புத்ரரான திருக்குருகைப் பிரான் பிள்ளான் மிகவும் அநுவர்த்தித்து (எதிராசர் பேரருளால்) என்னும்படி அருளோடே கூடின அநுமதியுடனே திருவாய்மொழிக்கு ஸ்ரீ விஷ்ணுபுராண ஸங்க்2யையாலே ஆறுயிரம் க்3ரந்த2ம் ஸங்க்2யையாபடி ஒரு வ்யாக்2யானம் செய்தருளினர். ஒன்பதினாயிரம் க்3ரந்த2 ஸங்க்2யையான ஸ்ரீப4ாஷ்யத்துக்கும் அவரே ப்ரவர்த்தகரிறே.

72. ப்ரபந்நாம்ருதம் அத்தியாயம் 53 ஶ்லோகம் 37—40 அதன்பொருள்:- பிள்ளான் மனக்குறை தீர்த்தல்:— அப்போது பெரியதிருமலை நம்பியின் குமாரராய், பிள்ளை திருமலைநம்பி என்று பெயர் பெற்றவராய், பேரறிவாளராய், பேரொளிபடைத்தவரான ஓர் ஶிஷ்யர் அன்போடுவந்து, ஸ்ரீராமானுஜரைவணங்கி, கைகூப்பி நின்றவராய், ''யதிராஜரே! த3ாஸனான அடியேனை தேவரீரது

குமாரனாக ஏற்றுக்கொண்டு மநோரதத்தை நிறைவேற்றிக் கொள்வீராக'' என்று விண்ணப்பித்தார். அந்த வார்த்தையாலே மிகவும் உகந்த யதிராஜர் அவரைத் தம் பிள்ளையாக ஏற்றுக்கொண்டு 'திருக்குருகைப்பிரான் பிள்ளான்' என்னும் திருநாமத்தையும் அவருக்கு அளித்தார்.

73. திருநக்ஷத்திரத் தனியன்.

ஸிம்ஹே ம்ருகஶிரோத்பூதம் ராமாநுஜ பதாஶ்ரிதம் |
த்ராவிடாம்நாய தத்த்வஜ்ஞம் குருகாதிபமாஶ்ரயே ||

[ஆவணியில் மிருகசீர்ஷநக்ஷத்திரத்தில் உதித்தவரும், ஸ்ரீராமாநுஜருடைய திருவடிகளை ஆஶ்ரயித்தவரும், தமிழ் வேதத்தின் உண்மைப் பொருளை அறிந்தவருமான திருக்குருகைப்பிரான் பிள்ளானை ஆஶ்ரயிக்கிறேன்.]

74. பிள்ளான் அருளிய இரண்டாம் திருவந்தாதித் தனியன்

என்பிறவி தீர விறைஞ்சினே னின்னமுதா*
அன்பே தகளி யளித்தானை* — நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேரும்* கடல்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்.

75. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் உள்ளதனியன்கள்.

ய பர்யாப்தகல: க்யாதோ யதிராஜாப்திசந்த்ரமா: |
குஶலம் திஶதாம் மே ஸ ஶௌ ஐ குருகேஶ்வரதேஶிக: ||''

[எவரொருவர் யதிராஜராகிற கடலுக்கு நிறைந்த கலைகளை (1. சாஸ்திரங்களை, 2. சந்திரகலைகளை) உடைய (பூர்ண)' சந்திரனாகப் புகழ்பெற்றிருக்கிறாரோ, குருகேஶ்வரர் என்னும் திருநாமமுடைய ஆசார்யரான அந்தத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் எனக்கு நல்வழியைக் காட்டுவாராக.]

விக்யாதோ யதிஸார்வபௌமஜலதேஶ் சந்த்ரோபமத்வேந ய:
ஸ்ரீபாஷ்யே ச யதந்வயாஸ்ஸுவிதிதாஶ் ஸ்ரீவிஷ்ணு சித்தாதய: |
வ்யாக்யாம் பாஷ்யக்ருதாஜ்ஞயோபநிஷதாம் யோ
த்ராமிடாநாம் வ்யதாத்
பூர்வம் தம் குருகேஶ்வரம் குருவரம் காருண்யபூர்ணம் பஜே ||

[எவரொருவர் யதிராஜராகிற கடலுக்குச் சந்திரனென்று புகழ் பெற்றவரோ, எவருடைய சிஷ்யர்களான ஸ்ரீவிஷ்ணுசித்தரெனும் எங்களாழ்வான் முதலானோர் ஸ்ரீபாஷ்யபாண்டித்யத்தில் மிக்க புகழ் பெற்று விளங்குகின்றனரோ, எவரொருவர் ஸ்ரீபாஷ்யகாரருடைய ஆணையாலேதமிழ்வேதமான திருவாய்மொழிக்குமுதன்முதலில் (ஆருயிரப்படி எனும்) வியாக்கியானமிட்டருளினரோ கருணை நிறைந்தவரான அத்தகைய திருக்குருகைப்பிரான் பிள்ளானை ஶரணடைகிறேன்]

# அருளாளப்பெருமாள் எம்பெருமானார் வைபவம்



அருளாளப்பெருமாள் எம்பெருமானார்
(பாண்டவதூதர் ஸந்நிதி காஞ்சீபுரம்)

ராமாநுஜார்ய ஸச்சி2ஷ்யம் வேத3ஶாஸ்த்ரார்த்த2 ஸம்பத3ம் |
சதுர்த்த2ாஶ்ரம ஸம்பந்நம் தே3வராஜ முநிம் ப4ஜே ||

[எம்பெருமானாருடைய நல்ல சீடராய், வேத3ஶாஸ்த்ரார்த்த2ப் பொருள்களைச் செல்வமாக உடையவராய், ஸந்யாஸாஶ்ரமத்தை உடையவரான தே3வராஜமுனிவர் என்னும் அருளாளப்பெருமாள் எம்பெருமானாரை ஆஶ்ரயிக்கிறேன்.]

இவர் ஸகல ஶாஸ்த்ரங்களும் வல்லவராய், அக்காலத்திலிருந்த அத்3வைதிகளுக்கெல்லாம் தலைவராய் "யஜ்ஞமூர்த்தி" என்ற பெயர் பெற்றிருந்தவர். எம்பெருமானர் இவரோடு பதினெட்டுநாள் வாத3ப்போர் புரிந்து அருளாளப்பெருமாளான 'வரத3ன்' அருளாலே இவரை வெற்றி கொண்டு அக்காரணத்தாலே 'அருளாளப்பெருமாளெம்பெருமானர்'' என்று இவருக்குத் திருநாமமிட்டார். இவருக்குத் தனியாக ஒரு மடமும் அமைத்துக்கொடுத்தார், "எம்பெருமானர் மடம் எங்கே" என்று வெளியூரிலிருந்து வந்த சிலர் கேட்க, "எந்த எம்பெருமானர் மடம்?" என்று உள்ளூரார் சிலர் பதில் கேள்வி கேட்க, இதைக் கேட்டு "ஐயோ! எம்பெருமானருக்குப் போட்டியாக வழங்கும்படி ஆகிவிட்டோமே" என்று மனம் நொந்து, தமது மட2த்தை இடித்துவிட்டு எம்பெருமானர் மட2த்திலேயே வாழத்தொடங்கிய இவரது "ஆசார்யநிஷ்டை2" வியத்தற்குரியது. அநந்தாழ்வான், எச்சான் (யஜ்ஞேசர்), தொண்டனூர்நம்பி, மருதூர்நம்பி ஆகியவர்களை எம்பெருமானர் இவர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கச் செய்தார். இவர் 'ஞானசாரம்' பிரமேயசாரம்' என்னும் அத்3பு4தமான இரு தமிழ்ப் பிரபந்தங்களை அருளிச்செய்தார்' இவற்றுக்கு மணவாளமாமுனிகள் வ்யாக்2யானம் அருளியுள்ளார். "கருமத்தால் ஞானத்தால் காணும் வகையுண்டே தருமத்தாலன்றி இறைதாள்கள்?" [பிரமேயசாரம் 4] "உள்ளபடி உணரில் ஒன்று நமக்குண்டென்று, விள்ள விரகிலதாய்விட்டதே;-கொள்ளக் குறையேதுமில்லார்க்குக் கூறுவதென் சொல்லீர் இறையேது மில்லாத யாம்" [ஷை 6] "சாதகம்போல் நாதன்தனதருளே பார்த்திருத்தல் கோதிலடியார் குணம்" [ஞானசாரம் 2] என்று நிர்ஹேதுகக்ருபையின் பெருமையையும் "அற்றமுரைக்கில் அடைந்தவர்பால் அம்புயைகோன். குற்றமுணர்ந்து இகழும் கொள்கையனே?—எற்றே தன், கன்றின் உடம்பின் வழுவன்றே காதலிப்பது அன்றதனை ஈன்றுகந்த ஆ" [ஷை25] என்று வாத்ஸல்ய லக்ஷணத்தையும் இவர் அருளியிருப்பதையே நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை முதலான பேராசிரியர்கள் பின்பற்றினர்கள் என விளங்குகிறது. இவர் த்3வயவிவரணமாக வடமொழி ஶ்லோக ரூபமான ஒரு க்3ரந்த2ம் அருளியிருக்கிறர் என்று ஸ்ரீ தேசிகன் அருளிய ரஹஸ்யத்ரயஸாரம் த்3வயாதி4காரத்திலிருந்து விளங்குகிறது.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்.

1. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் ஐதிஹ்யநிர்வாஹம் 19 பக்கம் 220 முதல் 224 (2-வது பாரா ஈறுக). காண்க.

2. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் ஐதிஹ்ய நிர்வாஹம் 20 (பக்கம் 232 & 233) காண்க.

3. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம் முதல் பாகம் பக்கம் 291 காண்க.

4. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் உள்ள தனியன்கள்.

"த₃யா பாலநதே₃வாய ஜ்ஞாநஸாரப்ரதா₃யிநே ச |
ப்ரமேயஸாரம் த₃த₃தே நமோऽஸ்து ப்ரேமஶாலிநே ||"

[அருளாளப்பெருமாள் (த₃யாபாலனதே₃வர்) என்னும் திருநாமமுடையவரும், ஞானஸாரம், ப்ரமேயஸாரம் என்னும் கிரந்தங்களை அருளியவரும், அருள் நிரம்பியவருமான முனிவர்க்கு நமஸ்காரம்.]

"யதிராஜ த₃யாபாத்ரம் யதிபங்க்திவிபூ₄ஷணம் |
த₃யாபாலமுநிம் வந்தே₃ தே₃ஶிகாக்₃ரேஸரம் ஸதா₃ ||"

[யதிராஜருடைய கருணைக்கு இருப்பிடமாயுள்ளவரும், யதிகளின் வரிசைக்கு அலங்காரமாயிருப்பவரும், ஆசார்யர்களில் தலைவராயுள்ளவருமான அருளாளப் பெருமாள் எம்பெருமானாரை எப்போதும் வணங்குகிறேன்.]

5. சரமோபாய நிர்ணயம். (பக்கம் 534) அருளாளப் பெருமாள் எம்பெருமானார் திருவடிகளிலே ஆஶ்ரயித்த அநந்தாழ்வானும், எச்சானும், தொண்டனூர் நம்பியும், மருதூர்நம்பியும்...

6. பெரிய திருமுடியடைவு அருளாளப்பெருமாளெம்பெருமானாருக்குத் திருநக்ஷத்ரம் கார்த்திகை மாஸம் ப₄ரணி. இவர் செய்தருளின ப்ரப₃ந்த₄ங்கள் ஞானசார ப்ரமேயசாரங்கள் முதலான ப்ரப₃ந்த₄ங்கள்.

இவர்க்குத் தனியன்

ராமாநுஜார்ய ஸச்சி₂ஷ்யம் வேத₃ஶாஸ்த்ரார்த்த₂ ஸம்பத₃ம் |
சதுர்த்தா₂ஶ்ரம ஸம்பந்நம் தே₃வராஜமுநிம் ப₄ஜே ||

7. வார்த்தாமாலை 124வார்த்தை ௳ விவரணம். விக்ரமசோழன் திருவீதியிலே திருவரங்கச்செல்வர் எழுந்தருளாநின்றால், பிள்ளை யுறங்காவில்லிதாஸர் நாள்தோறும் a ஆயுதம் எடாமல் ஸேவிப்பர்; அருளாளப்பெருமாளெம்பெருமானர், 'பிள்ளாய்! உம்முடைய ஆயுதம் என்று விநியோகப்படுவது' என்று கேட்க; 'உம்முடைய அஞ்ஜலிபவித்ரம் விநியோகப்படுமன்று அடியேனுடைய ஆயுதம் விநியோகப்படும்' என்றார். [ a நம்பெருமாள் புறப்பாடு கண்டருளும்போது அவர் சிறிது சாய்ந்தாலும் தம் பிராணனை முடித்துக்கொள்வதற்காக ஒரு ஆயுதத்தை (குற்றுடைவாளை) ஏந்திக்கொண்டு பிள்ளையுறங்காவில்லிதாஸர் நம்பெருமாளைப் பின் தொடர்வர். அப்போது நம்பெருமாளை ஸேவிக்கும்போதும் ஆயுதத்தைக் கைவிட்டெடுக்காமலே ஸேவிப்பர். அருளாளப்பெருமாளெம்பெருமானர் 'உம்முடைய ஆயுதம் என்று செயல்படும்?' என்று தாஸரைக் கேட்க, இப்படிப்பட்ட ப்ரதிபத்தியுடன் தாம் அருகில் வரும்போது தம் உயிருக்கு ஊறு ஏற்படும்படி நம்பெருமாள் விடமாட்டாராகையாலே, தம் ஆயுதத்துக்கு விநியோகம் ஏற்படாது என்று உறுதிகொண்ட தாஸர் அதுக்கு த்ருஷ்டாந்தமாக 'உமது அஞ்ஜலிபவித்ரம் (ஜலபவித்ரம்) கேவலஸந்யாஸ தர்மத்துக்கு உறுப்பாமன்றே அடியேனுடைய ஆயுதமும் விநியோகப்படும்' என்று அருளிச்செய்தார்.

8. வார்த்தாமாலை 441. வார்த்தை ௳ விவரணம். அன்னக்(கே)கடும் தீர்ந்ததென்றார் - அருளாளப்பெருமாளெம்பெருமானர்; [''எந்த எம்பெருமானர்மடம்'' என்று வழிப்போக்கர்கள் சிலர் கேட்பதைச் செவியுற்று ''லோகாசார்யரான எம்பெருமானருக்குப் போட்டியாக நாமும் ஒரு எம்பெருமானராவதா?'' என்று துணுக்குற்று அருளாளப்பெருமாள் தம் மடத்தை இடித்துவிட்டு எம்பெருமானர் மடத்திலேயேவாழத்தொடங்கினர் என்னும் ஐதிஹ்யம் குருபரம்பரா ப்ரபாவாதிகளில்ஸுப்ரஸித்தம். ஏற்கனவே எம்பெருமானர் ஶேஷப்ரஸாதம் கிடையாமலிருந்த அந்நக்கேடும் அவர் மடத்திலேயே வாழத்தொடங்கியதிலிருந்து தீர்ந்தது என்று அவர் அருளிச்செய்த வார்த்தையாயிருக்கலாம். 'அன்னக்கடு' என்று பாடமானல் விஷாந்நம் என்று பொருள்படும்.]

9. பெரியாழ்வார் திருமொழி 4-4-7. வடுகநம்பி திருநாட்டுக்குப் போனரென்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அருளாளப்பெருமாளெம்பெருமானர்க்கு விண்ணப்பஞ்செய்ய, சிறிதுபோது மோஹித்துக்

கிடந்து உணர்ந்தருளி அவரைப் பார்த்து, 'திருநாட்டுக்குப் போனு ரென்னலாகாது காணும்; உடையவர் ஸ்ரீபாதத்துக்குப் போனு ரென்ன வேணுங்காணும்' என்று அருளிச்செய்தாராம். ஸ்ரீசபரியும் பெருமாள் திருவடிகளிலே ப்ரார்த்தித்தது இதுவிறே.

10. திருவிருத்தம் ப்ரவேசம் (வ்யாக்யானம் ஈடு) ஆழ்வாரை முக்தரென்பர்கள் சிலர்; அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தார் ஒருவர் முக்தப்ராயரென்பர்; அங்குள்ளாரொருவரை நீர் போய்ப் பிறவுமென்னப் பிறந்தாரென்பர்கள் சிலர்; வங்கிப்புரத்து நம்பி எம்பெருமான்தான் இப்படி வந்து அவதரித்தானென்பர். இப்படி சொல்லுகைக்கு அடி ஆழ்வாருடைய ப்ரபாவமாயிற்று.

11, பகவத்விஷயம் 6-8-1 கூரத்தாழ்வான் வைபவம் பக்கம் 17 ஐதிஹ்ய நிர்வாஹம் 69 காண்க.

12. பகவத்விஷயம் 6-8-6 (கிம்புநர் மத்விதோ ஜந:) என்றவிடத்துக்குச் சொல்லுவதொரு வார்த்தையுண்டிறே; "அருளாளப்பெருமாளெம்பெருமானாருடைய அந்திமதசையிலே 'திருவுள்ளத்திலோடுகிறதென்?' என்ன, 'ஒரு பக்ஷி பெருமாளுடைய திருவுள்ளத்தைப் புண்படுத்தினபடியென்! என்று கிடந்தேன்' என்றார்" என்று இதுக்குக் கருத்தாகப் பிள்ளையருளிச்செய்யும் வார்த்தை- 'நாம் பண்ணின சரணாகதியாகையாலே பலத்தோடு அவ்யபிசாரியாகமாட்டாது; இனி சரண்யன் நீர்மையிலேற்றத்தாலே நமக்கு ஒரு குறையில்லை என்கிறது' என்று.

13. பகவத்விஷயம் 8-10-3. கூரத்தாழ்வான் வைபவம் பக்கம் 19 ஐதிஹ்ய நிர்வாஹம் 75 காண்க.

14. மாமுனிகள் அருளிய ஞானசார வ்யாக்யான அவதாரிகை. எம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயித்து, ஸகல வேதசாஸ்த்ர தாத்பர்யார்த்தங்களெல்லாம் அவரருளிச்செய்யக் கேட்டு. தத்வஹிதபுருஷார்த்தயாதாத்ம்யவித்தமராய், "தேவு மற்றறியேன்" என்று, அவர் திருவடிகளிலே நித்ய கைங்கர்யம் பண்ணி ஸேவித்திருந்த அருளாளப்பெருமாளெம்பெருமானார் தம்முடைய பரமக்ருபையாலே, இவ்வர்த்தவிசேஷங்களெல்லாருமறிந்து உஜ்ஜீவிக்க வேணுமென்று, தத்வஹித புருஷார்த்த ஜ்ஞாநத்தினுடைய ஸாராம்சத்தைப் பெண்ணுக்கும் பேதைக்கும் தெரியக் கடவதாக த்ராவிட பாஷையாலே இப்ரபந்தமுகேந அரு

ளிச்செய்கிருர். ஆகையாலே, இதுக்கு ஜ்ஞாநஸாரமென்று திருநாமமாயிற்று.

15. மாமுனிகள் அருளிய ப்ரமேயஸார வ்யாக்யான அவதாரிகை. ஸகல ஶாஸ்த்ர நிபுணராய், தத்வஹிதபுருஷார்த்த₂ யாதா₂த்ம்யவித₃க்₃ரேஸரராய், ஸமஸ்தஸம்ஸாரிசேதநோஜ்ஜீவந காமராய், தம்மை அடியிலே அங்கீ₃கரித்தருளின எம்பெருமானர் திருவடிகளிலே சிரகாலம் ஸேவைபண்ணி தத்வஹித புருஷார்த்த₂ விஶேஷங்களெல்லாம் சரமபர்வபர்யந்தமாக அவரருளிச்செய்யக்கேட்டு தந்நிஷ்ட₂ராயிருக்கும் அருளாளப்பெருமாளெம்பெருமானர் தம்முடைய பரமக்ருபையாலே ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவநார்த்த₂மாக ஸகலஶாஸ்த்ரங்களிலும் ஓரொரு ப்ரதேசத்திலே தாத்பர்யரூபேண ப்ரதிபாதி₃க்கப்படுகையாலே ஸகலர்க்கும் அறியவரிதாம்படி யிருக்கிற அர்த்த₂விஶேஷங்களை ஸங்க்₃ரஹித்து ஜ்ஞாநஸாரமாகிற ப்ரப₃ந்த₄முகே₂ந அருளிச்செய்து தலைக்கட்டினவநந்தரம், ஸகலஶாஸ்த்ர ஸங்க்₃ரஹமாகையாலே ப்ரமாணஸாரமான திருமந்த்ரத்தால் ப்ரதிபாதி₃க்கப்படுகிற ப்ரமேயங்களில் ஸாராம்ஶத்தை ஸங்க்₃ரஹித்து இப்ப்ரப₃ந்த₄முகே₂ந அருளிச்செய்கிருர். ஆகையிறே இப்ப்ரப₃ந்த₄த்துக்கு ப்ரமேயஸாரமென்று திருநாமமாயிற்று.

16 ரஹஸ்யத்ரயஸாரம் த்₃வயாதி₄காரத்தில் அருளாளப்பெருமாளெம்பெருமானரின் மூன்று காரிகைகள் மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கின்றன. அவையாவன:—

(1) ஆகாரிணஸ்து விஜ்ஞாநமாகார ஜ்ஞாநபூர்வகம்।
தேநாகாரம் ஶ்ரியம் ஜ்ஞாத்வா ஜ்ஞாதவ்யோ ப₄க₃வாந் ஹரி:॥

[ஒரு பொருளின் நிரூபக விசேஷணத்தை அறிந்தபின்பே அதையுடைய பொருளை அறியமுடியும். ஆகையால் நிரூபகவிசேஷணமான பிராட்டியை அறிந்த பின்பே விசேஷ்யமான எம்பெருமானை அறியவேண்டும்] என்று அருளாளப்பெருமாளெம்பெருமானர் அருளிச்செய்தார்.

(2) அருளாளப்பெருமாளெம்பெருமானரும்
ஸ்வாபீ₄ஷ்டே பரஸம்ப₃ந்தே₄ஸ்வஶக்த்யாஹீநஸாத₄ந:।
தத்ப்ராப்த்யுபாயம் தத்பாதௌ₃ க்ருத்வா விஶ்வாஸ பூர்வகம்॥

[தான் விரும்பும் ப$_4$க$_3$வத்ப்ராப்திக்குத் தன் அஸக்தியாலே வேறு ஸாத$_4$னமற்றவன். அவ்வெம்பெருமானை அடைவதற்கு அவனுடைய திருவடிகளையே மஹாவிஸ்வாஸத்தோடு உபாயமாகக் கொண்டு] என்று அருளிச்செய்தார்.

(3) பரமாத்மநி நாராணும் ஸர்வப$_4$ார ஸமர்ப்பணுத் |
ஸஞ்ஜாதர் நைரபேக்ஷ்யம் து நம இத்யுச்யதே பு$_3$தை$_4$:||

[ப$_4$க$_3$வத்ப்ரபன்னர்கள் தங்களுடைய எல்லாப்பொறுப்பையும் எம்பெருமானிடம் ஸமர்ப்பித்து விட்டபடியால் தம்மிடம் எந்தக் கைம்முதலையும் எதிர்பாராமல் இருக்கும் தன்மை 'நம:' என்னும் சொல்லுக்குப் பொருளாக அறிவாளிகளால் கூறப்படுகிறது ]என்று இங்குற்ற நமஸ்ஸை அருளாளப்பெருமாளெம்பெருமானுர் வ்யாக்$_2$யானம் பண்ணினுர்.

17. திவ்யஸூரிசரிதம் ஸர்க்கம் 18. ஶ்லோகம் 6முதல் 9வரை.

18. ப்ரபந்நாம்ருதம் 25, 26 அத்தியாயங்கள்.

19. அருளாளப்பெருமாள் எம்பெருமானுர் அருளிய திருவாசிரியத்தனியன்

காசினியோர் தாம்வாழக் கலியுகத்தே வந்துதித்து*
ஆசிரியப்பா வதனுல் அருமறைநூல் விரித்தானை*
தேசிகனைப் பராங்குசனைத் திகழ்வகுளத் தாரானை*
மாசடையா மனத்துவைத்து மறவாமல் வாழ்த்துதுமே.

20. திருநக்ஷத்திரத்தனியன்

கார்த்திகே ப$_4$ரணீஜாதம் யதீந்த்$_3$ராஶ்ரித மாஶ்ரயே |
ஜ்ஞாந ப்ரமேய ஸாராபி$_4$வக்தாரம் வரத$_3$ம் முநிம் ||

[கார்த்திகையில் பரணி நக்ஷத்திரத்தில் அவதரித்தவராய், யதிராஜரை ஆஶ்ரயித்தவராய், ஞானசார ப்ரமேயசாரங்களை அருளிய வரான அருளாளப்பெருமாள் எம்பெருமானுரை ஆஶ்ரயிக்கிறேன்.]

21. நித்யதனியன்

ஜ்ஞாநப$_4$க்த்யாத்த வைராக்$_3$யம் ராமாநுஜ பத$_3$ாஶ்ரிதம் |
பஞ்சமோபாய ஸம்பந்நம் ஸம்யமீந்த்$_3$ரம் நமாம்யஹம் ||

[ஞானபக்திகளால் உண்டான வைராக்யத்தை உடையவரும், ஶ்ரீராமானுஜரின் திருவடியை ஆஶ்ரயித்தவரும் அவரிடம் பஞ்ச

மோபாய நிஷ்டையை உடையவருமான அருளாள மாமுனிவரை அடியேன் வணங்குகிறேன்.]

22. வாழித்திருநாமம்

திருவாழுந் தென்னரங்கஞ் சிறக்க வந்தோன் வாழியே*
தென்னருளாளர் அன்பால் திருந்தினன் வாழியே*
தருவாழுமெதிராசன் தாளடைந்தோன் வாழியே*
தமிழ்ஞானப்ரமேயஸாரம் தமர்க்குரைப்போன் வாழியே*
தெருளாரு மதுரகவி நிலை தெளிந்தோன் வாழியே*
தேசுபொலிமடந்தன்னைச் சிதைத்திட்டான் வாழியே*
அருளாளமாமுனியாம் ஆரியன்தாள் வாழியே*
அருள் கார்த்திகைப் பரணியோன் அணைத்தூழி வாழியே*

# சோமாசியாண்டான் வைபவம்

நௌமி லக்ஷ்மண யோகீந்த்ர பாதுஸேவைகதாரகம் ।
ஸ்ரீராமக்ரதுநாதார்யம் ஸ்ரீபாஷ்யாம்ருதஸாகரம் ॥
[ஸ்ரீராமாநுஜமுனிவரரின் திருவடிக்குற்றேவலையே தாரகமாகக் கொண்டவரும், ஸ்ரீபாஷ்யாம்ருதம் தங்கும் கடல்போன்றவருமான 'ஸ்ரீராமன்' என்னும் திருநாமமுடைய சோமாசியாண்டானை வணங்குகிறேன்.]

எம்பெருமானருடைய முக்யசிஷ்யர்களில் ஒருவரான இவரது இயற்பெயர் 'ஸ்ரீராமமிஶ்ரர்' என்பதேயாகும். இவரது கூடஸ்தரோ, அல்லது இவரோ ஸோமயாகம் செய்ததால் 'ஸோமயாஜியாண்டான்' அல்லது சோமாசியாண்டான் என்பது இவர் குலத்தவர்க்கெல்லாம் இன்றும் பட்டப்பெயராய் விளங்குகிறது. [இவர் குலத்தவரே ஸ்ரீரங்கம் வாக்ய பஞ்சாங்கம் கணிக்கும் மிராசு பெற்றவர்கள்.] இவரே 'ஸ்ரீபாஷ்ய விவரணம்' என்னும் பெயர் கொண்ட ஸ்ரீபாஷ்ய வ்யாக்யானத்தை முதலில் இயற்றினர். ஷடர்த்தஸங்க்ஷேபம் என்னும் இவரது நூலிலிருந்து ஸ்ரீவேதாந்ததேசிகர் சில பகுதிகளை எடுத்திருக்கிறார். "உபயாதிஷ்டானம் ச ஏகம் ஶேஷித்வம்" [பிராட்டியும், பெருமாளுமாகிற மிதுனத்தை ஆஶ்ரயமாகக்கொண்ட ஶேஷித்வம் ஒன்றே] என்னும் வாக்கியம் அவற்றில் ஒன்று. ஸகல சேதநரும் மிதுநஶேஷபூதர்களே என்பதை நிலைநாட்டும் வாக்யமிது. இவர் எம்பெருமானரது வைபவத்தை விளக்கும் குருகுணாவளி என்னும் நூலை அருளிச்செய்திருக்கிறார் என்றும், அதில்

யஸ்ஸாபராத₄ாந் ஸ்வபத₃ப்ரபந்நாந்
ஸ்வகீயகாருண்ய கு₃ணேந பாதி ।
ஸ ஏவ முக்₂யோ கு₃ருரப்ரமேயஸ்
ததை₂வ ஸத்₃பி₄: பரிகீர்த்யதே ஹி ॥

[யாவரொரு ஆசார்யர் தம் அடியடைந்தவர்களைத் தம் கருணையினாலேயே ரக்ஷிக்கிறாரோ, அவரே அளத்தற்கரிய முக்₂யாசார்யராவார். நல்லோர்களால் அப்படியே சொல்லப்படுகிறதன்றோ] என்று க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரான எம்பெருமானாரின் பெருமையை அருளியிருக்கிறார் என்றும் நாயனாராச்சான்பிள்ளை தம் சரமோபாயநிர்ணயத்தில் எடுத்துக் காட்டியுள்ளார். நாலூராச்சான்பிள்ளையின் "சரமோபாய தாத்பர்யம்", எறும்பியப்பாவின் "சரமகுரு நிர்ணயம்" ஆகியவற்றிலிருந்து இவர்சரமோபாய விவரணம் முதலான நூல்களை அருளியிருப்பதாகவும் விளங்குகிறது. இவரது க்₃ரந்த₂ங்களில் எதுவுமே இப்போது இல்லாவிடினும், ஸ்ருதப்ரகாசிகைசரமோபாய நிர்ணயம் முதலானபின்வந்த ஆசார்யர்களின் க்₃ரந்த₂ங்களில் அவற்றின் விவரணம் உள்ளதாகையாலேகுறையில்லை.

### ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறுயிரப்படி குருபரம்பரா ப்ரபாவம்:—மேல் நாட்டிலும் சோமாசியாண்டான்... ...தந்தாம் ஊர்களிலே சேர்ந்தார்கள் (முதல் பாகம் பக்கம் 331 332 காண்க.)

2. சரமோபாய தாத்பர்யம்:—முதல்பாகம் பக்கம் 351 சரமோபாய விவரண ஸ்ரீஸூக்தி காண்க.

3. சரமகுரு நிர்ணயம்:—முதல்பாகம் பக்கம் 414, 415, 416 ஐதிஹ்ய நிர்வாஹம் 190, 191, 193 காண்க

4. சரமகுரு நிர்ணயம்:— முதல்பாகம் பக்கம் 420, 421 ஐதிஹ்ய நிர்வாஹம் 202 காண்க

5. சரமோபாய நிர்ணயம்— யஸ்ஸாபராத₄ாந் ஸ்வபத₃ ப்ரபந்நாந் ஸ்வகீயகாருண்ய கு₃ணேந பாதி । ஸ ஏவ முக்₂யோ கு₃ருரப்ரமேயஸ்ததை₂வ ஸத்₃பி₄: பரிகீர்த்யதே ஹி ॥ [யாவரொரு ஆசார்யர் தம் அடியடைந்தவர்களைத் தம் கருணையினாலேயே ரக்ஷிக்கிறாரோ, அவரே அளத்தற்கரிய முக்₂யாசார்யராவார். நல்லோர்களால் அப்படியே சொல்லப்படுகிறதன்றோ] என்று சோமாசியாண்டான் ஆசார்யவைபவத்தை அருளிச்செய்கிற 'கு₃ருகு₃ணாவளி' என்கிற ப்ரப₃ந்த₄த்திலே க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யனே முக்₂யமாக அருளிச்செய்தாரிறே.

6. வார்த்தாமாலை 126 வார்த்தை சவிவரணம்:— சோமாசியாண்டான் அருளிச்செய்த வார்த்தை-௨ ப₄க₃வத் ப்ரவ்ருத்தி

விரோதி₁ ஸ்வப்ரவ்ருத்தி; b ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ப்ரபத்தி, c ப₄க்தியு முபாயமன்று, ப்ரபத்தியுமுபாயமன்று; ப்ரபத்தவ்யனே உபாயம். [ a சேதனன் தனக்காகத் தான் முயல்வது முழுவதும் எம்பெருமான் இவனுக்காக முயல்வதற்குத் தடையாயிருப்பது. b ஆகையால் அந்தத் தன் முயற்சி முழுவதையும் விடுவதே ப்ரபத்தி எனப்படும் ஶரணாக₃தியாகும். ஆக, தனக்காகத் தான் முயல்வதிலிருந்து நீங்கினால் எம்பெருமானுடைய முயற்சிகள் ப₂லிக்கப்பெற்று முற்கூறிய தடை நீங்கப்பெற்ற அவனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களாகிற பரமபுருஷார்த்த₂ம் உண்டாகும் என்று கருத்து. c இப்படி இவன் முயற்சியாயிருப்பது அனைத்தும் இப்பரம புருஷார்த்த₂த்தை அடைவதற்குத் தடையாயிருக்கையாலே, ஸாத₄நாந்தரமான ப₄க்தியும், ஸ்வக₃தஸ்வீகாரமான ப்ரபத்தியும் இதற்கு உபாயமன்று. இவன், இவற்றை உபாயமாக மயங்கி அநுஷ்டி₂த்தால், அந்த ப₄க்திப்ரபத்திகள் முறையே ப₄க₃வத₃நுப₄வப்ரத₄ானமான ஸ்வார்த்த₂ மோக்ஷத்துக்கும், ப₄க₃வத்கைங்கர்ய ப்ரத₄ானமான ஸ்வார்த்த₂ மோக்ஷத்துக்கும் காரணமாகுமேயொழிய, பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களாகிற பரமபுருஷார்த்த₂த்துக்குக் காரணமாகமாட்டா. ஆகையால் முற்கூறிய ப்ரபத்திக்கு விஷயமான எம்பெருமானே உபாயமாவான் என்று கருத்து.]

7. வார்த்தாமாலை 279: வார்த்தைச்விவரணம் a ஸோமாசியாண்டானுக்கு b அப்பிள்ளை அருளிச்செய்தபடி:—c "ஆண்டான்! தேவரீர் ஜ்ஞாநவ்ருத்₃த₄ருமாய், வயோவ்ருத்₃த₄ருமாய், ஶீலவ்ருத்₃த₄ருமாய், ஸ்ரீப₄ாஷ்யம் திருவாய்மொழியிரண்டுக்கும் நிர்வாஹகருமாய், எல்லாவற்றாலும் பெரியவராயிருந்தீர்; ஆகிலும் சாத்தியிருக்கிற திருப்பரிவட்டத் தலையில் ப₄ாக₃வதாபசார நிமித்தமாக ஒரு துணுக்கு முடிந்துவையும்" என்றருளிச்செய்தார். [a ஸோமாசியாண்டான் எம்பெருமானாருடைய முக்கிய ஶிஷ்யர்களில் ஒருவர். ஸ்ரீப₄ாஷ்யத்துக்கு முதன்முதலில் விவரணம் எழுதியவர். ஷட₃ர்த்த₂ஸங்க்ஷேபம், கு₃ருகு₃ணாவளி முதலான மற்றும் பல க்₃ரந்த₂ங்களை இவர் அருளிச்செய்திருப்பதாகப் பூர்வாசார்ய க்₃ரந்தங்₂களிலிருந்து விளங்குகிறது. எம்பெருமானார் திருநாமத்தை இவர் அநுஸந்தி₄க்கும் விதமே தனிப்பட்டது என்று தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யானங்களில் அருளிச்செய்யப்பட்டுள்ளது. இவருடைய க்₃ரந்த₂ங்களிலிருந்து சிலபகுதிகளை இவருடைய வம்ஶஸ்த₂ரான மேக₄நாத₃ாரி என்பவர் தமது நயத்₃யுமணியிலும், ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகர் தமது ந்யாயஸித்₃த₄ாஞ்ஜனம் முதலான க்₃ரந்த₂ங்களிலும், நாயனு

ராச்சான் பிள்ளை தமது சரமோபாய நிர்ணயத்திலும் எடுத்துள்ளார்கள். b அப்பிள்ளை-பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் அருளிச் செய்த அந்திமோபாய நிஷ்டை₂யில் இவ்வார்த்தை எடுக்கப்பட்டுள்ளது. அதிலிருந்து இவர் ப₄ட்டர் சிஷ்யர் என்றும், இவருக்கு 'கடகத்துப்பிள்ளை' என்றொரு பெயர் உண்டு என்றும் விளங்குகிறது c அப்பிள்ளை வார்த்தையின் கருத்து பின்வருமாறு:- அறிவு, பிராயம், நல்லொழுக்கம், உப₄ய வேதா₃ந்த நிர்வாஹகத்வம் ஆகிய எல்லாவற்றாலும். ஸோமாசியாண்டான் பெரியவராயிருந்தபோதிலும் ப₄ாக₃வதாபசாரத்திலும் சிறிது ஈடுபட்டிருந்தபடியாலே அதற்காக முந்தானையிலே ஒரு முடிச்சுப் போட்டிருந்து அது நேராதபடி. ஜாக்₃ரதையாயிரும் என்கை. அப்பிள்ளை பரமஹித பு₃த்₃தி₄யாலே ஸோமாசியாண்டானுக்கு இப்படி உபதேசித்தார் என்றும், அதற்குப்பின் ஸோமாசியாண்டான் ப₄ாக₃வதாபசாரத்தில் ஈடுபடாமல் ஜாக்₃ரதையாயிருந்தார் என்றும் கொள்ளலாம்.

8. வார்த்தாமாலை 304 வார்த்தை- சி விவரணம்—சோமாசியாண்டான், "ஸ்ரீவைஷ்ணவனுக்கு விஷயப்ராவண்யம் தன்னை உணர்ந்தாலுங்கூடாது; தன் ஸத்தையை உணர்ந்தாலும் கூடாது; ஸம்ப₃ந்த₄த்தை உணர்ந்தாலுங்கூடாது; ஶரீரத்தை உணர்ந்தாலுங் கூடாது" என்றருளினார். [எம்பெருமானாருடைய ஶிஷ்யரான 'ஸ்ரீராமமிஶ்ரர்' என்னும் ஸோமயாஜியாண்டானுடைய வார்த்தை—எம்பெருமான் விஷயத்தில் அநந்யார்ஹ ஶேஷத்வம், அநந்யஶரணத்வம் அநந்யபோ₄க்யத்வம் எனும் ஆகாரத்ரயமுடைய தன்னை உணர்ந்தாலும் ஸ்த்ரீகளிடம் போ₄க்₃ய பு₃த்₃தி₄வைப்பது அநந்யபோ₄க்₃யத்வமாகிற ஸ்வரூபத்துக்கு முரண்படுமாகையாலே ஸ்ரீவைஷ்ணவனுக்குத் தகாது. தன் ஸத்தைக்குக் காரணமான எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வம், ஸர்வவ்யாபகத்வம் முதலான பெருமைகளை உணர்ந்தாலும் எங்குமுள்ளவனாய் எல்லாமுணர்ந்தவனை அவன் முன்னிலையிலேயே, ஸ்த்ரீ விஷயத்தில் ஈடுபடுவது தகாது என்று விளங்கும். எம்பெருமானுக்கும் மற்ற சேதனர்களுக்கும் உண்டான ப₄ர்த்ருப₄ார்யாஸம்ப₃ந்த₄த்தை உணர்ந்தாலும் எம்பெருமானுக்கு ப₄ார்யைபோலே போ₄க்₃யப் பொருளான ஒரு ஸ்த்ரீயிடம் இவன் போ₄க்₃யபு₃த்₃தி₄ வைப்பது பொருந்தாது "ஊனிடைச் சுவர்வைத்து என்புதூண் நாட்டி உரோமம் வேய்ந்து ஒன்பதுவாசல் தானுடைக் குரம்பை" [பெரிய திரு 1-6-9] என்று அநுஸந்தி₄க்கப்பட்ட ஶரீரத்தின் தாழ்வை அறிந்தாலும் ஒரு ஶரீரத்துக்கு இன்னொரு ஶரீரத்தை உணவாகக் கொள்கிற ஸ்த்ரீபோ₄க₃ம் தகாது" என்று.]

9. வார்த்தாமாலை 375. வார்த்தை 8 விவரணம். சோமாசி யாண்டான்— அகளங்கநாட்டாழ்வான் காலத்திலே ஒரு இடையன் பால் களவு கண்டானென்று கட்டியடிக்க, பிள்ளை அத்தைக்கேட்டு மோஹித்துவிழுந்தாராம். [களவு கண்ட ஓர் இடையனைக் கட்டி யடித்தவுடன் களவு கண்ட கண்ணன் யசோதையால் கட்டுண்டு அடிபட்டது நினைவுக்குவந்து சோமாசியாண்டான் மோஹித்து விழுந்தார் என்று கருத்து.]

10. திருநெடுந்தாண்டகம் (21) வ்யாக்யானம். (திருக் கண்ணபுரம் புக்கு) ருஷிகளும் அல்லாத ஆழ்வார்களும் சொல்லு மாபோலேயன்று காணும் இவர் திருக்கண்ணபுர மென்றுலிருக்கும் படி. அவர்களளவன்றே இவர்க்கு அவ்வூரிலுண்டானபூ₄ாவப₃ந்த₄ம். அனந்தாழ்வான் ' திருவேங்கடமுடையான்'' என்னுமாபோலேயும். பட்டர் ''அழகியமணவாளப்பெருமாள்'' என்னுமாபோலேயும், சோமாசியாண்டான் ''எம்பெருமானுரே ஶரணம்'' என்னுமா போலேயும் இராதிறே நாம் திருநாமங்களைச் சொல்லும் போது.

11. பகவத்விஷயம் 6—5—7. (இவள் வாயனகள் திருந் தவே) பட்டர் 'அழகியமணவாளப்பெருமாள்' என்றுல் திருநாமம் நிறம் பெறுமா போலேயும், சோமாசியாண்டான் 'எம்பெருமானுர்' என்றுல் திருநாமம் நிறம்பெறுமாபோலேயும், அனந்தாழ்வான் 'திருவேங்கடமுடையான்' என்றுல் திருநாமம் நிறம்பெறுமா போலேயும்.

12. ரஹஸ்யத்ரயஸாரம்: ஸித்₃தோ₄பாய ஶோத₄நாதி₄காரம். ஶ்ருதிப₃லத்தாலே ''த்₃வௌ ச ஸதை₃கஶேஷி'' [பாஞ்சராத்ரம்] [பிராட்டியும் எம்பெருமானும் சேர்ந்தே எப்போதும் உலகுக்கு ஓரே ஶேஷி (கைங்கர்யம் கொள்பவர்)] என்கிறபடியே ''உப₄யா தி₄ஷ்டாநம் ச ஏகம் ஶேஷித்வம்'' [பிராட்டி எம்பெருமான் ஆகிய இருவரிடத்திலும் உள்ள ஶேஷியாயிருக்கும் தன்மை ஒன்றே] என்று சோமாசியாண்டான் ஷட₃ர்த்த₂ ஸங்க்ஷேபத்தில் நிஷ்கர் ஷித்தபடியே இருவரும் ஏகஶேஷித்வாஶ்ரயரானபடியாலே, ஹவிர் விஶேஷங்களாலே அக்₃நாவிஷ்ணுப்ரப்₄ருதிகளுக்குப்போலே ஆத்மஹவிஸ்ஸமர்ப்பணப்ரதிஸம்ப₃ந்தி₄களாகைக்கும் குறையில்லை.

13. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — ஜட₃த்₃ரவ்யபரிச்சே₂த₃ம்' ''தத₂ா ச பு₄ாஷ்யஞ்ச தத₃நுஸாரி விவரணகார வசநஞ்ச—

'ஸ்பர்ஶநமபி ந ஸந்மாத்ரவிஷயம், ஸ்பர்ஶ தத்₃வத்₃வஸ்து-விஷயத்வாத்' இதி |'' [அதனாலேயே ப₄ாஷ்யத்திலும், அதைப்பின் பற்றிய (ஸோமாசியாண்டானின்) ஸ்ரீப₄ாஷ்யவிவரணத்திலும் ''ஸ்பர்ஶேந்திரியமும் ஸந்மாத்ரவஸ்துவைக் காட்டாது; ஸ்பர்ஶ கு₃ணத்தையும். அதையுடைய பொருளையுமே காட்டுமாகையால்'' என்று சொல்லப்பட்டது ]

14. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — ஜட₃த்₃ரவ்யபரிச்சே₂த₃ம் ''யத்து ஷட₃ர்த்த₂ ஸங்க்ஷேபே......ப்ரோக்தம் 'நிமீலநேऽபி ப₄ாதீதி ந தமோ த்₃ரவ்யம் ......' இதி | தத் ஶ்ருதிஸ்ம்ருதிப₄ாஷ்யாதி₃ விரோத₄ாத் மதாந்தரேண ஏகதே₃ஶிமதேந வா உக்தம்'' [''கண்ணை மூடினாலும் தோன்றுகையால் தமஸ்(இருள்) ஒரு த்₃ரவ்யமல்ல; (ஆகையால் உருவத்தை உணராமலிருப்பதே இருளாகும்) ..... '' என்று ஷட₃ர்த்த₂ஸங்க்ஷேபத்தில் (ஸோமாசியாண்டான்) ஸாதித்தது ஶ்ருதி ஸ்ம்ருதி ப₄ாஷ்யங்களுக்கு முரண்பட்டதாகையால், வேறு மதத்தைத் தழுவியோ, (ஸ்ரீவைஷ்ணவர்களிலேயே) சிலருடைய கருத்தைத் தழுவியோ கூறப்பட்டதாகக் கொள்ளவேண்டும்.]

15. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — ஜட₃த்₃ரவ்யபரிச்சே₂த₃ம் ''த்₃விதீயஸ்து பக்ஷ: விவரணகாராங்கீக்₃ருத: | ஷட₃ர்த்த₂ ஸங்க்ஷேபே ...... ஹி உக்தம் 'நாசி₃த: ஜீவத்₃வாரா ப்₃ரஹ்ம ஶரீரத்வாத்' இதி'' [(பரமாத்மா ஜீவனையும் அசித்தையும் நேரேயும் வியாபித்திருக்கிறான் என்னும் முதல் பக்ஷம் ஸ்ரீப₄ாஷ்யத்திலும், (பட்டரின்) தத்வ ரத்நாகரத்திலும் சொல்லப்பட்டது) (பரமாத்மா ஜீவன் மூலமாகவே அசித்தை வியாபிக்கிறான் என்னும்) இரண்டாவது பக்ஷம் ஸ்ரீப₄ாஷ்ய விவரணமெழுதிய ஸோமாசியாண்டான் ஆதரித்தது. ஷட₃ர்த்த₂ ஸங்க்ஷேபத்தில் ......... ''அசித்து நேரே பரமாத்மாவுக்கு ஶரீரமாவதில்லை; ஜீவன் மூலமாகவே அது ப்₃ரஹ்மத்திற்கு ஶரீரமாவதால்'' என்று கூறப்பட்டது ]

16. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — ஈஶ்வரபரிச்சே₂த₃ம் ''தத்ரைவமுக்தம் ஜந்மாத்₃யதி₄கரணே விவரணகாரை:- 'வஸ்து பரிச்சே₂தோ₃ வஸ்து பரிமாணம் | தே₃ஶபரிச்சே₂த₃ஸ்தத்₃தே₄துக:' இதி'' [ஸ்ரீப₄ாஷ்யம் ஜந்மாத்₃யதி₄கரணத்தின் விவரணத்தில் ''வஸ்துவால் அளவுபட்டிருக்கையாவது—வஸ்துவின் பரிமாணம்; தே₃ஶத்தினால் அளவுபட்டிருக்கை அதனால் விளைவது'' என்று ஸோமாசியாண்டானால் கூறப்பட்டது ]

17. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம்—ஈஶ்வரபரிச்சே₂த₃ம். "அத்ர வக்தவ்யமகி₂லம் ஷட்₃ர்த்த₂ஸங்க்ஷேபே தி₃வ்யஸ்த₂ாந நிரு பணாநந்தரம் ஸ்ரீராமமிஶ்ரைருக்தம் | அத₂ தத்ரத்யோऽயம் க்₃ரந்த₂: —'ஸமாநநயாத் மஹிஷ்யாதி₃ஸித்₃த₄ிஶ்ச | நநு ஶேஷித்வ விதி₄ரஶக்ய:; அந்யஶேஷஸ்ய தத₃ந்யஶேஷத்வாயோகா₃த் | ந ச அநுவாத₃: | அதஏவ| கிஞ்ச மஹிஷ்யாதி₃கம் ஶரீரம் | அந்யதா₂'ஏகமேவ'இதி விருத்₄யதே| ஆநந்தா₃தி₃வத் அப்ருத₂க் ப₄ாவாப₄ாவாத் | அத: ஸமத்வாத் ந மித₂: ஶேஷஶேஷிதா | மைவம்; பத்யு: பத்ந்யா அபீதி லோகஸித்₃த₄ம் | உப₄யாதி₄ஷ்ட₂ாநம் ச ஏகம் ஶேஷித்வம் | அவிப₄ாகா₃ஸ்ம்ருதே: | தது₃க்தம் நீதிவித்₃பி₄:'அந்யத்ராநிச்ச₂ாயாம்த்யாகா₃ஏவ ந ஸம்வர்த்தேத||' இதி | ந ஹ்யநிர்வ்ருத்தி: ப்ருத₂க்த்வே | ஏதந்ந்யாய ஸஹக்ருத வாக்யேந ச ஶேஷித்வ விஶிஷ்டபத்நீ விதி₄: | அநூத்₃யவா| ந ச லோகே ஶரீரஸ்ய அபத்நீத்வாத் மாநாந்தராகோ₃சரே விரோத₄:| அசித்த்வாச்ச அபத்நீத்வம் லோகே | ஸ ச ஸ்வஸ்மிந் ஆத்மாஶ்ரயதோ₃ஷ: | ஶேஷத்வமந்யத்ராபி, அவிரோத₄ாத்" இதி| அநேந ச ஸ்ரீராமமிஶ்ரவசநேந த்₃வந்த்₃வம் ப்ரதி ஜக₃த: ஶேஷதைகரஸத்வம் உபபாதி₃தம்|" [இங்கு (பிராட்டிவிஷயத்தில்) விளக்கவேண்டியது அனைத்தும் ஷட₃ர்த்த₂ஸங்க்ஷேபத்தில் தி₃வ்ய ஸ்த₂ாநத்தை நிருபித்தபிறகு ஸோமாசியாண்டானால் விளக்கப் பட்டது. அங்குள்ள வாக்யங்கள் பின்வருமாறு;— "இதே நியாயத்தைக்கொண்டு பார்க்கும்போது பரமாத்மா மஹிஷீ முத லானவர்களோடு கூடியவன் என்றும் விளங்குகிறது. இனி ஓர் ஆக்ஷேபம்:—"'அஸ்யேஶாநா ஜக₃த: விஷ்ணுபத்நீ' [விஷ்ணு வுக்குப் பத்தினியாய், இவ்வுலகிற்குத் தலைவியாய் இருக்கிறாள்.] என்னும்வேதவாக்யத்தில் ஶேஷித்வத்தோடு கூடியவளாகப்பிராட்டி விதி₄க்கப்படுகிறாள் என்று கூறமுடியாது; ஒருவருக்கு அடிமைப் பட்டிருக்கும் பொருள் மற்றொருவருக்கும் அடிமைப்பட்டிருப்பது பொருந்தாதாகையால். அதே காரணத்தால், ஶேஷித்வத்தோடு கூடிய பிராட்டி அநுவதிக்கப்படுகிறாள் என்று கூறுவதும் பொருந்தாது. மேலும் பிராட்டி முதலானோர் பரமாத்மாவுக்கு ஶரீரம். பிராட்டியை ஶரீரமாகக் கொள்ளாவிடில், 'தன்னையொழிந்த அனைத்தையும் ஶரீரமாகக் கொண்ட பரம்பொருள் ஒன்றே' என்று ஶ்ருதி கூறுவது பொருந்தாது. ஈஶ்வரனுடைய த₄ர்மபூ₄தஜ்ஞாநம் அவனுக்கு ஶரீரமல்லாவிடினும் முற்கூறிய ஶ்ருதிக்கு விரோத₄ மில்லாததுபோல் இதையும் கொள்ளலாமே? எனில்; த₄ர்மபூ₄த ஜ்ஞாநாநந்தா₃திகள் ஸ்வரூபத்தினால் மட்டும் த₄ரிக்கப்படுபவை;

பிராட்டி (மற்ற ஶரீரங்களைப்போல்) ஸங்கல்பத்தாலும் த₄ரிக்கப் படுபவள். ஆகையால் இங்கு முற்கூறிய ஶ்ருதிவிரோத₄ம் வந்தே தீரும். ஆக மற்ற ஶரீரங்களோடு ஸாம்யமிருக்கையால், எம்பெருமானுக்கு அடிமைப்பட்ட உலகம் அவனுக்கு அடிமைப்பட்ட பிராட்டிக்கும் அடிமைப்பட்டுள்ளது என்று கூறமுடியாது'' என்னும் இந்த ஆக்ஷேபம்பொருந்தாது; கணவனுடைய உடைமை மனைவிக்கும் உடைமை என்னும் உலகநியாயத்தோடு இவ்வாக்ஷேபம் முரண்படுகிறதன்றோ; ஆகையால் பிராட்டியிடமும், பெருமானிடமும் (உலகைக்குறித்து) உள்ள ஶேஷித்வம் ஒன்றே என்று கொள்ளவேண்டும். 'பதியின் உடைமை பத்னிக்கும் உடைமையாகும்' என்று ஸ்ம்ருதி கூறுவதும் இவ்விஷயத்தில் ப்ரமாணம். அதனாலேயே யாக₃ நீதியறிந்தவர்கள் 'பதிபத்னிகள் இருவரில் ஒருவர் இசையாவிட்டால் யாக₃த்தில் த்₃ரவ்யத்யாக₃மே பொருந்தாது'' என்று கூறுகிறார்கள். தம்பதிகள் தனித்தனி த்₃ரவ்யமுடையவரானால் இந்த வசனம் ஒட்டாது. ஆகையால் 'அஸ்யேஶாநா' என்னும் வேதவாக்யம் ஶேஷித்வத்தோடு கூடிய பத்னியையே விதி₄க்கிறது அல்லது அனுவதிக்கிறது எனக் கொள்ள வேண்டும். 'உலகில் சரீரம் பத்னியாயிருப்பதில்லையே; இங்கு ஶரீரமான பிராட்டி எப்படிப் பத்னியாயிருக்கமுடியும்?' என்னும் கேள்வியும் வேத₃த்தால் ஶரீரமாக ஸித்₃தி₄க்கும் பிராட்டி விஷயத்தில் பொருந்தாது. அசித்தாகையாலே நம் ஶரீரம் நமக்குப் பத்னியாயில்லை; 'அப்படியானால் நம் ஶரீரத்தோடு கூடிய நம் ஆத்மா நமக்குப் பத்னியாக வேண்டியிருக்குமே' எனில்: இது 'ஆத்மாஶ்ரயம்' என்னும் குற்றத்தின்பாற்படும். யாக₃த்துக்கு ஶேஷமான வ்ரீஹிப்ரோக்ஷணம் முதலானவை வ்ரீஹிமுதலானவற்றுக்கும் ஶேஷமாயிருப்பதைக் காண்கிறோம். அதுபோல் இங்கும் உலகம் இருவர்க்கும் ஶேஷமாகக் குறையில்லை'' என்பவை (அவ்வாக்யங்கள்), ஸோமாசியாண்டானின் இந்த வாக்யங்களால் திவ்யதம்பதிகளைக் குறித்து உலகம் இயல்வாகவே அடிமைப் பட்டிருக்கிறது என்று விளக்கப்பட்டது ]

18. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம்-பு₃த்₃தி₄பரிச்சே₂த₃ம். ''அதோ ஜ்ஞாத்ருத்₃வாரா நியத - ப்ரஸரண விஷயப்ரகாஶவேளாயாமேவ பு₃த்₃தி₄: ப்ரகாஶதே, நாந்யதே₃தி ஸூக்ஷ்மம் | யத்து ஷட₃ர்த்த₂ ஸங்க்ஷேபே ஸ்ரீராமமிஶ்ரைருக்தம்—'ஸத்யாம் ஸ்வத: ஸித்₃தி₄: | ஸா ஸுஷுப்தாவபி நாஸ்பு₂ர்த்தி: | ஸ்வாஶ்ரயஸ்யைவ ஹி ஸா ப₄ாதி | ஸ ஏவ விஶேஷ இதி ஸ்தா₂நாந்தரே வக்ஷ்யாம; அவ்யவதா₄ந நியதிஸ்து காரணாந்தரநியமாத்' இதி | ஏவம்ப்ரகா

ரேண விவரணே$\text{ऽ}$ப்யுக்தம் | ததே₃தத் வைப₄வவாத₃ இதி மந்தவ்யம் | அந்யதா₂ 'பும்ஸ்த்வாதி₃வத் த்வஸ்ய ஸதோ$\text{ऽ}$பி₄ வ்யக்தியோகா₃த்' [2-3-31]இதி ஸூத்ரேண தத்₃பா₄ஷ்யேண ச விரோதா₄த் |" [ஆகையால், விழிப்பு முதலான சில நிலைகளிலேயே வெளிப்படுவதாய், விஷயங்களை அறியும் வேளையிலே பு₃த்₃தி₄ (த₄ர்மபூ₄தஜ்ஞாநம்) பிரகாசிக்கிறதேயொழிய வேறு காலங்களில் பிரகாசிப்பதில்லை என்று நன்கு விளங்குகிறது. ஆனால் இதற்கு மாறாக ஸோமாசியாண்டான் ஷட₃ர்த்த₂ ஸங்க்ஷேபத்தில் "உண்மையில் (த₄ர்மபூ₄தஜ்ஞாநம்) தானே பிரகாசிக்கிறது; தூங்கும்போதும் அது பிரகாசிப்பதில்லை என்று கூறமுடியாது. தன் இருப்பிடமான ஆத்மாவுக்கேயன்றோ அப்போதும் அது ப்ரகாசிக்கிறது. இவ்வளவே வேறுபாடு என்பதை ஸமயம் நேரும்போது விளக்குவோம். 'தூங்கும்போது அறிவு பிரகாசிப்பதாக எப்போதும் வழங்குவதில்லையே' எனில்: இந்திரியங்கள் அடங்கியிருப்பதே அதற்குக்காரணம்" என்று ஸாதித்திருக்கிறார். ஸ்ரீபா₄ஷ்யவிவரணத்திலும் இவ்வண்ணமே கூறியிருக்கிறார். இது அறிவுக்குப்பெருமை கூறுவதற்காக ஸாதித்தது என்று கொள்ளவேண்டும். இல்லாவிடில், "(எப்போதும் ஆத்மாவில்) உள்ள இந்த அறிவுக்கு, ஆண்மை முதலானவை (மனிதனுக்கு ஒரு காலத்தில் வெளிப்படுவது) போலே, (விழிப்பு முதலான சிலகாலங்களிலே) வெளிச்செறிப்பு ஏற்படுவதாகக் கொள்ளலாமாகையால் (ஆத்மாவுக்கு அறிவு நித்யத₄ர்மமாகலாம்)" என்னும் ஸூத்ரத்தோடும், அதன் பா₄ஷ்யத்தோடும் முரண்படுமாகையால்.]

19. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம்—பு₃த்₃தி₄பரிச்சே₂த₃ம். "ஏவம் ச கு₃ணேஷு கஶ்சித்₃ விஶேஷ: த்₃ரவ்யாத்மககு₃ண: கேவல கு₃ணாஶ்சேதி | பூர்வே ஜ்ஞாநாத₃ய: | உத்தரே ஸத்வரஜஸ்தம: ப்ரப்₄ருதயோ வக்ஷ்யந்தே | தத்ர கு₃ணக-ரூபத்வமாத்ராதே₃வ ஸத்வாதி₃ஷு கு₃ணஶப்₃த₃ஸ்ய முக்₂யத்வம் ஜ்ஞாநாதி₃ஷு கௌ₃ணத்வம் | 'அஸ்யாஶ்ச' இதி பா₄ஷ்யஸ்ய விவரணேப்யுக்தம்- 'நித்யபாரதந்த்ர்யாத் கௌ₃ணோ கு₃ணவ்யபதே₃ஶ:' இதி" [ஆக, கு₃ணங்களில் ஒரு வாசி உண்டு. (1) த்₃ரவ்யரூபமான கு₃ணங்கள் சில, (2) கு₃ணமாக மாத்திரம் இருப்பவை சில—என்று. த₄ர்மபூ₄தஜ்ஞாநம் முதலியவை முதல் வகுப்பில் சேர்ந்தவை. ஸத்வம், ரஜஸ், தமஸ், ஶப்₃த₃ாதி₃கள் முதலானவை இரண்டாம் வகுப்பில் சேர்ந்தவை. இவற்றில் கு₃ணமாக மாத்திரம் இருப்பதால் ஸத்வம் முதலானவற்றில் கு₃ண ஶப்₃த₃ம் முக்₂யமானது.

(த்3ரவ்யமாகவும் இருப்பதால்) ஜ்ஞாநம் முதலானவற்றில் 'அச் சொல் அமுக்2யமானது. ஸ்ரீப4ாஷ்யத்தில் அஹமர்த்த2ம் ஆத்மாவே என்று நிரூபிக்கும் பிரகரணத்தில் "இந்த அறிவு எப்போதும் ஆத்மாவை ஆஶ்ரயித்திருக்கையாலும், அதற்கு ஶேஷமாயிருக்கையாலும் கு3ணம் என்று வழங்கப்படுகிறது" என்று ஸாதித்திருப்பதை விளக்கும்போது (ஸோமாசியாண்டானால்) "எப்போதும் ஆத்மாவிற்குப் பரதந்த்ரமாயிருப்பதையிட்டு அறிவு அமுக்கியமாக கு3ணம் என வழங்கப்படுகிறது" என்று சொல்லப்பட்டது.]

20. ந்யாயஸித்3த4ாஞ்ஜநம் - பு3த்3தி4பரிச்சே2த3ம், "உக்தஞ்ச ஷட3ர்த்த2ஸங்க்ஷேபே ஸ்ரீராமமிஶ்ரை :—'ஸம்யோக3ஸ்ஸ தத3ர்ஹேஷு விஷயத்வாகார:। அநர்ஹேஷு ததஸ்தத3ந்வயிஷு' இதி। அஸ்யார்த்த2:—'ஸம்யோக3ார்ஹவஸ்துநி வர்த்தமாநத்வாதி3விஶிஷ்ட த்3ரவ்யப்ரகாஶநம் ஸம்யோக3:। ஸம்யோக3ாநர்ஹாணும் து ரூபாதீ3நாம் ப்ரகாஶநம் தத3ந்வயிஷு ஆஶ்ரயேஷு காரணேஷு கார்யேஷு ச யதா2ஸம்ப4வம் ஸம்யோக3 இதி।" [ஷட3ர்த்த2ஸங்க்ஷேபத்தில் ஸோமாசியாண்டானல் "தகுதியுள்ள (த்3ரவ்யம் முதலான) இடத்தில் (அறிவுக்கு) ஸம்யோக3மாவது அவற்றைப் பிரகாஶிப்பிக்கையே ஆகும்; தகுதியற்ற (கு3ணம் முதலிய) இடத்தில் (அறிவுக்கு) ஸம்யோக3மாவது—அவற்றோடு சேர்ந்திருப்பவற்றோடு ஸம்யோக3மே ஆகும்" என்று சொல்லப்பட்டது. இதன் பொருளாவது— "ஸம்யோக3த்திற்குத் தகுதியுள்ள (த்3ரவ்யம் முதலான) வஸ்துக்களில் நிகழ்காலத்திலிருக்கைமுதலானவற்றோடு கூடிய அவற்றைப் பிரகாஶிப்பிக்கையே (அறிவுக்கு அவற்றோடு) ஸம்யோக3மாகும்; தகுதியற்ற (கு3ணமான) ரூபம் முதலானவற்றைப் பிரகாசமடையச் செய்வது அவற்றோடு சேர்ந்த ஆஶ்ரயங்கள் அல்லது கார்யங்கள் அல்லது காரணங்கள் ஆகியவற்றோடு ஸம்யோக3மாகும்" என்கை.]

21. ந்யாயஸித்3த4ாஞ்ஜநம் — பு3த்3தி4பரிச்சே2த3ம். "உக்தஞ்ச ராமமிஶ்ரை: ஷட3ர்த்த2ஸங்க்ஷேபே — 'வேத்3யபே4தா3தீ4பே4த3: ஸுக2ம், அந்யாத்3ருஷ்டே:' இத்யாதி3 ।" [ஷட3ர்த்த2ஸங்க்ஷேபத்தில் ஸோமாசியாண்டானுலும் "குறிப்பிட்ட விஷயங்களால் வரும் பு3த்3தி4 விஶேஷமே ஸுக2ம்; வேறு காணப்படாமையால்" என்று தொடங்கிச் சொல்லப்பட்டது.]

22. ந்யாயஸித்3தா3ஞ்ஜநம் — அத்3ரவ்யபரிச்சே2த3ம். ''தது3க்தம் அந்வயாதி4கரண பே4த3ாபே4த3 விரோத4நித3ர்ஶநே விவரணகாரை: —'யதா2 ஶீதம் ந கதா3சித்3ப்யுஷ்ணம்—வாய்வௌஷ்ண்யம் து தத்ஸ்த2ாக்3நே:;நது தத்த்வாகாராத்| பாகஜோ ஹி கு3ண: பாகாத் அபைதி இதி ஹி தத்வவித3:| வஹ்நிருபாநுபலம்ப4: துல்யருபாபி4பூ4வாத், தத்ஸ்பர்ஶோபலம்ப4ஸ்து அந்யஸ்பர்ஶாநபி4ப4வாத் இதி உபலப்3தி4வ்யவஸ்த2ாப்யம்' இதி |''.
[ அந்வயாதி4கரணத்தில் பே4த3ாபே4த3விரோத4த்தைக் காட்டும்போது விவரணகாரரான ஸோமாசியாண்டானுல் ''ஶீதஸ்பர்ஶமுடையது ஒருநாளும் உஷ்ணஸ்பர்ஶமுடையதாயிராது. (உஷ்ணமுள்ள இடத்தில் உள்ள) வாயுவின் உஷ்ணம் அதிலுள்ள நெருப்பினுடையதேயாகும்.(உஷ்ணமும்ஶீதமும் அல்லாதஸ்பர்ஶமுடைய)வாயுவின் இயல்வன்று. பாகத்தால் உண்டான கு3ணமே பாகத்தால் அழியும் என்றும், வாயுவின் அநுஷ்ணாஶீதஸ்பர்ஶம் பாகத்தால் உண்டானதாயல்லாமல் இயல்வானதாயிருக்கையால், அது வாயுவைச் சூடேற்றிபதால் அழியாதாகையால் முன் ஸ்பர்ஶம் அழிந்து வேறு ஸ்பர்ஶம் உண்டாகமாட்டாது என்றும் தத்துவம் அறிந்தவர்கள் கூறுகிறார்கள், அப்போது வாயுவில் இருக்கும் அக்னியின்ருபம் தெரியாமலிருப்பது, வாயுவிலுள்ள ப்ருதி2வீ நீர் முதலான துகள்களால் அது அடக்கப்பட்டிருப்பதாலேயே; அத்துகள்களால் வாயுவின் ஸ்பர்ஶம் அடக்கப்படாமையால் வாயுவின் ஸ்பர்ஶம் தோன்றுகிறது என்பது அனுப4வத்தைக்கொண்டு நிர்ணயிக்கத்தக்கது'' என்று சொல்லப்பட்டது.]

23 ந்யாயஸித்3த4ாஞ்ஜநம் — அத்3ரவ்யபரிச்சே2த3ம். ''யதுக்3தம் ஸமந்வயாதி4கரணே பே4த3ாபே4தி3மததூ3ஷண ப்ரஸங்கே3ந விவரணகாரை: '........' இதி. தந்நூநம் த4ர்மபூ4தஜ்ஞாநஸ்ய த்3ரவ்யத்வம் அநப்4யுபக3ச்ச2தாம் மதேந உக்தம்| அஸ்மந்மதே து அநுப4வ ஸம்ஸ்கார ஸ்ம்ருதீநாம் ஜ்ஞாநாவஸ்த2ாவிஶேஷருபத்வாத் ந கஶ்சித் தோ3ஷ:''
[ஸமந்வயாதி4கரணத்தில் பே4தாபே4த3வாதி3களின் மதத்தைக்

கண்டிக்கும்போது விவரணகாரரான ஸோமாசியாண்டான் அநுபவ ஸம்ஸ்கார ஸ்ம்ருதிகளைப்பற்றிச் சொல்லும்போது அவை அத்₃ரவ்யம் என்று தோன்றும்படி வாத₃ம் செய்திருப்பது, த₄ர்மபூ₄தஜ்ஞாநம் த்₃ரவ்யமென்று ஒப்புக்கொள்ளாதவர்களின் மதத்தைத் தழுவியதாகும். நம்முடைய மதத்தில் அநுப₄வஸம்ஸ்காரஸ்ம்ருதிகள் ஜ்ஞானத்தின் நிலைகளேயாகையால் தோ₃ஷமில்லை.]

24, ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — அத்₃ரவ்யபரிச்சே₂த₃ம். "அத்ர ச விபு₄த்₃ரவ்யேஷு பரிமாணம் நாஸ்தீத்யேகே; அபரிமித ப்ரத்யயாத் | உக்தம் ஹி ஸ்ரீவேதா₃ர்த்த₂ ஸங்க்₃ரஹ வ்யாக்₂யாநே அநந்தபத₃வ்யாக்₂யாந த₃ஶாயாம் ஸ்ரீராமமிஶ்ரை: —'வஸ்து பரிச்சே₂தோ₃ வஸ்துந: பரிமாணம் | தே₃ஶபரிச்சே₂த₃ஸ்து தத்கார்ய:' இத்யுக்த்வா, 'அபரிச்சே₂த₃ஸ்து ந கு₃ண:' இத்யாதி₃ | ... .. இத₃ஞ்ச பரிமாணாக்₂யம் கு₃ணாந்தரம் விவரணகாராதி₃பி₄: ஸ்வீக்ருதம் | ஜந்மாத்₃யதி₄கரண விவரணேऽபி ஹ்யுக்தம்— 'வஸ்து பரிச்சே₂தோ₃ வஸ்து பரிமாணம் | தே₃ஶபரிச்சே₂த₃ஸ்து தத்₃தே₄துக:' இத்யாதி₃ |" [விபு₄த்₃ரவ்யங்களுக்குப் பரிமாணம் இல்லை என்று சில ஆசார்யர்கள் கூறுகிறார்கள். அளவிட இயலாததாகவன்றோ அவை உணரப்படுகின்றன. இவ்விஷயம் வேதா₃ர்த்த₂ ஸங்க்₃ரஹவ்யாக்₂யானத்தில் அநந்தபத₃த்தை விவரிக்கும்போது ஸோமாசியாண்டானால் "வஸ்து பரிச்சே₂த₃ம் வஸ்துவின் பரிணாமமே; தே₃ஶபரிச்சே₂த₃ம் அதன் கார்யமாகும்" என்று கூறி, "அளவிட இயலாமை கு₃ணமன்று" என்று தொடங்கிச் சொல்லப்பட்டது...பரிமாணம் என்னும் இது விவரணகாரர் முதலானவர்களால் ஒரு தனி கு₃ணமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. அவர் ஜந்மாத்₃யதி₄கரணத்தின் விவரணத்திலும் "வஸ்து பரிச்சே₂த₃ம் வஸ்துவின் பரிமாணம்; தே₃ஶபரிச்சே₂த₃ம் அதன் விளைவாகும்" என்று தொடங்கிக் கூறினாரன்றோ.]

25. ந்யாய ஸித்3த4ாஞ்ஜநம். அத்3ரவ்ய பரிச்சே2த3ம் ஸாத்3த3ஶ்யவிசாரம்— "அத்ர யதுக்தம் விவரணே— 'தத்தத்3 வஸ்து பஶ்யதாம் தத்தத்3வயவவிந்யாஸ விஶேஷலக்ஷணம் ஸம்ஸ்த2ாநமவப4ாஸதே| நநு—ப்ரதிவ்யக்திபே4த3ாத் ஸம்ஸ்த2ாநஸ்ய கத2ம் வ்யுத்பத்தி:? அதை2க்யம்; தர்ஹி நாஸாத4ாரணதா| நைதத் | உபாதி4தோऽபி வ்யுத்பத்தே:, யத2ா வாலதி4த: பஶு ஶப்3த3ஸ்ய | ஸாத்3ருஶ்யம் ச உபாதி4:' இத்யாதி3"*

26. ந்யாய பரிஶுத்3தி4-ஶப்3த3ாத்4யாயம்—1— அந்விதாபி4தா4ந—அபி4ஹிதாந்வயவாதங்கள். "வ்யாக்2யாதம் ச ப4ாஷ்யாதி3கம் அந்விதபரதயா விவரணே ஸ்ரீராமமிஶ்ரை:| தத2ா ஷட3ர்த்த2 ஸம்க்ஷேபேऽபி—'ஶப்3த3ஶ்ச ஸ்வத: ஶக்யம் அந்விததயா போ3தயதி. அஸப்4வே அர்த்த2ாந்தரம் இதி ஹி வ்யுத்பத்தி:' இத்யாத்3யுக்தம்" *

27. ந்யாயபரிஶுத்3தி4—ஶப்3த3-1 "யத்து நலோக வ்யுத்பத்தி ஹாநி:. தத்ரைவ ஶக்தே:' இதி ஷட3ர்த்த2 ஸம்க்ஷேபே ஸ்ரீராமமிஶ்ரைருக்தம், தத3பி தத்ர ஶக்த்யப4ாவப்ரதிக்ஷேபபரம்" *

28. ஸ்ரீதேஶிகர் அருளிய ஸ்தோத்ரப4ாஷ்யம்—"அத்ர ஸ்த2ாநவாசிநாம் ஶப்3த3ாநாம் பரமாத்மஸ்வருபபரத்வப்ரதிக்ஷேபாயோக்தம் ஷட3ர்த்த2ஸங்க்ஷேபே — 'வ்யதிரேக—அதி4கரண — நிவாஸ ஶப்3தை3:' இதி" [வேத3 சாஸ்த்ரங்களில் மோக்ஷ ஸ்த2ானத்தைச் சொல்லும் ('பத3ம்' முதலான) சொற்கள் (ப்ராப்யம் முதலான பொருள்களைக் காட்டுகையால்) பரமாத்ம ஸ்வரூபத்தைச் சொல்லுகின்றனவாகையால் அவற்றிலிருந்து மோக்ஷ ஸ்த2ானம் ஸித்3தி4க்காது என்னும் கூற்றைத் தள்ளுவதற்காக ஷட3ர்த்த2 ஸம்க்ஷேபத்தில் (சோமாசியாண்டான்) "(விஷ்ணுவின் பத3ம் என்று ஸ்வரூபத்தைக்காட்டிலும்) வேறுபடுத்திக் கூறுகையாலும், (விஷ்ணுவுக்கும் நித்யஸூரிகளுக்கும்) இருக்குமிடமாகவும், வாஸஸ்த2ானமாகவும் கூறுகையாலும் (இந்த வாக்யங்களை ஸ்வரூபத்தைச் சொல்லுபவையாகக் கூறமுடியாது.)" என்று அருளினர்.

---

* இனி தமிழில் பொருளை விளக்க அரிதான ஶாஸ்த்ரார்த்த2 விசாரங்களுக்குப் பொருள் எழுதப்படவில்லை. வித்வான்கள் அறிந்துகொள்ள ஸ்ரீஸூக்திகள் மட்டும் கொடுக்கப்படுகின்றன.

29. ஸ்ரீதேசிகர் அருளிய சரணாகதிகத்ய பாஷ்யம்—"உக்தம் ச ஸ்ரீராமமிஸ்ரை:—'உபயாதிஷ்டாநம் ச ஏகம் சேஷித்வம்' இதி" [ஸ்ரீராமமிஸ்ரரெனும் சோமாசியாண்டானாலும் (ஷடர்த்த ஸங்க்ஷேபத்தில்) "பிராட்டியிடமும் பெருமானிடமும் (உலகைக் குறித்து) உள்ள சேஷித்வம் ஒன்றே என்று கொள்ளவேண்டும் என்று அருளப்பட்டது ]

30. யாமுநாசார்யர் அருளிய தத்வபூஷணம்— "இந்த ஸித்தோபாயத்தை விட்டு ஸாத்யோபாயங்களில் அந்வயித்தானாகில் மரக்கலத்தை விட்டுத் தெப்பத்தைப் பற்றுமோபாதி" என்று நிர்வஹிப்பர் ஸோமாசியாண்டான்.

31. யாமுநாசார்யர் அருளிய ப்ரமேயரத்னம் —' 'விரோதி கழிந்தால் கைங்கர்யம் ஸ்வரூபப்ராப்தம்'' என்று ஸோமாசியாண்டான் அருளிச்செய்வர்.

# நடாதூராழ்வான் வைபவம்

## நடாதூராழ்வான் தனியன்

### (ஆறுயிரப்படிகுருபரம்பரையில் உள்ளது)

யஸ்மிந் பதம் யதிவரஸ்ய முகாத் ப்ரணேதுர்
நிஷ்க்ராமதேவ நிததே நிகமாந்தபாஷ்யம் |
தஸ்யைவ தம் பகவத: ப்ரியபாகிநேயம்
வந்தே குரும் வரதவிஷ்ணுபதாபிதாநம் ||

[ஸ்ரீபாஷ்யகாரரான யதிராஜரின் திருமுகத்தினின்றும் வெளிவரும் போதே, ஸ்ரீபாஷ்யமானது எவரிடம் அடியிட்டுத் தங்கிற்றோ, அந்த பகவத் பாஷ்யகாரருக்கு இனிய மருமகனாக எவர் இருந்தாரோ, அத்தகைய வரதவிஷ்ணுவெனும் திருநாமமுடைய ஆசார்யரை (நடாதூராழ்வானை) வணங்குகிறேன்.]

ஜ்ஞாநோத்தமோத்ததிநிராகரணப்ரதுஷ்யத்
ராமாநுஜார்யகருணாபரிணாஹபாத்ரம் |
வத்ஸாந்வவாயதிலகம் வஸதிம் குணாநாம்
வந்தாமஹே வரதவிஷ்ணுகுரும் வரேண்யம் ||

[ஞானத்தில் சிறந்தவராயிருந்தும் கர்வத்தை விட்டொழித்தமையினால் உகந்தருளிய எம்பெருமானாருடைய கருணைவெள்ளத்திற்குப் பாத்திரமாயிருந்தவராய், ஸ்ரீவத்ஸகுலத்திற்குத் திலகம் போன்றவராய், குணங்களுக்குக் கொள்கலமானவரான வரதவிஷ்ணுவெனும் சிறந்த ஆசார்யரை வணங்குகிறோம்.]

எம்பெருமானாருக்கு இரு ஸஹோதரிகள். ஒருத்தியின் குமாரர் வாதூல கோத்ரத்தில் உதித்த முதலியாண்டான். மற்றொருத்தியின் குமாரர் ஸ்ரீவத்ஸகோத்ரத்தில் உதித்தவராய், "வரத விஷ்ணு" என்னும் திருநாமம் உடையவராய், காஞ்சியில் அவதரித்த "நடாதூராழ்வான்" ஆவர். இவருடைய பேரராய் 'வரதாசார்யர்" என்னும் திருநாமம் உடையவரான நடாதூரம்மாள் எங்களாழ்வானின் சிஷ்யராய் இருந்தவர். நடாதூராழ்வான் அருளிய க்ரந்தமான மாநயாதாத்ம்யநிர்ணயத்திலிருந்து சில பகுதிகள் வேதாந்ததேசிகரால் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் எடுக்கப்பட்டுள்ளன. எம்பெருமானாரால் நியமிக்கப்பெற்ற நாலு ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸநாதிபதிகளுள் இவரொருவர். இவருடைய மாநயாதாத்ம்யநிர்ணயத்தில் 'அணுவான ஆத்மஸ்வரூபம் முக்திதசையில் விபுவாகிவிடுகிறது' என்று வாதம் செய்திருப்பது ப்ரஹ்மஸூத்ரம் முதலானவற்றுக்கு முரண்படுகையால் வைபவவாதமாகும் என்று வேதாந்ததேசிகர் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் காட்டினார். "கைவல்யத்தில் எல்லாக்கர்மமும் நசிப்பதில்லையாகையால் அது அழிவற்றதொரு ஐச்வர்யமே" என்றும் இவர் ஸாதித்திருப்பதாக தேசிகன் அங்கு எடுத்துள்ளார். முக்யமுக்தியல்லவாகையால் இதற்கு ஐச்வர்யமென்று பெயர்வைக்கலாம் என்று இவர் திருவுள்ளம் பற்றினாலும், ஆழ்வார்களையும், எம்பெருமானாரையும் பின்பற்றி, கைவல்யம் அழிவில்லாததே என்று காட்டியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. இவற்றிலிருந்து எம்பெருமானார் சிஷ்யர்களிடையிலேயே சில விஷயங்களில் கருத்து வேற்றுமை உண்டென விளங்குகிறது. தம்காலத்தில் சிஷ்யர்களிடையேயிருந்த சில கருத்து வேற்றுமைகளை எம்பெருமானாரே தடைசெய்யாமல் விட்டிருந்தார் என ஸ்ரீதேசிகனும் அருளியுள்ளார். இவர் வைபவத்தின் விரிவு எங்களாழ்வான் வைபவத்தில் காணலாம்.

## ஐதிஹ்யநிர்வாஹங்கள்

1. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். வைபவத்தின் தொடக்கத்திலுள்ள இரு தனியன்கள் ஆறுயிரப்படியில் உள்ளன.

2. வார்த்தாமாலை 283. வார்த்தை & விவரணம். a நடாதூர் ஆழ்வான் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கையைப் பிடித்துக்கொண்டு போகாநிற்க, நடுவில் திருவீதியிலே b ஒரு திருக்குலத்தில் ஸ்ரீவைஷ்ணவர் அணுகிவர, கைக்கொடுத்துக்கொண்டுபோகிற ஸ்ரீவைஷ்ணவர் அவரை ஜாதி நிரூபணம் பண்ணி, "கடக்கப்போ"

என்ன, ஆழ்வான் அத்தைக்கேட்டு மூர்ச்சித்தார்; மூர்ச்சை தெளிந்தபின்பு அருகுநின்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் 'இதுவென்' என்ன, 'திருக்குலத்திலே திருவவதரித்து, c இரண்டாற்றுக்கும் நடுவே வர்த்திக்கப்பெற்ற மஹாநுப₄ாவனு பறையன்? நெடுங்காலம் ஆத்மாபஹாரம் பண்ணித்திரிந்த நானன்றோ பறையன்' என்று அருளினார். [a நடாதூராழ்வான் — 'வரத₃விஷ்ணு' என்னும் திருநாமமுள்ளவர். எம்பெருமானாரின் மருமகனார்; நடாதூரம்மாளின் பாட்டனார். b குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்த குலத்தில் பிறந்தும், வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்கு ஆள் என்று உள்கலந்தவராகையாலே 'திருக்குலத்தார்' என்று திருநாமமிடப்பட்ட குலத்தில் பிறந்த ஸ்ரீவைஷ்ணவர். c இரண்டாற்றுக்கும் நடுவே—திருவரங்கத்திலே. இவ்வார்த்தை நடாதூராழ்வானின் மென்மைமிக்கநெஞ்சையும் நைச்யாநுஸந்த₄ானத்தையும் காட்டுகிறது ]

3. * ப்ரபந்நாம்ருதம் அறுபத்தோராம் அத்தியாயம் 76—84 ஶ்லோகங்களின்பொருள்—அக்காலத்தில் 'வரத₃விஷ்ணு' என்னும் திருநாமமுடைய (எம்பெருமானுடைய மருமகனை) நடாதூராழ்வானுக்குப் பல ஸ்ரீவைஷ்ணவோத்தமர்கள் ஶிஷ்யர்களாயிருந்தனர். அவர்களுக்கு நடாதூராழ்வான் அன்போடு ஸ்ரீப₄ாஷ்யத்தை உபந்யாஸமாக ஸாதித்து வந்தார். அந்த ஆசார்யஶ்ரேஷ்ட₂ரிடமிருந்து அப்போது ஸ்ரீப₄ாஷ்யார்த்த₂த்தை நன்கு கேட்ட அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அணைவரும் ஆசார்யரைப் பார்த்து "வரத₃விஷ்ணுவாசார்யரே! இப்போது எங்களுக்குச் செயற்கரிய உபாயமாகிற ப₄க்தியார்க்க₃ம் தேவரீரால் உபதே₃ஶிக்கப்பட்டது. இதற்கு நாங்கள் அதி₄காரிகள் அல்லர். எங்களுக்குப் பரமபத₃மடைய எளிய உபாயத்தைக் கூறுவீர்" என்று விண்ணப்பித்தனர். அதற்குமேல் அவ்வாசாரியர் அவர்களுக்கு ப்ரபத்தி மார்க்க₃த்தை உபதே₃ஶித்தார். "(மஹாவிஶ்வாஸம் தேவைப்படும்) இந்த ப்ரபத்தி மார்க்க₃த்திலும் எங்களுக்கு ஶக்தியில்லை" என்று அவர்கள் அவ்வாசாரியரிடம் கூறினர். இப்படி ஸ்ரீவைஷ்ணவ ஶிஷ்யர்களால் உரைக்கப்பட்டவராய், எல்லா அர்த்த₂ங்களையும் அறிந்தவரான அந்த நடாதூராழ்வான் அவர்களைப் பார்த்து "ஸ்ரீராமாநுஜருடைய திருவடித்தாமரையையே நெஞ்சில் அன்போடு

* இவ்விஷயம் சரமோபாயநிர்ணயத்தில் நடாதூரம்மாள் விஷயமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

த்4யானித்துக்கொண்டிருந்து, எப்போதும் அந்த ராமாநுஜாசாரியருக்குக் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டவர்களாய், தினந்தோறும் யதிராஜருடைய மங்க3ளமான சரித்திரங்களைக் கேட்டுக்கொண்டும் வாசித்துக்கொண்டும் மோக்ஷமடைவதில் கவலையில்லாதவர்களாய் எப்போதும் வாழ்வீர்களாக'' என்று ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்கு உபாயத்தைக் கூறினர்.

4. ந்யாயஸித்3த4ாஞ்ஜநம் — ஜட3த்3ரவ்யபரிச்சே2த3ம் — ''அஶரீரம் ப்ராணத4ார்யமேவ யத்3த்3ரவ்யம் புருஷோபகாரகம் ததி3ந்த்3ரியம்' இதிவரத3விஷ்ணுமிஶ்ரைருக்தம்'' [ஶரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டதாய், ப்ராணனால் த4ரிக்கப்படுவதாய், புருஷனுக்கு உபகாரம் செய்வதாய் உள்ளத்3ரவ்யம்'' என்பது இந்த்3ரியலக்ஷணம் என்று நடாதூராழ்வான் உரைத்தார்.]

5. ந்யாயஸித்3த4ாஞ்ஜநம் — ஜட3த்3ரவ்யபரிச்சே2த3ம் — ''யத்து வரத3விஷ்ணு மிஶ்ரைர் நிரவயவாத்மஜ்ஞாந ஸங்கோச விகாஸத்3ருஷ்டாந்ததயா ப்ரப4ாம் உபந்யஸ்யோக்தம் — ப்ரப4ாயா நிரவயவத்வமவயவாநுபலம்ப4ாத் இதி; தத் சே2த3ந பே4த,நயோரத்3யாவயவ விரஹாபி4 ப்ராயேணோதி மந்தவ்யம்|'' [வரத3விஷ்ணுமிஶ்ரரும் அவயவமற்ற ஆத்மஜ்ஞாநத்தின் சுருக்க விரிவுகளுக்கு எடுத்துக்காட்டாக ப்ரபையை (ஒளிக்கற்றையை)ச் சொல்லி ''ப்ரபைக்கு அவயவம் காணப்படாமையாலே அது அவயவமற்றதே'' என்று கூறியிருந்தபோதிலும், வெட்டவோ, பிரிக்கவோ தக்க அவயவம் ப்ரபை4க்கு இல்லை என்றே அதற்குக் கருத்துரைக்கவேண்டும்.]

6. ந்யாயஸித்3த4ாஞ்ஜநம் — ஜடத்3ரவ்யபரிச்சே2த3ம் — ''வரத3விஷ்ணு மிஶ்ரைஸ்து த்3ரவ்யம் ச ஷட்3விம்ஶதி வித4ம் ஸத்வ ரஜஸ் தமாம்ஸி' இத்யாதி3நா தி3க்3த்3ரவ்யம் ப்ருத2 கே3வ ஸங்க்2யாதம் | 'ஆகாஶ கால தி3ஶஶ்சக்ஷுரிந்த்3ரியேண' இதி தஸ்ய சாக்ஷுஷத்வமப்யுக்தம் | 'தி3க்காலௌ சாக்ஷுஷௌ ப்ரத்யக்ஷ பரத்வாபரத்வ காரண ஸம்யோகா3ஶ்ரய த்வாத்; க4டவத்' இத்யநுமாநேநாவக3ம்யதே இதி ச தத்ஸாதி4தம் ச | அத்ர ப்ருத2க்த்வம் ப4ாஷ்ய விருத்3த4 ஸத்வாதி3 த்3ரவ்ய பரிக3ணநவத3ந்யபரதயா நிர்வாஹ்யமிதி |'' [வரத3 விஷ்ணுமிஶ்ரரால் ''த்3ரவ்யங்கள் இருபத்தாறு வகைப்பட்டவை; 1. ஸத்வம் 2. ரஜஸ். 3. தமஸ்'' என்று தொடங்கி 'தி3க்3' என்னும் த்3ரவ்யம் தனியாகக் கணக்கிடப்பட்டது. '' ஆகாஶம்,

காலம், தி3க் ஆகிய மூன்று த்3ரவ்யங்களும் கண்ணால் அறியப்படுவதாகவும் கூறப்பட்டது. "திக்கும்காலமும் கண்ணால் அறியப்படுபவை. 'ப்ரத்யக்ஷமாயிருக்கும் பரத்வாபரத்வங்களுக்கு அஸமவாயி காரணமான க4டஸம்யோக3த்திற்கு இருப்பிடமாயிருக்கையால் 'தி3க்' ஸித்3தி4க்கிறது; கடம்போலே' என்னும் அனுமானத்தால் இது தேறுகிறது." என்று இவ்விஷயம் அனுமானத்தாலும் அவரால் ஸாதிக்கப்பட்டது ஸ்ரீபா4ஷ்யத்துக்கு முரணாக ஸத்வம் முதலானவற்றை த்3ரவ்யமாகக் கொண்டதுபோலே தி3க்கைத் தனி த்3ரவ்யமாகக்கொண்டதும் வேறுவகையில் நிர்வஹிக்கத் தக்கது.

7. ந்யாயஸித்3த4ாஞ்ஜநம்— ஜீவபரிச்சே2த3ம்— "அதீ4 கர்மதயா ப்ரகாஶமாநத்வ ஜ்ஞாநாத்ம ஸம்ப3ந்த4ப்ரதிஸம்ப3ந்தி4த்வாதீ3நி பரம் அபா3தி4தாநி வரத3விஷ்ணுமிஶ்ரோக்தாநி" [விஷ்ணுமிஶ்ரரால் சொல்லப்பட்ட குறையற்ற ஆத்மலக்ஷணங்களாவன:— 1. வேறு ஜ்ஞாநத்தை எதிர்பாராமல் ப்ரகாஶிப்பதாயிருக்கை. 2. ஜ்ஞாநத்துக்கும் ஆத்மாவுக்கும் உள்ள ஸம்ப3ந்த4த்துக்கு நிரூபகமாயிருக்கை முதலானவை.]

8. ந்யாயஸித்3த4ாஞ்ஜநம் — ஜீவபரிச்சே2த3ம்— "வரத3 விஷ்ணு மிஶ்ரைஸ்து ஸம்ஸாரத3ஶாயாம் ஸ்வரூபஜ்ஞாநயோ: ஸங்கோசாத3ணுபரிமாணமாத்ம ஸ்வரூபம் । மோக்ஷத3ஶாயாம் து ஸர்வக3தம் ஸர்வவ்யாபி, ஜ்ஞாநம் ச விஸ்தீர்ணதயா ப்ரகாஶதே । அயமர்த்த2: - வாலாக்3ரஶதபா4க3ஸ்ய ஶததா4 கல்பிதஸ்ய ச । பா4கோ3 ஜீவ: ஸ விஜ்ஞேய: ஸ சாநந்த்யாய கல்பதே ॥ இதி ஶ்ருத்யாऽவக3ம்யதே । தத3ாஹ ப4க3வாந் பராஶர: — 'விஷ்ணுஶக்தி: பரா ப்ரோக்தா க்ஷேத்ரஜ்ஞாக்2யா தத2ாऽபரா இதி,' இத்யாதி3நா ஜீவஸ்யாபி ஸங்கோச விகாஸ யோகி3த்வமுக்தம்। அயமேவார்த்த2: 'நித்யோ வ்யாபீ' இத்யாத்ம ஸித்3தி4 வசநமுபாத3ாய மாநயாத2ாத்ம்ய நிர்ணயே ப்ரபஞ்சித:। ததே2தத் ஸூத்ரகாதி3 விரோதா4த்3 வைப4வவசநம் ।" [வரத3விஷ்ணு மிஶ்ரரால், "ஸம்ஸாரத்திலிருக்கும்போது ஸ்வரூபமும், அறிவும் (கர்மத்தால்) சுருங்கியிருக்கையால், ஆத்மஸ்வரூபம் அணுபரிமாணமுடையதாயுள்ளது. மோக்ஷமடைந்தவுடன் ஆத்மஸ்வரூபமும் ஞானமும் எங்கும் பரவி வ்யாபித்து விளங்குகின்றன. இவ்வர்த்தம்—'ஒரு நெல்நுனியின் பதினாயிரத்தில் ஒருபங்காயிருக்கும் ஜீவன் (முக்தியில்)எங்கும்பரவியவனாகிறான்' என்னும் வேத3

வாக்யத்திலிருந்து விளங்குகிறது. ப₄க₃வான் பராசரமஹர்ஷியும் 'விஷ்ணுவின் ஸ்வரூபம் மேலானது; க்ஷேத்ரஜ்ஞன் (ஜீவன்) என்னும் விஷ்ணுசக்தி தாழ்ந்தது; (எங்கும் பரவிய அந்த க்ஷேத்ரஜ்ஞசக்தி விஷ்ணுஸ்வரூபத்தால் வ்யாபிக்கப்பட்டுள்ளது.)' என்று இவ்விஷயத்தை வெளியிட்டார் '' என்று தொடங்கி ஜீவஸ்வரூபமும் சுருக்கவிரிவுகளை உடையது என்று கூறப்பட்டது. 'நித்யோ வ்யாபீ' என்று ஆளவந்தார் ஆத்மஸித்₃தி₄யில் ஜீவனுக்கு வ்யாபகத்வத்தைக் கூறும் வசனத்தை ப்ரமாணமாகக் காட்டி, மாநயாதா₂த்ம்யநிர்ணயத்தில் இவ்விஷயமே அவரால் விளக்கப்பட்டது. இவருடைய இந்த ஸ்ரீஸூக்திகள் ப்₃ரஹ்மஸூத்ரம் ஸ்ரீபா₄ஷ்யம் முதலானவற்றோடு முரண்படுகையால், ஆத்மாவுக்குப் பெருமைசேர்ப்பதற்காகக் கூறப்பட்டவை என ஔபசாரிகமாகக் கொள்ளத்தக்கவை.]

9. ந்யாயஸித்₃தா₄ஞ்ஜநம் ஜீவபரிச்சே₂த₃ம்— ''ஏவம் வரத₃விஷ்ணுமிஶ்ரைரபி 'நந்வேவம் நிஶ்ஶேஷ கர்மக்ஷயாபா₄வாத் கைவல்யப்ராப்தௌ ந முக்த: ஸ்யாத் இத்யாஶங்க்யோக்தம்— 'ஸத்யம், அமுக்த ஏவ ஸ: மோக்ஷஸ்ய பரமாத்மாநந்தா₃நுப₄வரூபத்வாத், தஸ்ய ப்₃ரஹ்மாநந்தா₃நுப₄வாபா₄வாத் ஸ்வாநந்த₃மாத்ராநுப₄வாத்। ஸ்வாநந்த₃மாத்ராநுப₄வஶ்ச, 'யோகி₃நாமம்ருதம் ஸ்தா₂நம் ஸ்வாத்ம ஸந்தோஷிணஶ்ச யே இதி ப₄க₃வத் பராஶரவசநாத்। முக்திவ்யதிரிக்தமநபாயி யோக₃ஸாத்₄யமைஶ்வர்யம் ' இதி ।'' [இவ்வண்ணமே வரத₃விஷ்ணுமிஶ்ராராலும் ''கர்மம் முழுவதும் கழியாமையாலே கைவல்யத்தை அடைந்தவன் முக்தனல்லன் என்று சொல்லவேண்டிவருமே'' என்னும்கேள்வியை எழுப்பிக்கொண்டு ''உண்மையே, பரமாத்மாநந்த₃த்தை அநுப₄விப்பதே மோக்ஷமாகையாலும், அவனுக்கு ப்₃ரஹ்மானந்த₃த்தை அநுப₄விப்பது இல்லாமையாலும் தன் ஆத்மாவைமாத்திரமே அவன் அனுப₄விக்கிறுகையாலும் அவன் முக்தனல்லன். பராசரமஹரிஷியும் ''தன் ஆத்மாவை மாத்திரம் அனுப₄விக்கும் யோகிகளுக்கு அழியாத ஸ்தா₂னம் உள்ளது'' என்று தன் ஆத்மானந்த₃த்தை அனுப₄விப்பது மாத்திரமே அவனுக்கு உள்ளது என்று கூறினர். ஆகையால், கைவல்யம் முக்தியைக்காட்டிலும் வேறுபட்டதாய், யோக₃த்தினால் ஸாதி₄க்கப்படுவதாய், அழியாததான ஓர் ஐஶ்வர்யம் என்றே கொள்ளவேண்டும்'' என்று பதிலுரைக்கப்பட்டது.]

10. ந்யாயஸித்3தா4ஞ்ஜநம் — நித்யவிபூ4திபரிச்சே2த3ம் — "அநித்யமபி விஜ்ஞாநமீஶஸ்யாஸ்தீதி கேசந | ததா2 த்வப்ராக்ருதாக்ஷாதே3ஸ் தத்2விகாஸோபயோகி3தா || யதோ2க்தம் வரத3 விஷ்ணு மிஶ்ரை:— 'ஈஶ்வர ஜ்ஞாநஸ்ய அநித்ய ஸர்வவிஷய நித்ய ஜ்ஞாந க்3ருஹீதக்3ராஹித்வாத்' இதி | அத: ஸித்3த4ம் நித்யாநித்யேச்சா2பே4தா3த் ஈஶ்வராதே3ர் நித்யஶரீராதி3மத்த்வம் |" [ஸர்வேஶ்வரனுக்கும் அநித்யமான ஜ்ஞாநம் உண்டென்று சிலர் கருதுகிறார்கள். அவர்கள் பக்ஷத்தில் அப்ராக்ருதமான கண் முதலான ஸர்வேஶ்வரனுடைய இந்த்ரியங்கள் அந்த அநித்ய ஜ்ஞாநத்தை உண்டாக்குவதற்குப் பயன்படும்; (அநித்ய ஜ்ஞாநம் இல்லை என்பவர்கள் பக்ஷத்தில் ஸர்வேஶ்வரனுக்குக் கண் முதலானவை அலங்காரமாத்திரமாகவே இருப்பவை), வரத3விஷ்ணுமிஶ்ரர் 'ஈஶ்வரனுடைய அநித்ய ஜ்ஞாநமாவது எல்லா விஷயமாகவும் உள்ள அவனுடைய நித்ய ஜ்ஞாநத்தால் அறியப்படுவதையே அறிகிறதாகையால்' என்று அநித்ய ஜ்ஞாநம் உண்டென்னும் இந்தப் பக்ஷத்தை ஆதரித்தார். ஆகையால் நித்யமாகவும் அநித்யமாகவும் இருக்கும் விருப்பத்தைவிட்டு ஈஶ்வரன் நித்யஸூரிகள் முதலானவர்களுக்கு நித்யமாகவும் அநித்யமாகவும் இருக்கும் ஶரீரம் ஜ்ஞாநம் முதலானவை உண்டென்று தேறுகிறது.]

11. ந்யாயஸித்3தா4ஞ்ஜநம்-பு3த்3த்3தி4பரிச்சே2த3ம்—"யத்து வரத3விஷ்ணு மிஶ்ரை: 'ஸுக2து3:க்கே2 ஜ்ஞாந ரூபே ஏவ' இத்யுக்த்வா அநந்தரமுக்தம் 'இச்சா2த்3வேஷப்ரயத்நா மாநஸ ப்ரத்யக்ஷா:' இதி; தத் ஜ்ஞாநம் இச்சா2தி3கு3ணாந்தர ஸத்பா4வாபி4மாநமூலம் வா, பரமத மூலம் வா | ஸுக2து3:க்க2யோ: ஜ்ஞாநரூபத்வே ச இச்சா2தி3ஷு கோ விஶேஷ:" [வரத3விஷ்ணுமிஶ்ரர் "ஸுக2 து3க்க2ங்கள் ஜ்ஞாந ரூபமானவையே" என்று கூறிவிட்டு, அடுத்தபடியாக "இச்சா2த்3வேஷ ப்ரயத்நங்கள் மநத்தால் ப்ரத்யக்ஷமாக அறியப்படும் தனிக்குணங்கள்" என்று கூறினார். இப்படி அவர் கூறியதை, இச்சை முதலான தனிக்குணங்கள் உள்ளன என்ற அபிமானத்தால் ஏற்பட்டதாகவோ பிறர் மதத்தைத் தழுவியதாகவோ கொள்ளவேண்டும். ஸுகதுக்கங்களை ஜ்ஞாநரூபமானவை என்று ஒப்புக்கொண்டபின்பு இச்சை முதலானவற்றை ஏன் தனிக்குணமாகக் கொள்ளவேண்டும்?]

12. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம்—பு₃த்₃தி₄பரிச்சே₂த₃ம்—''வரத₃விஷ்ணுமிஶ்ரைஸ்து ஏவமுக்தம்-'ஜ்ஞாநம் த்₃ரவ்யம் ஸம்யோக₃ா-த்₃ருஷ்டாந்யத்வே ஸதி ப₄ாவநாகாரணத்வாத் ஆத்மவத்' இதி'' [வரதவிஷ்ணுமிஶ்ரர் ஜ்ஞானத்தை த்₃ரவ்யம் என்று ஸாதி₄ப்பதற்காக ''ஜ்ஞாநம் த்₃ரவ்யமே; ஸம்யோக₃ம் அத்₃ருஷ்டம் ஆகிய இரண்டைக்காட்டிலும் வேறுபட்டதாய், ப₄ாவனைக்குக் காரணமாய் இருக்கையால்; ஆத்மாவைப்போலே'' என்னும் அனுமானத்தைக் கூறினர்.]

13. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — பு₃த்₃தி₄பரிச்சே₂த₃ம்— ''உக்தம் ச ஶ்ரீவரத₃விஷ்ணுமிஶ்ரைரபி —ஸுக₂து₃:க்கே₂ தாவத் அநுகூல ப்ரதிகூல விஷயே ஜ்ஞாநே ஏவேதி ந கு₃ணோஷ்வந்தர்ப₄ாவ ஏவ—இத்யாதி₃|'' [''ஸுகதுக்கங்கள் முறையே அனுகூல ப்ரதிகூலங்களைப் பற்றிய ஜ்ஞாநங்களேயாகையால் அவற்றைக் குணமாகக் கொள்வதில்லை.'' என்று வரதவிஷ்ணு மிஶ்ரராலும் சொல்லப்பட்டது-]

14. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — பு₃த்₃தி₄பரிச்சே₂த₃ம் — ''அப்₄யுபக₃தம் ஹி இந்த்₃ரிய ஜந்ம அநித்யமபி ஜ்ஞாநமீஶ்வரஸ்யாஸ்தீதி வரத₃விஷ்ணுமிஶ்ராதி₃பி₄; யது₃க்தம் — 'ஈஶ்வரஜ்ஞாநஸ்யாநித்யஸ்ய ஸர்வ விஷய நித்ய ஜ்ஞாந க்₃ருஹீத க்₃ராஹித்வாத்' இதி, 'அஸ்யாபி இந்த்₃ரியஜத்வாத்' இதி ச|'' [ஈஶ்வரனுக்கும் இந்திரியங்களால் உண்டாகும் அநித்ய ஜ்ஞாநம் உண்டென்று வரதவிஷ்ணுமிஶ்ரர் முதலானோர் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்; ''ஈஶ்வரனுடைய அநித்ய ஜ்ஞாநமானது எல்லா விஷயத்தையும் கிரஹிக்கும் அவனுடைய நித்ய ஜ்ஞாநத்தால் அறியப்படுவதையே அறிவதாகையால்'' என்றும், ''இந்த அநித்ய ஜ்ஞாநமானது இந்த்ரியத்தால் உண்டாவதாகையால்'' என்றும் அவர் கூறினரன்றோ.]

15. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — அத்₃ரவ்ய பரிச்சே₂த₃ம்—''ஏதது₃பேக்ஷயாச வரத₃விஷ்ணுமிஶ்ரைருக்தம்—கு₃ணாஶ்சாநந்தா: இதி|'' [இதனாலேயே வரதவிஷ்ணுமிஶ்ரர் ''குணங்கள் கணக்கற்றவை'' என்று கூறினர்.]

16. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — அத்₃ரவ்யபரிச்சே₂த₃ம்—''யத்து 'த்₃ரவ்யம் ஷட்₃விம்ஶதிவித₄ம்—ஸத்வ ரஜஸ் தமாம்ஸி'

இத்யாதி₃நா ஸத்வ ரஜஸ் தமஸாம் த்₃ரவ்யத்வமுக்தம் வரத₃ விஷ்ணுமிஶ்ரை: தத்ஸாங்க்₂யா தி₄கரண ஸூத்ரபா₄ஷ்யாதி₃விரோத₄ாச்சாஸங்க₃தப் ||" ["த்₃ரவ்யம் இருபத்தாறுவகைப்பட்டது—1. ஸத்வம், 2. ரஜஸ், 3. தமஸ்" என்று தொடங்கி வரதவிஷ்ணு மிஶ்ரர் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களை த்₃ரவ்யம் என்று கூறியது ஸாங்க்₂யா தி₄கரணத்திலுள்ள ப்₃ரஹ்ம ஸூத்ரத்திற்கும், அதன் ஸ்ரீபா₄ஷ்யம் முதலானவற்றுக்கும் முரண்படுகையால் பொருந்தாது.]

17. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் -- அத்₃ரவ்யபரிச்சே₂த₃ம் -- "உக்தஞ்ச வரத₃விஷ்ணுமிஶ்ரை: —'ஶக்தேர் கு₃ணத்வேऽபி கு₃ண கர்மணோஸ் தத்ஸம்ப₄வ:' இதி|" ["ஶக்தி என்பது கு₃ணமாயினும் (மற்ற) கு₃ணங்களுக்கும் கர்மங்களாகிற செயல்களுக்கும் ஶக்தி உண்டு" என்று வரத₃விஷ்ணுமிஶ்ரராலும் சொல்லப்பட்டது.]

18. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — அத்₃ரவ்யபரிச்சே₂த₃ம்— "யத்து வரத₃விஷ்ணுமிஶ்ரைருக்தம் — 'பா₄வநாகல்பகப்ரமாணேநைவ ஸ்தி₂ராத்மாஶ்ரயத்வ கல்பநாத் அஸ்தி₂ரஜ்ஞாநாஶ்ரயத்வஸ்ய ப்ரமாணாபா₄வாத்' இதி, தந்நூநம் பரமதாபி₄ப்ராயேண உக்தம்; ஸ்வேநைவ ஜ்ஞாநஸ்ய த்₃ரவ்யத்வநித்யத்வயோ: ஸமர்த்த₂நாத்|" ["வாஸனை எனப்படும் ஸம்ஸ்காரத்தைக் கல்பிக்கும் ப்ரமாணமே, அது நித்யமான ஆத்மாவிலிருப்பதாகக் கல்பிக்கையால், அநித்யமான ஜ்ஞாநத்திலிருக்கிறது என்று சொல்ல ப்ரமாணமில்லை" என்று நடாதூர் ஆழ்வான் உரைத்தது பிறர்மதத்தைத் தழுவியதாகவே இருக்கவேண்டும். தாமே ஜ்ஞாநம் த்₃ரவ்யமாகவும், நித்யமாகவுமாகிறது என்று அவர் நிலை நிறுத்தியுள்ளாரன்றோ ]

19. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — அத்₃ரவ்யபரிச்சே₂த₃ம் — "வரத₃விஷ்ணுமிஶ்ராதி₃பி₄ஸ்து ஆத்மஸித்₃தி₄வசநாநுஸாரேண அதிரிக்த ஸங்க்₂யா அப்₄யுபக₃தா| யதே₂ாக்தம்—'ப்ரத்யக்ஷாஶ்ரயவர்த்திஸங்க்₂யா பரிமாண ப்ருத₂க்த்வ ஸம்யோகவிபா₄க₃ பரத்வாபரத்வ த்₃ரவத்வ ஸாத்₃ருஶ்யாநி ப்ரத்யக்ஷாணி' இதி, கு₃ணேஷு ச ஸங்க்₂யாதி₃ ஸத்₃பா₄வ உக்த: —'கு₃ணாஶ்ரித ஸங்க்₂யாதீ₃நாம் ஸம்யுக்தாஶ்ரிதத்வேந க்₃ரஹணம்' இதி | ஏதத₃பி பரமதாபி₄ப்ராயேணேதி மந்தவ்யம்|" [வரத₃விஷ்ணு மிஶ்ரர் முதலானோரும், ஆத்மஸித்₃தி₄யில் (ஆளவந்தார் வைஶேஷிகர்களை பயமுறுத்துவதற்காக) ஸங்க்₂யை (எண்ணிக்கை) என்னும்

தனி குு₃ணத்தைக் கூறியதை அநுஸரித்து 'ஸங்க்₂யை'என்னும் தனிக் குணம் ஒப்புக்கொள்ளப்பட்டது. 'ப்ரத்யக்ஷமான பொருளிலிருக்கும் (1) ஸங்க்₂யை (2) பரிமாணம் (3) ப்ருத₂க்த்வம் (தனித் தன்மை) (4) ஸம்யோக₃ம் (5) விப₄ாக₃ம் (6) பரத்வம் (7) அபரத்வம் (8) த்₃ரவத்வம் (9) ஸாத்₃ருஶ்யம் ஆகிய கு₃ணங்களும் ப்ரத்யக்ஷங்களே' என்று அவர் கூறினுரன்றே. கு₃ணங்களிலும் ஸங்க்₂யை முதலானவையிருப்பதாகவும், 'கு₃ணங்களில் இருக்கும் ஸங்க்₂யை முதலானவற்றை அந்த கு₃ணங்களையுடைய கு₃ணியில் இருப்பவையாகவே அறிகிறேம்' என்னும் வாக்யத்தில் உரைத்தார். இதுவும் பிறர் மதக்கருத்தைத் தழுவியதென்றே கொள்ளவேண்டும்.]

20. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — அத்₃ரவ்ய பரிச்சே₂த₃ம்— "உக்தஞ்ச மாநயாத₂ாத்ம்ய நிர்ணயே ப்ரத்யக்ஷலக்ஷணாநந்தரம் வரத₃விஷ்ணுமிஶ்ரை: —'தச்ச த்₃ரவ்யகு₃ணகர்மவிஷயம்— ஸகலபதா₃ர்த்த₂ஜாதஸ்ய த்ரிஷ்வேவாந்தர்ப₄ாவாத் | தத்ர த்₃ரவ்ய லக்ஷணம் ஸம்யோகீ₃தி, அகர்மாஸம்யோகீ₃ கு₃ண இதி கு₃ணலக்ஷணம்' இத்யாதி₃ | ப்ரத்யக்ஷத்வஞ்ச கர்மணோ ந்யத்ராபி தைருக்தம்—'கர்மணஸ்து ஸாக்ஷாத்₃ஷத்₃ரவ்யவர்த்திநஶ் சாக்ஷுஷத்வம்' இத்யாதி₃நா |" [வரத₃விஷ்ணுமிஶ்ரர் மாநயாத₂ாத்ம்ய நிர்ணயத்தில் ப்ரத்யக்ஷலக்ஷணத்தை விசாரித்தபிறகு "ப்ரத்யக்ஷம் த்₃ரவ்யம், கு₃ணம், கர்ம (செயல்) என்னும் மூன்றையும் விஷயமாகக்கொண்டது. எல்லாப்பொருள்களும் இந்த மூன்றுக்குள் அடங்கி விடுகின்றனவன்றே. இவற்றில் 'ஸம்யோக₃த்தை உடையது த்₃ரவ்யம்' என்பது த்₃ரவ்யலக்ஷணம்; 'கர்மமாகிற செயலைக் காட்டிலும் வேறுபட்டதாய், ஸம்யோக₃மில்லாததாயிருப்பது கு₃ணம்' என்பது கு₃ணலக்ஷணம்" என்று தொடங்கிக் கூறுகிறுர். கர்மமாகிய செயல் ப்ரத்யக்ஷமானது என்பதும் "கண்ணுல் காணும் த்₃ரவ்யத்திலிருக்கும் செயல் கண்ணுல் காணத்தக்கது" என்று தொடங்கி அவரால் வேறேரிடத்தில் சொல்லப்பட்டது.]

21. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநம் — அத்₃ரவ்யபரிச்சே₂த₃ம்— "யச்ச வரத₃விஷ்ணுமிஶ்ரைருக்தம் — 'ப்ரத்யக்ஷாஶ்ரயவர்த்தி ஸங்க்₂யா பரிமாண ப்ருத₂க்த்வ ஸம்யோக₃ விப₄ாக₃ பரத்வாபரத்வ த்₃ரவத்வ ஸாத்₃ருஶ்யாநி ப்ரத்யக்ஷாணி' உபமாநப்ரமாணாந்தரம் சோக்தம் — 'இத₃ஞ்ச ஸாத்₃ருஶ்யம் கு₃ண:— அநுமாநேந கு₃ணத்வாவத₄ாரணாத்| கார்யபூ₄த ஸங்க்₂யா ஶக்தி ஸாத்₃ருஶ்யாநி கு₃ணா:-த்₃ரவ்யகர்மாந்யத்வே ஸதி ஆஶ்ரிதகார்யத்

வாத், க₄டகு₃த ஸௌக்ல்யவத்' இதி, தத் தேஷாம் தத₂பி₄மத மிதி ஏகதே₃ஶிமதம் மந்தவ்யர் |" [வரத₃விஷ்ணுமிஸ்ரரால் "ப்ரத்யக்ஷமான பொருளில் இருக்கும் (1) ஸங்க்₂யை (2) பரிமாணம் (3) ப்ருத₂க்த்வம் (4) ஸம்யோகு₃ம் (5) விப₄ாகு₃ம் (6) பரத்வம் (7) அபரத்வம் (8) த்₃ரவத்வம் (9) ஸாத்₃ருஶ்யம் ஆகிய கு₃ணங்களும் ப்ரத்யக்ஷங்களே" என்று சொல்லப்பட்டது. உபமானம் என்னும் தனி ப்ரமாணமும் பின்வருமாறு கூறப்பட்டது:—"இந்த ஸாத்₃ருஶ்யம் என்பது கு₃ணமாகும். அனுமானத்தினுல் அதை கு₃ணம் என நிர்ணயிக்கிறோம். 'கார்யமாயிருக்கும் (1) ஸங்க்₂யை (2) ஶக்தி (3) ஸாத்₃ருஶ்யம் என்னும் மூன்றும் கு₃ணங்களே; த்₃ரவ்ய கர்மம் ஆகியவற்றைக் காட்டிலும் வேறுபட்டதாய், தானிருக்குமிடத்தின் கார்யமாயிருக்கையால்: குடத்திலிருக்கும் வெண்மை போலே' என்பது அனுமானம். இது இவர் கருத்தாகையால் (ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களில்) சிலருடைய மதம் என்று கருதத் தக்கது.]

22. ந்யாய பரிஶுத்₃தி₄—ப்ரத்யக்ஷாத்₄யாயம்—ஆஹ்நிகம்-2; ப்ரத்யக்ஷலக்ஷணம்—"வரத₃விஷ்ணுமிஸ்ரை: மாநயாத₂ாத்ம்ய நிர்ணயே த்₃வேவமுக்தம்— அபரோக்ஷப்ரமா ப்ரத்யக்ஷம் | ப்ரமாயா ஆபரோக்ஷ்யம் நாம விஶத₃ாவப₄ாஸத்வமிதி ப்₃ரூம:| கிமித₃ம் வைஶத்₃யம் நாம? அஸாத₄ாரணுகாரேண வஸ்த்வவப₄ாஸகத்வம்—இத்யாதி₃ ||" [வரத₃ விஷ்ணு மிஸ்ரராலும் மாநயாத₂ாத்ம்ய நிர்ணயத்தில் ப்ரத்யக்ஷ லக்ஷணத்தைச் சொல்லும்போது, "அபரோக்ஷமான உண்மையறிவு ப்ரத்யக்ஷமாகும். உண்மையறிவு அபரோக்ஷமாயிருக்கையாவது என்னவெனில்: தெளிவாகத் தோற்றுவதாயிருக்கை என்று கூறுகிறோம். இதில் தெளிவு என்பது என்னவெனில்—தனித்தன்மையோடு பொருளைத் தெரிவிக்கையே ஆகும்" என்று தொடங்கிச் சொல்லப்பட்டது.]

23. ந்யாயபரிஶுத்₃தி₄—அநுமாநாத்₄யாயம்-ஆஹ்நிகம் |; வ்யாப்திக்₃ரஹோபாயநிருபணம். "தது₃க்தம் வரத₃விஷ்ணு மிஸ்ரை:—தஸ்மாத₃நுமாநாங்க₃ பூ₄தா வ்யாப்திர் பூ₄யோத₃ர் ஶநாவஸேயைவ' இதி" [வரத₃ விஷ்ணு மிஸ்ரராலும் "ஆகையால் அனுமானத்திற்கு அங்க₃மாயிருக்கும் வ்யாப்தி பல இடங்களில் காண்பதால் அறியத்தக்கதே ஆகும்" என்று கூறப்பட்டது.]

24. ந்யாயபரிஶுத்₃தி₄—அநுமாநாத்₄யாயம்-ஆஹ்நிகம்-|; கேவலவ்யதிரேகிப₄ங்க₃ம்: "உக்தம் ச வரத₃விஷ்ணுமிஸ்ரை

ரபி—'தத்புநரந்வயவ்யதிரேகி, கேவலாந்வயி, கேவலவ்யதிரேகீதி த்ரிவித₄ம்' இத்யாதி₃'' ''தத்த்வரத்நாகரேऽப்யுக்தம்—'அக்ஷபாத₃ஸூத்ரைத₄மஸூத்ரயத்'இத்யாதீ₃தி சேத்...நதாவதி₃ஹ ஸம்ப்ரதா₃ய விரோத₄: 'கேவலவ்யதிரேகி து ஸாத₄நம் ந த₃ஶமேவ நாஸாத₃யதி ஸபக்ஷாந்வய விரஹாத், அஸாதா₄ரணவத்; இத்யாதி₃நா ஆத்மஸித்₃தௌ₄ ப₄க₃வத்₃ யாமுநமுநிபி₄: ப்ரபஞ்சிதத்வாத்| உக்தம் ச ந்யாயகுலிஶே ஸ்வப்ரகாஶவாதே₃ ஸ்ரீமத்₃ராமாநுஜாசார்யை: — 'ந ச ஸித்₃தா₄ந்திநோऽயம் ப்ரஸங்க₃: [ப்ரயோக₃:] கேவலவ்யதிரேகிப்ராமாண்யாநப்₄யுபக₃மாத். இதி| அதோ வரத₃விஷ்ணுமிஶ்ரோக்தம் ஏகதே₃ஶிமதம், பரமதாநுஸாரேண வா உக்தம் |'' [வரத₃விஷ்ணுமிஶ்ரராலும் ''ஹேது (1) அந்வய வ்யதிரேகி (2) கேவலாந்வயி (3) கேவலவ்யதிரேகி என்று மூன்றுவகைப்பட்டது.'' என்று தொடங்கிச் சொல்லப் பட்டது. (ஸ்ரீபராசரப₄ட்டரால்) தத்வரத்நாகரத்தில் ''அக்ஷபாத₃ர் ஹேது மூன்றுவகைப்பட்டது என்று ஸூத்ரமிட்டார்'' என்று தொடங்கிச் சொல்லப்பட்டது. (அப்படியிருக்க, கேவல வ்யதிரேகியான ஹேதுவை நாம் ஒப்புக்கொள்வதில்லை என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? எனில்) ஆத்மஸித்₃தி₄யில் யாமுநாசார்யரான ஆளவந்தார் ''கேவலவ்யதிரேகியான ஹேது எதையும் ஸாதி₄க்கவல்லதல்ல. ஹேதுவுக்கு இருக்கவேண்டிய முக்கியமான ஆகாரமான ஸபக்ஷத்தில் இருக்கை என்னும் ஆகாரம் அதில் இல்லையாகையால்; பக்ஷத்தில் மாத்திரம் இருக்கும் அஸாதா₄ரண ஹேதுவைப்போலே.'' என்று தொடங்கிக் கேவலவ்யதிரேகியை ஒப்புக்கொள்ளவில்லையாகையால் இவ்விஷயத்தில் ஸம்ப்ரதா₃ய பே₄த₃மில்லை. ந்யாயகுலிஶத்தில் ஸ்வப்ரகாஶவாத₃த்தில் (எம்முடைய ஆசார்யரான) ஸ்ரீமத்₃ராமாநுஜாசாரியரும், (கிடாம்பி அப்புள்ளாரும்) ''ஸித்₃தா₄ந்திகளுக்கு இந்த தோ₃ஷம் வராது; கேவல வ்யதிரேகிஹேதுவை ப்ரமாணமாக ஒப்புக்கொள்ளவில்லையாகையால்.'' என்று கூறினர். ஆகையால், வரதவிஷ்ணுமிஶ்ரர் கேவலவ்யதிரேகியை ஒப்புக்கொண்டு கூறியதை நம் ஆசார்யர்களில் சிலருடைய கருத்தாகவோ பிறர் மதத்தைத் தழுவியதாகவோ கொள்ளவேண்டும்.]

25. ந்யாயபரிஶுத்₃தி₄ — அநுமாநாத்₄யாயம் ஆஹ்நிகம் 2 ''ப்ரஜ்ஞாபரித்ராணே து வரத₃விஷ்ணுமிஶ்ரோக்தாநுஸாரேணைவமுக்தம்—'பரார்த₂மநுமாநஸ்ய ப்ரயோகே₃ऽவயவாஸ்த்ரய: | ப்ரதிஜ்ஞா ஸாத₂ ஹேதுஶ்சததே₂தா₃ஹரணம் மதம்||'இத்யாதி₃|''

[ப்ரஜ்ஞாபரித்ராணத்தில் (வரத₃நாராயண ப₄ட்டாரகரால்) வரத₃ விஷ்ணு மிஶ்ரருடைய ஸ்ரீஸூக்தியை அனுஸரித்து "பிறர்பொருட்டு அனுமானப்ரயோக₃ம் செய்யும்போது 1) ப்ரதிஜ்ஞை 2) ஹேது 3) உதா₃ஹரணம் என்று மூன்று அவயவங்கள் உள்ளன." என்று சொல்லப்பட்டது.]

26. ந்யாய பரிஶுத்₃தி₄—அநுமாநாத்₄யாயம்—ஆஹ்நிகம்—2—கதா₂ங்க₃நிருபணம். "வரத₃விஷ்ணுமிஶ்ரைஸ்து 'ஜல்பஶ் சதுரங்க₃: அங்கா₃நி வாதி₃ ப்ரதிவாதி₃ ஸப₄ாபதி ப்ராஶ்நிகா:' இத்யுக்தம் |" [வரத₃விஷ்ணுமிஶ்ரரால் "ஜல்பமானது நாலு அங்க₃ங்களை உடையது; அவ்வங்க₃ங்களாவன— 1) வாதி₃ 2) ப்ரதி வாதி₃ 3) ஸபைத்தலைவர் 4) கேள்விகேட்பவர்கள் என்று நாலாகும்" என்று சொல்லப்பட்டது.]

27. ந்யாய பரிஶுத்₃தி₄—அநுமாநாத்₄யாயம்—ஆஹ்நிகம் 2—உக்த விஶேஷணம்; "உக்தம் ச ஹேத்வந்தரம் ப்ருத₂க₃பி₄தா₃ த₄ாநைரபி வரத₃விஷ்ணுமிஶ்ரை:—'பக்ஷ த்₃ருஷ்டாந்த ஹேத் வாதி₃ தூ₃ஷணே கதி₂தே ஸதி | புநர்விஶேஷணாதா₃நம் ப்ரதிஜ் ஞாந்தரமிஷ்யதே ||'இதி" [வரத₃விஷ்ணு மிஶ்ரராலும் நிக்₃ரஹ ஸ்தா₂னங்களில் ப்ரதிஜ்ஞாந்தரத்தைக்காட்டிலும் வேறுபட்டதாக ஹேத்வந்தரத்தைச் சொல்லும்போது "பக்ஷம், த்₃ருஷ்டாந்தம், ஹேது முதலானவற்றின் தோ₃ஷத்தைச் சொன்னவுடன் மறுபடியும் விஶேஷணத்தைக் கூறுவதாகிற உக்த விஶேஷணமே ப்ரதிஜ்ஞாந் தரம் எனப்படுகிறது." என்று சொல்லப்பட்டது.]

28. ந்யாயபரிஶுத்₃தி₄— அநுமாநாத்₄யாயம்— ஆஹ்நிகம் 3—"ஸ்வவ்யாக₄ாதி(தீ)ப்ரஸங்கோ₃ ஜாதிரிதி வரத₃விஷ்ணுமிஶ் ரோக்தி: உத்தர ரூபஜாத்யபி₄ப்ராயேண |" ["தனக்குத்தானே முரணாகப் பேசுவது ஜாதி" என்று வரத₃விஷ்ணு மிஶ்ரர் கூறியது உத்தரம் என்னும் வகைப்பட்ட ஜாதியைப் பற்றியதாகும்.]

29. ந்யாய பரிஶுத்₃தி₄—அநுமாநாத்₄யாயம்— ஆஹ்நிகம் 3 —"வரத₃விஷ்ணு மிஶ்ரைஸ்து—ஸ்வவ்யாக₄ாதி ப்ரஸங்கோ₃ ஜாதி: | ஸா ச சதுர்விம்ஶதிவித₄ா இத்யுக்த்வா ஸாத₄ர்ம்யாதி₃ ஸூத்ரம் உபாதா₃ய யதே₂ாத₃யநம் ப்ராயோ லக்ஷ்யலக்ஷணதி₃

கமுக்தம் ||" [வரத₃விஷ்ணுமிஶ்ரராலும் "தனக்குத்தானே முரணாகப் பேசுவது ஜாதியாகும். அது இருபத்துநாலு வகைப் பட்டது" என்று கூறி 'ஸாத₄ர்ம்யம்' என்று தொடங்கும் ஸூத்ரத்தை எடுத்து, பெரும்பாலும் உதயனரைப் பின்பற்றி லக்ஷ்யம் லக்ஷணம் முதலானவை கூறப்பட்டது.]

30. ந்யாய பரிஶுத்₃தி₄— ஶப்₃த₃ாத்₄யாயம் — ஆஹ்நிகம்—1 "ப₄க₃வத்₃யாமுநமுநிபி₄ஸ்து ஆக₃மப்ராமாண்யே வக்த்ருஜ்ஞாநாநுமாநம் தூ₃ஷிதம் | நிக₃மிதம் ச —'தஸ்மாத₃ஸ்தி நதீ₃தீரே ப₂லமித்யேவமாதி₃ஷு | யா ஸித்₃த₄ விஷயா பு₃த்₃தி₄: ஸா ஶாப்₃தீ₃ நாநுமாநிகீ ||' இதி. அயமேவ பக்ஷோ ந்ருஸ்ருதோ வரத₃விஷ்ணு மிஶ்ரை: |" [யாமுநாசார்யராலும் ஆக₃மப்ராமாண்யத்தில் 'சொல்லுபவனின் ஜ்ஞானத்தை அனுமானம் செய்தபின்பே சப்தத்திற்கு ப்ராமாண்யம் தேறுகின்றபடியால் சப்தமும் அநுமானத்தில் அடங்கியதே' என்னும் வாதம் மறுக்கப்பட்டது. முடிவில் "நதிக் கரையில் பழம் இருக்கிறது' முதலான வாக்கியங்களிலிருந்து ஸித்₃த₄ விஷயத்தைப் பற்றிய யாதொரு அறிவு ஏற்படுகிறதோ, அது சப்தத்தால் உண்டாவதேயொழிய அனுமானத்தால் உண்டாவதன்று என்று கூறப்பட்டது. இந்தப் பக்ஷமே வரத₃விஷ்ணு மிஶ்ரராலும் அனுஸரிக்கப்பட்டது.]

31. ந்யாய பரிஶுத்₃தி₄—ஶப்₃த₃ாத்₄யாயம் - ஆஹ்நிகம் |; அந்விதாபி₄தா₄ந —அபி₄ஹிதாந்வய வாத₃ங்கள் வரத₃விஷ்ணு மிஶ்ரைரபி 'ஸத்யஜ்ஞாநாதி₃ பத₃ாநாம் அக₂ண்டை₃கரஸார்த்த₂த்வே அந்விதாபி₄தா₄நாநுபபத்தேஶ்ச' இத்யாதி₃ஷு ப₃ஹுஷு ப்ரதே₃ஶேஷு அந்விதாபி₄தா₄நமேவ மாயாவாதி₃நம் ப்ரத்யுக்தம் |" [வரத₃விஷ்ணு மிஶ்ரராலும் மாயாவாதி₃களுக்கு மறுப்பெழுதும்போது "ஸத்யம் ஜ்ஞாநம் முதலான (உபநிஷத்திலுள்ள) பத₃ங்கள் நிர்விஶேஷ சிந்மாத்ரத்தையே சொல்லுபவையானல், அந்விதாபிதா₄நம் பொருந்தாது" முதலான பல இடங்களில் அந்விதாபி₄தா₄நமே சொல்லப்பட்டுள்ளது.]

32. ந்யாய பரிஶுத்₃தி₄—ஶப்₃த₃ாத்₄யாயம்—ஆஹ்நிகம் 1—"உக்தம் ச வரத₃விஷ்ணு மிஶ்ரை:—'ஸ்வர்க்க₃ காமஶப்₃

தே3ந காம்யமாந ஸ்வர்க்க3; புருஷோऽபி4தீ4யதே | நஹிஸ்வரோऽவாப்தஸமஸ்தகாம: ஸ்வர்க்க3ம் காமயதே, தஸ்ய அத்யல்பஸு2க2த்வாத் | அதோ வாச்யைகதே3ஶோ ஜீவே லக்ஷணா 'க3ங்கா3ஶப்3த3ஸ்ய தீர இவ இதி |"
[வரத3விஷ்ணு மிஶ்ரராலும் "ஸ்வர்க்க3த்தை விரும்புகிறவன் ஜ்யோதிஷ்டோமயாக3ம் செய்யவேண்டும்" என்னும் வேத3வாக்கியத்திலுள்ள ஸ்வர்க்க3காம ஶப்3த3ம் ஸ்வர்க்க3த்தை விரும்பும் ஜீவனை மாத்திரமே சொல்லும். (அவனுக்கு அந்தர்யாமியான ஈஶ்வரன் வரையில் சொல்லாது) எல்லா விருப்பங்களையும் பெற்றிருப்பவனான ஈஶ்வரன்மிகச்சிறியஸு2க2மான இந்தஸ்வர்க்க3த்தைவிரும்பமாட்டானே. ஆகையால் க3ங்கா3 ஶப்3த3மானது அதன் கரையை லக்ஷணையாலே குறிப்பதுபோலே, ஸ்வர்க்க3காம ஶப்3த3மும் அதன் பொருளின் ஒரு பகுதியான ஜீவனை மாத்திரம் லக்ஷணையாலே குறிக்கும்" என்று சொல்லப்பட்டது.]

33. ந்யாய பரிஶு2த்3தி4—ஸ்ம்ருத்யத்4யாயம்—ஆஹ்நிகம்-1—"'அக்3ருஹீதக்3ரஹணம் ஶக்தம் ப்ரமாணம்' இதி வரத3 விஷ்ணுமிஶ்ரோக்திரபி பரமதாநுவாதோஹேண நேதவ்யா"
[வரத3விஷ்ணு மிஶ்ரர் "ஏற்கனவே அறியப்படாததை அறிவது எதுவோ அதுவே ப்ரமாணம்" என்று கூறியதும், பிறர்மதத்தை ஏறிட்டுக்கொண்டு எழுதியதாகக் கொள்ளத்தக்கது.]

34. ந்யாயபரிஶு2த்3தி4—ஸ்ம்ருத்யத்4யாயம்—ஆஹ்நிகம் 2—"யத்து வரத3விஷ்ணுமிஶ்ரைருக்தம்-க்3ருஹீதார்த்த2 விஷயம் ஶப்3த3காரணகம் ஜ்ஞாநம் ஸம்வாத3 இதி, தத3பி ஶாப்3தா3வாந்தரபே4த3ம் ஸம்ஜ்ஞா விஶேஷ நிவேஶ மாத்ர பரம்; நஹி க்3ருஹீதார்த்த2 விஷயத்வே ஶப்3த3ஶக்திப்ரஸூதத்வம் அபைதி; |"
[வரத3விஷ்ணுமிஶ்ரர் "ஏற்கனவே அறியப்பட்ட விஷயத்தைப் பற்றியதாய், சப்தத்தைக் காரணமாகக் கொண்டதான அறிவு ஸம்வாத3ம் எனப்படுகிறது" என்று கூறியதும் ஶப்3த3த்தால் உண்டாகும் அறிவுகளில் ஒருவகைக்கு ஸம்வாத3ம் என்று பெயர் வைப்பதிலேயே நோக்குடையது. ஏற்கனவே அறியப்பட்டதை விஷயமாகக் கொண்டிருப்பதால் மாத்திரம் அந்த அறிவு ஶப்3த3ஶக்தியினால் உண்டானது என்பது நீங்கிவிடாதே.]

# அநந்தாழ்வான் வைபவம்

அகிலாத்மகு₃ணாவாஸம் அஜ்ஞாநதிமிராபஹம் ।
ஆஶ்ரிதாநாம் ஸுஶரணம் வந்தே₃ऽநந்தார்யதே₃ஶிகம்

[எல்லா ஆத்மகு₃ணங்கட்கும் இருப்பிடமானவரும், அஞ்ஞான இருளைப் போக்குகின்றவரும், அடியார்கட்கு நல்ல உபாயமான வருமான அநந்தாழ்வான் எனும் ஆசார்யரை வணங்குகிறேன்.]

ஸ்ரீமத்₃ராமாநுஜாசார்ய ஸ்ரீபத₃ாம்போ₄ருஹத்₃வயம் ।
ஸது₃த்தமாங்க₃ஸந்தா₄ர்யம் ‡ அநந்தார்ய கு₃ரும் ப₄ஜே ॥

[ஸ்ரீமத்₃ராமாநுஜாசார்யருடைய திருவடித் தாமரையிணையாயிருப்பவரும், நல்லோர்களின் தலையாலே தாங்கப்படுபவருமான அநந்தாழ்வான் எனும் ஆசார்யரை ஆஶ்ரயிக்கிறேன்.]

யதீந்த்₃ரபாத₃ாம்பு₃ஜசஞ்சரீகம்
ஸ்ரீமத்₃த₃யாபாலத₃யைகபாத்ரம் ।
ஸ்ரீவேங்கடேஶாங்க்₄ரியுக₃ாந்தரங்க₃ம்
நமாம்யநந்தார்யமநந்தக்ருத்வ: ॥

[யதிராஜருடைய திருவடித்தாமரையில் வண்டு போன்றவரும் அருளாளப்பெருமாள் எம்பெருமானாரின் கருணைக்கு ஓர் இலக்காயிருப்பவரும், திருவேங்கடமுடையானுக்குத் திருவடிக் குற்றேவல் செய்பவருமான அநந்தாழ்வானுக்கு அநந்தமான தண்டன் ஸமர்ப்பிக்கிறேன்.]

"புஷ்பமண்டபமான திருமலையில் நித்யவாஸம் செய்து, சிந்துபூ மகிழும் திருவேங்கடத்தானுக்குப் புஷ்பகைங்கர்யம் செய்வாருண்டோ?" என்று எம்பெருமானார் ஒருநாள் தம் காலக்ஷேப கோ₃ஷ்டி₂யிலே வினவ, மற்றுள்ளார் அனைவரும் எம்பெருமானாருடைய பிரிவை நினைத்து வாய்பேசாமலிருக்க, 'அடியேன் செல்கிறேன்' என்று பதிலளித்து, "நீரே ஆண் பிள்ளை" என்று எம்பெருமானாரால் பாராட்டப்பெற்றவர் அநந்தன் எனும் பெயருடைய இவ்வாசார்யர். இக்காரணத்தாலேயே இவர் குலத்தவர்கள் இன்றும் "அநந்தாண்பிள்ளை" என்னும் பட்டத்தோடு விளங்குகிறார்கள். எம்பெருமானார் நியமனத்தின்படி, "இராமானுசப்புத்தேரி"

‡ (பா) அநந்தார்யமஹம் ப₄ஜே

என்னும் ஏரியும், "இராமானுசன்'' என்னும் திருநாமத்தில் நந்த₃வனமும் அமைத்துத் திருமலையப்பனுக்குப் புஷ்பகைங்கர்யம் செய்து வந்தவர் இவர். ஏரிகட்ட மண்வெட்டும்போது, க₃ர்ப்ப₄வதியான அவர் பத்னிக்கு உதவி செய்ய, திருவேங்கடமுடையான் ஒரு சிறு வனாய் வந்து மண் கூடையைச் சுமக்கப் புகுந்தான். அதுகண்டு வெகுண்ட அநந்தாழ்வான் "கைங்கர்ய விக்₄நகாரீ! (கைங்கர்யத் திற்கு இடையூறு செய்பவனே!) கூடையைத் தொடாதே" என்று மண்வெட்டியையெடுத்து அவனை அடிக்கப்புக, திருவேங்கடச் செல்வன் ஓடிச்சென்று கோயிலிலே புகுந்தான் என்பர்கள். ஒருநாள் பூப்பறிக்கும்போது இவரைப் பாம்புகடிக்க, அருகிலிருந்தவர்கள் 'விஷவைத்₃யம் செய்து கொள்ளலாமே' என்று கூற, மறுத்து விட்டார். திருவேங்கடமுடையான் திருமுன்பே சென்றவுடன், அப் பெருமான் 'ஏன் விஷவைத்₃யம் செய்துகொள்ளவில்லை?'' என்று கேட்டருள, இவர் "கடியுண்ட பாம்பு (தன் சரீரம்) வலிதாகில், திருக்கோனேரியிலே தீர்த்த₂மாடித் திருவேங்கடமுடையானை ஸேவிக்கிறேன்; கடித்த பாம்பு வலிதாகில், விரஜையிலே தீர்த்த₂மாடி ஸ்ரீவைகுண்ட₂நாத₂னை ஸேவிக்கிறேன் என்றிருந்தேன்'' என்று விண்ணப்பம் செய்தார். ஒருமுறை இவர் கட்டுச்சோறு கட்டிக் கொண்டு திருமலையைவிட்டுக் கீழேயிறங்கி அவிழ்த்துப் பார்த்த வுடன், அச்சோறு நிறையச் சிற்றெறும்பாயிருக்க, " 'எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே' என்னும் உறுதியுடைய நித்ய முக்த முமுக்ஷுக்களில் சிலராகவும் இச்சிற்றெறும்புகள் இருக்கலாம். இவர்களை இத்திருமலையை விட்டுப் பிரிக்கக்கூடாது'' என்று எண்ணி அக்கட்டுச்சோற்றைத் திரும்பவும் திருமலையிலே கொண்டுபோய் வைக்கச் செய்தார். எம்பெருமானார் தம் அந்திமத₃சையிலே இவரை அருளாளப்பெருமாளெம்பெருமானார் திருவடிகளிலே ஆஸ்ரயிப்பித் தார். இவர் அருளிய 'ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸமாலா' திருப்பதி தே₃வஸ்தா₂னத்தாரால் அச்சிடப்பட்டுள்ளது. "கோ₃தா₃ சதுஸ்ர லோகீ'' "ராமாநுஜ சது:ஸ்லோகீ'' என்னும் துதிநூல்களும் இவர் அருளிச்செய்தவையாக வழங்குகின்றன.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்:— முதல் பாகம் பக்கம் 224, 225 காண்க.

2. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்:— அநந்தாழ்வான் வைபவம் :— அநந்தரம் அநந்தாழ்வான் இராமாநுசப்புத்தேரி கட்டி

வைக்கும்போது மண்சுமவா நிற்க, பிள்ளைகளிலே யொருவர் சென்று
கூடையை வாங்கப்புக, 'நான் அத்தைவிடில் இளைப்பன்; நீ இத்தைத்
தொடில் இளைப்புதி' என்று அருளிச்செய்ய. 'இளைப்பாகாது' என்று
பிள்ளை பின்னையுங்கூடையை வாங்கப்புக 'ஆகில், நான் ஜீவிக்கிற
ஜீவநத்தை வாங்கவேணுமோ? நீயும் வேணுமாகில் ஒரு கூடையை
வாங்கிக்கொண்டு சுமக்கமாட்டாயோ?" என்று அருளினார். பின்னை
யும் ஒருநாள் கர்ப்ப$_4$வதியான தம் தே$_3$விகள்மேலே மண் சுமத்தா
நிற்க, இது கண்டு திருவேங்கடமுடையான் ஒரு பிள்ளையாய்
எதிரேவந்து வாங்கிக்கொண்டுபோக, தே$_3$விகள் கடுக வருமது
கண்டு 'இதுவென் கடுக வருகிறாய்?' என்ன, அவளும் 'ஒருபிள்ளை
எதிரேவந்து கூடையை வாங்கிக்கொண்டு போகிறான்' என்று
சொல்ல, கேட்டு உடனேசென்று கண்டு, 'கைங்கர்யவிக்$_4$நகாரீ! நீ
கூடையைத் தொடாதேகொள்' என்று கொட்டெடுத்து
அடிக்கப்புக, திருவேங்கடச்செல்வன் ஓடிச்சென்று கோயிலிலே
புகுந்தான் என்பர்கள். அநந்தாழ்வான், திருநந்த$_3$வநத்திலே திருப்
படித்தாமமெடா நிற்க, திருக்கையிலே போ$_4$கி$_3$ ஸந்த$_3$ஷ்டமாக,
பின்னையும்போய் நீராடிக் கைங்கர்யத்திலே போர, ஸ்ரீபாத$_3$த்துக்குப்
பரிவராயிருப்பார் 'விஷந்தீர்க்கப் பார்க்கவேண்டாவோ?' என்ன,
'வேண்டா' என்று அத்தை நிவர்த்திப்பித்தருளினார். பின்பு கோயி
லேற எழுந்தருளினவாறே, திருவேங்கடமுடையான் திருவாய்
மலர்ந்து 'விஷந்தீர்க்க வேண்டாவென்று என்ன நினைத்துச்
சொன்னீர்?' என்று கேட்டருள, இவரும் 'கடியுண்ட பாம்பு
வலிதாகில் திருக்கோனேரியிலே தீர்த்த$_2$மாடித் திருவேங்கட முடை
யானை ஸேவிக்கிறேன்; கடித்தபாம்பு வலிதாகில் விரஜையிலே தீர்த்த$_2$
மாடி ஸ்ரீ வைகுண்ட$_2$நாத$_2$னை ஸேவிக்கிறேனென்றிருந்தேன்' என்று
விண்ணப்பஞ் செய்தார். அநந்தாழ்வான் கோஸலராஜ்யத்திற்கு
எழுந்தருளுகிறபோது, கட்டுத்திருப்போனகம் கட்டிக்கொண்டு
போய் அமுதுசெய்யப் புக்கவாறே, பட்டையடங்கலும் சிற்றெறும்
பாய்க் கிடக்க, அத்தைக்கண்டு துணுக்கென்று தம் முதலிகளைப்
பார்த்து, "'எம்பெருமான்பொன் மலைமேல் ஏதேனுமாவேனே' என்னு
மவர்களிலே சிலராய்த்து இவர்கள்; இப்படியே கொண்டுபோய்த்
திருமலையிலே வைத்து வாருங்கோள்" என்று அருளிச்செய்தார்.
அநந்தாழ்வான், யமுனைத்துறைவனிலே திருமாலை கட்டாநிற்க,
திருவேங்கடமுடையான் அருள்பாடிடப் பேசாதேயிருந்து திருமாலை
சேர்த்துக்கொண்டு உள்ளே புக்கவாறே, திருவேங்கடமுடையானும்
'நாம் அழைக்க அநந்தாழ்வான்! நீர் வராதிருந்தது ஏன்?' என்று

திருவுள்ளமாக, இவரும் 'கருமுகைமொட்டு வெடியாநிற்க எனக்கு தே₃வரீரைக்கொண்டு கார்யமென்?' என்றார்; திருவேங்கடமுடையானும் 'ஆகில், நாம் உம்மை இங்கு நின்றும் போகச் சொன்னோமாகில், நீர் செய்வதென்?' என்று திருவுள்ளமாக, இவரும் "'பரன் சென்று சேர் திருவேங்கடம்' என்கிறபடியே தே₃வரீரன்றோ வந்தேறிகள்; இவ்விடம் தேவரீரை ஆஶ்ரயித்தவர்களதன்றோ? தேவரீர் ஒரு கிழமை முற்பட்டிரித்தனை; இருவரும் திருமலையாழ்வாரை ஆஶ்ரயித்தோமித்தனையன்றோ?'' என்று விண்ணப்பஞ்செய்தார்.

3. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்:- பட்டர் தம் ஸ்ரீ பாத₃த்திலே ஸேவித்திருப்பார் ஒரு ஸ்ரீவைஷ்ணவரைப்பார்த்து 'நீர் அநந்தாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே சென்று ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமிருக்கும்படி எங்ஙனேயென்று கேட்டுவாரும்' என்று அருளிச்செய்ய, அவரும் அநந்தாழ்வான் ஸந்நிதி₄க்கு எழுந்தருள, அன்று அங்கே பல ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுது செய்தருள, இவரும் இடம் போதாமையாலே அவர்கள் அமுதுசெய்து எழுந்திருக்குமளவும் பேசாதிருக்க, பின்பு அநந்தாழ்வானும் இவரைக்கண்டு 'நெடும் போதுண்டே! அமுது செய்தருளப் பெற்றதில்லையே! இளைப்போடேயிருக்கிறதே!' என்று போர நொந்து சடக்கென அமுதுசெய்தருளப் பண்ணி, தாமும் தே₃விகளுமாக ஶேஷித்திருந்த திருப்போனகத்தை அமுதுசெய்தருளி எழுந்தருளியிருந்து, ஸ்ரீவைஷ்ணவரைக் குறித்து, 'எங்குநின்றும் எழுந்தருளிற்று?' என்று கேட்டருள, அவரும் 'பட்டர் தேவரீர் ஸ்ரீபாத₃த்திலே சென்று ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமிருக்கும்படி எங்ஙனேயென்று கேட்டுவரச்சொல்லி வரவிட்டருளினார்' என்று விண்ணப்பஞ்செய்ய, அநந்தாழ்வானும் 'ஆகில், ||(கொக்குப் போலேயிருக்கும், கோழிபோலேயிருக்கும், உப்புப் போலேயிருக்கும்) உம்மைப்போலேயிருக்கும்' என்று அருளினார்; இத்தால், தன் ஜ்ஞாநாநுஷ்ட₂ாநாபி₄மாநாதி₃நிமித்தமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலே முற்பாட்டுக்கு ஆசைப்படாதே, பிற்பாட்டுக்கே ஆசைப்பட்டுத் ததீ₃யஶேஷத்வத்தைப்பேணுகை ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமென்று உத்தரமருளிச்செய்து விட்டாராய்த்து.

4. சரமோபாய நிர்ணயம்:—பக்கம் 104 ஐதிஹ்யநிர்வாஹம் 5-காண்க.

---

||( ) இக்குறியினுள்ளிருப்பது பல பிரதிகளில் இல்லை

5. வார்த்தாமாலை 104 வார்த்தைசிவிவரணம் a அநந்தாழ்வான், b நஞ்சீயரைக்கண்டு, 'இதுவென் ஜீயா? ஸுகுமாரராயிருக்கிற நீர் வேர்த்தபோது நீராடி, பசித்தபோது அமுதுசெய்து, ப₄ட்டரை ஸேவித்திருந்தால் ஸந்யஸித்து வந்திலீரென்று உம்மைப் பரமபத₃த்தினின்றும் தள்ளுவாருண்டோ? இனியென்' என்று பார்த்து, ''மந்த்ராந்தரங்களையடைய விட்டு. திருமந்த்ரத்திலே பிறந்து, த்₃வயத்திலே வளர்ந்து த்₃வயைகநிஷ்ட₂ராவீர்'' என்று வாழ்த்தி, பின்னையருளிச்செய்த வார்த்தை:– 'த்₃ருஷ்டத்திலுள்ளதெல்லாம் ப₄ட்டருக்காக்கினோம்; த்₃ருஷ்டத்துக்குக் கடவார் ப₄ட்டரென்று இருப்பதோரிருப்புண்டு; அது பூர்வத₂சையிலும் அநர்த்த₂யவாம்' என்று பார்த்து, 'த்₃ருஷ்டத்துக்குக் கடவார் பெருமாள், அத்₃ருஷ்டத்துக்குக் கடவார் ப₄ட்டர்' என்றிரும்; த்₃ருஷ்டாத்₃ருஷ்டங்களிரண்டுக்கும் ஆசார்யன் கடவனென்று இருந்தால் வருவதேதென்னில்; த்₃ருஷ்டத்தில் கர்மாதீ₄நமாக ஏதேனும் சுருங்குண்டாகில் ஆசார்யனை வெறுத்தபோது பெருமாளைக்கொண்டு தீர்த்துக்கொள்ள வொண்ணாது; பெருமாளை வெறுத்தானாகில் ஆசார்யனைக் கொண்டு தீர்த்துக்கொள்ளலாம். [a அநந்தாழ்வான்— எம்பெருமானாருடைய ஶிஷ்யராய், அவருடைய நியமனத்தின் பேரில் சிந்துபூமகிழும் திருவேங்கடத்திலே நந்த₃வனமமைத்துத் திருவேங்கடமுடையானுக்குப் புஷ்ப கைங்கர்யம் செய்த மஹாசார்யர். b நஞ்ஜீயர்—பூர்வாஶ்ரமத்தில் வேத₃ாந்தி என்று பேர் பெற்றவராய், ஆறு த₃ர்ஶனங்களுக்கு ஆறு ஆஸனமிட்டுக் கொண்டு அத்₃வைதஸித்₃த₄ாந்த ப்ரவர்த்தகராயிருந்தவர். சரம காலத்தில் எம்பெருமானாரால் நியமிக்கப்பெற்று, ப₄ட்டர் வேத₃ாந்தியென்றும் மாத₄வரென்றும் பெயர் பெற்று மேல் நாட்டில் (திருநாராயண புரத்துக்கருகில்) இருந்த இவரை வெற்றி கொண்டு நம்த₃ர்ஶனஸ்த₂ராக்கினார். சிறிது காலம் கழித்து ஸம்ஸாரத்தில் விரக்தி பெற்ற இவர் துறவு பூண்டு ஏராளமான த்₃ரவ்யத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீரங்க₃த்துக்கு வந்து ப₄ட்டர் திருவடிகளிலே ஸமர்ப்பித்து, அவரையல்லது அறியாதவராயிருந்தார். இவரைப் பார்த்து அநந்தாழ்வான் ''வேத₃ாந்தியாயிருக்கும்போது ராஜபே₄ாக₃த்தில் வாழ்ந்த ஸுகுமாரரான நீர் க்₃ருஹஸ்த₂ராயிருந்துகொண்டே ஸ்நானம் அந்நபானம் முதலானவற்றில் ஸந்யாஸிக்குரிய கடுமையான நியமங்களில்லாமல் ப₄ட்டர் திருவடிகளையே உபாயோபேயமாக நினைத்திருந்தால் பரமபத₃ம் கிடைக்காமல் போய் விடுமோ? இதை இப்போது சொல்லி என்ன செய்வது'' என்று கூறி, ''வேத₃ாந்தியா

யிருந்தபோது கற்றிருந்த மற்ற மந்த்ரங்களையெல்லாம் விட்டு, ப4ட்டர் உபதே3ஶித்த திருமந்த்ரத்தாலே ஸ்ரீவைஷ்ணவத்வமாகிற புதிய பிறவியையடைந்து, ப4ட்டர் உபதே3ஶித்த த்3வயத்தையே எப்போதும் அநுஸந்தி4க்கையாலே அதனாலே ஜ்ஞானவளர்ச்சி பெற்றவராய் த்3வயமொன்றையே பற்றியிருப்பவர் ஆவீர்" என்று வாழ்த்தினார். அதற்குப்பின் ஒரு வார்த்தையும் அருளினார். அதாவது —'இம்மையில் நம் செல்வத்தையெல்லாம் ப4ட்டருக்கு ஸமர்ப்பித்து விட்டோம். ஆகையால் இம்மையில் நம்முடைய நன்மையை ப4ட்டர் பார்த்துக் கொள்வார்' என்று நீர் நினைத்தீராகில், அந்நினைவு அஹங்காரமமகாரங்களோடு கூடியதாகையாலே, நீர் வேதா3ந்தியா யிருந்த நிலையைக் காட்டிலும் தாழ்வை விளைத்துவிடும். ஆகையால் "இவ்வுலகில் நம்முடைய தே3ஹயாத்ரை பெரியபெருமாளுடைய பொறுப்பு. ஆத்மயாத்ரை ப4ட்டருடைய பொறுப்பு" என்று நினைத் திரும். 'தே3ஹயாத்ரை ஆத்மயாத்ரை இரண்டுமே ஆசார்யன் பொறுப்பு என்று நினைத்திருந்தால் குறையென்ன?' எனில்: தே3ஹ யாத்திரையில் நம்முடைய கர்மம் காரணமாக ஏதேனும் குறைகள் உண்டானால், தே3ஹயாத்ரையும் ஆசார்யன் பொறுப்பு என்று நினைப்பவன் ஆசார்யனை வெறுக்கவேண்டிவரும். ஆசார்யனை வெறுத்தவனுக்குப் பெருமாள் கைகொடுக்க மாட்டார் என்பது ஶாஸ்த்ர ஸித்3த4மாகையாலே, இவனுக்கு க3தி இல்லாமல் போய் விடும்; தே3ஹயாத்ரை பெருமாள் பொறுப்பு என்று நினைத்திருப்பவன் அதில் குறையுண்டாம்போது பெருமாளை வெறுத்தாலும், ஆசார்யன் புருஷகாரம் செய்து பெருமாளுக்கு அதனால் ஏற்படும் கோபத்தைத் தணிப்பானாகையாலே இவனுக்கு க3தியுண்டு என்பது இவ்வார்த்தை யின் கருத்து ]

6. வார்த்தாமாலை 151 வார்த்தைசிவிவரணம். அநந்தாழ்வான் எச்சானுக்கு அருளிச்செய்த வார்த்தை; இவ்வாத்மாவாகிற பெண்பிள்ளையை, ஆசார்யனாகிற பிதா, எம்பெருமானாகிற வரனுக்கு, கு3ருபரம்பரையாகிற புருஷகாரத்தை முன்னிட்டு, த்வயமாகிற மந்த்ரத்தைச்சொல்லி, உத3கம்பண்ணிக்கொடுத்தான். [இவ் வார்த்தை— ஆசார்யன் எம்பெருமானுக்கு ஒரு ஶிஷ்யனை அளிப்பதை, ஒரு பிதா வரனுக்குத் தன் பெண்ணை நீர்வார்த்துக் கன்யகாதா3ன மாகக் கொடுப்பதோடு ஒப்பிடுகிறது. இவ்விஷயம் ஆசார்ய ஹ்ருத3 யம் 121 வது சூர்ணையிலும், அதன் வ்யாக்2யானத்திலும் மிக விரிவாக விவரிக்கப்பட்டது ஒரு விவாஹத்துக்கு க4டகர்கள் போலே, இந்த

ஜீவாத்ம பரமாத்மாக்களின் விவாஹத்துக்கு குருபரம்பரையில் அடங்கிய ஆசார்யர்கள் கடகர்கள் என்று கருத்து. எச்சான், அநந்தாழ்வான் இருவரும் முதலில் எம்பெருமானாருக்கும் பிறகு அருளாளப்பெருமான் எம்பெருமானாருக்கும் ஶிஷ்யர்களாயிருந்தவர்கள். ]

7. வார்த்தாமாலை 181 வார்த்தைச்விவரணம். அநந்தாழ்வான் ஸ்ரீபாதத்தையுடையராயிருப்பார் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் பட்டணங்களில்நின்றும் திருமலையைத் திருவடித்தொழப்போகாநிற்கச்செய்தே, a வளத்தான் மங்கலமுடையான் திண்ணையிலே கிடந்தவளவிலே, அவன் 'எங்கேறப் போகிறிகோள்?' என்ன, இவர்களும்,'திருவேங்கடமுடையானைத்திருவடித்தொழப்போகிறோம்' என்ன, இவனும், 'நானும் போகிறேன்' என்று சொல்லி இவனுங் கூடப்போய் அவர்களும் இரண்டுமூன்று பயணம்போனவளவிலே, b இவனுடன் உறவற்றுத் தங்களிலே கூடப்போகப்புக்கபடியாலே, இவனும் 'என்னை ஸ்ரீவைஷ்ணவனாக்கிக்கொண்டுபோகவேணும்' என்று இவர்களைப் பலகாலும் வேண்டிக்கொள்ள, c இவர்களும் பேசாதேபோய்த் திருமலையிலேவந்தவாறே அநந்தாழ்வான்ஸ்ரீபாதத்திலே வந்து தண்டனிட்டுநிற்க; அவரும் இவர்களைக் காரியங்களும் கேட்டு இவர்களுக்குச் சில வார்த்தைகளும் அருளிச்செய்து 'திருவேங்கடமுடையான் பாடேறப் போகலாகாதோ?' என்று அருளிச்செய்தவளவிலே, இவனும் 'என்னை ஸ்ரீபாதத்திலே காட்டிக்கொடுக்கவேணும்' என்ன; அவரும் அத்தைக்கேட்டு 'அவன் சொல்லுகிறதேது?' என்று கேட்டருள; 'ஆஶ்ரயிக்கவேணுமென்கிறான்' என்று விண்ணப்பம்செய்ய; அநந்தாழ்வானும் வாராயென்றழைத்தருளி, 'உனக்கு என்பாடே ஹிதம் கேட்கவேணுமோ?' என்று கேட்டருள, 'வேணும்; என்னை ரக்ஷித்தருளவேணும்' என்ன, 'ஆனல் என்பக்கலிலே ஹிதம் கேட்கில் உன் ஐஶ்வர்யம் உன்னை விட்டகலும்' என்று அருளிச்செய்ய; அவனும் 'இவை போக அமையும்' என்று விண்ணப்பஞ்செய்ய; 'ஆனல் d நீ நான் புக்க தேஶம் புகுவுதி' என்று அருளிச்செய்து ஹிதத்தையுமருளிச்செய்தவாறே, e நெல்லுக்குப் பால் வற்ற வற்றத் தலைவணங்குமாப்போலே, ஶரணாகதி நெஞ்சில் பற்றப்பற்றத் தன் மேற்கிடக்கிற பொன்னடங்க வாங்கி ஆசார்ய தக்ஷிணையாகக்கொடுத்து ஊரிலே வந்தவாறே, இவர் ஸ்ரீவைஷ்ணவரானாரென்று பல ஸ்ரீவைஷ்ணவர்களும் வந்து காண, அவர்களுக்கு வேண்டுமவை கிஞ்சித்கரிக்கப் புக்கவாறே,

இவருடைய மாதாபிதாக்கள் இவரை அழைத்து, 'ரிஷிகளைப் போலே யிருக்கிற ப்3ராஹ்மணர்வந்து புகுந்து ப்ரஸாதித்துப் போகாநின்றார்கள்; நீர் செய்கிற த4ர்மத்தை விலக்கலாகாது; உம்மை விஶ்வஸித்திருக்கிற எங்களுக்கும் ஏதேனும் தரவல்லீரோ?' என்று கேட்க, 'அப்படியே செய்கிறேன்' என்று தான் தேடின த்3ரவ்யத்தை fஆள்விழுக்காட்டிலேயிட்டு இவர்களுக்குங்கொடுத்துத் தாமும் தம்மோபாதியைப்பற்றி, அருளிச்செயலும் ஓதி, ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்து பிற்றையாண்டு திருமலையேறவர; அநந்தாழ்வான், 'கண்டீரே! அப்போதே இவை உம்மை விட்டகலுமென்று சொன்னேன்' என்று அருளிச்செய்ய; "அடியேனுக்கு இரண்டு வார்த்தை அருளிச்செய்தருளிற்று; 'என்பக்கலிலே ஹிதம் கேட்டால் நான் பெறும் தே3ஶம் பெறுவுதி' என்றருளிற்று; g அத்தைக் கிழிச்சீரையிலே த4நமென்று முடிந்துகொண்டேன்; 'இங்குள்ள ஐஶ்வர்யம் உன்னைவிட்டகலும்' என்றருளிச்செய்தருளிற்று; அது ப்ரத்யக்ஷமாகக் கண்டபடியாலே h ஸ்ரீபாத3த்துக்கு அடிமை யென்னுமிடம் கண்டேன்" என்று விண்ணப்பஞ்செய்ய; 'இனி நீரிங்கேயே நில்லும்' என்று அருளிச்செய்தருளினார். [a வளத்தான் மங்கலமுடையான்—வளத்தான் மங்கலம் க்3ராமத்திலுள்ள ஒரு த4னிகனான ப்3ராஹ்மணன். b இவனுடன் உறவற்று—இவன் ஸ்ரீவைஷ்ணவனல்லாமையாலே அநந்தாழ்வான் ஶிஷ்யர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் தனிக்கூட்டமாகப் போனார்கள் என்றபடி. c அவனை ஸ்ரீவைஷ்ணவனாகத் திருத்திப் பணிகொள்ளத் தம் ஆசார்யருக்கே அதி4காரமுண்டாகையாலே ஸ்ரீவைஷ்ணவர்கள் பேசாதே போனார்கள் என்று கருத்து. d நீ நான் புகவிருக்கிற பரமபத3த்துக்குப் போவாய் என்று கருத்து. e விளையும் நெல் பால்வற்றி முற்றமுற்றத் தலைவணங்குவதுபோலே. f ஆள் விழுக்காட்டிலே... பற்றி-ஆளுக்கு ஒரு பகுதியாகப் பங்கிட்டு அவர்களுக்கு இரண்டு பகுதிகளைக் கொடுத்து, தமக்கு ஒருபங்கு எடுத்துக்கொண்டு என்று கருத்து. g பணத்தைத் துணியில் முடிந்துகொள்வதுபோலே தேவரீர் சொன்ன வார்த்தையை மனத்தில் முடிந்துகொண்டேன் என்கை. h ஸ்ரீபாத3த்துக்கு அடிமை என்னுமிடம் கண்டேன்— இங்குபோலே பரமபத3த்திலும் தேவரீருக்கு அடிமையாகவேயிருப்பேன் என்பதை உணர்ந்தேன் என்றபடி.]

8. வார்த்தாமாலை 212 வார்த்தை & விவரணம். த்ரைலோக்யாள் என்பாளொரு ஸ்த்ரீ a ஆச்சிஸ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயித்திருக்கும்; அங்கே அநந்தாழ்வான் எழுந்தருள, அவரை ஆறுமாஸம் ஸேவித்திருந்து b அவரெழுந்தருளினவாறே ஆச்சி ஸ்ரீபாத₃த்தேறச் சென்றாள்; அவர் இத்தனைநாள் வந்திலையீயென்ன 'அநந்தாழ்வானை ஸேவித்திருந்தேன்' என்ன, 'அவர் நான் சொன்னத்திலும் ஏற்றமாகச் சொல்லிற்றுண்டோ?' என்ன, 'உண்டு;—உம்மை ஆஶ்ரயித்துப் c பதினாருட்டை நாளுண்டு, எம்பெருமான் திருவடிகளைத் தஞ்சமென்றிரீத்தனை; அவர் ஆறுமாஸத்திலே உம்முடைய திருவடிகளே தஞ்சமென்னும்படி பண்ணினார்' என்றாள். [a எம்பெருமானார் சிஷ்யர்களில் ஒருவரான வங்கிபுரத்தாச்சி. b அவர் எழுந்தருளினவாறே—எம்பெருமானாரின் மற்றொரு ஶிஷ்யரான திருமலை அனந்தாழ்வான் திருமலைக்குத் திரும்ப எழுந்தருளினவாறே. c பதினாருட்டைநாள்—பதினாறுவருடகாலம்.]

9. வார்த்தாமாலை 334 வார்த்தை & விவரணம். அநந்தாழ்வான் நோவுசாத்திக்கிடந்தாரென்று கேட்டருளி, திருவேங்கடமுடையான் "அநந்தாழ்வானை அறிந்து வாருங்கோள்" என்று சில ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர்களை விட்டு அறிவிக்க; 'ஆளிட்டு அந்திதொழுதானோ?' என்ன; திருவேங்கடமுடையான் எழுந்தருளி வாசலிலே வந்துநிற்க, பேசாதேகிடந்தார். 'அநந்தாழ்வான்! நாம் வரப் பேசாதேகிடந்தாயீ!' என்ன, 'ஒரு ஸ்ரீவைஷ்ணவன் வரப் பேசாதேயிருந்தேனாகிலன்றோ எனக்குக் குறையாவது' என்ன; 'நாம் உம்மை இதினின்றும் போகச்சொல்லில் செய்வதென்?' என்ன; 'நீர் ஒரு கிழமை முற்பட்டீர் இத்தனையன்றோ, இருவரும் திருமலையாழ்வாரை ஆஶ்ரயித்தோம் இத்தனையன்றோ' என்று அருளிச்செய்தார். ['அநந்தாழ்வான் நோயால் வருந்துகிறார்' என்று கேள்விப்பட்ட திருவேங்கடமுடையான் அவரை விசாரித்து வருவதற்குச் சில ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர்களை அனுப்பினான். "ஸந்த்₄யாவந்த₃னத்தைத் தானே செய்யவேண்டியிருக்க, ஓர் ஆள் வைத்து அதைச் செய்வாரைப்போலே, அந்தரங்க₃னான அடியேனை விசாரிக்கத் திருவேங்கடமுடையான் நேரில் வராமல் ஆளிட்டு விசாரிக்கிறானோ?" என்று அநந்தாழ்வான் அருளிச்செய்தார். இதை ஏகாங்கிகள்மூலம் கேள்விப்பட்ட திருவேங்கடமுடையான் ஸ்ரீபாத₃ம் தாங்குவார்க்கு அருளப்பாடிட்டுப் புறப்பட்டு, அநந்தாழ்வான் திருமாளிகை வாசலிலே வந்துநின்றான். அதறிந்தும் பேசாதேகிடந்தார் அநந்

தாழ்வான். அதைக்கண்டு திருவேங்கடமுடையான் "அநந்தாழ்வான்! நாம் வந்தபின்பும் பேசாமலிருந்தாயே" என்றான். அதற்கு அநந்தாழ்வான், "ஒரு வைஷ்ணவன் வந்தபோது பேசாமலிருந்தால் தான் எனக்குக் குறை. நீர் வந்தபோது பேசாமலிருந்தால் ஒரு குறையுமில்லை" என்று கைங்கர்யத்துக்கு இடையூருகத் தமக்கு நோயை அளித்த குறைதோற்றச்சொன்னார். அதுகேட்ட திருவேங்கடமுடையான், "நாம் எம்மை இப்படி அவமதிக்கும் உம்மை இந்தத் திருமலையிலிருந்து வெளியே போகச் சொன்னால் என்ன செய்வீர்" என்று இவரைச் சோதிக்கைக்காகக் கேட்டான். அதற்கு அநந்தாழ்வான், "நாம் இருவருமே இந்தத் திருமலைக்கு வந்து சேர்ந்தவர்களே.'பரன் சென்று சேர் திருவேங்கடம்'[திருவாய்3-3-8] என்கிறபடியே, நீர் சில நாள் முன்னால் வந்தீர். நான் பிற்பாடு வந்தேன் என்னும் இவ்வளவே வாசி; ஆகையால் இத்திருமலையாழ்வார் அடியேனைப் போகச்சொன்னால் போகவேண்டுமேயொழிய நீர் போகச்சொன்னால் போகவேண்டிய அவஶ்யமில்லை" என்று அருளிச்செய்தார். பரிபக்வனான பிள்ளையின் பரமரஸமான வார்த்தையைக் கேட்டுத் தந்தை உகப்பதுபோலே அநந்தாழ்வானின் பரமரஸமான இவ்வார்த்தையைக் கேட்டுத் திருவேங்கடமுடையான் உகந்திருப்பான் என்பதில் ஐயமில்லை.]

10. வார்த்தாமாலை 345 வார்த்தை ச விவரணம். ப₄ட்டர் தம்முடைய ஸ்ரீபாத₃த்திலே ஸேவிப்பாரொரு ஸ்ரீவைஷ்ணவரை, "நீர் அநந்தாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே சென்று 'ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணமிருக்கும்படியென்?' என்று கேட்டுவாரும்" என்ன; அவரும், அநந்தாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே செல்ல, அன்று பல ஸ்ரீவைஷ்ணவர்கள் அங்கே அமுதுசெய்தருள, அவரும் இடம் பெறுமையாலே ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுதுசெய்யுமளவும் பேசாதேயிருக்க, அநந்தாழ்வானும் அவரைப்பார்த்து, "அமுது செய்தருளிற்றில்லையே, நெடும்போதுண்டே இளைப்போடே நிற்கிறது" என்று, அநந்தாழ்வான் தாமும் அவருமாக உள்ளே அமுது செய்தருளி, பின்னை 'எங்கு நின்று எழுந்தருளுகிறது?' என்ன; "ப₄ட்டர் அநந்தாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே சென்று ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமிருக்கும்படியென்னென்று கேட்டு வாவென்று அருளிச்செய்துவிட்டார்" என்ன; ஆகில், a "கொக்குபோலேயிருக்கும், கோழிபோலேயிருக்கும், உப்புபோலேயிருக்கும், உம்மைப்போலேயிருக்கும் என்று விண்ணப்பஞ்செய்யும்" என்று அருளிச்செய்தருளினார். [இவ்வார்த்தை கு₃ருபரம்பராப்ரபா₄வம் பக்கம் 356ல் உள்ளது.

a "ஓடுமீன் ஓடி உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு" என்கிறபடியே கொக்கானது நீர்க்கரையிலேயே நின்று, அந்நீரிலுள்ள சிறுமீன்களைக் கொத்தியெடுக்காமல், தனக்குரிய இரையான பெரியமீன்வந்தவுடன் அதைக்கொத்தியெடுத்து அதையே போ₄க்₃யமாக உண்ணும். அதுபோலே ஸ்ரீவைஷ்ணவனும் நீர்வண்ணனிடத்திலேயே நின்று, அவனருளும் அஸார அல்பஸார ஸார ஸாரதரங்களான பயன்களை உபேக்ஷித்து, பா₄க₃வத விஷயத்திலே அவர்கள் உகக்கும் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்த₂ம் ஒன்றையே நீர்வண்ணனிடம் பெற்றுக்கொள்ளுவான். கோழியானது குப்பைகளைக் காலாலே கிளறிக்கிளறிப் பார்த்து நெல்மணிகளைப் பொறுக்கியெடுத்து உயிர்வாழ்வதற்கு உறுப்பாகக்கொள்ளும். அதுபோலே ஸ்ரீவைஷ்ணவனும் சாஸ்திரங்களைத் துருவித்துருவி ஆராய்ந்து, அஸாரம் தொடங்கி ஸாரதரமீருகவுள்ள பயன்களைப் பெற்றுத்தரும் யாக₃ங்கள், கர்மஜ்ஞாநப₄க்தியோக₃ங்கள், ஸ்வக₃தஸ்வீகாரம் ஆகிய உபாயங்களை ஒதுக்கி, ஸாரதமமான பயன்களைப் பெற்றுத்தரும் பரக₃தஸ்வீகாரநிஷ்டை₂, பா₄க₃வதாபி₄மானம், ஆசார்யாபி₄மானம் ஆகியவற்றையே பரமபுருஷார்த்த₂த்தைப் பெற உறுப்பாகக் கொள்வான். உப்பு மற்ற பதா₃ர்த்த₂ங்களில் மறைந்து கலந்துநின்று அவற்றைப் பரமபோ₄க்₃யமாக்கித்தரும். அதுபோலே ஸ்ரீவைஷ்ணவன் "பாண்டி₃த்யம் நிர்வித்₃ய பா₃ல்யேந திஷ்டா₂ஸேத்' [ப்₃ருஹ 5-5-1] [ப்ரஹ்மஜ்ஞானி பாண்டி₃த்யத்தை அடைந்து,' (அதை மறைத்து) குழந்தைபோல் இருக்கவேண்டும் ] என்கிறபடியே பா₄க₃வதர்திரளிலே தன்னை மறைத்துக்கொண்டுநின்று அத்திரளுக்கு இனிமையை உண்டாக்குவான். ஸ்ரீவைஷ்ணவனுடைய ஒவ்வோராகாரத்தைத் தனித்தனியே உணர்த்தும் இம்மூன்று லக்ஷணங்களும் ப₄ட்டருடைய சிஷ்யரான உம்மிடம் நேரில் காணலாம்படியிருந்தமையாலே, 'உம்மைப்போலேயிருப்பான்' என்பது பரிபூர்ணமான லக்ஷணமாகிறது என்று கருத்து ]

11. வார்த்தாமாலை 384 வார்த்தை. அநந்தாழ்வான் போசல ராஜ்யத்துக்கு எழுந்தருளுகிறபோது கட்டுப்ரஸாத₃ம் கட்டிக்கொண்டுபோய் ஒரு இடத்திலே அவிழ்த்தவாறே அடைய எறும்பாயிருந்தது; இத்தைக்கண்டு அநந்தாழ்வான் ப₄யப்பட்டு, "'எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே' [பெரு-திரு 4-10] என்றருளிச்செய்தவரிலேசிலராய்வர்த்திப்பர்கள்; இப்படியேகொண்டு போய்த்திருமலையிலே வைத்துவாருங்கோள்" என்றருளிச்செய்தார்.

12. வார்த்தாமாலை 385 வார்த்தை. அநந்தாழ்வான், மூன்று ஸம்வத்ஸரமாக வாதமாய்க் கிடக்க, ஸ்ரீபாதத்துக்குப் பரிவரா யிருப்பார் சிலர், "திருவேங்கடமுடையான் செய்தருளுகிறதென்!" என்று வெறுக்க, "திருவேங்கடமுடையான் ஹிதமல்லது செய் யான்" என்றருளிச்செய்தார்.

13. வார்த்தாமாலை 386 வார்த்தை & விவரணம். அநந் தாழ்வான் திருநந்தவநத்துக்கு மண்சுமவாநிற்க, பிள்ளைகளிலே ஒருவன் சென்று கூடையை வாங்க, 'நான் இத்தைவிடில் இளைப் பன்; நீ இத்தைத் தொடில் இளைப்புதி' என்றவளவிலே. 'இளைப் பாகாது' என்று பின்னையும் வாங்க, 'ஆனால் நான் ஜீவிக்கிற ஜீவநத்தை வாங்கவேணுமோ; நீயும் வேணுமாகில் ஒரு கூடையை வாங்கிச் சுமக்க மாட்டாயோ?' என்றருளிச்செய்தார். [இது குருபரம்பராப்ரபாவம் பக்கம் 274 இல் உள்ளது. அநந்தாழ் வான் திருநந்தவன கைங்கர்யத்துக்காக மண் சுமந்துகொண்டு போகும்போது வயது முதிர்ந்த இவரை இக்கார்யம் செய்யவிட லாகாது என்று கருதிய அவருடைய பிள்ளைகள் அல்லது ஶிஷ்யர் களிலே ஒருவன் அந்தக் கூடையைத் தன்னிடம் கொடுக்கச் சொல்ல, "எனக்கு பகவத்கைங்கர்யமே உணவாகையாலே நான் இதைச் செய்யாவிட்டால் இளைத்துவிடுவேன். ஸாதாரண உணவை உணவாகக்கொண்ட சிறுவனான நீ இந்த பாரத்தைச் சுமந்தால் இளைத்து விடுவாய்" என்று அநந்தாழ்வான் கூற, 'எனக்கும் கைங்கர்யத்தில் ஆசையிருக்கையாலே இளைக்கமாட் டேன்' என்று கூறி அவன் அநந்தாழ்வானுடைய கூடையை வாங்கப்புக, அதற்கு "என்னுடைய உணவை ஏன் பறிக்கிறாய்;? நீ ஒரு கூடையைக் கொண்டுவந்து மண் சுமந்து கைங்கர்யம் செய் வாயாக" என்று அநந்தாழ்வான் அருளிச்செய்தார்.]

14. வார்த்தாமாலை 387 வார்த்தை & விவரணம்- அநந் தாழ்வான் திருநந்தவநத்தில் திருமண்டபத்திலேயிருந்து திருமாலை கட்டாநிற்க, திருவேங்கடமுடையான் அருள்பாடிட, இவரும் பேசாதேயிருந்து திருமாலையும் கட்டிக்கொண்டு பின்பு கோயிலுக் குள் புக்கவாறே, 'நான் அழைக்க வாராவிட்டதென்?' என்று திருவுள்ளமாக. a 'தேவரீரைக்கொண்டு காரியமென் கருமுகை மொட்டு வெடியாநிற்க?' என்ன, ஆனால் "நாம் உம்மை இங்கு நின்று போகச் சொன்னோமாகில் செய்வதென்?" என்ன, "b பரன்

சென்றுசேர் திருவேங்கடமாமலையன்றோ? தேவரீரன்றோ வந்தேறிகள்; இவ்விடம் தேவரீரை ஆஶ்ரயித்தவர்களதன்றோ'' என்றார். [இவ்வார்த்தை குருபரம்பராப்ரபாவம் 275 ம் பக்கத்தில் வந்துள்ளது. a மாலை கட்டுவதற்குள்ள மொட்டுகள் மலருவதற்குமுன் மாலையைக் கட்டிவிடவேண்டும். அந்த சமயத்தில் நீரே அழைத்தாலும் உம்முடைய கைங்கர்யத்துக்குத் தடையாகையாலே வரமாட்டேன், b "பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை'' - திருவாய் 3-3-8.]

15. வார்த்தாமாலை 388 வார்த்தை & விவரணம். அநந்தாழ்வான் a திருப்படலிகையிலே திருமாலையைச் சேர்த்துக்கொண்டு உள்ளேபுக்கு b கைப்புடையிலேநின்று அருள்பாடு என்றவாறே திருத்திரையைநீக்கித் திருமாலையை நீட்டி, c கையை மறித்துப் போருவர். [a திருப்படலிகையிலே—திருப்பூக்குடலையிலே, b கைப்புடை—த்வாரபாலகர்கள் இருக்குமிடம். c கையை மறித்து—"நைந்து சோர்ந்து கைம்மறித்துநின்றனரே'' [பெரியாழ்வார்-திரு 3-6-6] என்கிறபடியே 'தன் கையில் ஶக்தியில்லை' என்பது தோற்றக் கையைத் திருப்பிக்கொள்வர் என்றபடி. மாலைகட்டும் கைங்கர்யம் அவன் தானே செய்வித்துக் கொண்டானேயொழியத் தாம் செய்ததன்று என்று கருத்து.]

16. வார்த்தாமாலை 418 வார்த்தை, திருவேங்கடயாத்ரையாக எழுந்தருளாநிற்க, காட்டிலே ஒருநாளை விடுதியிலே நீராட எழுந்தருளாநிற்க, ஸ்ரீபாதத்திலே விஷந்தீண்ட, பரிவராயிருப்பார் கண்டு 'எங்கே விஷந்தீண்டிற்று?' என்ன, 'பொய்; அந்தச் செடியிலே' என்ன, அவர்களும் லஜ்ஜாவிஷ்டராய்ப்போக, இத்தை அநந்தாழ்வான் கேட்டருளி ப்ரபந்நர் எழுந்தருளினவாறே 'நீர் என் நினைத்து விஷந்தீர்க்கவேண்டாதிருந்தீர்' என்ன. ப்ரபந்நரும், " 'கடித்த பாம்பு ப3லவானாகில் விரஜையிலே தீர்த்த2மாடி ஸ்ரீவைகுண்ட2நாத2னை ஸேவிக்கிறோம். கடியுண்ட பாம்பு ப3லவானாகில் திருக்கோனேரியிலே தீர்த்த2மாடி திருவேங்கடமுடையானை ஸேவிக்கிறோம்' என்று நினைத்திருந்தேன்'' என்று விண்ணப்பஞ்செய்தார். [கு3ருபரம்பராப்ரபா4வத்தில் அநந்தாழ்வான் விஷயமாக [பக்கம் 275] சொல்லப்படும் ஐதிஹ்யம் இங்கு அநந்தாழ்வானுக்கு ப்ரபந்நர் சொன்னதாக வந்துள்ளது. 'கடியுண்ட பாம்பு' என்று தே3ஹத்தைக் குறிக்கிறது. அநந்தாழ்வான் வ்ருத்தாந்தம் பிறகு ஏற்பட்டிருக்கலாம்.]

17. வார்த்தாமாலை 441 ப 'விஷத்₃ருஷ்டியான பாம்பைப் பிடித்துக்கொண்டு ஆட்டாநின்றீர்' என்றார் அநந்தாழ்வான். [இங்கு கருதப்படும் சரித்திரம் விளங்கவில்லை.]

18. பெரியாழ்வார் திருமொழி 4-4-1 அநந்தாழ்வான் சரம ஸமயத்திலே பட்டர் உகக்கும் திருநாமமேது? என்று கேட்க, 'அழகிய மணவாளப் பெருமாளென்கிற திருநாம மென்று சொல்ல, 'இது பட்₂டர் நாமக்₃ரஹணம் பண்ணுமாபோலே இராநின்றது; ஆகிலும் பட்₂டர் விரும்பின திருநாமமன்றோ' என்று இத்திரு நாமத்தைச் சொன்னவனந்தரத்திலே திருநாட்டுக்குப்போனார்.

19. நாச்சியார் திருமொழி 7-2 (கடலில் பிறந்தித்யாதி₃) நஞ்சீயர் ஸம்ந்யஸித்தருளின காலத்திலே அனந்தாழ்வான் கண்டு, முன்புத்தை ஐச்வர்யமறியுமவனாகையாலே 'ஒரு பூவைச் சூடி வெற்றிலையைத் தின்று சந்தனத்தைப் பூசிப் போராநிற்கச் செய்தே எம்பெருமானே ரக்ஷகனென்றிருந்தால் பரமபதத்தில் நின்றும் இழியத்தள்ளுவர்களோ? இங்ஙனே செய்ததாகாது' என்று போர வெறுத்தவாறே. கூட நின்றவர்களும் 'இங்ஙன் செய்வதே!' என்று வெறுத்தார்களாய் 'இவர்தாம் இனிச் செய்வதென்?' என்று விட்டு, 'திருமந்த்ரத்திலே பிற' என்று முக்கால் சொல்லி 'திருமந்த்ரத்திலே பிறந்து த்₃வயத்திலே வளர்ந்து த்₃வயைக நிஷ்ட₂னாம்படியாய்த் தலைக்கட்டுவது உன் காரியம்' என்று ப்ரஸாதித்தான். திருமந்த்ரத்தில் சொல்லுகிறபடியே ஸ்வரூப ஜ்ஞானமுண்டாய் த்₃வயத்தில் சொல்லுகிறபடியே உபாய பரிக்₃ரஹ முண்டாகவேணுமென்று ப்ரஸாதித்தான்.

20. நாச்சியார் திருமொழி 12-5 அனந்தாழ்வான் 'எம்பெருமானாரைக் காணவேணும்' என்று வாராநிற்கச்செய்தே, வடகரை யளவிலே வந்தவாறே "திருநாட்டுக்கு எழுந்தருளினார்" என்று சில ஏகாங்கிகள் தலைகளையும் சிரைத்து ஏறினார்கள்; அவர்களைக் கண்டு ஸ்ரீநம்பி குஹதாஸர், மரத்திலேயேறி விழுவதாக ஏறினாராய், 'தெளிந்து ஏறின நீ சாவமாட்டாய்காண், போந்திழி" என்றாரும்

21. பெருமாள் திருமொழி 4-10 (ஏதேனுமாவேனே) அநந்தாழ்வான் இவ்விடத்துக்கு "திருவேங்கடமுடையான்ருசுகவு மமையும்" என்னும்: அதுக்கு ஹ்ருத₃யமென்னென்னில்; சேஷபூதர் திரளுக்குப் புறம்பான சேஷியாகிலு மமையுமென்கை.

22. அமலனாதிபிரான் 7(கையினாரித்யாதி₃)......திருக்கோட்டியூரிலே அனந்தாழ்வான், பட்டரை "ஸ்ரீவைகுண்ட₂ நாத₂ன் த்₃விபு₄ஜனோ சதுர்ப்பு₄ஜனோ" என்று கேட்க, "இரண்டுமழகியதே; த்₃விபு₄ஜனாகில் பெரியபெருமாளைப் போலே யிருக்கிறது, சதுர்ப்பு₄ஜனாகில் நம்பெருமாளைப்போலே யிருக்கிறது" என்றார்.

23. பெரியதிருமொழி 5-5-1 "பட்டர் 'அழகிய மணவாளப் பெருமாள்' என்னும்போதும், அனந்தாழ்வான் 'திருவேங்கடமுடையான்' என்னும்போதும், ப₄ாவப₃ந்த₄மடையத் தோற்றியிருக்கும்படி காண்!" என்று ஜீயர்.

24. திருநெடுந்தாண்டகம் 27. சோமாசியாண்டான் ஐ. நி. 10 காண்க.

25. முதல் திருவந்தாதி 42(திருமகளித்யாதி₃) அனந்தாழ்வான், "திருமகட்கே தீர்ந்தவாறென்கொல், மண்மகட்கே தீர்ந்தவாறென்கொல், ஆய்மகட்கே தீர்ந்தவாறென்கொல்" என்றுபணிக்கும்.

26 திருவாசிரியம் 1 முதல்பாகம் பக்கம் 394 ஐ. நி 70 காண்க.

27. பகவத்விஷயம் 3-3 4 (அமர்யாத₃:)..........'இது ஆளவந்தார் அருளிச் செய்ததேயாகிலும், நான் என் வாயால் இப்பாசுரம் சொல்லமாட்டேன்.' என்னுமாம் அனந்தாழ்வான்.

28. பகவத்விஷயம் 8-3-6 (தாங்கள் இத்யாதி₃)......அதி₄காரி வைலக்ஷண்யமும் வ்ருத்தி வைலக்ஷண்யமும் தோன்றும்படி 'தாங்கள் தங்கட்கு' என்று இங்ஙனே ஊன்றிச் சொல்லுமாம் அனந்தாழ்வான்.

29. பகவத்விஷயம் 3-7-2 [நான்கு] பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கச் செய்தே அனந்தாழ்வான் கண்டு, 'பரமபத₃த்தில் ஸர்வேச்வரன் சதுர்பு₄ஜனோ த்₃விபு₄ஜனோ எழுந்தருளியிருப்பது?' என்ன, 'ஏகாயநர் த்₃விபு₄ஜன் என்னாநின்றார்கள்; நம்முடையவர்கள், சதுர்பு₄ஜன் என்னாநின்றார்கள்' என்ன, 'இரண்டிலும் வழியேது?' என்ன, 'த்₃விபு₄ஜனாயிருந்தானாகில் பெரிய பெருமாளைப்போலே யிருக்கிறது: சதுர்பு₄ஜன் என்று தோற்றிற்றாகில் பெருமாளைப்போலே யிருக்கிறது' என்று அருளிச்செய்தார்.

30. பகவத்விஷயம் 5-3-11 [இரைக்குங் கருங்கடல் வண்ணன்] அனந்தாழ்வான் பணித்தானாக நஞ்சீயர் வந்து

பட்டருக்கு, * 'சாபமாநய' என்றபோது கடல் கீழ்மண்கொண்டு மேல்மண்ணெறிந்தாற்போலேயாயிற்று இவள் 'மடலூர்வன்' என்ற துணிவைக் கேட்டு அவன் தன் ஸர்வாதிகத்வம் கலங்கினபடி என்றருளிச்செய்தார்.

31. பகவத்விஷயம் 6-5-7. சோமாசியாண்டான் வைபவம் ஐ. நி 11 காண்க.

32. பகவத்விஷயம் 6-7-1 அனந்தாழ்வான் சோழகுலாந்த கனிலே க்ருஷிபண்ணியிருக்கிறவொரு ஸ்ரீ வைஷ்ணவனைக்கண்டு 'உம்முடைய ஊர் எது?' என்றுகேட்க; 'என் ஊர் திருக்கோளூர்' என்ன, 'அங்கு நின்றும் போந்ததென்?' என்ன, 'தேஹ யாத்ரை நடவாமே போந்தேன்' என்ன; 'அவ்வூரில் கழுதையை மேய்த்து ஜீவிக்கமாட்டிற்றிலையோ? நிலைநின்ற ஜீவனத்தை விட்டுப்போந்தா யாகாதோ' என்றாரும்.

33. பகவத்விஷயம் 6-8-1 (ஆளிரோ) இவள்தான் உபய விபூதியும், கொடாநின்றாளாகில் அவன் வந்தால் தானும் அவனும் எங்கேயிருப்பது? என்ன, 'இக்குருவிகாட்டினவிடத்தே' என்று அனந்தாழ்வான் வார்த்தை.

34. பகவத்விஷயம் 7-2-9 (என் திருமகள்சேர்மார்பனே யென்னும்) அனந்தாழ்வான் தன்பெண்பிள்ளையை 'என் திருமகள்' என்று திருநாமஞ் சாத்தினான்.

35. பெரியவாச்சான்பிள்ளை அருளிய மாணிக்கமாலை:— "திருமந்த்ரம் மாதாவும் பிதா ஆசார்யனும்" என்று அருளிச்செய்தார். இத்தை நினைத்திறே நஞ்சீயரை அனந்தாழ்வான் "திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைகநிஷ்டராவீர்" என்று வாழ்த்திற்றும்.

36. பிள்ளைலோகாசார்யர் அருளிய தனித்வயம் அநந்தாழ்வான் பொமலராஜ்யத்திலே எழுந்தருளின போது ஜீயருடைய பூர்வாச்ரமத்தில் ஐச்வர்யமும் இவர் செருக்கும் இருக்குபடியை அநுஸந்தித்துப் போந்தாராய், ஜீயர் இவற்றை அடையவிட்டு ஸந்ந்யஸித்து எழுந்தருளினபோது அவரைக் கண்டு, "உன்னுடைய மார்த்தவமும் உன்னுடைய செருக்கும் கிடக்க, ஸந்ந்யஸித்தாய்" என்றருளிச்செய்து 'இனிச் செய்யலாவதில்லையிறே' என்று குளிர நோக்கி, 'திருவேங்கடமுடை யானே! இவனைப் பார்த்தருளவேணும், என்று வேண்டிக்கொண்டு, "திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயநிஷ்டனுவாய்" என்று வாழ்த்தினான்.

"கோயிலேறப்போனல் ஒரு மடமும் கார்யமுமாகக் கடவது, அப்போதுபட்டரை த்ருஷ்டாத்ருஷ்டங்கள் இரண்டுக்கும் கடவர் என்று நினைத்துப்போருவதொரு போக்குண்டு, அதிலே ஒன்றை பட்டரைக் கொண்டு கொள்வது; ஒன்றைப் பெருமாளைக் கொண்டு கொள்வது. அங்ஙனே செய்யாதபோது நீர் ஒரு கோடித்ரவ்யத்தை பட்டர் கையிலே கொடுத்தாலும் அவர் செருக்காலே அரை க்ஷணத்திலே அழித்து விடுவர், உம்முடைய காரியத்தில் ஆராயாதபேது நீர் பட்டரை வெறுப்புதிராகில் உமக்கு விநாசமாம். பெருமாளோடே வெறுத்தபோது பட்டரைக்கொண்டு தீர்த்துக் கொள்ளலாம்" என்று பணித்தான்,

37. ஷ பரந்தபடி சரமஶ்லோக ப்ரகரணம். ப்ரபத்தியாவது—'ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றுகை' என்று அனந்தாழ்வான் வார்த்தை.

38. யாமுனதேசிகர் அருளிய தத்வபூஷணம்—பகவத் கைங்கர்யத்துக்கு எல்லைநிலம் அனந்தாழ்வான்.

39 யாமுனதேசிகர் அருளிய ப்ரமேயரத்னம் ப்ரகரணம்-1—பெரியதிருமலையிலே வர்த்திப்பானொரு வைஷ்ணவன் பட்டர் கோஷ்டியிலே வந்து தும்மி 'திருவேங்கடம்' என்ன, அவர் 'ஆர் கருவிலே திருவில்லாதவர்?' என்று அருளிச்செய்தார். இத்தைக் கேட்டு அனந்தாழ்வான் "வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே என்றுளோ திருவரங்கமென்றுளோ" என்று பட்டருக்குச் சொல்லி வரக்காட்ட 'அவர் கணுக்கண்டபடி என்கொண்டு? செவ்வடி குத்துகிருரோ?' என்று அருளிச்செய்தார்.

40. ஷ ப்ரமேயரத்னம் ப்ரகரணம்—2 —"திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைகநிஷ்டராவீர்" என்றிறே அனந்தாழ்வான் வார்த்தை.

41, ஷ ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 4 — தன் ஆசார்யன் திறத்தில் செய்த அடிமையை மறந்து, செய்யப் பெறுத அடிமைக்கு இழவாளனாயிருக்கை. அதாவது—ஆசார்யன் திருவுள்ளத்தைப் பின் சென்ற அனந்தாழ்வானைப் போலே,

42. ப்ரபந்நாம்ருதம். 56-அத்தியாயம் முழுவதும்.

43. அனந்தாழ்வான் அருளிய திருவாய்மொழித் தனியன்—
ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமாநுச முனிதன்*
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்*-ஆய்ந்தபெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ் வேதம்தரிக்கும்*
பேராத வுள்ளம் பெற.

44. திருநக்ஷத்திரத் தனியன்—

மேஷே சித்ர ஸமுத்3பூ4தம் யதிநாத2பதா3ஶ்ரிதம் ।
ஸ்ரீவேங்கடேஶ ஸத்3ப4க்தம் அநந்தார்யமஹம் ப4ஜே ॥

[சித்திரை மாதம் சித்திரை நக்ஷத்திரத்தில் அவதரித்தவராய், யதிராஜரின் திருவடியை ஆஶ்ரயித்தவராய், திருவேங்கடமுடையானின் நல்லன்பரான அநந்தாழ்வானிடம் பக்தி செய்கிறேன்.]

45. வாழித்திருநாமம்—

விண்ணவர்கள் வந்துதொழும் வேங்கடமால் அடியிணையைத்
திண்ணமிது வென்று தெளிவுற்று—நண்ணிக்
காலமலர் பறித்திட்டுக் கண்டுகக்கும் அனந்தாழ்வான்
கோலமலர் அடியிணையே கூறு.

அருமறைகள் தேடறிய அணிவேங் கடமால்
திருவிருக்கும் மார்பில் திருமாலை—ஒருமையுடன்
தேடி அளித்தருளும் சீர்அனந் தாழ்வானைப்
பாடி அடிதொழுவோம் யாம்.

மலையில் வேங்கடவற்கு மாமனுர் வாழியே
மணிச்சுடர்க்கோன் அனந்தனென வந்துதித்தோன் வாழியே
உலகுக்கோர் தஞ்சமென உதித்தருள்வோன் வாழியே
உலகமுண்ட மாலடியை உகந்துய்ந்தோன் வாழியே
இலகு சித்திரைதன்னில் சித்திரையோன் வாழியே
எந்தை எதிராசர் இணையடியோன் வாழியே
அலர்மேல் மங்கை திருவுக்கு அப்பனுர் வாழியே
அனந்தாழ்வான் திருவடிகள் அனவரதம் வாழியே.

ஸ்ரீமதனந்தாழ்வான் மங்களம்

ஸ்ரீவேங்கடாத்3ரி கமிது:
கைங்கர்யேஷு ந்யயுங்க்த யம் ।
ராமாநுஜார்யஸ் தஸ்மை ஸ்யாத்
அனந்தார்யாய மங்களம் ॥

[ஸ்ரீராமாநுஜரால் திருவேங்கடமுடையானின் கைங்கர்யத்தின் பொருட்டு நியமிக்கப்பெற்ற அனந்தாழ்வானுக்கு மங்களம்.]

# வடுகநம்பி வைபவம்

ராமாநுஜார்ய ஸச்சி₂ஷ்யம் ஸாலக்₃ராமநிவாஸிநம் ।
பஞ்சமோபாயஸம்பந்நம் ஸாலக்₃ராமார்யமாஶ்ரயே ॥

[எம்பெருமானாருடைய நல்ல சீடராய், ஸாளக்₃ராமம் என்னும் ஊரில் வாழ்ந்தவராய், ஐந்தாம் உபாயமான ஆசார்ய நிஷ்டை கைவரப்பெற்றவரான ஸாளக்₃ராம ஐயன் எனப்படும் வடுக நம்பியை ஆஶ்ரயிக்கிறேன்.]

மேல்கோட்டை திருநாராயணபுரத்திற்கு அருகில் ஸாலக்₃ராமம் என்னும் ஊரில், எம்பெருமானார் அவதரித்து 30 வருஷங்களுக்குப் பிறகு (கி. பி. 1047) ஸர்வஜித் வருஷம் மாசிப் புனர்பூசத்தில் அவதரித்தவர் "ஆந்த்₄ரபூர்ணர்" என்னும் "வடுகநம்பி".

விஶிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ த₃ர்ஶந ஸ்த₂ாபகரான எம்பெருமானாருடைய சரித்திரத்தை விளக்கும் பற்பல நூல்களில் தலைமைபெற்ற 'யதிராஜவைப₄வம்' என்னும் 114 அழகிய ஶ்லோகங்களில் அமைந்த நூலை அருளியவராய், எம்பெருமானாரிடம் சரம பர்வ நிஷ்டை₂யை உடையவராயிருந்தவர் ஆந்த்₄ரபூர்ணர் எனப்படும் வடுகநம்பியேயாவர். யதிராஜவைப₄வத்தில் 113 வது ஶ்லோகத்தில் இது தெளிவாக விளங்குகிறது. சுருக்கமான இந் நூலை விவரிப்பவையாகவே கு₃ருபரம்பராப்ரப₄ாவம்,ப்ரபந்நாம்ருதம் முதலான நூல்கள் அமைந்திருக்கின்றன.

இந்நூலை அருளிய வடுகநம்பியின் ஆசார்யநிஷ்டை₂ அதி விலக்ஷணமானது. எம்பெருமானாரின் திருவடி நிலைகள் (பாது₃கைகள்) மாத்திரமே இவருக்குத் திருவாராத₄னப்பெருமாள். ஒரு சமயம், இவர் தம் திருவாராத₄னப்பெருமாளான உடையவர் திருவடி நிலைகளையும், உடையவர் திருவாராத₄னப் பெருமாளையும் ஒன்றாக எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்தார். உடையவர் "வடுகா! இப்படிச் செய்து விட்டாயே!" என்று வருத்தப்பட்டார். அதற்கு வடுகநம்பி "உங்கள் பெருமாளைக் காட்டிலும், எங்கள் பெருமாளுக்குஎன்னகுறை?" என்று அருளிச்செய்தாராம். பெருமாளுடைய வடிவழகை உடையவர் ஸேவித்துக்கொண்டிருக்கும்போது, உடையவருடைய வடிவழகை இவர்ஸேவித்துக்கொண்டிருப்பாராம். ஒருநாள் 'பெரியபெருமாளுடைய திருக்கண்ணழகைப்பாராய்' என்று உடையவர் அருளிச்செய்ய, "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே!" என்று நம்பி அருளிச்செய்தாராம்.

உடையவரும் 'இப்படியொரு நிஷ்டையா!' என்று உகந்து, நம்பியைப் பூர்ணகடாக்ஷம் செய்தருளினாராம். எம்பெருமானார் தாம் அமுது செய்தருளிய சேஷ ப்ரஸாதத்தைப் ப்ரஸாதிக்கும்போது, இரண்டு திருக்கைகளாலும் ஏற்றுக்கொண்டு, ப்ரஸாதஸ்வீகாரம் பண்ணி, தம் தலையிலே திருக்கைகளைத் துடைத்துக்கொள்வாராம் வடுகநம்பி. ஒருநாள் இதைக்கண்டு எம்பெருமானார் மிகவும் கோபிக்க, அன்று திருக்கை விளக்கிவிட்டு, மறுநாள் உடையவர் பகவத்ப்ரஸாதத்தைக் கோயிலிலே ப்ரஸாதிக்க, அதை அமுது செய்தபின் திருக்கை விளக்கினாராம் வடுகநம்பி. உடையவர் இது கண்டு 'வடுகா! என்செய்தாய்?' என்ன, வடுகநம்பி "நேற்று அருளிச்செய்தபடி செய்தேன்" என்ன, உடையவரும் 'உமக்குத் தோற்றோம்' என்று அருளினாராம்.

ஒருநாள் பெருமாள் திருவீதி எழுந்தருளும்போது "வடுகா! பெருமாளை ஸேவிக்கவா" என்று உடையவர் அழைக்க, அப்போது உடையவருக்குப் பால்காய்ச்சிக் கொண்டிருந்த வடுகநம்பி "உம்முடைய பெருமாளை ஸேவிக்க வந்தால், என்னுடைய பெருமாளுக்குப் பால்பொங்கிப்போமே" என்று அருளினார் என்னும் விஷயம் ஸுப்ரஸித்தம். வைஷ்ணவரல்லாத தம்முடைய உறவினர்கள் சிலர் வந்து இவரகத்திலே தங்கிப்போக, அவர்கள் சென்றவுடன், அகத்தையெல்லாம்சுத்திபண்ணி, அவர்கள்தொட்ட பாண்டங்களையும் உடைத்துப்போட்டு, அவர்கள் வந்து இருந்ததற்கு ப்ராயச்சித்தமாக முதலியாண்டானகத்தில் புழைக்கடையில் கழித்துக்கிடந்த பாண்டங்களை எடுத்துலந்து தம்மகத்தில் உபயோகப்படுத்தினார் என்பதும் பிரஸித்தம். உடையவர் ஸ்ரீபாத தீர்த்தமும் தவிர வேறு ஸ்ரீபாததீர்த்தமும் கொள்வதில்லை என்னும் நியதியும் இவருக்கு உண்டு. இத்தகைய ஆசார்யநிஷ்டையாலேயே, இவர் ஆழ்வானையும், ஆண்டானையும் 'இருகரையர்' என்று அருளிச்செய்வர் என்பது ஸ்ரீவசநபூஷண ஸூத்ரஸித்தம். அதாவது:— எம்பெருமானாரே ப்ராப்யப்ராபகங்களாயிருக்கும்போது, மதுரகவியாழ்வாரைப்போலே தேவுமற்றறியாதவராயிருக்கவேண்டியிருக்க, 'ஆற்றில் ஒருகால் சேற்றில் ஒருகால்' என்பதுபோலே இவ்விருவரும் எம்பெருமானையும் பற்றிநிற்பதே! என்று அவர்களைச் சிரித்திருப்பர் என்று கருத்து.

இவ்வண்ணமாக எம்பெருமானாரைத் தவிரத் தேவுமற்றறியாதிருந்த இம்மஹாசார்யர் எம்பெருமானாரது வைபவபரமான யதிராஜவைபவம் ஒன்றையே அருளிச்செய்துள்ளார்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்—"வடுகநம்பி வைப₄வம்" என்னும் தலைப்பில் முதல்பாகம் 277, 278 பக்கம் காண்க.

2. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்—முதல் பாகம் 281 பக்கம் முதல் பாரா காண்க.

3. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்—

ராமாநுஜார்யசரண ப்ரவணம் பரதே₃வவத் ।
வடுபூர்ணமஹம் வந்தே₃ பரஜ்ஞாந பயோநிதி₄ம் ॥

[பரதெய்வத்திடம்போலே ராமாநுஜாசார்யருடைய திருவடியில் ஈடுபட்டவரும், சிறந்த ஜ்ஞானத்திற்கு ஒரு கடலாயிருப்பவருமான வடுகநம்பியை வணங்குகிறேன்.]

4 சரமோபாயநிர்ணயம் — வடுகநம்பி, திருவோலக்கத்திலே சென்றால் எம்பெருமானாரை நோக்கி த₃ண்டன் ஸமர்ப்பித்து ஒரு பார்ஶ்வத்திலே கடக்க நிற்பாராய், எம்பெருமானார் வடுகநம்பியை நம்முடைய மது₄ரகவிகள் என்றருளினாராம். ஆழ்வார்க்கும் ஒரு மது₄ரகவிகளுண்டிறே. இப்படி இருக்கையாலேயிறே இவர்க்கு ஆழ்வானையும் ஆண்டானையும் இரண்டிட்டுச் சொல்லலாயிற்று. ஒருநாள் எம்பெருமானார் வடுகநம்பியை அழைத்தருளி, 'வடுகா! ஆசார்யாபி₄மான நிஷ்ட₂ன் எத்தைப்போலே இருப்பான்' என்று கேட்டருள, 'வேம்பின் புழுப்போலே இருப்பன்' என்றருளிச்செய்தார். அதாவது:— "வேம்பின் புழு வேம்பன்றியுண்ணாது" என்கிற படியே ஆசார்யனுடைய அபி₄மானத்திலே ஒதுங்கி இருக்கிறவன் பேற்றுக்கு உடலாக அறுதியிட்டிருப்பது தத₃பி₄மானத்தையொழிய வேறொன்றையும் பேற்றுக்கு உடலாக நினைத்திரான் என்றபடி 'கரும்பின் புழு' என்று சொல்லுகையன்றிக்கே வேம்பின் புழுவை த்₃ருஷ்டாந்தமாகச் சொல்லுவானேனென்னில், பரமத₃யாளுவான ஆசார்யன் தானே. தன் அபி₄மானத்திலே ஒதுங்கி இருக்கும் ஶிஷ்யனுக்குத் தன் பக்கல் (உள்ள) வைரஸ்யம் பிறக்கும்படி க₄ாதுகனான த₃ஶையிலும் "நானுன்னையன்றியிலேன்" என்கிற படியே தத₃பி₄மானராஹித்யத்தில் ஸத்தையில்லை என்னும்படி "சுனைகண் பற்றிலேன்" என்கிறபடியே தத₃பி₄மான நிஷ்ட₂னாயிருக்கவேணும் என்னுமிடம் தோற்றுகைக்காகச் சொல்லிற்று. இத்தால்-எம்பெருமானாருடைய அபி₄மானத்திலே ஒதுங்கிக் கர

ணத்ரயத்தாலும் ததேககநிஷ்டராயிருக்கிறவன் ததீயதிரிக்த விஷயங்களில் உத்தாரகத்வ ப்ரதிபத்தி பண்ணியிரான் — என்றபடி. ஸர்வோத்தாரகமான விஷயத்தைப்பற்றினால் ததீயதிரிக்தரைக் கொண்டு தேவையில்லையிறே.

5. சரமோபாயநிர்ணயம். எம்பார் வைபவம் பக்கம் 79 ஐதிஹ்ய நிர்வாஹம் 89 காண்க.

6. பெரியதிருமுடியடைவு—வடுகநம்பிக்குத் திருவவதாரஸ்தலம் மேல்நாட்டில் திருநாராயணபுரத்துக்குமேல் ஸாலக்ராமம். திருத்தகப்பனார் ஸாலக்ராமஐயன். திருநக்ஷத்ரம் ஸர்வஜித் வருஷம் மாசிப் புனர்பூசம். திருநாமங்கள் ஸாலக்ராம ஐயன், வடுகநம்பி, பஞ்சமோபாய ஸம்பந்நர். ஆசார்யர் எம்பெருமானார்; திருவாராதனம் எம்பெருமானார் திருவடிகள், இவர் பரமைகாந்தியாய் ஆசார்யாபிமான நிஷ்டராயிருக்கையாலே இவருக்கு இருப்பிடம் எம்பெருமானார் ஸந்நிதியிலே. இவர் தொண்ணூற்றஞ்சு திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார்.

7. வார்த்தாமாலை 154வது வார்த்தை விவரணம்:— நாராயணனைப் பற்றி நாடுபெறலாயிருக்க, a நாரங்களைப்பற்றி நரகவாஸிகளாகாநின்றார்கள்; எம்பெருமானைப் பற்றி ஏற்றப்பெறலாயிருக்க, b ஏழைகளைப்பற்றி எளிவரவுபடாநின்றார்கள்; ஸ்ரீவைஷ்ணவர்களைப்பற்றிச் சீர்மைபெறலாயிருக்க, c சில்வானரைப் பற்றிச் சீர்கேடராகாநின்றார்கள்; ஆசார்யனைப் பற்றி d அம்ருதபானம் பண்ணலாயிருக்க, அஜ்ஞரைப்பற்றி அநர்த்தப்படாநின்றார்கள்; e மந்த்ரத்தைப்பற்றி மாசறுக்கலாயிருக்க, மமதையைப்பற்றி f மரியாநின்றார்கள்; g (வடுகநம்பி.) நியந்தாவான ஆசார்யன் ஸந்நிதியிலே வர்த்தித்தல், நியமவானான சிஷ்யன் ஸந்நிதியிலே வர்த்தித்தல் செய்யிலல்லது நியதனாகைக்கு வழியில்லை. [அழகான ப்ராஸம் எனப்படும் மோனைகள் நிறைந்த வார்த்தை இது. a நாரங்கள்—அழியாதவனாகையாலே நரனெனப்படும் எம்பெருமானிடமிருந்து உண்டான சப்தாதி விஷயங்கள். b ஏழைகள்— "சேட்டை தன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே" [திருமாலை-10] என்கிற ரீதியிலே எம்பெருமானோடு ஒப்பிடும்போது தரித்ரர்கள் எனத்தக்க மற்ற தெய்வங்களைச் சொல்லுகிறது. அன்றிக்கே "ஏழையராவி உண்ணும்"

[திருவாய் 7-7-1] முதலான இடங்களிற் போலே பெண்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். c சில்வானர்—அற்பர்கள். d அம்ருதபானம்—அழியாததாய், பரம போக்ய வஸ்துவான பகவத் விஷயத்தை அநுபவிப்பது. e மந்த்ரம்—திருமந்த்ரமும் த்வயமும். f மரியாதின்றார்கள்—ஸ்வரூப நாசத்தை அடையாநின்றார்கள். g ஆசார்ய லக்ஷண பூர்த்தியுள்ள ஓர் ஆசார்யனுடனே, ஶிஷ்ய லக்ஷணபூர்த்தியுள்ள ஓர் ஶிஷ்யனுடனே கூடியிருந்தால்தான், எம்பெருமானே ப்ராப்யமாய், ப்ராபகமாய், தாரகமாய், போஷகமாய், போக்யமாயிருப்பவன் என்ற நியதி ஏற்படும் என்று கருத்து. இந்தக் கடைசி வாக்யத்தின் தொடக்கத்தில் சில ப்ரதிகளில் மாத்திரம் வடுகநம்பி என்று உள்ளது.]

8. வார்த்தாமாலை 221, வார்த்தை சீ விவரணம்—"ஆசார்ய கைங்கர்யம் a தனக்குப் பசிவிளைந்துண்கை; பகவத கைங்கர்யம் b தாய்க்குச்சோறிடுகை; பகவத்கைங்கர்யம் c ஒப்பூணுண்கையும் d மூப்புக்குச் சோறிடுகையும்" என்று வடுகநம்பி அருளிச்செய்வர். [a தனக்குப் பரமபோக்யமாயிருப்பது என்று கருத்து. b விலக்கவொண்ணாத கடமை என்று கருத்து. c ஒப்பூணுண்கை—இருக்கும் சோற்றைப் பலரில் ஒருவனாக இருந்து உண்கை. d வயதான ஏழை எளியவர்களுக்குச் சோறிட்டுக் காப்பாற்றுவது போன்றது எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்து அவனுக்கு த்ருப்தி செய்விக்கை என்று கருத்து.]

9. வார்த்தாமாலை 284. வார்த்தை சீ விவரணம்—ஸ்ரீவைஷ்ணவனுக்கு a அடுஞ்சோறு மூன்று. b அடாச்சோறு மூன்று; c அடாச்சோறுவது-அநுகூலரை நெருக்கி ஜீவிக்கையும் ப்ரதிகூலர்பக்கல் ஸாபேக்ஷனாய் ஜீவிக்கையும், ஸாதநாந்தரபுத்த்யா கைங்கர்யம் பண்ணி ஜீவிக்கையும்; d அநுகூலரை நெருக்குகையாவது-ஸர்வேஶ்வரன் உயிர் நிலையிலே கோலிட்டடித்த மாத்ரம்; "ஆயர் கொழுந்தாய்" "பத்தராவியை" "நாஹமாத்மாநமாஶாஸே" "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" ["நாஹமாத்மாநமாஶாஸே மத்பக்தைஸ்ஸாதுபிர்விநா"] "மம ப்ராணா ஹி பாண்டவா:" என்றுண்டாகையாலே. இவ்வர்த்தத்தில் e வடுகநம்பி வார்த்தை; பகவதபசாரம்—எம்பெருமான் திருமேனியிலே தீங்கு நினைக்கை; பாகவதாபசாரம் - அவன் திருமார்பிலே (திருக்கண்மலரிலே) கோலிட்டடித்தமாத்ரம்; "யே ப்ரபந்நா மஹாத்

மாநஸ் தே மே நயநஸம்பத3:"என்றுண்டாகையாலே; [a அறுஞ்சோறு அருச்சோறு என்று தெலுங்குப் பதிப்பிலுள்ளது. அடுஞ்சோறு—சமைந்தசோறு; ஜீர்ணமாகக் கூடிய சோறு என்று தாத்பர்யம். அறுஞ்சோறு என்பது ஜீர்ணமாகும் சோற்றை நேரே குறிக்கும். அடாச்சோறு என்பது சமையாத சோறு என்று பொருள்பட்டு அருத (ஜீர்ணமாகாத) சோற்றைக் குறிக்கும். அடுஞ்சோறு மூன்றையும் 286-ம் வார்த்தையில் விவரிக்கப்போகிறார். அடாச்சோறு 284, 285 வார்த்தைகளில் விவரிக்கப்படுகிறது. c ஸ்ரீவைஷ்ணவர்களைத் துன்புறுத்தி அப்படிக் கிடைக்கும் பொருளைக் கொண்டும், அவைஷ்ணவர்களுக்கு அடிமைத் தொழில் புரிந்து கிடைக்கும் பொருளைக்கொண்டும், ப4க3வத் கைங்கர்யத்தை வயிறு வளர்க்கு வழியாகக்கொண்டு கிடைக்கும் பொருளைக் கொண்டும் வாழ்க்கை நடத்துகை—சமையாத சோறு ஜீர்ணமாகாமல் மனிதனை மரணமடையச் செய்வதுபோலே ஆத்மாவை நசிக்கச் செய்யும் என்று கருத்து. d ஸ்ரீவைஷ்ணவர்களைத் துன்புறுத்துகையாவது—எம்பெருமானுடைய உயிர்நிலையிலே தடியாலடிப்பதையாக்கும். மரத்துக்கு வாட்டம் வந்தால் முதலில் கொழுந்து வாடும். அதுபோல் அடியார்களுக்கு வாட்டம் வந்தால் எம்பெருமான் முதலில் வாடுவானென்பதை "ஆயர் கொழுந்தாய்" [திருவாய் 1—7—3] என்று நம்மாழ்வார் காட்டினார். அடியார்களை உயிராகக் கொண்டவன் எம்பெருமான் என்பதை "பத்தராவியை" [பெரிய திரு 7-10-1, 10-1-8] என்று பெயரிட்டுக் காட்டினார் திருமங்கையாழ்வார். "ஜ்ஞானியானவன் எனக்கே உயிர் என்பது என் ஸித்3தா4ந்தம்" [கீ3தை 7-18] "நல்லோர்களான என் அடியார்களைப் பிரிந்து என் உயிரையும் வேண்டேன் நான்" [ ] "பாண்ட3வர்கள் எனக்கு ப்ராணனாகவே இருப்பவர்களன்றோ" [பா4ர-உத்3யோக3 91—27] என்று எம்பெருமானே அருளிச்செய்ததும் இவ்விஷயத்தில் ப்ரமாணம். e இவ்வடுகநம்பி வார்த்தையும் முற்கூறிய விஷயத்தை விவரிக்கிறது. ப4க3வத3பசாரம் எம்பெருமான் திருமேனியில் தீங்கை நினைப்பதையாக்கும். பா4க3வதாபசாரமோவெனில் அவன் திருமார்பிலோ, திருக்கண்களிலோ தடியால் அடிப்பது போன்றது. "மஹாத்மாக்களான ப்ரபந்நர்கள் எனக்குச் செல்வமான கண்போன்றவர்கள்" [ ] என்னும் ப4க3வத்3 வசனம் இவ்விஷயத்தில் ப்ரமாணம்.]

10. வார்த்தாமாலை 441. † வார்த்தை உ விவரணம்— நான் அவர்க்கு நல்லேனென்றார் வடுகநம்பி. [ † வடுகநம்பியை 'நீர் எம்பெருமானை உபேக்ஷிக்கிறீரே' என்று சிலர் கேட்க " 'தேவுமற்றறியேன்' என்றிருந்த மதுரகவியாழ்வாரைப் போலே நான் எம்பெருமானாருக்கு நல்லேன் ஆகையாலே எம்பெருமானைக் காற்கடைக்கொள்வதில் குறையில்லை'' என்று வடுகநம்பி அருளிச்செய்தார்.]

11. பெரியாழ்வார் திருமொழி 4-4-1: உடையவர் எழுந்தருளியிருக்கிற காலத்திலே வடுகநம்பி அருகே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எழுந்தருளியிருந்து "ஓம் நமோ நாராயணாய" என்று இத்தைச் சொல்ல, இத்தைக் கேட்ட வடுகநம்பி 'நாவகாரியம்' என்றெழுந்து கடக்கப் போனார்.

12, பெரியாழ்வார் திருமொழி 4-4-7. அருளாளப்பெருமாள் எம்பெருமானார் வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 9 காண்க.

13. பெரியவாச்சான்பிள்ளை அருளிய மாணிக்கமாலை. வடுகநம்பி "ஆசார்யபதம் என்று தனியே ஒரு பதம்; அது உள்ளது எம்பெருமானாருக்கேயாயிற்று; ஆகையால், 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்று விச்வஸித்திருங்கோள்'' என்றாயிற்று தம்முடைய சிஷ்யர்களுக்கு அருளிச்செய்வது.

14, ஸ்ரீவசநபூஷணம் சூர்ணை 411. ஆழ்வான் வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 79 காண்க.

15 ப்ரபந்நாம்ருதம், அத்யாயம் 54 ல் ஶ்லோகம் 15 முதல் இறுதிவரை உ 55 ம் அத்தியாயம்.

16, திருநக்ஷத்திரத் தனியன்,

சைத்ரே த்வஶ்விநிஸஞ்ஜாதம் ஸம்ஸாரார்ணவதாரகம் ।
ராமாநுஜார்யஸச்சிஷ்யம் ஆந்த்ரபூர்ணமஹம் பஜே ॥

[சித்திரை மாதம் அச்வினி நக்ஷத்திரத்தில் அவதரித்தவரும், ஸம்ஸாரக்கடலைத் தாண்டுவிப்பவரும், ராமானுஜாசார்யருடைய நல்ல சீடருமான ஆந்த்ர பூர்ணரிடம் (வடுகநம்பியிடம்) பக்தி செய்கிறேன்.]

# கிடாம்பியாச்சான் வைபவம்

ராமாநுஜபத₃ாம்பே₄ாஜயுக₃ளீ யஸ்ய தீ₄மத: |
ப்ராப்யம் ச ப்ராபகம் வந்தே₃ ப்ரணதார்த்திஹரம் கு₃ரும் ||

[எம்பெருமானுருடைய திருவடித்தாமரையிணை எந்தப் பேரறிவாளர்க்கு ப்ராப்யப்ராபகங்களாயிருந்ததோ, ப்ரணதார்த்திஹரர் என்னும் திருநாமமுடைய அந்தக் கிடாம்பியாச்சானை வணங்குகிறேன்.]

ஆஸ்திகாக்₃ரேஸரம் வந்தே₃ பரிவ்ராட்₃கு₃ருபாசகம் |
யாசிதம் குருகேஶேந ப்ரணதார்த்திஹரம் கு₃ரும் ||

[ஆஸ்திகர்களில் தலைவராய், குருகேஶர் என்னும் திருநாமமுடைய திருக்கோட்டியூர் நம்பியால் (எம்பெருமானுருக்குத் திருமடைப்பள்ளி கைங்கர்யம் செய்யும்படி) யாசிக்கப்பட்டவராய், (அதற்குப்பின்) யதிராஜருக்குத் திருமடைப்பள்ளி கைங்கர்யம் செய்தவரான ப்ரணதார்த்திஹரர் எனும் கிடாம்பியாச்சானை வணங்குகிறேன்.]

ஶ்ரீபா₄ஷ்யம் த₃ர்ஶயித்வா யதிபதிரசிதம்
ஶாரதா₃யை நிவ்ருத்தோ
நத்வா ஶ்ரீவேங்கடேஶம் பதி₂ பரமபத₃ம்
த₃த்தவாந் கோ₃பிகாயை |
ஆக்₂யாம் வேதா₃ந்தமாங்கோ₃த₃யந
இதி த₃த₄த்₃ பா₄ஷ்யகாரேண த₃த்தாம்
ஆத்ரேயாசார்ய விஷ்ணோரநுஜமநுதி₃நம்
ஸாத₃ரம் தம் நமாமி ||

[எவரொருவர் யதிராஜரால் இயற்றப்பட்ட ஶ்ரீபா₄ஷ்யத்தை ஸரஸ்வதியிடம் காண்பித்துவிட்டுத் திரும்பி வரும் வழியில் திருமலையில் திருவேங்கடமுடையானை வணங்கி, ஓரிடைச்சிக்குப் பரமபத₃ம் கொடுத்து, ஶ்ரீபா₄ஷ்யகாரரால் அளிக்கப்பட்ட 'வேதா₃ந்தோத₃யநர்' என்னும் திருநாமத்தை த₄ரித்தாரோ, ஆத்ரேய குலத்துதித்த விஷ்ணுவெனும் ஆசார்யருடைய தம்பியான அந்தக் கிடாம்பியாச்சானை தினந்தோறும் உகப்புடன் வணங்குகிறேன்.]

ஶ்ரீராமானுஜரின் மாமாவான பெரிய திருமலைநம்பி — 'ப்ரணதார்த்திஹரர்' என்னும் திருநாமம் உடையவராய், ஆத்₃ரேய கோ₃த்ரத்தில் அவதரித்தவரான கிடாம்பியாச்சானுக்கு அத்தை

யின் கணவர் என்று யதிராஜவைப4வத்திலிருந்து விளங்குகிறது. பெரிய திருமலை நம்பியின் நியமனத்தின்பேரில் கிடாம்பியாச்சான் எம்பெருமானாரை ஆச்ரயித்தார். எம்பெருமானாருடைய சிஷ்யர்களுக்குள்ளே அவருடைய திருமேனியில் மிகவும் பரிவுடையவர் இவரே என்று திருக்கோட்டியூர் நம்பியால் பரீக்ஷை செய்து கண்டுபிடிக்கப்பெற்று, எம்பெருமானாருக்கு மடைப்பள்ளி கைங்கர்யத்தில் நியமிக்கப்பெற்றவர் இவர். இவருடைய பேரனான “கிடாம்பி அப்புள்ளார்” என்னும் ராமானுஜாசாரியரே ஸ்ரீவேதா3ந்ததே3சிகருக்கு மாமாவும் ஆசார்யரும் ஆவார். இப்படி ஆச்சான் மூலம் எம்பெருமானாரோடு தமக்கு ஸம்ப3ந்த4முள்ளதை “யதிவரனார் மடைப்பள்ளி வந்த மணம் எங்கள் வார்த்தையுள் மன்னியதே” முதலான இடங்களில் ஸ்ரீவேதா3ந்ததே3சிகர் குறித்துள்ளார். வடுகநம்பி எம்பெருமானாருக்குப் பாலமுது காய்ச்சும் கைங்கர்யத்தைச் செய்ததுபோலே, கிடாம்பியாச்சான் மடைப்பள்ளி கைங்கர்யத்தைச் செய்து வந்தவர். திருமாலிருஞ்சோலை அழகர் திருமுன்பே “அக3திம்” [ஸ்தோத்ரரத்னம் 48] [க3தியற்றவனை] என்னும் ஆளவந்தாருடைய ஶ்லோகத்தை இவர் விண்ணப்பம் செய்ய, “நம்மிராமானுசனை ஆசார்யனாகப்பெற்று வைத்திருந்து ‘அக3திம்’ என்று நீ சொல்லலாகாது” என்று அழகர் அருளிச்செய்ததாக ஈட்டில் ஐதிஹ்யம் உள்ளது. ததீ3யாராத4னத்தில் தீர்த்த2ம் பரிமாறும்போது இவர் சரியாகப் பரிமாறாமை கண்டு எம்பெருமானார் சிக்ஷிக்க “பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட” [திருவாய் 4–8–2] என்னும் பாசுரத்தை இவர் அநுஸந்தி4த்தார் என்பது அப்பாசுரத்தின் ஈடு முதலானவற்றில் உள்ளது. இவர் ஸ்ரீபா4ஷ்யத்தை ஸரஸ்வதியிடம் காண்பித்ததாகவும் திருமலையில் ஓரிடைச்சிக்குப்பரமபத3மளித்ததாகவும் தனியனில் உள்ளது. இவர் க்3ரந்த2ங்கள் அருளிச்செய்ததாகத் தெரியவில்லை. ஆயினும் வேதா3ந்த ஶாஸ்த்ரப்புலமையினாலே ‘வேதா3ந்தோத3யநர்’ என்று எம்பெருமானார் இவருக்குப் பட்டமளித்ததாகத் தனியனிலிருந்தும் ஸ்ரீதே3சிக க்3ரந்த2ங்களிலிருந்தும் விளங்குகிறது. ந்யாயமதத்தைச் சேர்ந்தவர்களுக்குத் தலைவராய் ‘குஸுமாஞ்ஜலி’ எனும் தலைசிறந்த ந்யாயக்3ரந்த2த்தை இயற்றிய உத3யனரை ஒத்த மேதா4விலாஸத்தை உடைய வேதா3ந்தி இவர் என்று கருத்து.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் பக்கம் 112 ஐதிஹ்ய நிர்வாஹம் 2 காண்க.

2. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். மூன்று தனியன்கள் வைபவத் தொடக்கத்தில் காண்க.

3. யதிராஜ வைபவம். முதல் பாகம் பக்கம் 187 & 188 ஶ்லோகம் 65—69 காண்க.

4. வார்த்தாமாலை நூற்றுப்பத்தாம் வார்த்தை & விவரணம்— ஆச்சி ஆச்சானுக்கு—பக்ஷவச்சேஷமாய் அநாதிகாலம் எம்பெருமானோட்டை ஸம்பந்தத்தை அறுத்துக்கொண்ட a ஜந்துவுக்கு எம்பெருமான் திருவடிகளிலே b பிணைத்துப் பிழைப்பிக்கப் பிராட்டியுளள் என்றிரும்—என்றருளிச்செய்தார். [a ஜந்துவுக்கு - பத்தசேதனனுக்கு. b பிணைத்துப் பிழைப்பிக்க-சேர்த்து உய்விக்க. (இது வங்கிபுரத்தாச்சி கிடாம்பியாச்சானுக்கு அருளியது)]

5. திருப்பாவை 23. முதல் பாகம் பக்கம் 388 ஐதிஹ்ய நிர்வாஹம் 45 காண்க.

6. நாச்சியார் திருமொழி 9-8 (காலையெழுந்திருந்து) ஆச்சான் பணித்ததாக ஜீயரருளிச்செய்யும்படி;—"இவள் பிறந்தவூரில் திர்யக்குக்களுக்குத்தான் வேறு போதுபோக்குண்டோ? கண்ணுறக்கந் தானுண்டோ" என்று. (இங்கு 'ஆச்சான்' என்றது சிறியாச்சானை என்றும் கூறலாம்.)

7. பெரியதிருமொழி 3—7—3. முதல் பாகம் பக்கம் 389 ஐதிஹ்ய நிர்வாஹம் 53 காண்க.

8. திருவிருத்தம் 30 வார்த்தை & விவரணம் — (தொழுதிரந்தேன்) கிடாம்பியாச்சானோடே நம்பிதிருவழுதிநாடுதாஸரும் மற்றும் நம் முதலிகளுமிருந்து *அந்யத் பூர்ணாத்* என்கிற ஶ்லோகத்தைக் கேளாநிற்க, "அந்யத்" என்கிறது—ஒருகாலமையுமென்கிறதோ? என்ன, "அரைக்காலமையும்" என்று கிடாம்பியாச்சான் நியமித்தான். ["அரைக்கால் அமையும்" என்றது — பூர்ணகும்பம், திருவடிவிளக்கல், குசலப்ரசனம் ஆகியவற்றை ஒருமுறை பூர்ணமாகச் செய்யவேண்டும் என்னும் நிர்ப்பந்தமில்லை. அரைகுறையாகச் செய்தாலும் போதும் என்று கருத்து]

9. திருவிருத்தம் 99 வியாக்யானம் ஈடு முதல் பாகம் பக்கம் 393 ஐதிஹ்ய நிர்வாஹம் 67 பின் பகுதி காண்க.

10. பகவத் விஷயம் 4-8-2. முதல் பாகம் பக்கம் 399 ஐதிஹ்ய நிர்வாஹம் 94 காண்க.

11. பகவத்விஷயம் 4-10-2. (அவன் மேவியுறை கோயில்)... 'பரமபதத்திலும் ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தையநுஸந்தித்துத் திருவுள்ளத்தில் வெறுப்போடேயாயிற்று எழுந்தருளியிருப்பது' என்று பட்டரருளிச்செய்ய, "ஆச்சானும் பிள்ளையாழ்வானும் இத்தைக் கேட்டு 'பரமபதத்திலே ஆனந்த₃ நிர்ப்ப₄ரனாயிருக்கிற இருப்பிலே திருவுள்ளத்திலே ஒரு வ்யஸநத்தோடே யிருந்தார் என்கை உசிதமோ' என்றார்கள்" என்று பண்டிதரென்கிறவர் வந்து விண்ணப்பஞ்செய்ய, "*வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்₄ருஶம் ப₄வதி து₃:க்கி₂த:* என்றது கு₃ணப்ரகரணத்திலேயோ? தோ₃ஷ ப்ரகரணத்திலேயோ? என்று கேட்கமாட்டிற்றிலீரோ? இது கு₃ணமாகில் கு₃ணமென்று பேர்பெற்றவற்றில் அங்கில்லாததொன்று உண்டோ" என்று அருளிச்செய்தார்.

12 பகவத்விஷயம் 6—7—5, முதலியாண்டான் வைபவம் பக்கம் 47 ஐதிஹ்ய நிர்வாஹம் 39 காண்க.

13. பகவத்விஷயம் 10—3—4. (துணைபிரிந்தார் துயரமும்) 'துணையென்றால் த்₃விஷ்ட₂மாயன்றோ காணிருப்பது' என்னும் ஆச்சான்.

14, பகவத்விஷயம் 10—6—1. (அது நமது விதிவகையே) 'அது நம்முடைய பா₄க்₃யாநுகு₃ணமாகவிறே' என்று இதுக்குப் பூர்வர்கள் நிர்வஹிக்கும்படி, இத்தை எம்பெருமானார் கேட்டருளி "இத்திருவாய்மொழியில் மேலோடுகிற ரஸத்தோடு சேராது. நாம் விதித்தபடியே செய்வானாயிருந்தானென்கிறார்" என்றருளிச் செய்வர்.

15 ரஹஸ்யத்ரயஸாரம்— ஸித்₃தோ₄பாய ஶோத₄நாதி₄காரம்—முதல் பாகம் பக்கம் 462 ஐதிஹ்ய நிர்வாஹம் 244 காண்க.

16. க்ஷேநிகமநாதி₄காரம்—

இதி யதிராஜ மஹாநஸபரிமளபரிவாஹவாஸிதாம் பிப₃த |
விபு₃த₄பரிஷந் நிஷேவ்யாம் வேத₃ாந்தோத₃யந
ஸம்ப்ரதா₃ய ஸுதா₄ம் ||

[இவ்வண்ணம் யதிராஜருடைய திருமடைப்பள்ளியின் நன் மணப் பெருக்கினால் நறுமணமூட்டப்பெற்றதாய், அறிஞர் குழுவால்சுவைக்கத்தக்கதாய், (ந்யாய சாஸ்திரத்திற்கு உத₃யநரைப்போல்) வேதா₃ந்தசாஸ்திரத்திற்கு உதயனராய் விளங்குகின்ற கிடாம்பியாச்சானுடைய ஸம்ப்ரதா₃யமாகிய அமுதத்தைப் பருகுங்கள்.]

17. தேசிகன் அருளிய பரமபதஸோபாநம்—

அடற்புள ளரசினு மந்தணர் மாட்டினு மின்னமுதக்
கடற்பள்ளி தன்னினுங் காவிரி யுள்ள முகந்தபிரா
னிடைப்பிள்ளை யாகி யுரைத்த துரைக்கு மெதிவரனார்
மடைப்பள்ளி வந்த மணமெங்கள் வார்த்தையுண் மன்னியதே

[வலிமைமிக்க பக்ஷிராஜனான கருடனிடத்திற் காட்டிலும், அந்தணர்களின் தனமான வேத₃ங்களிடத்திற்காட்டிலும், இனிய அமுதமான பிராட்டி அவதரித்த திருப்பாற்கடலிடத்திற்காட்டிலும், காவேரி மத்தியிலுள்ள ஸ்ரீரங்கத்தில் திருவுள்ளம் உகந்த ஸ்ரீரங்கநாதன் இடைச்சிறுவனான கண்ணனாக அவதரித்து வெளியிட்ட பகவத் கீதையின் பொருளைத் தம் கீதாபாஷ்யத்தில் அருளிய யதிராஜனின் திருமடைப்பள்ளி வழியாக (கிடாம்பியாச்சான் மூலம்) வீசின நறுமணம் (அவர் சீடர் பரம்பரையில் வந்த) எங்கள் கிரந்தங்களில் பொருந்தியுள்ளது.]

18 ப்ரபந்நாம்ருதம், 24—ம் அத்தியாயம். ஶ்லோகம் 12*—22.

19. கிடாம்பியாச்சான் அருளிய திருவிருத்தத் தனியன்—

கருவிருத்தக் குழிநீத்தபின் காமக்கடுங்குழி வீழ்ந்து*
ஒருவிருத்தம் புக்குழலுறுவீர் உயிரின் பொருள்கட்கு*
ஒருவிருத்தம் புகுதாமல் குருகையர்கோனுரைத்த*
திருவிருத்தத் தோரடி கற்றிரீர் திருநாட்டகத்தே.

# பிள்ளையுறங்காவில்லிதாஸர் வைபவம்

ஜாக3ரூகத4நுஷ்பாணிம் பாணௌ க2ட்3க3ஸமந்விதம் |
ராமாநுஜஸ்பர்ஶவேதி3ம் ராத்3தா4ந்தார்த்த2 ப்ரகாஶகம் ||
ப4ாகி3நேயத்3வயயுதம் ப4ாஷ்யகாரப4ரம் வஹம் |
ரங்கே3ஶமங்க3ளகரம் த4நுர்த்த3ாஸமஹம் ப4ஜே ||

[உறங்காமலிருப்பவரும், வில்லைக் கையில் ஏந்தியவரும், மற்றொரு கையில் கத்தியோடு கூடியவரும், உடையவருக்கு (இரும்பைப் பொன்னாக்கும்) ஸ்பர்ஶவேதி3யாயிருப்பவரும் ஸித்தாந்தப்பொருளை (தம் வாழ்வினாலேயே) வெளிப்படுத்தியவரும், இரு மருமக்களை உடையவரும், ப4ாஷ்யகாரருடைய மடத்தின் பொறுப்பைச் சுமப்பவரும், திருவரங்கனுக்கு மங்க3ளாஶாஸனம் செய்பவருமான பிள்ளையுறங்காவில்லிதாஸரை ஆஶ்ரயிக்கிறேன்.]

ஒருநாள் நடுப்பகலிலே காவேரி மணலிலே சதுர்த்த2வர்ணத்தைச் சேர்ந்த த4நுர்த்த3ாஸர் என்பவர், பொன்னாச்சியார் எனும் தமது மனைவிக்கு வெயில்படாதபடி குடைபிடித்து அழைத்துச் செல்வதை எம்பெருமானார் கண்டார். 'இவ்வளவு ஈடுபாடு ஏன்?' என்று கேட்ட எம்பெருமானாரிடம் 'அவளுடைய கண்ணழகுக்குத் தோற்று ஈடுபடுகிறேன்' என்றார் த4நுர்த்த3ாஸர். 'இதைவிடச் சிறந்த கண்ணழகைக் காட்டுகிறேன் வாரும்' என்று அவரை அழைத்துச் சென்று, பெரியபெருமாளுடைய கண்ணழகைக் காட்டி, அவருக்கும் அவரைக் காட்டித்தந்த தமக்கும் த4நுர்த்த3ாஸரை அடிமையாக்கிக் கொண்டார் உடையவர். உறையூரிலே சோழராஜாவின் அரண்மனையில் மல்லர்களுக்குத் தலைவராயிருந்து ஸேவைசெய்து ஸம்பாதி3த்த பணத்தையெல்லாம் உடையவருடைய மட2த்துச் செலவுக்கு அளித்துவந்தார் த4நுர்த்த3ாஸர். இரவெல்லாம் உறங்காமலிருந்து ராஜஸேவைசெய்து, பகல் முழுதும் உறங்காமல் எம்பெருமானாருடைய மட2த்திற்கு ஸேவை செய்து, இளையபெருமாளைப்போலே 'உறங்காவில்லி' 'பிள்ளை உறங்காவில்லித3ாஸர்' என்று புகழ்பெற்றார் இவர். உடையவர் காவேரிக்குத் தீர்த்த2மாடச் செல்லும்போது அந்தணர் குலத்தலைவரான முதலியாண்டான் கையைப்பிடித்துக்கொண்டு செல்வராம்; தீர்த்த2மாடி வரும்போது இவருடைய கையைப்பிடித்துக்கொண்டு வருவராம். காவேரியில் தீர்த்த2மாடுவதால் வரும் பரிஶுத்3தி4யைக்காட்டிலும், ப4ாவஶுத்3தி4யுடைய இவருடைய கையைப்பிடித்துக்கொண்டு வருவதால் ஏற்படும்

பரிஶுத்₃தி₄ அதி₄கம் என எம்பெருமானார் கருதினர். இரும்பைத் தன் ஸ்பர்ஶத்தாலே பொன்னுக்கும் வேதகப்பொன்னை ஸ்பர்ஶவேதி₃யைப்போலே, தம்முடைய வர்ணாஶ்ரமங்களில் உயர்த்தியால் உண்டாகக்கூடிய அஹங்காரமாகிற அபரிஶுத்₃தி₄ இவருடைய கரஸ்பர்ஶத்தால் நீங்குவதாகத் திருவுள்ளம்பற்றினர் உடையவர். "யாக₃ாநுயாக₃ உத்தரவீதிகளில் காயாந்நஸ்த₂லஶுத்₃தி₄ பண்ணின வ்ருத்₃த₄ஸாரம்" [ஆசார்யஹ்ருத₃யம் 85] என்னுமிடத்தில் யாக₃மாகிற திருவாராத₄னத்திற்கு முன் உறங்காவில்லியின் ஸ்பர்ஶத்தாலே உடையவர் காயஶுத்₃தி₄ பண்ணிக்கொண்ட இச்செய்தி அநுஸந்தி₄க்கப்பட்டுள்ளது. இதனாலே ராமாநுஜஸ்பர்ஶவேதி₃ என்று புகழ் பெற்றார் இவ்வுறங்காவில்லி. உடையவர் இவருக்கு அளிக்கும் இப்பெருமையை சிஷ்யர்களில் சிலர் தாழ்வாகப்பேசினர் என்றும், அவர்களைத் தெளிவிக்க ஒரு நாடகத்தை நடத்திக்காட்டினார் ராமாநுஜர் என்றும் கூறுவதுண்டு. அதாவது:— அந்த சிஷ்யர்களின் வஸ்த்ரங்களில் அவர்களறியாமல் ஒரு சிறு பகுதியைக் கிழித்துவிடச் சொன்னார் அவர்கள் அதைப் பார்த்தபின்பு கோபத்தாலே அப்படிக் கிழித்தவர்களை நிந்தி₃த்தனர். அன்றிரவே உறங்காவில்லியின் வீட்டிற்குச் சிலரை அனுப்பி, அவரது மனைவி பொன்னாச்சியார் அணிந்துகொண்டிருந்த நகைகளை உறங்கும்போது எடுத்துவரச் சொன்னார். அவர்கள் நகையை எடுத்துக்கொள்ளும்போது விழித்த பொன்னாச்சியார், ராமாநுஜ சிஷ்யர்களே நகைகளை எடுத்துக்கொள்கிறார்கள் என்றறிந்து ஒரு பக்கத்து நகைகளை எடுக்கும் வரையில் உறங்குபவள்போலே கிடந்து, அதற்குப்பின் 'மறுபுறம் நகைகளையும் எடுத்துக்கொள்ளட்டும்' என்னும் எண்ணத்துடன் புரண்டு படுக்கப்புக, அவள் விழித்துக்கொண்டுவிட்டாள் என்றெண்ணி, அந்த ஶிஷ்யர்கள் ஓடிச்சென்று உடையவரிடம் அந்த நகைகளை அளித்தனர். இரவு ராஜஸேவை முடிந்து வந்த உறங்காவில்லி நடந்த செய்தியை அறிந்து, "ஸ்ரீவைஷ்ணவர்கள் நகையை எடுத்துக்கொள்ளும்போது அவர்களே உன்னைப்புரட்டி மறுபுறமுள்ள நகைகளை எடுத்துக்கொள்ளும்படி அசேதனம்போலே யிராமல், நீ ஸ்வாதந்த்ர்யம் காட்டினதாலன்றோ, அவர்கள் அந்த நகைகளை எடுத்துக்கொள்ளாமல் ஓடிவிட்டார்கள்' என்று அவளை நிந்தி₃த்து, இவளுக்குத் தக்கத₃ண்ட₃னை அளிக்கவேணும் என்று எம்பெருமானாரைப் பிரார்த்தி₂த்தார். அபவாத₃ஞ்சொன்ன சீடர்கள் வெள்கிப்போய்த் தலைகுனிந்தனர். அவர்களைத் திருத்துவதற்காகத் தாம் ஆடச்செய்த நாடகமேஇது என்று தெளிவுபடுத்தி நகைகளைத் திருப்பியளித்தார் உடையவர். நம்பெருமாள் புறப்பாடுகளிலே அவருக்கு ஏதாவது குறைநேர்ந்தால் தம்மை முடித்துக்கொள்வதற்காகக் கத்தியும் கையுமாகக் கூடச்செல்வராம் உறங்காவில்லி· ஆழ்வார்களைப்போன்ற இவருடைய பரிவு இதனால் விளங்குகிறது. வண்டர், சுண்டர் என்னும் இரு மருமக்கள் உறங்காவில்லிக்கு கைகள்போல் உதவிவந்தனர்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம் முதல்பாகம் ஐதிஹ்ய நிர்வாஹம் 23-ல் பக்கம் 247 காண்க.

2. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். முதல் பாகம் ஐதிஹ்ய நிர்வாஹம் 25-ல் பக்கம் 302 காண்க.

3. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம். பிள்ளையுறங்காவில்லிதாஸர் தம்முடைய அந்திம தசையிலே முதலிகளெல்லாரையும் அழைப்பித்துத் தீர்த்தங்கொண்டு க்ஷமைகொண்டு, பொன்னாச்சியாரைப் பார்த்து 'நம்முடைய விஶ்லேஷத்தில் நீ பிழை நினையாதே கொள்' என்று ஆணையிட்டு, உடையவர் திருவடி நிலைகளைத் தம் முடியிலே வைத்துக்கொண்டு திருநாட்டுக்கு எழுந்தருளினார். அநந்தரம் பொன்னாச்சியாரும் க்லேசியாமல் தரித்திருந்து திருவாசலைத் திருவலகிட்டுத் தெளிநீர் தெளித்துத் திருப்பிண்டியிட்டுத் திருக்காவணமிடுவித்து நிற்க, ஸ்ரீவைஷ்ணவர்கள் உடையவர் நீராடுந் துறையிலே திருமஞ்சனமெடுத்துக்கொண்டு வந்து த்வயாநுஸந்தாநத்துடனே நீராட்டித் திருநாமம் திருச்சூர்ணம் முதலாக ஸ்ரீவைஷ்ணவாலங்காரங்களெல்லாஞ் செய்து பெருமாள் சாத்திக்களைந்து வரவிட்டருளின திருமாலையும் திருப்பரியட்டமும் சாத்தி அலங்கரிக்க, தாமுமஸர்வாபரணபூஷிதையாய்க் கஸ்தூரி ம்ருகம்போலே உலாவிநின்று ஸ்ரீவைஷ்ணவர்களைத் தீர்த்தங்கொண்டு சுருளமுது திருத்தித் திருமாளிகையிலுள்ள த்ரவ்யங்களடங்கலும் ஸமர்ப்பிக்க, கரும்புகளுமெடுத்து நூற்றந்தாதி இயலாக அநுஸந்தித்துவரப் பின்பு திருச்சூர்ணமிடித்து எல்லாரும் * எண்ணெய் சுண்ணங்கொண்டாடி, பிள்ளையுறங்காவில்லிதாஸருடைய விமல சரம விக்ரஹத்தை திவ்ய விமாநத்திலே எழுந்தருளப் பண்ணி வைத்துக்கொண்டு ஏகாங்கிகளும் ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றுமுள்ள முதலிகளும் மாறிமாறி ஸ்ரீபாதந்தாங்க, எழுந்தருளுகிற விமாநமும் தூர மறைந்தவளவிலே பொன்னாச்சியாரும் ஶோகார்த்தையாய் "மாரிமாக்கடல்வளைவணர்க்கிளையவன் வரைபுரை திருமார்பில், தாரினாசையும் போயின நெஞ்சமும் தாழ்ந்தது ஓர் துணைகாணேன், ஊரும் துஞ்சிற்று உலகமும் துயின்றது ஒளியவன் விசும்பியங்கும், தேரும் போயிற்றுத் திசை

களும் மறைந்தன செய்வதொன்றறியேனே" என்று கையெடுத்துக் கூப்பிட்டு அழுதுகொண்டுவிழுந்து ப4ாக3வதவிஶ்லேக்ஷாஸஹிஷ்ணுவாய் மூர்ச்சித்துக்கிடந்து அப்போதே அங்கு திருநாட்டுக்கு எழுந்தருள, முதலிகளும் அங்கே திருச்சூர்ணமிடித்துப் பிள்ளையுறங்காவில்லிதா3ஸருடன் திருப்பள்ளிபடுத்தார்களென்பார்கள். இவருக்குத் ததீ3ய விஶ்லேஷத்தில் அப்போதே ஶரீரவிஶ்லேஷம் வரும்படியான ததீ3யப்ரேமசரமபாகம் முற்றிவளர்ந்தபடியிறே இது.

4. பன்னீராயிரப்படி குருபரம்பராப்ரபாவம், ஸ்ரீஎம்பெருமானார் திருவடிகளில் பிள்ளையுறங்காவில்லிதாஸரும் அகளங்கநாட்டாழ்வானும் ஆஶ்ரயித்து மாட்சிபெற்றது. ஸ்ரீ எம்பெருமானார் கோவில் கார்யங்களை நோக்கிச் சீர்திருத்திக்கொண்டு த3ர்ஶன ப்ரவர்த்தகராய்ப்போருகிற ஸமயத்தில், நிசுளாபுரியென்கிற உறையூரிலிருந்து சோழதேசத்தை ஆண்டுகொண்டிருந்த அகளங்கசோழன் என்னுமரசனிடத்தில் கையாள்களாகவிருந்த வில்லிகள் மூவரில் உறங்கா வில்லி என்னுமொருவர், உறையூரிலிருந்து திருவெள்ளறைக்குப் போகா நிற்க; நடுப்பகலாகையாலே திருக்காவேரி மணலில் நடக்கும்போது, அதிஸுந்தர கோமளாங்கி3யான தன்னுடைய பத்னியின் சிவந்த பாதங்களில் ரத்தங் குழம்பி வருத்த முண்டாக; அவ்வம்மை அதனால் து3:க்கி2க்க; அவர் கண்டு மனந்தளர்ந்து, ராஜனால் தனக்கு வெகுமதி செய்யப்பட்டிருந்த பட்டு உத்தரீயத்தை நடைபாவாடையாகப் பரப்பி அதன் மீது மெள்ள மெள்ள மேன்மேலே நடத்திக்கொண்டு, முகத்தில் வெயில் படாமலிருக்குபடி குடைபிடித்துக்கொண்டுவர; இந்தப் புதுமையை அங்கெழுந்தருளி யிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் கண்டு எம்பெருமானாருக்குக் காட்ட; எம்பெருமானாரும் பார்த்தருளி ஸமீபத்தில் வருகையில் அழைத்துரைச் செய்து 'பிள்ளைகாள்! நீங்கள் எங்கே போவதாகப் புறப்பட்டு இப்படி வருத்தப்படுகிறீர்கள்' என்று கேட்டருள; வில்லி 'ஸ்வாமீ! அடியேனிருப்பது திருவெள்ளறை; தொழில் செய்வது உறையூரில் அகளங்கனிடத்தில்; இவள் அடியேனுடைய பணியாட்டி; இப்போது செல்வது திருவெள்ளறைக்கு' என்று விண்ணப்பஞ் செய்தார்.

எம்பெருமானார் 'பிள்ளாய்! தொழில் செய்யப் போமிடத்துக்கு ஸ்திரீயுடனும் போய் வருவதுண்டோ?' என்று கேட்க; வில்லி தன்னுடைய பத்னியைக் காட்டி, 'இப்படி அழகில் மிகுந்த ஒரு அரிவை எங்கள் குலத்தில் மாத்ரமே யல்லாமல் மற்றெந்தக்

குலத்திலுமே அகப்படுவது அருமையா யிருக்குமாளுல், கிடைக்கப் பெற்ற அடியன் இவளை விட்டுப்பிரிந்திருக்கவும் இவள் கண்ணழகைப் பாராதிருக்கவும் எங்ஙனம் கூடும்?' என்றுசொல்ல; எம்பெருமானுர் களுக்கென நகைத்து, 'பிள்ளாய்! நீ இவள் கண்ணழகிலகப்பட்டிருந்தால் உன்னுடைய சிந்தாகுலம் தவிருவதெப்படி காண்?' என்ன; வில்லி 'ஸ்வாமீ! அதைத் தவிர்க்கும் பொருளும் உலகத்திலுண்டோ?' என்ன; எம்பெருமானுர் 'உண்டெனக் காட்டுவோமாகில் நீர் கொள்வீரோ? என்ன; வில்லி 'கொள்வேன்' என்று ஸம்மதிக்க; ஆகில் வாருமென்று கூட்டிக்கொண்டுவந்து திருக்காவேரியில் திருக்காவணத்தின் கீழே, சைத்ரோத்ஸவங் கண்டருளுவதாக எழுந்தருளியிருந்த திருவரங்கச் செல்வனுரைச் சேவிக்கப் பண்ணியருள, அந்நேரத்தில் பெருமாள் விபவ ரூபமாய் ஸேவை ஸாதிக்கத் திருவுள்ளம் பற்றினுராகையாலே உறங்காவில்லியும் அவர் பத்னியும் ஸேவித்துக் "குன்ருடுகொழுமுகில்போற் குவளைகள் போற் குரைகடல் போல், நின்ருடு கணமயில்போல் நிறமுடைய நெடுமாலார்" என்னும்படியே யிருந்த படியால், பார்த்த கண் வாங்காதபடிக்குப் பாதாதிகேசம், கேசாதிபாதாந்தமாகப் பலமுறை விழுந்துஸேவித்து அவ்வடிவழகைக் கண்களிலும். நெஞ்சிலும் தேக்கிக்கொண்டு, மீண்டும் எம்பெருமானுர் திருவடிகளில் தண்டன் ஸமர்ப்பித்து 'ஸ்வாமீ! இனி அறிய வேண்டுவனவெல்லாம் தேவரீர் ஸந்நிதியிலே யன்றி வேறெங்குமிரா; ஆகையாலே அவற்றை அடியோங்களுக்கு ப்ரஸாதித்துத் திருத்திப் பணிகொள்ளவேண்டும்' என்று ப்ரார்த்தித்தார்.

அப்பொழுதில் தானே அவ்விருவரையும் பஞ்சஸம்ஸ்கார பூர்வகமாக ஆட்கொண்டு பிள்ளை யுறங்கா வில்லி தாஸரென்றும் பொன்னுச்சியார் என்றும் தாஸ்ய நாமங்களிட்டு ஆதரித்தருளினுர். அனந்தரம் பிள்ளை யுறங்கா வில்லிதாஸர், தம்முடைய மருமக்களான வண்டவில்லி என்பவரையும் செண்டவில்லி என்பவரையும் எம்பெருமானுர் திருவடிகளிலே தம்மோடொக்க ஆச்ரயிக்கும்படி செய்து வைக்க, எம்பெருமானுர் அவர்களையும் ஆட்கொண்டு, வண்டலங்கார தாஸர் என்றும், செண்டலங்காரதாஸரென்றும் தாஸ்ய நாமங்களிட்டு ஆதரித்தருளினுர். அனந்தரம் இம்மூவரும் கோவிலில் தானே வஸிக்க இடந்தேடிக்கொண்டு ஆசார்ய ஸேவையை ஒருபொழுதேனும் தவிராதபடி அனுபவித்துக்கொண்டு, திரு உறையூருக்குப்போய் உத்யோக கார்யங்

களை மாத்ரம் பார்த்துக்கொண்டு. அரசனிடத்திற் பெறுகிற மாதத் தவணை நிதியைக்கொண்டுவந்து எம்பெருமானார் திருவடிகளில் ஸமர்ப்பித்துவர, எம்பெருமானார் அதை அங்கீகரித்து, இவர்களுக்கு ஶ்ரேயஸ்ஸுண்டாகும்படியாக பகவத்பாகவத ஆசார்யவிஷயங்களில் கைங்கர்யருபமாகச் செலவிட்டுவந்தார். இப்படியிருக்கையில் அரசனான அகளங்கன் ஒருநாள் அந்திப்பொழுதில் உலாவப் போக இச்சித்து வண்டலங்கார தாஸரையும் செண்டலங்கார தாஸரையும் இருபுறத்திலும் மெய்க்காவலாக வைத்துக்கொண்டு போகாநிற்க, அவன் இவர்களுடைய வைஷ்ணவ துல்யத்தையும் புறந்தொழாக் கொள்கையையும் உணர்ந்திருப்பவனாகையாலே, பரீக்ஷார்த்தமாக எதிரில் அதிதூரத்திலே தோன்றுநின்றுகொண்டிருந்த ஒரு சமண ஆலயத்தின் கோபுரத்தை காட்டி இப்போது நாம் ஸ்ரீரங்கத்தை நெருங்கிவிட்டாற் போலிருக்கிறது காண்! அதோ ஸ்ரீரங்கவிமானம் தெரிகிறதே! என்று வியப்புடையவன் போலே சொல்ல, இவர்கள் அதை உண்மையென்றே நபபித் தத்க்ஷணமே தாளுந்தடக்கையுங்கூப்பி அத்திசையுற்றுத் தண்டனிட்டுக்கிடக்க, அப்பொழுது அகளங்கன் பரிஹஸித்து, 'ஐயோ! இப்பொழுது நீங்கள் தண்டனிட்டது சமண ஆலயத்திற்கல்லவோ? எழுந்து நன்ருய்ப் பாருங்கோள்' என்ன, அதைக்கேட்டு அவர்கள் அப்படியே மூர்ச்சையாய்விட, அவன் இவர்கள் விழுந்து நெடுநேரமாயும் எழுந்திராததென்னென்று, புரட்டிச் சோதித்து, உயிரிழந்தவர்கள் போலிருக்கக்கண்டு பயந்து தன்னுடைய ஆள்களைக்கூவி, இச்செய்தியை உறங்காவில்லிக்குத் தெரிவித்து வாருங்கோளென்ன, அவர்களோடிவந்து பிள்ளையுறங்காவில்லிதாஸருக்கறிவிக்க, அவர் உடனே அவ்விடத்தேற எழுந்தருளிக் கடாக்ஷித்து வர்த்தமானத்தை அகளங்கனால்தானே அறிந்துகொண்டு "மறந்தும் புறந்தொழா மாந்தர்க்கு மாயன் தமர்களடிப்பொடியே மருந்து" என்றருளிச்செய்து, தம்முடைய திருவடியால் அவர்களுடைய திருமேனியைத் தடவியருள, அப்போதே அவர்கள் உயிர்பெற்றெழுந்தார்கள்.

இந்த ஆச்சர்யத்தை அகளங்கன் கண்டு இம்மூவர் விஷயத்திலும் பயந்தவனாகி, 'ஸ்வாமிகாள்! இதுவரையில் அடியேன் தேவர்களைச் சாதாரண மனிதராக ஏற்றுக்கொண்டிருக்கிற அபசாரங்களைப் பொறுத்து ரக்ஷித்தருள வேண்டும்' என்று தண்டனிட்டு அநேகமாக ஸன்மானித்து 'இனிமேற்பட கோவிலில்தானே வாசஞ்செய்துகொண்டு அடியேன் ப்ரதிமாதமும் ஸமர்ப்பிகிற த்ரவ்யத்தை

அங்கீகரித்தருள வேண்டும்' என்று ப்ரார்த்தித்து அனுப்பிவிட,இம் மூவரும் எம்பெருமானார் ஸ்ரீபாதத்தேற வந்து தண்டனிட்டு அரசனுக்கும் தங்களுக்கும் நடந்த செய்தியை விண்ணப்பம் பண்ணி குருகுலவாஸஞ்செய்துகொண்டிருந்தார்கள்; அதன்பின்பு அரசன் வழக்கப்படிக்கு மாதக்கட்டளை நிதியைச் சேவகர்மீதெடுப்பித்து இம்மூவருக்கும் அனுப்பிக்கொடுக்க, இவர்களதைப் பெற்றுக் கொண்டுபோய் எம்பெருமானார் திருவடிகளில் ஸமர்ப்பிக்கப்புக, அவரதைப் புறங்கையாலே தட்டி வெறுப்புடனே 'பிள்ளைகாள்! இதுவரையில் நீங்கள் கொணர்ந்த த்ரவ்யம் மெய்வருந்திச் சம்பாதித்திருந்ததாகையாலே நம்மாலங்கீகாரம் பெற்றிருந்தது. இப்போது அப்படிக்கில்லாமல், ராஜஸ தாமஸ ரூபமாய் வந்திருக்கின்றபடியால் சாதுகோஷ்டிக்கு வினியோகார்ஹமாகாது. அதுவா அதை வினியோகித்தாலும் விஷமிச்ர க்ஷீரம்போலேயாமென்றே ஐயப்படுகிறோம்; ஆகையால் இதைத்திருப்பிவிட்டு வாருங்கோள்' என்று ஆஜ்ஞையிட; அவர்களெடுத்துக்கொண்டு திரும்பி அரசனிடத்துக்குப்போய்த் தங்களாசார்யர் திருமுகப்படியிருந்தபடியைத் தெரிவித்து, 'இனி இந்த த்ரவ்யாபேக்ஷை தங்களுக்கிருப்பதில்லை' என்றுரைக்க: அவன் இவர்களை யேறநோக்கித் தன்னிடத்தில் இவர்கள் தத்பூர்வத்தில் வஹித்திருந்த நைச்யத்தையும், தத்காலத்தில் பெற்று வந்த தைர்யத்தையும் ஒன்றோடொன்று ஒப்பிட்டுப்பார்த்துக் கொஞ்சநேரம் அசைவற்றிருந்து யோசித்து, மண்ணையும் பொன்னையுந் தேடும் அவாவில் மூழ்கி மாயுமவர்க்கு மாத்ரமே இவ்வுலகத்தில் பயமிருக்குமென்றும், தன்னையுமிறைவனையும் பகுத்தறிந்து அனுபவிக்கும் மஹாத்மாக்களுக்கு பயமிருக்கமாட்டாதென்றும் உணர்ந்து, அவ்வுணர்வின்வழியாலே தான் ரக்ஷிக்கப்படுமாறும் இவர்களாதரணையாலதானே காணலாகுமென் றுணர்ந்து. அவ்வுணர்வின் மிகுதியாலே தலைவணக்கமுடையவனாகி. ஆஸனத்தினின்றும் தொப்பென நிலத்திற் குதித்து இவர்களை நமஸ்கரித்து "ஸ்வாமிகாள்! உங்களுக்கிப்படி நிர்ப்பயத்தை யுண்டாக்கி வைத்தருளின மஹாத்மாவான உங்கள் ஆசார்யனுடைய க்ருபைக்கு அடியேனையும் ஆளாக்கி யருள வேண்டுமே" என்று இரக்கமுண்டாமாறு வேண்டிக்கொண்டான்.

அவனை ஆதரவுடனே கூட்டிக்கொண்டு வந்து, எம்பெருமானார் ஸந்நிதியில் விட்டு, வ்ருத்தாந்தத்தை விண்ணப்பஞ்செய்து "ஸ்வாமி! இந்த ஆத்மாவுக்கு இப்போது ராஜஸ தாமஸங்க

ளொழிந்து ஸத்வம் தலையெடுத்து வந்து தேவரீர் திருவடிகளை உய்யும் உபாயமாகப் பற்றுதற்கு அபி4லாஷைகொண்டு நாடியிருக்கின்றபடியால் க்ருபைசெய்தருள வேண்டும்" என்று புருஷகாரஞ்செய்ய; எம்பெருமானார் அவனையும் உகந்து பஞ்சஸம்ஸ்கார பூர்வகமாக ஆட்படுத்திக்கொண்டு, அகளங்கநாட்டாழ்வானென்னும் தா3ஸ்யநாமமும் ப்ரஸாதி3த்தருளி 'ஆழ்வானே! நீர் அரசனுகையாலே, த4ர்மாத4ர்ம ஸூக்ஷ்மங்களறியும் விவேகியாயிருப்பீராகையாலே, இன்றுதொட்டு நீர் நம்பெருமாளுடைய கார்யங்களில் லோபம் நேரிடாதபடி மேற்பார்வை வைத்து நடத்த வேண்டுமென்று நியமித்தருளினர்.

5. வார்த்தாமாலை 36 e. வார்த்தை 8 விவரணம் — e பாணிக்3ரஹணமும் உடன்மணநீரும் சதுர்த்தி2 கலவியுஞ் சொல்லுகிறதென்று பிள்ளையுறங்காவில்லிதா3ஸர் அநுஸந்தி4த்தருளுவர். [e ஜீவபரவிவாஹத்தைக் குறிக்கும் திருமந்த்ரத்தில் ப்ரணவம் 'ஜீவாத்மா எம்பெருமானுக்கே உரியவன்' என்று கூறுகையாலே ஜீவபரவிவாஹத்தில் பாணிக்3ரஹணஸ்தா2னத்தில் இருக்கிறது. நம: பத3ம் உபாயாந்தரமற்றிருக்கையாகிற ஶுத்3தி4யை விளக்கையாலே, "மணநீர் அங்கவனோடுமுடன்சென்று அங்கானைமேல் மஞ்சனமாட்ட" [நாச்–திரு 6-10] என்று நாச்சியார் அருளிச்செய்த உடன் மணநீரின் ஸ்தா2னத்தில் இருக்கிறது. மூன்றும் பத3த்தில் நாலாம் வேற்றுமை ப4க3வத் கைங்கர்ய போ4க3த்தைச் சொல்லுகையாலே பதிபத்நீபோ4க3மாகிற கலவியின் ஸ்தா2னத்தில் இருக்கிறது—என்பது பிள்ளையுறங்காவில்லிதா3ஸரின் நிர்வாஹம்.]

6. வார்த்தாமாலை 115 வார்த்தை 8 விவரணம்—பிள்ளையுறங்காவில்லிதா3ஸர் வார்த்தை; a நாராயணனுக்கு நைரந்தர்யவேஷம்—நம்பக்கல் தம் பேற்றுக்கு "நம:" என்னுதவர்களை. "வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்" என்னும்படியாயிருப்பதொரு ஔதா3ர்யவிஶேஷம். b நாரவஸ்துவுக்கு நைரந்தர்யவேஷம்; "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்று-பேற்றுக்கு நிர்ப4ரனாய்ப் போருகையும் தத்ப்ரதிப3ந்த4கமான பாபத்தில் ஆர்த்தனாய்ப்போருகையும். [a "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" (திருவாய் 2—9—4) "உனக்கே நாம் ஆட்செய்வோம்" (திருப்பாவை 29) என்கிறபடியே நமஶ்ஶப்3தா3ர்த்த2ம் கைவந்து ப4க3வத3நுப4வகைங்கர்யங்களும் அவனுடைய முக2மலர்த்திக்கே உறுப்பு என்றிராமல், அவை 'நம் ஆநந்த3த்துக்கும் உறுப்பு' என்றிருக்கும் ஸாத4நாந்

தர நிஷ்டர்களுக்கும் "வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்என்று வீடும் தரும்" (திருவாய் 3-9-9) என்கிறபடியே பரமபதத்தைத் தரும்படியாயிருக்கும் வண்மைமிக்கிருக்கை நாராயணனுக்கு எப்போதுமுள்ள இயல்பு. b "நாராயணனே நமக்கே பறை தருவான்" (திருப்பாவை 1) என்று தமக்குப் பேறு கிடைக்குமென்பதில் கவலையற்றிருக்கையும், அப்பேற்றுக்குத் தடையான அவித்யை (அஜ்ஞானம்), கர்மம் (புண்யபாபங்கள்), வாஸனை (பழக்கம்).ருசி (ஈடுபாடு), ப்ரக்ருதி (தேஹ) ஸம்பந்தம் ஆகியவற்றைக் கண்டு "பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ" (திருவாய் 6—9—9) என்கிறபடியே மிகவும் வருந்தித் துடிக்கையும் நாரஸப்தார்த்தமான பத்தசேதனனுக்கு எப்போதும் இருக்கவேண்டிய இயல்வு.]

7. வார்த்தாமாலை 124 வார்த்தை. அருளாளப்பெருமாள் எம்பெருமானர் வைபவம் பக்கம் 105 ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க.

8. வார்த்தாமாலை 186m வார்த்தை & விவரணம்-m 'அந்தன் கையிலே சிந்தாமணி வந்தாற்போலே' என்றருளிச்செய்வர் பிள்ளையுறங்காவில்லிதாஸர். [m "குருடன் கையிலே விரும்பியதைக் கொடுக்கும் சிந்தாமணி கிடைத்தாற்போலேயிருப்பது அநாதி காலமாக அஜ்ஞானத்தாலே அறிவுக் குருடர்களாயிருக்கும் நமக்கு த்வயம் கிடைத்திருப்பது" என்று பிள்ளையுறங்காவில்லிதாஸர் அருளிச்செய்வர்.]

9 வார்த்தாமாலை 187. வார்த்தை & விவரணம்—ப்ரதமபதத்தில் பாணிக்ரஹணம்; மத்யமபதத்தாலே உடன் மணநீர்; த்ருதீயபதத்திலே சதுர்த்தி படுக்கையுமாயிருக்கும். [36 e வார்த்தையான பிள்ளையுறங்காவில்லிதாஸர் வார்த்தையில் (ஐ நி 5) இவ் வார்த்தை விவரிக்கப்பட்டுள்ளது. அங்கே கண்டுகொள்வது ]

10. வார்த்தாமாலை (167) முதலியாண்டான் வைபவம் பக்கம் 42 ஐதிஹ்யநிர்வாஹம் 18 காண்க.

11 வார்த்தாமாலை (168) கூரத்தாழ்வான் வைபவம் பக்கம் 5 ஐதிஹ்யநிர்வாஹம் 14 காண்க.

12. வார்த்தாமாலை (183) முதல் பாகம் பக்கம் 368 ஐதிஹ்ய நிர்வாஹம் 17 காண்க.

13 வார்த்தாமாலை (326). முதல் பாகம் பக்கம் 379 ஐதிஹ்ய நிர்வாஹம் 30 காண்க

14. வார்த்தாமாலை 441 (p) வார்த்தை & விவரணம். பார்த்திட்டேனாகில் செய்வதென்? என்றார் - பிள்ளையுறங்காவில்லி தாஸர்; [பொன்னாச்சியாருடைய கண்ணழகிலே பிள்ளையுறங்கா வில்லிதாஸர் மிகவும் ஈடுபட்டிருப்பதைப் பார்த்த எம்பெருமானார் "இதைவிடச் சிறந்த கண்ணைக்காட்டினால் இதைவிட்டு அதில் ஈடுபடுவீரா" என்று தாஸரைக் கேட்க "இதைவிடச் சிறந்த கண்ணைப் பார்த்திட்டேனாகில் செய்வதென்? அவஶ்யம் ஈடுபடு வேன்" என்று பதில் சொன்ன வார்த்தையேயிது.

15. வார்த்தாமாலை (441) q வார்த்தை & விவரணம். அருளிச்செய்த வார்த்தையும் பொய்யோ? என்றார் - பொன் னாச்சியார்; [எம்பெருமானார் நியமனத்தினால் பொன்னாச்சியார் உடம்பிலுள்ள நகைகளை ஸ்ரீராமாநுஜ ஶிஷ்யர்கள் கழற்றும்போது அவர்கள் திருவுள்ளக்கருத்தைப் பின்சென்று தூங்குவதுபோலே யிருந்து, ஒருபுறம் நகைகளைக் கழற்றியவுடன் மறுபுறம் புரண்டு கொடுக்க, இவள் விழித்துக்கொண்டுவிட்டாள் என்று நினைத்து ஶிஷ்யர்கள் ஓடிவிட, இதுபற்றிச் செவியுற்ற பிள்ளையுறங்காவில்லி தாஸரை பொன்னாச்சியார் 'பாரதந்திரியத்தோடு புரளாமலிருந்திருக் கலாமே' எனக்கோபிக்க, "'பாகவதர்களின் திருவுள்ளத்தைப் பின் சென்று நடக்கவேணும்' என்று தேவரீர் அடியேனுக்கு ஏற்கனவே அருளிச்செய்த வார்த்தையின்படி தானே நடந்தேன். இப்போது கோபிக்கிறீரே; அவ்வார்த்தை பொய்யோ?" என்றாள் பொன்னாச் சியார்.]

16. வார்த்தாமாலை 450. முதல் பாகம் பக்கம் 380 ஐதிஹ்ய நிர்வாஹம் 35 காண்க.

17. வார்த்தாமாலை 86. வார்த்தை & விவரணம் a பொன் னாச்சியார் b கூரத்தாண்டாளுக்கு ப்ரஸாதித்த வார்த்தை:-ஸ்வ ரூபஜ்ஞன் ஸ்வயம் c ஸ்வரூப நிரூபணம் பண்ணவே, d ஸ்வரூ பாநுரூபமான உபாயோபேயாதிகள் e உபபந்நமாய்ப் போரும் காணும் என்றருளிச்செய்தார். [a பொன்னாச்சியார்-பிள்ளையுறங்கா வில்லிதாஸரின் தேவிகள். b கூரத்தாண்டாள்-கூரத்தாழ்வான் தேவிகள். c ஸ்வரூபநிரூபணம்-ஆசார்யஶேஷத்வபாரதந்த்ர்யங் களே ஸ்வரூபநிரூபக தர்மம் என்று நிஷ்கர்ஷிக்கை. d ஸ்வரூ பாநுரூபமான உபாயோபேயாதிகள்-முற்கூறிய ஸ்வரூபத்துக்குத் தகுந்தவையான ஆசார்யாபிமானமாகிற உபாயமும் ஆசார்யன் உகக்கும் கைங்கர்யம் முதலானவையாகிற உபேயங்களும். e உப பந்நமாய்ப்போரும்-பொருத்தமாக ஏற்படும்.]

18. வார்த்தாமாலை 344 வார்த்தை 8 விவரணம் — பொன்னாச்சியார் வார்த்தை; பாண்டிய மண்டலத்திலே ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய வைஷ்ணவத்வத்தைக் கொண்டாட, "எழுதி அணிந்த வைஷ்ணவத்வமோ. எல்லை நிலத்தில் வைஷ்ணவத்வமோ?" என்று [பிள்ளையுறங்காவில்லிதா$_3$ஸரின் தேவிகளான பொன்னாச்சியாரிடம் சிலர் பாண்டிய மண்டலத்திலே உள்ள ஒரு ஸ்ரீவைஷ்ணவருடைய வைஷ்ணவத்வத்தைக் கொண்டாடினார்கள். அப்போது அந்த அம்மையார் "அவருடைய வைஷ்ணவத்வம் எழுதி அணிந்த வைஷ்ணவத்வமோ? எல்லை நிலத்தில் வைஷ்ணவத்வமோ" என்று கேட்டாள். அதாவது-"பன்னிரு திருமண்காப்புகளையும் திருமேனியிலே அழகாக எழுதியணிந்துகொண்டு, ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வத ஶேஷத்வபாரதந்த்ர்யமில்லாத வைஷ்ணவத்வமோ, அல்லது எல்லைநிலமான ப$_4$ாக$_3$வதவிஷயம் வரையில் ஶேஷத்வ பாரதந்த்ர்யங்கள் கொண்ட வைஷ்ணவத்வமோ அவருடைய வைஷ்ணவத்வம்?" என்று கேட்டாள் என்றபடி.]

19. நாச்சியார் திருமொழி 3—9. (காரிருளெல்லில் பிழைத்து) பிள்ளையுறங்காவில்லிதாஸர் — இவன் தான் பருவம் நிரம்பாமையாலே தன்னை நோக்கிக்கொள்ள மாட்டிற்றிலன்; புறம்பு தானே பரிந்து நோக்குகைக்கு ஒருத்தரில்லை. கம்ஸாதி$_3$கள் தப்பாமல் அகப்படுத்தக் கோலி நின்றார்கள். அவ்வளவில் உதவித்தந்தது இருள். அத்தைச் சரணம்புகுமத்தனையிறே—என்று பணிப்பராம்.

20. பெரியதிருமொழி 2-6-1. (நண்ணாத) ஸ்ரீவிது$_3$ரர் பட்டது படுகிறாராய்த்து நடுவேயிவர். 'ஸ்வஸ்ப்ருஶந் ஆஸநம் ஶௌரேர் மஹாமதிருபாவிஶத்" என்றதிறே. கடல் கலங்கினாற்போலே கலங்கும்போலே காணும் மஹாமதிகளென்று. து$_3$ர்யோத$_4$நக்$_3$ருஹத்திலே எழுந்தருளினபோது பொய்யாஸனமும் வஞ்சனமுமாய்ப் புகுந்த ப்ரமாத$_3$த்தை நினைத்து அஞ்சினபடியாலே 'நாமும் ஒருகுலையில் காயன்றோ? நாமும் ஸம்ஸாரிகளிலே ஒருவரான பின்பு நம்மைத் தான் விஶ்வஸிக்க வொண்ணுமோ?' என்று தம்மை அதிசங்கை பண்ணினபடியாலே தாம் படுத்த படுக்கையையும் தடவிப்பார்த்தாரிறே. பிள்ளையுறங்காவில்லிதா$_3$ஸர் பெருமாளெழுந்தருளப் புக்கால் சொட்டை முட்டியிலே கையைவைத்துக்கொடு ஸேவிப்பராம்; ஒருவரிடறுதல் போதல் செய்ததாகில் தம்மை முடித்துக்

கொள்வாராக. அத்தையநுஸந்தி₄த்து நம் முதலிகள் இவரை 'மஹாமதிகள்' என்றுமழைப்பது; கலங்குகை போலே காணு மஹாமதிகளாவது, அஸ்தா₂னே ப₄ய ஶங்கை பண்ணுவார்க்கெல்லாம் பேராய்க் கொள்ளீர் மஹாமதிகளென்று.

21. பெரியதிருமொழி 6-8-6. (அம்பன்ன கண்ணாளித்யாதி₃) பிள்ளையுறங்காவில்லிதாஸர் "பிள்ளைக்குத் தாய் வழியாகாதே கண்" என்றருளிச் செய்வர்.

22. பெரியதிருமொழி 11-2-5 பூர்வாபரங்களுக்குச் சேர்த்தி போராதாகிலும், பிள்ளையுறங்காவில்லிதாஸர் "பின்னை மணாளர் திறத்தோமான பின்பன்றோ இவை இப்படியாயிற்று; ஸாமாந்யனென்று இடுமீடெல்லாம் இடவமையு மென்பாரைப்போலே. அவனோடே ஒரு ஸம்ப₃ந்த₄ம் சொல்லி நலிகிறவை நலிந்தாலென்" என்பராம்.

[ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் P. B. A. ஸ்வாமியின் விவரணம்: நான் ப₄க₃வத்₃ விஷயத்தில் கைவைப்பதற்கு முன்னம் தாயானவள் என்னை ஒரு வார்த்தையும் பொடிந்து சொல்லியறியாள்; அன்றில் பறவையின் தொனி முன்பு கேட்கப் படும்போது செவிக்கு மிகவும் இனிதாயிருந்தது; அப்போது கடலோசைதானும் காது கொடுத்துக் கேட்கலாயிருந்தது; உடலும் பூரித்து வளைகள் நெருக்குண்டிருந்தன; இப்போது அனுப₄விக்கிற கஷ்டங்களில் ஒன்றும் முன்பு நான் அனுப₄வித்ததேயில்லை, நப்பின்னைமணாளனை எம்பெருமான் திறத்திலே ஈடுபட்டபின்பே, தாய் சீறிச்சொல்லும்படியாகவும் அன்றிலின் குரலால் நலிவுபடும்படியாகவும் கடலோசைக்கு நோவுபடும்படியாகவும் கைவளைகள் கழலும்படியாகவும் பெற்றேன்—என்பதாக இப்பாட்டின் பொருள். ப₄க₃வத்₃ விஷய வாஸனையே இல்லாத காலத்தில் ஸுக₂மாயிருந்ததாகவும் ப₄க₃வத்₃விஷயத்தில் ஈடுபட்டது முதலாகப் பல கஷ்டங்களை அனுப₄விக்கப் பெற்றதாகவும் சொன்னபடிக்கு பா₃த₄கபதா₃ர்த்த₂ங்களால் நோவுபட்டு வருந்திப் பேசுகிற இப் பதிகத்திலே இப்பாட்டுக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் பணிக்குங் கருத்து பிரகரணத்தோடு அவ்வளவு பொருந்தாதாயினும் சுவையுடையதாயிருக்கும். அவர் கூறும் கருத்து ஏதென்னில்: அன்னமுனிவதும் அன்றிலின் குரலீர்வதும் மன்னுமறிகடலார்ப்ப

தும் வளை சேர்வதும் நாம் பின்னை மணாளர் திறத்திலே ஈடுபட்டிருக்கிறோம் என்கிற காரணத்தினால்தானே: அந்தக் காரணம் பற்றியாகில் அவை நமக்கு உத்தேச்யமே-என்பதாக.

இங்கு "ஸாமான்ய னென்று இடுமீடெல்லாம் இடவமையும் என்பாரைப்போலே" என்றதன் கருத்தாவது—முற்காலத்தில் திருமாலிருஞ் சோலையில் ஸாமான்யரென்றும், சோழியரென்றும் இரு வகுப்பினர் ஸந்நிதி கைங்கர்யாதி விஷயமாக அடிக்கடி பிணக்குண்பர்; அதனாலொருவர்க்கொருவர் போர்செய்து வலிதாக அடித்துக் கொள்ளுதலும் நேரும். ஒரு ஸமயத்தில் மிக இருட்டானவிடத்திலே (ஸன்னிதி ப்ரதக்ஷிணத்திலே) கைகலந்து போர்நடக்கையில் ஒரு சோழியர் மற்றொரு சோழியரையே வலிதாகப் புடைத்தார். புடைப்பவருடைய மிடற்றோசையைக் கண்டறிந்த புடையுண்பவர், 'ஐயோ நான் சோழியன் காண்; என்னை ஏதுக்குப் புடைக்கிறாய்?' என்று கதற: அது கேட்ட அவர் 'அப்படியா? தெரியாது அடித்துவிட்டேன், ஸாமான்யனென்று ப்ரமித்து அடித்துவிட்டேன்' என்ன; அது கேட்ட இவர் 'அப்படியாகில் இன்னமும் அடியும்; ஸாமான்யனென்று என்னை எவ்வளவு அடித்தாலும் அத்தனையும் எனக்கு உத்தேச்யமே' என்றாராம். அதுபோலே பகவத்விஷயத்திலீடுபட்டேனென்கிற காரணத்தினால் அன்னை முனிவது முதலான கஷ்டங்கள் எனக்கு நேர்வனவாகில் தாராளமாக நேரட்டும் என்பதாகப் பிள்ளையுறங்காவில்லிதாஸருடைய திருவுள்ளம்.]

23 மூன்றாம் திருவந்தாதி 91 (வயிற்றினோடாற்ற மகன்) இதுக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் வயிற்றை வண்ணானுக்கிட்டாலோ வென்று பணித்தார். [விவரணம்: 'வண்ணான் தாழி போலே வயிறு பெரிது' என்று கருத்து.]

24. திருவிருத்தவ்யாக்யானம் 9. முதல்பாகம் எம்பெருமானார் வைபவம் பக்கம் 391 ஐதிஹ்ய நிர்வாஹம் 63 காண்க.

25. திருவிருத்தம் ஈடு 9 ஸ்வாபதேசம், முதல் பாகம் எம்பெருமானார் வைபவம் பக்கம் 392 ஐதிஹ்ய நிர்வாஹம் 65 காண்க.

26. திருவிருத்தவ்யாக்யானம் 21. பிள்ளையுறங்காவில்லிதாஸர் பொன்னாச்சியாருக்கு அருளிச்செய்தவார்த்தை; 'அம்நமி' என்னுமாபோலே. (விவரணம் 'அடியவன் இட்டது ஓரிலையோ, பூவோ, பழமோ, நீரோ ஆனாலும், அதைப் பசித்தவன் சோற்றை விழுங்குவதுபோலே ஏற்றுக்கொள்கிறேன் என்று கீதையில் கண்ணன் சொன்னதுபோலே இடப்பட்ட மாலை எதுவானாலும். எம்பெருமான் அதை சூட்டுநன்மாலையாகக் கொள்வான் என்று கருத்து.)

27. திருவிருத்தவ்யாக்யானம் 98. (இமையோர்தமக்கும் செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால்) அரையனுக்குப் போகிற பாலை ஓரிடையன் களவுகண்டான் என்று கட்டியடியாநிற்கப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் கண்டு பரவசராயிருந்து 'இத்தால் வந்ததுக்கெல்லாம் நான்கடவன்' என்று விடுவித்துக்கொண்டாராம்.

28. திருவிருத்தவ்யாக்யானம் 99. கூரத்தாழ்வான் வைபவம் பக்கம் 14 ஐதிஹ்யநிர்வாஹம் 51 காண்க.

29 பகவத்விஷயம் 1—5—11. கூரத்தாழ்வான் வைபவம் பக்கம் 15 ஐதிஹ்யநிர்வாஹம் 55 காண்க.

30. பகவத்விஷயம் 4—6—2 (இசைப்பின்றியித்யாதி) ...... ..... இங்கே அருளிச்செய்யும் வார்த்தை:—பிள்ளையுறங்காவில்லிதாஸர் குடிமகனொருவனுக்கு ஐயனார் ஏறி வலித்து நலிந்தவாறே உனக்கு வேண்டுவதென்னென்றுகேட்க; எனக்குப் பாலும் பழமுமாக உண்ணவேணும்; சாந்தும் புழுகும் பூசவேணும்; நல்ல புடவை உடுக்கவேணும்; நல்ல ஆபரணம் பூணவேணும்; தண்டேறவேணும்; அணுக்கனிடவேணும்—என்ன; அவர்களும் அப்படியே செய்கிறோம என்று, பிள்ளை திருமாளிகையிலே வந்து சாந்து புழுகு ஆபரணாதிகளை வாங்கிக்கொண்டுபோய் அவற்றை அலங்கரித்து சாந்தியும் பண்ணிவிட்டு வந்த அவ்விரா பண்டையிலும் இரட்டியாக அவனை வலிக்க, இதுவென்? என்று கேட்க; "பிள்ளை சாத்துகிறவற்றையெல்லாம் கொண்டு வந்திகோள்; இவருக்குச் சாத்துகிற அணுக்கனையிட்டிகோள்; நான் அதின்

கீழே போவேனோ? என்னை வெயிலிலே கொண்டுபோனீர்கோள்; என்னுடம்பிலே நெருப்பை வழியட்டினாற்போலே அவர் சாத்து கிறவற்றைப் பூசினீர்கோள்; அரிக்கண்டமிட்டாற்போலே அவர் சாத்துகிற ஆபரணத்தைப்பூட்டினீர்கோள்; நீங்கள் செய்த செயலுக்கு இவனைக் கொண்டல்லது போகேன்'' என்று வலித் தாய் [அணுக்கன்—குடை]

31. பகவத்விஷயம் 4—6—6 (மாயன் தமரடி நீறுகொண்டு) வண்டரும் சொண்டரும் என்கிறவர்களுக்கு அரையன் சொன்ன வார்த்தைக்குப் பிள்ளையுறங்கா வில்லிதாஸர் பரிஹாரம் பண்ணின படியை நினைப்பது. அதாவது, அகளங்கநாட்டாழ்வான் இவர் களுக்கு அமணன் பாழியில் ஸிம்ஹத்தைக்காட்டி 'திருமுற்றம், திருவடி தொழுங்கோள்' என்ன; அவர்களும் மெய்யென்று திருவடிதொழுது; அது அமணன் பாழியென்றறிந்தவாறே மோஹித்து விழ, பிள்ளையுறங்காவில்லிதாஸர் தம் ஸ்ரீபாத$_3$ தூ$_4$ளியை அவர்களுக்கு இட; உணர்ந்து எழுந்திருந்தார்கள்.

32. பகவத்விஷயம் 6—2—2 எம்பார் வைபவம் பக்கம் 75 ஐதிஹ்யநிர்வாஹம் 60 காண்க.

33. பகவத்விஷயம் 6—4—5 (பிறந்ததும் வீங்கிருள்வாய்) 'இருளாலேயிறே நாம் பிழைத்தது! இனி இவ்விருளைச் சரணம் புகுமித்தனையிறே' என்று பிள்ளையுறங்கா வில்லிதாஸர் பணிப் பராம்.

34. பகவத்விஷயம் 6—8—1 கூரத்தாழ்வான் வைபவம் பக்கம் 17 ஐதிஹ்யநிர்வாஹம் 69 காண்க.

35. பகவத்விஷயம் 7—4—1 (ஆழியெழ) பிள்ளையுறங்கா வில்லிதாஸர் 'மஹாமதி: என்றது மதிகேடரென்கிறபடியோ?' என்றார்; பிள்ளை தாம் பெருமாளெழுந்தருளும்போது எங்கே னுமொரு சலனம் பிறக்கில் நம் ப்ராணனை விடுமத்தனை என்று சொட்டையை யுருவிப் பிடித்துக்கொண்டு ஸேவிப்பாராம்; நம் முதலிகள் அத்தைக்கண்டு இவரை மஹாமதிகள் என்றழைப் பர்கள்; அறிவுண்டாகையாவது ப$_4$க$_3$வத$_3$ விஷயத்திலே மதி கெடுகையிறே.

36. ஸ்ரீவசநபூஷணம்-வ்யாக்யானம், மூ:- 246-இவ்வர்த்தம், சக்ரவர்த்தி, ஸ்ரீஜநகராஜன், திருமகள், விஶ்வாமித்ரன், ஸ்ரீதண்ட

காரண்யவாஸிகளான ருஷிகள், திருவடி, மஹாராஜர், ஸ்ரீநந்தகோபர், ஸ்ரீவிதுரர், பிள்ளையுறங்காவில்லிதாஸர் தொடக்கமானவர்கள் பக்கலிலே காணலாம். வ்யா: பிள்ளையுறங்காவில்லிதாஸர், அத்தலையில் ஜ்ஞாந ஶக்த்யாதிகளெல்லா மறிந்து, "பெருமாள் நமக்கு ரக்ஷகர்" என்றிராநிற்கச் செய்தேயும், ப்ரேம பரவஶராகையாலே, "பெருமாள் உலாவியருளும்போது எங்கேனுமொரு சலநம் பிறக்கில் நம்ப்ராணனை விடுமித்தனை" என்று சொட்டையை உருவிப் பிடித்துக்கொண்டு ஸேவிப்பரென்று ப்ரஸித்தமிறே. (சொட்டை - ஓராயுதம்)

37. ப்ரமேயரத்நம். ஆசார்யவிஸ்வாஸத்துக்குப் படிமா பொன்னுச்சியார். எங்ஙனே? என்னில்—பிள்ளையுறங்காவில்லிதாஸர் உடையவருடைய வைபவம் பரப்பிக்க, அவரையிருகரையரென்றாள். அதுக்கடி என்னென்னில்—பாஷ்யகாரரையொழியவும் பெருமாளைச்சரணம் புக்குப் போருவரென்றுளிறே.

38. தத்வபூஷணம், "ப்ரதமபதத்தாலே பாணிக்ரஹணம் பண்ணுகிறது மத்யமபதத்தாலே உடை மண நீராட்டுகிறது. த்ருதீய பதத்தாலே சதுர்த்தி படுக்கையாயிருக்கிறது" என்று பிள்ளையுறங்காவில்லிதாஸர் நிர்வஹிப்பர்.

39. தத்வபூஷணம். '(த்வயம்) பிறவி மிடியன் கையில் சிந்தாமணி புகுந்தாற்போலே' என்று நிர்வஹிப்பர் பிள்ளையுறங்காவில்லிதாஸர்.

40. தத்வபூஷணம் ஆசார்ய விச்வாஸத்துக்கு எல்லை நிலம் சபரியும், பொன்னுச்சியாரும்;

41. அந்திமோபாய நிஷ்டை. முதலியாண்டான் வைபவம் பக்கம் 42, ஐதிஹ்யநிர்வாஹம் 18 (வார்த்தாமாலை) காண்க.

42. ப்ரபந்நாம்ருதம் 40, 41 அத்தியாயங்கள்.

43 பிள்ளையுறங்காவில்லிதாஸர் அருளிய இயல்சாத்து முதல் தனியன்

நன்றுந்திருவுடையோம் நானிலத்திலெவ்வுயிர்க்கும்*
ஒன்றும்குறையில்லை ஓதினோம்* — குன்றம்
எடுத்தானடிசேரிராமானுசன்தாள்*
பிடித்தார்பிடித்தாரைப்பற்றி.

# திருவரங்கத்தமுதனர் வைபவம்

ஸ்ரீரங்கே, மீநஹஸ்தே ச ஜாதம் ரங்கார்யநந்தநம் |
ராமாநுஜபதாஸ்கந்தம் ரங்கநாதகுருக்குப் பஜே ||

[ஸ்ரீரங்கத்தில் பங்குனி ஹஸ்தத்தில் அவதரித்தவராய், அணியரங்கத்தமுதனரின் குமாரராய், எம்பெருமானரின் திருவடியைப் பற்றியவரான திருவரங்கத்தமுதனரை ஆஸ்ரயிக்கிறேன்.]

ஸ்ரீரங்கத்தில் ''அணியரங்கத்தமுதனர்'' என்பவருக்குக் குமாரராக மூங்கில் குடியிலே பங்குனி ஹஸ்தத்தில் அவதரித்தவர் திருவரங்கத்தமுதனர். எம்பெருமானரை ஆஸ்ரயித்து அவருடைய நியமனத்தின்பேரில் கூரத்தாழ்வானிடம் ஸகலார்த்தங்களையும் கேட்டவர் இவர், ''ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாஹம் இவரிடமே இருந்தது: அதைச் சீர்திருத்துவதற்காக எம்பெருமானர் கூரத்தாழ்வானை இவர்செய்யும் திருவத்யயனத்தில் நிமந்த்ரண ஸ்வாமியாய் இருக்கச்செய்து, அவர்மூலம் த்ருப்தி சொல்லும்போது ஸ்ரீரங்கநிர்வாஹத்தை தானமாகப்பெற்று, திருவரங்கச்செல்வத்தைத் திருத்தினர்'' என்பது கோயிலொழுகு முதலான பல பழைய நூல்களில் காணப்படும் வரலாறு. இராமானுச நூற்றந்தாதியை இவர் இயற்றி எம்பெருமானர் திருமுன்பே அரங்கேற்றம் செய்தருளினர்—என்பது ''சரமோபாய நிர்ணயம்'' முதலான பூர்வாசார்ய க்ரந்தங்களில் ப்ரஸித்தம் நூற்றெட்டு பாட்டுக்கள் கொண்டதாய், ஒவ்வொரு பாட்டிலும் இராமானுசனின் திருநாமத்தோடு கூடியதான இந்த திவ்யப்ரபந்தம் ப்ராஹ்மணர்க்கு நூற்றெட்டு முறை ஜபிக்கவேண்டிய ''காயத்ரீ'' மந்த்ரம்போலே, ப்ரபன்னருக்கு தினந்தோறும் அனுஸந்திக்கத்தக்கது என்னும் கருத்தாலே ''ப்ரபன்ன காயத்ரீ'' என்று புகழப்படுகிறது. எம்பெருமானரே திருவுள்ளமுகந்து இதை திவ்யப்ரபந்தங்களோடு சேர்த்தருளினர் என்று யதிராஜ வைபவம் முதலான பல நூல்களிலிருந்து விளங்குகிறது.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1 பெரியதிருமுடியடைவு திருவரங்கத்தமுதனருக்குத்திருவவதார ஸ்தலம் திருவரங்கம். திருத்தகப்பனர் அணியரங்கத்தமுதனர். குடி மூங்கில். திருநாமங்கள் மூங்கிற்குடியமுதனர், புருஷகாரர் கூரத்தாழ்வான். ஆசார்யரெம்பெருமானர். இருப்பிடம் கோயில், திருவாராதனம் நம்பெருமாள். இவர் செய்தருளின

ப்ரபந்தம் ப்ரபன்ன கா$_3$யத்ரியான நூற்றந்தாதி நூற்றெட்டு பாட்டும். இவர் திருநக்ஷத்ரம் பங்குனி ஹஸ்தம் இவர் நூற்றெட்டு வருஷம் எழுந்தருளியிருந்தார். இவருக்குத் தனியன்:—

ஸ்ரீரங்கே$_3$ மீநஹஸ்தே ச ஜாதம் ரங்கா$_3$ர்யநந்த$_3$நம் ।
ராமாநுஜபதா$_3$ஸ்கந்த$_3$ம் ரங்கே$_3$ நாத$_2$கு$_3$ரும் ப$_4$ஜே ॥

2. வார்த்தாமாலை 128 வார்த்தை 5 விவரணம். a அமுதனார், சிறியாச்சானை. 'உம்முடைய அநுஷ்டா$_2$நமிருக்கும்படி இது; நாங்கள் என் செய்யக்கடவோம்?' என்ன; "என் அநுஷ்டா$_2$நத்துக்கு ஒரு ப$_2$லமுண்டாகிலன்றோ உம்முடைய அநநுஷ்டா$_2$நத்துக்கு ஒரு ப்ரத்யவாயமுண்டாவது; வெறும் புடவை தோயாமல் கெடும்; பட்டுப்புடவை தோய்க்கக் கெடும் என்றிரீர்" என்று அருளிச்செய்தார்; b ஆசார்யர்களில் சிலர் 'உம்முடைய அநுஷ்டா$_2$நமிருக்கும்படி இது; நாங்கள் என்செய்யக்கடவோம்?' என்ன, 'என்படியும் உங்கள்படியுங்கொண்டு காரியமென்? 'ஏதத்$_3$வ்ரதம் மம' என்றருளிச்செய்தபடியேயன்றோ' என்று அருளிச்செய்தார் [a அநுஷ்டா$_2$ன ஶீலரான சிறியாச்சான் 'அத்தகைய அநுஷ்டா$_2$னமில்லாத எங்களுக்குப் புகலேது' என்று கவலைப்பட்ட அமுதனாரைப் பார்த்து "என்னுடைய அநுஷ்டா$_2$னம் பரார்த்தா$_2$நுப$_4$வகைங்கர்யங்களாகிற பரமபுருஷார்த்த$_2$த்துக்கு உபாயமாகாது உம்முடைய அநுஷ்டா$_2$னமின்மையும் அதற்குத் தடையாகாது வெறும் புடவையை தினந்தோறும் தோய்க்காமலிருந்தால் அதற்கு அஶுத்$_3$தி$_4$ உண்டாவதுபோலே நான் இவ்வநுஷ்டா$_2$னத்தைவிட்டால் எம்பெருமானுடைய நிக்$_3$ரஹரூபமான அஶுத்$_3$தி$_4$ உண்டாகிவிடும் பட்டுப் புடவைக்குத் தோய்த்தால் அஶுத்$_3$தி$_4$ உண்டாவதுபோலே, நீர் என்னைப்போல் அநுஷ்டானஞ் செய்யமுயற்சி செய்தீரானால், உமக்கு —பரமபுருஷார்த்த$_2$த்துக்குத் தடையாயிருக்கும். ஸ்வப்ரவ்ருத்தியாகிற அஶுத்$_3$தி$_4$ உண்டாகிவிடும் ஆகையால் நம் இருவருக்கும் அவரவர் நின்ற நிலையிலே அநுஷ்டானத்தையோ அநுஷ்டானமின்மையையோ கணிசியாமல் தன் நிர்ஹேதுகக்ருபையாலே எம்பெருமான் பரமபுருஷார்த்தத்தை அருளுவான் என்று நினைத்திரும்" என்றருளிச்செய்தார். b மற்றும் சில ஆசார்யர்களும் இதேபோல் சிறியாச்சானிடம் விண்ணப்பம் செய்ய, அவர்களைக் குறித்து, "என்னுடைய அநுஷ்டா$_2$நமோ உங்களுடைய அநுஷ்டா$_2$னமின்மையோ, பரமபுருஷார்த்த$_2$த்தை ஸாதி$_4$த்துத் தரப்போவதுமில்லை, தடுக்கப்போவதுமில்லை 'ஶரணமடைந்தவனை ரக்ஷிப்பதே என் விரதம்' என்று அருளிச்செய்த எம்பெருமானேயன்றோ நம் அனைவரையும் ரக்ஷிக்கப்போகிறான்; ஆகையால் கவலைப்படவேண்டாம்" என்று அருளிச்செய்தார்.]

3. சரமோபாய நிர்ணயம். இவ்வர்த்தத்தை அமுதனார் அருளிச்செய்தருளினார்— "இராமானுசன் நிற்க வேறு நம்மை உய்யக் கொள்ளவல்ல தெய்வம் இங்கியாதென்றுலர்ந்து அவமே ஐயப் படா நிற்பர் வையத்துள்ளோர் நல்லறிவிழந்தே" என்று. "இராமானுசன் வேறு நம்மை உய்யக்கொள்ளவல்ல தெய்வம்" என்கையால் எம்பெருமானாரை விட்டால் பின்னை உய்யக்கொள்ளவல்ல தெய்வமாகக் கண்டது எம்பெருமானேயிறே. இனி, சரமபர்வமான எம்பெருமானாரெழுந்தருளியிருக்க, ப்ரதமபர்வமான எம்பெருமானைப்பற்றுகை அஜ்ஞான கார்யமென்றபடி.

4. சரமோபாயநிர்ணயம் எம்பெருமானார் திருவடிகளிலே பொருந்தி வாழும்போது அவருடைய திருநாமத்தை அநுஸந்திக்கவேணுமிறே. எம்பெருமானாருடைய திருநாமோச்சாரணம் தத்பாத கமலப்ராவண்ய ஜனகமாக அருளிச்செய்தாரிறே அமுதனார்—"இராமானுசன் சரணாரவிந்தம் நாம் மன்னிவாழ நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே" என்று நாம் மன்னிவாழ அவன் நாமங்களைச் சொல்லுவோமென்கையாலே, அவன் நாமங்களைச் சொல்லாதபோது பொருந்தி வாழக்கூடாது என்றபடி. பொருந்தி வாழும்போது அவன் நாமங்கள் சொல்லவேணுமென்கையாலே தந்நாமாநுஸந்தாநம் தத்பாதகமலப்ராவண்ய (ஜநக?) மென்றபடி. இப்படி எம்பெருமானாருடைய திருநாமத்தை அநுஸந்தித்து அவர் திருவடிகளிலே பொருந்தி வாழுகிறவர்களுக்கு ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் எம்பெருமானார் திருவடிகளேயிறே. "பேறு ஒன்று மற்றில்லை நின் சரணன்றி அப்பேறளித்தற்கு ஆறொன்றுமில்லை மற்றச் சரணன்றி" என்று ப்ராப்ய ப்ராபகங்களிரண்டையும் அவர் திருவடிகளிலே அறுதியிட்டாரிறே அமுதனார், "பேறொன்று மற்றில்லை நின் சரணன்றி...ஆறொன்றுமில்லை" என்று அந்யயோகவ்யவச்சேதம் பண்ணுகையாலே சரமபர்வத்திலே ப்ராப்யத்வ ப்ராபகத்வங்களை அறுதியிட்டால், ப்ரதம பர்வத்திலே முதல் தன்னிலே வ்யுத்பத்திதானுமில்லையோ என்னும்படி ததேக நிஷ்டனாய் இருக்கவேணும் என்னுமிடம் தோற்று கிறது. இத்தால் ஆசார்யாபிமான நிஷ்டனுகில் மறுக்கலசாத படியிருக்கவேணுமென்றபடி. இல்லையாகில் இருகரையர் என்னுமிடம் சொல்லப்படும்.

5. சரமோபாயநிர்ணயம். "பல்லுயிர்க்கும் விண்ணின் தலை நின்று வீடளிப்பான் எம்மிராமானுசன்" என்று எம்பெருமானாரை ஸர்வோத்தாரகராக அறுதியிட்டாரிறே ஸகல வேதசாஸ்த்ரவித்தமரான அமுதனார்.

6 சரமோபாயநிர்ணயம். இப்படி எல்லாரும் உத்தாரகத்வேந அறுதியிடும்படி அவதார விசேஷமாய், பரமகாருணிகராய் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானாருடைய அபி₄மானத்திலே அந்தர்ப்பூ₄தராய் அவர் திருவடிகளையே ப்ராப்யப்ராபகமாக அறுதியிட்டுத் ததே₃க நிஷ்ட₂ராயிருக்கும் சரமாதி₄காரிகளுக்கு வஸ்தவ்யபூ₄மி—"இராமாநுசனைத் தொழும் பெரியோர் எழுந்திரைத்தாடுமிடம் அடியேனுக்கிருப்பிடம்" என்று அமுதனார் அருளிச்செய்கையாலே, எம்பெருமானார் பக்கல் ப்ராவண்யம் உடையரான ஜ்ஞாநாதி₄கர்கள் களித்து வர்த்திக்குமிடமே வாஸஸ்த₂ானமென்றபடி. இங்கிருக்கும் நாள் அநுப₄வத்துக்கு விஷயமேதென்னில், "உவந்தருந்தேன் அவன் சீரன்றி யானொன்றும் உள்மகிழ்ந்தே" என்கையாலே எம்பெருமானாருடைய கல்யாண கு₃ணங்கள்தானே அநுப₄வத்துக்கு போ₄க்₃யத்வேந விஷயம். "இராமாநுசன் மிக்க சீலமல்லால் உள்ளாதென் நெஞ்சு" என்கையாலே எம்பெருமானாருடைய அபரிச்சி₂ன்னமான ஶீலகு₃ணத்தை நெஞ்சுக்கு விஷயமாக்குகை சரமாதி₄காரிக்கு க்ருத்யம் என்றருளிச்செய்தபடியிறே "இராமாநுசன் தன் பிறங்கிய சீர் சாரா மனிசரைச் சேரேனெனக்கென்ன தாழ்வினியே" என்கையாலே, எம்பெருமானாருடைய ஔஜ்ஜ்வல்ய கல்யாண கு₃ணங்களில் ப்ராவண்யமில்லாத கள்ளர்மிண்டரோடே ஸஹவாஸமின்றிக்கேயிருக்கிறது சரமாதி₄காரிக்கு ஏற்றமென்றபடி. "சேரேனெனக்கென்ன தாழ்வினியே" என்று தத்ஸஹவாஸராஹித்யம் ஆதி₄க்யாவஹமென்கையாலே தத்ஸஹவாஸம அநர்த்த₂ாவஹமென்றபடி. எம்பெருமானார் திருவடிகளில் ப்ராவண்யமுடையார் அதில்லாத மூர்க்க₂ரோடு ஸஹவாஸம் பண்ணில் ஸ்வரூபஹானி பிறக்குமிறே. "இராமாநுசன் புகழன்றி என்வாய் கொஞ்சிப் பரவகில்லாது" என்கையாலே எம்பெருமானாருடைய கல்யாண கு₃ணங்களே சரமாதி₄காரிகளுக்கு வாசா அநுஸந்தே₄யமென்றபடி. "இராமாநுசன் மன்னுமாமலர்த்தாள் அயரேன்" என்கையாலே, எம்பெருமானார் திருவடிகளை மறவாதிருக்கை தத₃பி₄மான நிஷ்ட₂னுக்குக் கர்த்தவ்யம் என்றபடி. "அருவினை என்னை எவ்வாறின்றடர்ப்பதுவே" என்கையாலே, தத்ஸ்மரணமே அநிஷ்டநிவ்ருத்திகரம் என்றபடி. தத்₃விஸ்மரணம் அநர்த்த₂ாவஹம் என்னுமிடம் அர்த்த₂ாத் ஸித்₃த₄ம். "உன்தொண்டர்கட்கே அன்புற்றிருக்கும்படி என்னையாக்கி அங்காட்படுத்தே" என்கையாலே, எம்பெருமானார் திருவடிகளுக்கு அநந்யார்ஹசேஷபூ₄தரான ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கலில் ப₄க்தியிருக்கும்படி தச்சே₂ஷத்வத்தை எம்பெருமானார் திருமுன்பே ப்ரார்த்தி₂க்கை தத₃பி₄மான நிஷ்ட₂னுக்கு ஸ்வரூபம். "உன்தன் மெய்யில் பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான்......

இவ்வருள் நீ செய்யில் தரிப்பன் இராமாநுச'' என்கையாலே எம்பெருமானாருடைய விக்3ரஹ கு3ணங்களை ஸத்தாத4ாரகமாக நினைத்திருக்கை சரமாதி4காரிக்ருத்யம். "இராமாநுசன் திருநாமம் நம்பவல்லார் திறத்தை'' என்று தொடங்கி "செய்வன் சோர்வின்றியே'' என்கையாலே எம்பெருமானாருடைய திருநாமத்திலே விஶ்வாஸயுக்தரான ஸ்ரீவைஷ்ணவர்களை மறவாத ப4ாக3வதர்கள் பக்கல் காரணத்ரயத்தாலும் ஸகலவித4 கைங்கர்யங்களும் வழுவில்லாமல் செய்துபோருகை சரமாதி4காரிக்கு ஸ்வரூபம். எம்பெருமானாருடைய திருநாமத்தை விஶ்வஸித்துப் பரிஶீலனம் பண்ணுதார்க்குப் பேறு து3ர்லப4மாயிருக்கும். "இராமாநுசன் திருநாமம் நம்பிக்கல்லார் அகலிடத்தோர் எது பேறென்று காமிப்பரே'' என்று து3ர்லப4மாக அருளிச்செய்தாரிறே அமுதனார். இந்த அர்த்த2ங்களெல்லாம் எம்பெருமானாருடைய திருமுக2மண்ட3லத்தைப் பார்த்து அருளிச்செய்ய, அவரும் இதுக்கெல்லாம் இசைந்தெழுந்தருளியிருக்கையாலே இவ்வர்த்த2ம் அவிசார்யமாய் ஸுத்3ருட4மான ஸகல ப்ரமாண ப்ரமேய ப்3ரஹ்மதீ3ர்க்க4(?) ரஸோக்தி-அநுஷ்ட்ட2ாந ஸித்3த4ம். இவ்வர்த்த2ம்

सत्यं सत्यं पुनस्सत्यं यतिराजो जगद्गुरुः ।
स एव सर्वलोकानामुद्धर्ता नात्र संशयः ॥

ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் யதிராஜோ ஜக3த்3கு3ரு: ।
ஸ ஏவ ஸர்வலோகாநாம் உத்3த4ர்த்தா நாத்ர ஸம்ஶய: ॥

[முக்காலும் சத்யஞ்செய்து கூறுகிறேன்: யதிராஜரே உலக குருவாவார். எல்லாவுலகையும் உய்விக்கச்செய்ய வல்லவர் அவரே]
"இராமாநுசன் மன்னுமாமலர்த்தாள் பொருந்தாநிலையுடைப் புன்மையினோர்க்கு ஒன்றும் நன்மை செய்யாப் பெருந்தேவரைப் பரவும் பெரியோர்தம் கழல் பிடித்தே'' என்கையாலே எம்பெருமானார் திருவடிகளிலே ப்ராவண்யமில்லாதார்க்கு யாவதா3த்மப4ாவி ஸம்ஸாரம் அநுவர்த்திக்கும், உடையோருக்கு, யாவதா3த்மப4ாவி ஸர்வாபீ4ஷ்டங்களும் ஸித்3தி4க்கும்.

7. யதிராஜவைபவம் ஶ்லோகம் 105. முதல் பாகம் 194 காண்க

8. கோயிலொழுகு முதல் பாகம் பக்கம் 428 முதல் 434 வரை காண்க.

9. திருப்பல்லாண்டு வ்யாக்யானம். (ஏடுநிலத்தில்) ஏடு என்பது பொல்லாங்கு. 'உங்களைப் பொல்லா நிலத்திலேயிடுவதற்கு முன்னம்' என்று பிள்ளையமுதனார்.

10. பெரிய திருமொழி வ்யாக்யானம் 3-7-1 (கரியானித்யாதி₃) பிள்ளையமுதனார், "கூடுகிடக்க வாளையுருவிக்கொடு போவாரைப் போலே, தாயாரணைத்துக்கொடு கிடக்கக் கொண்டுபோனான்" என்று நிர்வஹித்தார்; அத்தை பட்டர் கேட்டருளி, "அத்தனை பணிப்பட வேண்டாகாண், சில கள்ளர் விளக்குக்களையும் பிடித்து, 'பிள்ளை, பிள்ளை' என்கிற வளவிலே கொண்டுபோமா போலே கொண்டுபோனான்காண்" என்றருளிச்செய்தார்.

11 பெரியதிருமொழி வ்யாக்யானம் 6 8—7 (வண்டுவரை நட்டானை) "தான் சொப்பனக் குடியேறுவதற்கு முன்னே தன்னைக் குடியிருத்தினவன், தன் புழைக்கடையிலே ஒரு குப்பை மேனியைப் பிடுங்கினானென்று வஜ்ரத்தைக்கொண்டு தொடருவதே!" என்று பிள்ளையமுதனார் பணிக்கும்படி.

12. பெரிய திருமொழி 7-1-1 வ்யாக்யானம், 'கறவாமட நாகானது, தன்கன்றை உள்ளினாற்போலே' என்று சொல்ல நினைத்து, அர்த்த₂த்துக்குச் சேராமையாலே மிடிபட்டார் பிள்ளையமுதனார்; அதுதான் அபக்ஷத₄ர்மமாமிறே. ஆகையாலே, பட்டரருளிச்செய்யும்படி—கறவாமட நாகை, தன்கன்றுள்ளினாற்போலே என்று. [விவரணம்—இப்பாட்டின் முன்னடி "கறவா மட நாகு தன்கன்றுள்ளினாற்போல், மறவாதடியேன் உன்னையேயழைக்கின்றேன்" என்றுள்ளது. பிள்ளையமுதனார் என்னுமாசிரியர் இதற்குப்பொருள் சொல்லப்புகுந்து, "கறவாமட நாகு-கறவாத மடநாகானது, தன் கன்று உள்ளினாற்போல—தன்கன்றை நினைக்குமாபோலே"என்று பொருள் சொல்லப்பார்த்து, இவ்வர்த்தம் இரண்டாமடியோடு சேராமையாலும், வேறு வகையாகப் பொருள் சொல்ல ஸ்புரியாமையாலும் சிரமப்பட்டாராம். (நாகானது தன் கன்றை நினைக்குமாபோலே என்றால்—நாகின் ஸ்தானத்திலே ஆழ்வாரையும் கன்றின் ஸ்தானத்திலே எம்பெருமானையும் கொள்ளவேண்டி வருகையாலே இது பொருந்தாமலிருக்கிறதேயென்று மிடிபட்டார்.) அவ்வளவிலே பட்டரிடத்திலே பொருள் கேட்டவொருவர் அந்தக் கோஷ்டியிலேயிருக்கக் கண்டு 'இவ்விடத்தை பட்டர் நிர்வஹிப்பது எங்ஙனே?' என்று கேட்க, 'நாகு என்ற சொல் இரண்டாம்

வேற்றுமைப் பொருளது; கறவாமட நாகைத் தன் கன்று உள்ளினாற்போல்' என்று பட்டர் நிர்வஹிக்கும்படி—என்றாராம், நாகு தன்—நாகினுடைய, கன்று—கன்றனது. உள்ளினாற்போல்—தாயையே நினைத்துக் கத்துமாபோலே—என்றுரைப்பதும் உண்டு. நாகு—இளம் பெண்மாடு. பால் சுரவாத பசுவின் ஸ்தானத்திலே அருள் புரியாத எம்பெருமான் கொள்ளப்பட்டான்; கத்துகின்ற கன்றின் ஸ்தானத்திலே ஆழ்வார் தம்மை வைத்துக் கொண்டார்.]

13. பெரிய திருமொழி (8-1-8) வ்யாக்யானம். பிள்ளையமுதனார் இத்திருமொழிக்கு ப்ரவேசம் சொல்லாநிற்க, ராஜாக்கள் அந்த:புரக் கட்டிலிலே தெருவிலே பள்ளியந்துலாத்திலே ஏறி உலாவாநிற்பர்கள்காண் என்றாப்போலே அநேகம் வாக்ய சில்பங்களைப் பண்ணினார். அப்போது பால்யத்தாலே அவ்வடைவுகள் புத்தி பண்ணப் பெற்றிலோம அவற்றுக்கு இதில் பற்றுசே தென்று விசாரித்தோம். இதுவாகாதேயென்று தெளிந்தோங் காணு மென்று இவ்வளவிலே பிள்ளை அருளிச்செய்தார்.

14. பெரியதிருமொழி (9-2-1) வ்யாக்யானம். (பொன்னித்யாதி) பொன்னிவரென்று நிர்வஹிப்பர் பிள்ளையமுதனார், 'எண்ணும் பொன்னுருவாய்' என்னுமாபோலே ஸ்வரூபபரமாக்கி. அன்றிக்கே (பொன்னிவர்மேனி) இவருடைய வடிவைப் பார்த்தவாறே "சுட்டுரைத்த நன்பொன்னுன் திருமேனி யொளி யொவ்வாது" என்கிறபடியே நன்றான பொன்னென்னலாயிரா நின்றது. [விவரணம்:— 'இவர்மேனி பொன்; மரகதத்தின் பொங்கிளஞ் சோதியகலத்து ஆரம்மின்' என்று இரண்டு வாக்கியமாகக் கொள்வது. இப்படியன்றிக்கே, பிள்ளையமுதனார் மூன்று வாக்ய மாக நிர்வஹிப்பராம்; இவர் பொன்; மேனி மரதகத்தின் பொங்கிளஞ்சோதி; அகலத்து ஆரம் மின் என்றும். 'இவர்பொன்' என்றது—*எண்ணும் பொன்னுருவாய் * என்னுமாபோலே ஸ்வரூப பரமாகச் சொன்னவாறும்.]

15. பெரியதிருமொழி (9-5-1) வ்யாக்யானம், "என் நலமைந்தும்" என்கிறவிது-ச்ரோத்ராதிகளால் வரும்அறிவை யென்னுதல்; அன்றிக்கே, "என்னலனுமென்னிறைவும்" என்கிறத்தை என்று அமுதனார் [விவரணம்:— திருநெடுந்தாண்டகத்தில் * என்னலனும் என்னிறைவும் என்சிந்தையும் என்வளையுங்கொண்டு என்னையாளுங்கொண்டு * என்ற பாசுரத்தில் (கொள்ளப்பட்டனவாகச்) சொல்லப்பட்ட ஐந்தையும் என்றபடி]

16. திருவிருத்தம் ஈடு—72ம் பாட்டு, இவ்விடத்திலே அமுதனார் ஒரு கதை சொல்லுவர்:— ஒரு ஸாது₄ ப்ராஹ்மணன் காட்டிலே தனியே வழிபோனானாய் அங்கே ஒரு பசு தொடர்ந்து வந்ததாய் ஒரு மரத்திலேயேறியிருந்து இத்தாலேவந்த நலிவைப் போக்கி நம்மை ரக்ஷிப்பாராரோ என்கிற ஸமயத்திலே ஒரு புலி வந்து தோன்றி, பசுவையும் கொன்று அதினுடைய ரக்த₂த்தையும் பானம்பண்ணி இவன் முன்னேவந்து தண்டையை முறுக்கிபிட்டிருந்ததாய் 'பசுவேயாகில் ப்ராணரக்ஷணம்பண்ணிப்போகலாயிற்று; இனி இதின் கையில் வத₄த்தை நோக்குகையென்றொரு பொருளில்லையாகாதே' என்றான்; அதுபோலே இங்கும். [நோக்குகை—தவிர்த்துக் கொள்கை]

17. பகவத்விஷயம் 1—5—2 (நினைந்தவெல்லாப்பொருள்கட்கும் வித்தாய்) "நினைத்தல்-கலத்தலும், கூடலுமாய், ஸத்₃வஸ்த₂மாய்த் தன்னுடனே கூடிக்கிடக்கிற ஸகல பதா₃ர்த்த₂ங்களுக்கும் காரணமாய்" என்று பிள்ளையமுதனார் நிர்வஹிப்பர். அன்றியே இப்படி தன் திருவுள்ளத்தாலே விஷயீகரிக்கப்பட்ட ஸகலபதா₃ர்த்த₂ங்களுக்கும் காரணமாய்.

18. பகவத்விஷயம் 4—9—2 (ஏமாறிக்கிடந்தலற்றும்) ஏ என்று தெளிவு; ஏமாறுகை—தெளிவு அழிகை; என்று கலங்கிக் கூப்பிடாநிற்பர்கள்' என்று பிள்ளை அமுதனார் பணிப்பர்.

19. பகவத்விஷயம் 5—1—7 [அவனெவ்விடத்தான் யானார்] பிள்ளையமுதனார் 'அம்மானாழிப்பிரான்' என்று மேலே காட்டி 'யானார்' என்று குறையச்சொல்லிக் காட்டுவர்.

20. பகவத்விஷயம் 6-1-6. (புன்னைமேல்) பிள்ளையமுதனார் திருவிருந்தவரைமார்பனை 'இப்பதத்துக்கு பட்டரருளிச் செய்ததென்?' என்று கேட்க, " 'தன்னார்த்தி அவற்றின் செவியிலே படும்படி உயரச் சொல்லுகிறாள்' என்றருளிச்செய்தார்" என்ன; 'நெய்தல் நிலத்தில் புன்னை படர்ந்தன்றோகிடப்பது; இங்ஙனே சொல்லக் கூடுமோ' என்ன; அவன் பட்டர்பாடேவந்து இங்ஙனே பணித்தார்' என்ன; 'இவ்வர்த்த₂த்துக்கு நிர்ணயகம் இசையாயிற்று; அது போற்றியென்று உயரச்சொல்லியிருக்குமோ, தாழச் சொல்லியிருக்குமோ?' என்றருளிச்செய்தார்.

21. பகவத்விஷயம் 6—8—1 (நன்னலப் புள்ளினங்காள்) "உங்கள் தரத்துக்கு அது ஓர் அறுகும் தாளிப்பூவுமிறே" என்பராம் பிள்ளை அமுதனார்.

22. பகவத்விஷயம் 10—3—4 (விரும்பி) பிள்ளையமுதனார் ஒரு பசுவின் காலிலே முள்பாய்ந்தால் இடையன் தலைகாண் சீக்கொள்ளுவது என்பராம்.

23. ப்ரமேயரத்னம் 4-வது ப்ரகரணம். சிறியாச்சான் அமுதனாரைப் பார்த்து 'உம்முடைய அநநுஷ்டானம் பேற்றுக்கு விலக்கானபோதுகாணும் என்னுடைய அநுஷ்டானம் பேற்றுக்கு ஸாதநமாவது' என்றார்.

24. ஸ்ரீவேதாந்த தேசிகரின் பிரபந்தசாரம்:—

தேசமெலா முகந்திடவே பெரும்பூ தூரிற்
சித்திரையி லாதிரைநாள் வந்து தோன்றிக்
காசினிமேல் வாதியரை வென்ற ரங்கர்
கதியாக வாழ்ந்தருளு மெதிரா சர்முன்
பூசுரர்கோன் றிருவரங்கத் தமுத னாருன்
பொன்னடிமே லந்தாதி யாகப் போற்றிப்
பேசியநற் கலித்துறைநூற் றெட்டுப் பாட்டும்
பிழையறவே யெனக்கருள்செய் பேணி நீயே,

பத்தரடிப் பொடிபாட லைம்பத் தைந்தும்
பாணர்புகல் பத்துடனே பரகா லன்சொ
லத்தனுயர் வேங்கடமாற் காயி ரத்தோ
டானவிரு நூற்றேரைம் பத்து மூன்று
முத்திதரு மெதிராசர் பொன்ன டிக்கே
மொழிந்தவமு தர்பாட னூறு மெட்டு
மெத்திசையும் வாழவிவர் பாடி வைத்த
விவைநாலா யிரமுமடி யோங்கள் வாழ்வே,

25. இராமாநுசநூற்றந்தாதித் தனியன்கள்,

முன்னைவினையகல மூங்கிற்குடியமுதன்*
பொன்னங்கழற்கமலப்போதிரண்டும்* என்னுடைய
சென்னிக்கணியாகச் சேர்த்தினேன்* தென்புலத்தார்க்
கென்னுக் கடவுடையேன் யான்.

நயந்தருபேரின்பமெல்லாம் பழுதென்றுநண்ணினர்பால்*
சயந்தருகீர்த்தி யிராமாநுசமுனிதாளிணைமேல்*
உயர்ந்தகுணத்துத் திருவரங்கத்தமுதோங்கும்* அன்பால்
இயம்புங்கலித்துறையந்தாதியோதவிசைநெஞ்சமே.

இனியென்குறைநமக்கு எம்பெருமானுர்திருநாமத்தால்*
முனிதந்த நூற்றெட்டுச் சாவித்திரியென்னுநுண்பொருளைக்
கனிதந்த செஞ்சொல் கலித்துறையந்தாதி பாடித்தந்தான்*
புனிதன் திருவரங்கத் தமுதாகிய புண்ணியனே.

சொல்லின்தொகைகொண் டுனதடிப்போதுக்குத் தொண்டுசெய்
நல்லன்பரேத்துமுன்நாமமெல்லா மென்றன் நாவினுள்ளே [யும்*
அல்லும்பகலும் அமரும்படி நல்கு அறுசமயம்
வெல்லும்பரம* இராமாநுச இதென்விண்ணப்பமே.

26. அமுதனர் தனியன்கள்:—

மீநே ஹஸ்த ஸமுத்₃பூ₄தம் ஶ்ரீரங்க₃ம்ருத மாஶ்ரயே।
கவிம் ப்ரபந்ந கா₃யத்ர்யா: கூரேஶபத₃ ஸம்ஶ்ரிதம்॥

[கூரத்தாழ்வான் திருவடிகளை ஆஶ்ரயித்தவராய், ப்ரபந்நகாயத்ரியாகிய இராமாநுச நூற்றந்தாதியைப் பாடியவராய், பங்குனி ஸ்ரீ ஹஸ்தநக்ஷத்திரத்தில் அவதரித்தவரான திருவரங்கத்தமுதனுரை ஆஶ்ரயிக்கிறேன்.]

ஶ்ரீரங்கே₃ மீநஹஸ்தே ச ஜாதம் ரங்க₃ார்ய நந்த₃நம்।
ரங்க₃நாத₂ கு₃ரும் வந்தே₃ ராமாநுஜ பத₃ாஶ்ரிதம்॥

[ஸ்ரீராமாநுஜரின் திருவடிகளை ஆஶ்ரயித்தவராய், அணியரங்கத் தமுதனுரின் குமாரராய் ஸ்ரீரங்கத்தில் பங்குனி ஹஸ்தத்தில் அவதரித்தவரான திருவரங்கத்தமுதனுரை வணங்குகிறேன்]

27. அமுதனர் வாழித்திருநாமம்.

எந்தாதை கூரேச ரிணையடியோன் வாழியே*
எழில் மூங்கிற் குடிவிளங்க விங்குவந்தோன் வாழியே*
நந்தாமலெகிராசர் நலம்புகழ்வோன் வாழியே*
நம் மதுரகவி நிலையை நண்ணினன் வாழியே*
பைந்தாம வரங்கர்பதம் பற்றினன் வாழியே*
பங்குனியிலத்தநாள் பாருதித்தோன் வாழியே*
அந்தாதி நூற்றெட்டு மருளினன் வாழியே*
அணியரங்கத் தமுதனர் அடியிணைகள் வாழியே,

# எங்களாழ்வான் வைபவம்



திருவெள்ளறை-எங்களாழ்வான்; திருவடியில் நடாதூரம்மாள்

ஸ்ரீவிஷ்ணுசித்தபத3பங்கஜ ஸங்க3மாய
சேதோ மம ஸ்ப்ருஹயதே கிமத: பரேண ।
நோசேத் மமாபி யதிஶேக2ரப4ாரதீநாம்
ப4ாவ: கத2ம் ப4விதுமர்ஹதி வாக்2விதே4ய: ||

[ஸ்ரீவிஷ்ணுசித்தரெனும் எங்களாழ்வானின் திருவடித் தாமரையில் பொருந்துவதற்கு என் நெஞ்சம் ஆசைப்படுகிறது. அத்திருவடி தவிர்ந்த மற்றொன்றால் என்ன பயன்? அத்திருவடியை அடியேன் அடைந்திராவிடில் (அதிமந்த3பு3த்3தி4யுடைய) எனக்குங்கூட யதிராஜரின் ஸ்ரீஸூக்திகளின் கருத்து எப்படி வாக்குக்கு வசப்பட்டிருக்கும்?]

திருவெள்ளறையில் பூர்வசிக2 ஸ்ரீவைஷ்ணவ ப்3ராஹ்மண குலத்தில் "ஸ்ரீவிஷ்ணுசித்தர்" என்னும் திருநாமத்துடன் சித்திரையில் ரோஹிணியில் அவதரித்தவர் இந்த மஹாசார்யர், கூரத்தாழ்வான் கண் இழந்தபின்பு மேல்நாட்டிலிருந்து ஸ்ரீரங்க3த்திற்குத் திரும்பிய யதிராஜர் ஸ்ரீபா4ஷ்யத்தில் எஞ்சிய பகுதியைக் கூரத்தாழ்வானுக்கு பதிலாக இவரை உசாத்துணையாகக்கொண்டு எழுதுவித்தார் என்றும், அப்படி எழுதும்போது ஆழ்வானுக்குத் துல்யமாயிருந்த இவருடைய மேதா4 விலாஸத்தைக் கண்டு "எங்கள் ஆழ்வானே" என்று எம்பெருமானார் அபி4மானித்தார் என்றும் கர்ணபரம்பரைச் செய்தி கூறும்,

"இன்னவாறு திருப்பதிகள் எங்கும்வாழ்வித்து எதிராசன்
தன்னதாக்கித் தரிசனமும் தரணியெங்கும் விளங்குவித்து
முன்னமுரைத்த பாடியத்தின் முற்றமூன்றத் தொருகூறு
தன்னைச்சென்றுண் டாயிரத்தாங் கெழுபத்தேழில் சாற்றினான்"

என்று ராமானுஜார்ய தி3வ்யசரிதையில் எம்பெருமானார் மேல்நாட்டிலிருந்து திரும்பி வந்து ஏழெட்டு வருடங்கள் கழிந்தபின்பே ஸ்ரீபா4ஷ்யத்தில் மூன்றில் ஒருபகுதியைப் பூர்த்தி செய்தார் என்று குறித்திருப்பது இக்கர்ணபரம்பரைச் செய்தியை வலியுறுத்துகிறது. ஸ்ரீபா4ஷ்யத்தின் கடைசிப் பகுதியில் போ3தா4யநவ்ருத்தியிலிருந்து எதையும் மேற்கோளாகக் காட்டாமலிருப்பதும் ஆழ்வான் அப்பகுதியை எழுதவில்லை என்பதை வலியுறுத்துகிறது ஸ்ரீபா4ஷ்யம் எழுதிக்கொண்டிருக்கையில் இடையில் க்ருமிகண்ட2ன் உபத்3ரவம் ஏற்பட்டதாகையால், பல வருடங்கள் கழிந்தபின்பே அதைப் பூர்த்திசெய்தது குறையாகாது.

74 ஸிம்ஹாஸநாதி4பதிகளில் ஒருவராய் எம்பெருமானாரால் நியமிக்கப்பெற்ற இவர் ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற்கு "விஷ்ணுசித்தீயம்" என்னும் வ்யாக்2யானத்தையும், ஸித்3தா4ந்த ப்ரமேயங்களைச்

சுருக்கி "ப்ரமேயஸங்க்₃ரஹம்" என்னும் க்₃ரந்த₂த்தையும், ப்₃ரஹ்மஸூத்ரத்தின் அதி₄கரணங்களின் ஸங்க₃தியை (தொடர்ச்சியை) விளக்கி "ஸங்க₃திமாலா" என்னும் க்₃ரந்த₂த்தையும், க₃த்₃ய வ்யாக்₂யானம் ஒன்றையும் வடமொழியில் அருளிச்செய்துள்ளார். இவற்றில் விஷ்ணுபுராண வ்யாக்₂யானம் ஒன்றே இப்போது உள்ளது. மற்ற க்₃ரந்த₂ங்களிலிருந்து சில பகுதிகளை ஸ்ரீவேதா₃ந்த தே₃ஶிகர் ந்யாய ஸித்₃த₄ாஞ்ஜநம், க₃த்₃யபா₄ஷ்யம் முதலான தமது க்₃ரந்த₂ங்களில் எடுத்துக் காட்டியுள்ளார். இவர் மணிப்ரவாள நடையில் அருளிய "ஸாரார்த்த₂ சதுஷ்டயம்" என்னும் ரஹஸ்யம் வார்த்தாமாலையில் ஒருவார்த்தையாக உள்ளது. அதில் நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை முதலானோர் நிலைநாட்டிய தென்னாசார்ய ஸம்ப்ரதா₃யக் கொள்கைகளையே இவரும் நிலைநாட்டியுள்ளார்.

நடாதூராழ்வானுடைய பேரரான "வாத்ஸ்ய வரதாசார்யர்" என்னும் நடாதூரம்மாள் இவருடைய சிஷ்யர்களில் முதன்மையானவர். அவர் அருளிய "தத்வஸாரம்" என்னும் க்₃ரந்த₂த்தில் இவர் பெருமையைக் கூறும் "ஸ்ரீவிஷ்ணுசித்த" என்று தொடங்கும் முதல் ஶ்லோகமே இவருக்குத் தனியனாய் அமைந்துள்ளது. (இத்தனியன் தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.)

நடாதூரம்மாள் தமது பிதாமஹரும், ஸ்ரீபா₄ஷ்ய ஸிம்ஹாஸநாதி₄பதிகளில் ஒருவருமான நடாதூராழ்வானிடம் ஸ்ரீபா₄ஷ்ய காலக்ஷேபம் செய்யத் தொடங்கியபோது "அகி₂லபு₄வந" என்று தொடங்கும் ஸ்ரீபா₄ஷ்ய மங்க₃ள ஶ்லோகத்தின் விவரணத்திலேயே "'அகி₂லபு₄வந' என்று சொல்லுவானேன்? 'நிகி₂லபு₄வந' என்றோ, 'ஸகலபு₄வந' என்றோ சொல்லலாகாதோ?" என்று கேள்வி கேட்டார். வ்ருத்₃த₄ரான நடாதூராழ்வான், வாலிபரான தம் பேரனுக்குத் தக்கபடி காலக்ஷேபம் சொல்லுவது தம்மால் இயலாது என்று உணர்ந்து, "தினவுகெடச் சொல்லுவன் திருவெள்ளறைச் சோழியன், நீ திருவெள்ளறைக்குச் சென்று எங்களாழ்வானிடம் ஸ்ரீபா₄ஷ்ய காலக்ஷேபம் செய்து வருவாய்" என்று நியமித்துக் காஞ்சியிலிருந்து அவரைத் திருவெள்ளறைக்கு அனுப்பினார். திருவெள்ளறைக்கு ஒருநாள் விடியற்காலையில் வந்து சேர்ந்த வாத்ஸ்யவரதா₃சார்யர், எங்களாழ்வான் திருமாளிகைக் கதவைத் தட்டி அழைத்தார். உள்ளிருந்தபடியே விஷ்ணுசித்தர் "யார்?" என்று வினவினார். "நான்தான்" என்றார்

வரதகுர் "நான் செத்த பிறகு வா" என்று கூறிக் கதவைத் திறக்காமலே அவரைத் திருப்பியனுப்பி விட்டார் எங்களாழ்வான். "நான் என்னும் அஹங்காரம் செத்தபிறகு வா" என்று அவ்வாக்கியத்தின் உட்கருத்தை அறியாத வரதகுர் காஞ்சிக்குச் சென்று பட்டரிடம் இச்செய்தியைத் தெரிவித்தார். "'அடியேன்' என்று சொல்லவேண்டியிருக்க, 'நான்தான்' என்று கூறிய உனது மடமையைச் சுட்டிக்காட்டி, தினவுகெடச் சொல்லிவிட்டார் பார்த்தாயா, மறுபடியும் அவரிடம் சென்று 'அடியேன்' என்று ஸ்வரூபத்துக்குப் பொருத்தமாக வார்த்தைசொல்லி அவரிடம் பிரார்த்தித்து ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் கேட்டு வருவாய்" என்று மறுபடியும் அவரைத் திருவெள்ளறைக்கு அனுப்பினர் நடாதூராழ்வான். மறுபடியும் சென்ற வாத்ஸ்யவரதகுர் 'அடியேன்' என்று பதில் சொல்லி எங்களாழ்வானுடைய கடாக்ஷத்திற்குப் பாத்திரராகி, ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் சொல்லும்படி அவரைப் பிரார்த்தித்தார். "எனக்குப் புத்ரனில்லை, ஒரே பெண்தான் இருக்கிருள். அவளுக்குப் பிள்ளை பிறந்தால் அவனைக்கொண்டோ, அப்படிப் பிறக்காவிடில் சிஷ்யன் என்கிற முறையில் நீயேயோ எனக்குச் சரம கைங்கர்யம் செய்வதற்கு உனது தாய்தந்தையர் முதலானுரிடம் அநுமதிபெற்று வா" என்று எங்களாழ்வான் மறுபடியும் அவரைக் காஞ்சிக்குத்திருப்பியனுப்பிவிட்டார் அப்படியே அநுமதி பெற்று மறுபடியும் வந்து திருவெள்ளறையிலேயே அவர் திருவடிகளில் ஶுஶ்ருஷை செய்துகொண்டு நீண்டநாள் வாழ்ந்து, ஸ்ரீபாஷ்யார்த்தங்கள் அனைத்தையும் கசடறக் கற்ருர் வாத்ஸ்ய வரதாசார்யராகிய நடாதூரம்மாள். இப்படி அம்மாளுக்கு ஆசார்யரானமையாலே "அம்மாளாசாரியர்" என்று அழைக்கப்பெற்ருர் எங்களாழ்வான். இன்றும் அவர் வம்சத்தில் உதித்தவர்கள் அப்பட்டத்தையிட்டு அழைக்கப்படுகின்றனர்.

எங்களாழ்வான் எம்பெருமானுரைக் காட்டிலும் மிகவும் இளையவராகவே இருக்கவேண்டும். கூரத்தாழ்வான் கண் இழந்து எம்பெருமானுர் திருநாராயணபுரத்திலிருந்து திரும்பி வந்தபின்பு ஆஶ்ரயித்தவராகையாலே, எம்பெருமானுருக்கும் இவருக்கும் சுமார் எண்பது பிராயம் வித்தியாசம் இருக்கவேண்டும். இவர் சுமார் நூறு வயது வாழ்ந்திருந்தார். ஆக கி. பி. பன்னிரண்டாவது நூற்றண்டில் பெரும்பகுதி வாழ்ந்த மஹாசார்யர் இவர்.

அசுனுலேயே முதல் திருவந்தாதி வ்யாக்₂யானத்திலும் கு₃ருபரம்பரா ப்ரபா₄வங்களிலும், நம்பிள்ளை காலம் வரையில் இவர் எழுந்தருளி யிருந்ததாக ஐதிஹ்யங்கள் கூறுகின்றன. "ஸகல ஶாஸ்த்ரங் களும் வல்லவர் எங்களாழ்வான்" என்று நம்பிள்ளை அருளியதாக ஆறுயிரப்படி கு₃ருபரம்பரை கூறுகிறது.

எம்பெருமானுர் தம் சரமகாலத்தில் இவரைப் பிள்ளான் திரு வடிகளிலே ஆஶ்ரயிக்கச் செய்தார் என்று கு₃ருபரம்பராப்ரபா₄ வத்தில் அருளியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது, நஞ்சீயர் திரு வாராத₄னப்பெருமாளான ஆயர்தேவு, எங்களாழ்வான் கனவில் வந்து "நான் ஜீயர்மகன் ஆயர்தேவு; எனக்கு வெண்ணெய், நாவற் பழம் முதலானவை கொடும்" என்று கேட்டதாகவும், எங்களாழ் வான் நஞ்சீயரிடம் சென்று, "ஜீயரே! உமது மகன் ஆயர்தேவு 'அதைக்கொடு இதைக்கொடு' என்று கேட்டு, என்னைக் குடியிருக்க வொட்டாமல் செய்கிறுன்" என்று சொன்னதாகவும், அதைக் கேட்டு நஞ்சீயர் "யாருமறியாதபடி நமது திருவாராதனப்பெரு மாளுக்கு 'ஆயர்தேவு' என்று பெயர் வைத்திருக்க. அதை உலக மறியச் செய்வதற்காக எம்பெருமான் இப்படிச் செய்வதே!" என வியந்ததாகவும் ஐதிஹ்யம் உள்ளது. இவர் சிலகாலம் ஸ்ரீவில்லி புத்தூருக்கு அருகிலிருந்த கொல்லங்கொண்டானில் எழுந்தருளி யிருந்து ஸ்ரீபா₄ஷ்ய காலக்ஷேபம் ஸாதித்து வந்தார் என்று வர லாறு கூறுகிறது.

எங்களாழ்வானுக்குச் சரமத₃ஶையில் செங்கமலநாச்சியார் என்ற பெண்மூலம் அருகிலுள்ள ஆமூரில் பிறந்த தௌ₃ஹித்ர னுக்கு 'வரத₃ாசார்யர்' என்னும் தம் திருநாமத்தையேயிட்டு, ஸ்வீக்ருதபுத்ரராக்கி, அவரைக்கொண்டு நடாதூரம்மாள் சரம கைங்கர்யங்களைக் குறைவற நடத்தியருளினுர்; அவருக்கு ஸக லார்த்தங்களையும் கற்பித்து வைத்தார். அவரது பரம்பரை இன் றும் தொடர்ந்து வருகிறது.

### ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். எங்களாழ்வான் காக்கைப்பாடியாச்சான் பிள்ளையைப் பார்த்து 'உம்மைப்பெருமாள் முனிந்தருளினபோது என் நினைத்திருந்தீர்?' என்று கேட்டருள, அவரும் 'எம்பெருமானுர் திருவடிகளே தஞ்சமென்றிருந்தேன்' என்று விண்ணப்பஞ் செய்தார்.

2. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். எங்களாழ்வான் தனியன். வைபவத்தின் தொடக்கத்தில் காண்க.

3. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம், இவர்களிலே பின்பழகியபெருமாள்சீயர் ஊணுமுறக்கமுமின்றியே பிள்ளை திருவடிகளிலே *வழுவிலாவடிமை செய்துகொண்டு வாழ்ந்தருளுங்காலத்திலே, ஒருகால் திருமேனி பாங்கின்றியே கண்வளர்ந்தருளுகிறபோது. தமக்கு அந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்து, 'அடியேன் இப்போது திருவடிசாராமல் இங்கே இன்னம் சிறிது நாளிருக்கும்படி பெருமாள் ஸந்நிதியிலே சென்று ஏழையேதலனும் ஆழியெழச்சங்கும் விண்ணப்பஞ்செய்து ப்ரபத்திபண்ணி வேண்டிக்கொள்ளுங்கோள்' என்ன, அவர்களும் அப்படியே செய்துநிற்க, சீயருக்குத் திருமேனி பண்டுபோலே பாங்காயிற்று.

இத்தைக்கேட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள், நம்பிள்ளை ஸந்நிதியிலே சென்று தண்டன் ஸமர்ப்பித்து, 'ஜ்ஞாதவ்ருத்தருமாய் வயோவ்ருத்தருமாயிருக்கும் பின்பழகிய பெருமாள்சீயர் இப்படிச் செய்தார். இது இவர் ஸ்வரூபத்துக்குச் சேருமோ' என்று விண்ணப்பஞ் செய்ய, பிள்ளையும் 'அவருடைய அபிப்ராயமறிகிலோம்; ஸகல ஶாஸ்த்ரங்களும் போருவது பிள்ளையெங்களாழ்வானுக்காய்த்து; அவர்பக்கல் சென்று கேளுங்கோள்' என்ன, ஸ்ரீவைஷ்ணவர்களும் எங்களாழ்வானைக் கேட்க, அவரும் 'ஸ்ரீரங்கைஶ்வர்யத்தில் ஸங்கம்போலே காணும்' என்ன, பிள்ளையும் இத்தைக் கேட்டு 'அழகிது! திருநாராயணபுரத்தரையரைச் சென்று கேளுங்கோள்' என்ன, அவர்களும் அவரைக் கிட்டிக் கேட்டவிடத்தில் அவரும் 'இங்குத் துவக்கின கைங்கர்யம் தலைக்கட்டாமையாலே காணும்' என்ன, பிள்ளை இத்தையுங்கேட்டு 'ஆகிறது; அம்மங்கியம்மாளைக் கேளுங்கோள்' என்ன, அவரும், 'பிள்ளைகோஷ்டியிலிருந்து பகவத்விஷயங் கேட்கிறவர்களுக்கும் ஒருதேஶவிஶேஷம் ருசிக்குமோ?' என்ன. இத்தையும் பிள்ளைகேட்டு 'நல்லது!' என்று விட்டு, 'அம்மங்கிப் பெரிய முதலியாரைக் கேளுங்கோள்' என்ன, அவரும் 'நம்பெருமான் சிவந்த திருமுக மண்டலமும் கஸ்தூரித்திருநாமமும் பரமபதத்திலே கண்டிலேனாகில் ஒரு மூலையடியே முறித்துக்கொண்டு மீண்டு வருவேனென்றன்றோ பட்டர் அருளிச்செய்தது; அப்படியே இவரும் நம்பெருமாள் சிவந்த திருமுகமண்டலத்தையும் திருநுதலில் கஸ்தூரித் திருநாமத்தையும் விட்டுப்போகமாட்டாராகவேணும்' என்றார். பிள்ளை இவற்

றையெல்லாம் திருவுள்ளம் பற்றியருளி சீயர் திருமுகமண்டலத்தைப் பார்த்துச் சிரித்து 'இவை உம்முடைய நினைவுக்கு ஒக்குமோ' என்ன, 'இவை இத்தனையுமன்று' என்று விண்ணப்பஞ்செய்ய, 'ஆகில் உம்முடைய அபிப்ராயத்தை நாம் அறிந்தோம்' என்று பிள்ளை அருளிச்செய்ய, சீயர் 'தேவரீர் ஸர்வஜ்ஞராகையாலே, அறிந்தருளாததில்லை; அடியேனைக்கொண்டு வெளியிடத் திருவுள்ளமாகில் விண்ணப்பஞ்செய்கிறேன்; திருமஞ்சனச்சாலைக்கு எழுந்தருளி, தேவரீர் திருமஞ்சந முறைகளிலே திருமஞ்சனங் கொண்டருளித் தூயவுடையாடை திருவுத்தரீயஞ் சாத்தியருளி உலாவியருளும்போது குறுவேர்ப்போடே கூடின திருமுகமண்டலச் செவ்வியையும், அடியேன் சுற்றிச் சுழற்றிப்பரிமாறுகிற கைங்கர்யத்தையும் விட்டு அடியேனுக்குப் பரமபதத்துக்குப்போக இச்சையாயிருந்ததில்லை; பெருமுகோல்லாஸமும் இன்னம் சிறிது காலம் இங்கேயிருந்து பெறவேணுமென்று நினைத்துச் செய்தேன்' என்று விண்ணப்பஞ்செய்தார். இத்தைக் கேட்டருளிப் பிள்ளையும் முதலிகளும் 'இவ்வுடம்போடே இவ்வைஶ்வர்யம் கூடுவதே!' என்று மிகவுந் திருவுள்ள முகந்தருளினார்கள்.

4. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். நம்பிள்ளை திருமேனியிலே நோவு சாத்தியெழுந்தருளியிருக்கச் செய்தே, பிள்ளையெங்களாழ்வாரும் அம்மங்கியம்மாளும் அறிவதாக எழுந்தருளி எங்களாழ்வான் நியமநத்தாலே அம்மங்கியம்மாள் பிள்ளை பக்கல் பரிவாலே ஒரு யந்த்ரத்தைத் திருக்கையிலேயிட்டுத் தொடப்புக, பிள்ளை திருமேனியை இருய்த்தருள, அவர்களும் விஷண்ணராய் 'உம்முடைய விஷயமாக நீர் ப்ரவர்த்திக்கிலன்றோ ஸ்வரூபஹாநி? உம்முடைய விஷயமாக நாங்கள் ப்ரவர்த்தித்தால் உமக்கு ஸ்வரூபஹாநி யில்லைகாணும்' என்று சில வசநங்களைப்படிக்க, 'எனக்கும் போம் சில வசநங்களையன்றோ நீங்கள் விஶ்வஸித்திருக்கிறது? நானும் ஒரு வசநத்தைத் தஞ்சமென்றிருப்பன் காணுங்கோள்' என்ன, அவர்களும் 'அது வெல்? சொல்லிக்காணீர்' என்ன, பிள்ளையும் 'சீயர் தம் சரமதஶையிலே 'த்வயமொழிந்த மந்த்ரங்களோடு ஶிவபஞ்சாக்ஷரம் முதலான க்ஷுத்ரமந்த்ரங்களோடு ஒருவாசியில்லை' என்றருளினார்' என்ன, அவர்களும் 'பிள்ளை! திருமந்த்ரம் செய்வதென்?' என்ன, பிள்ளையும் 'அதுதான் செய்வதென்? விவரண விவரணிபூர்வேந த்வயாந்தர்க்கதம்' என்ன,

அவர்களும் 'ஆகில் த்₃வயத்தைக்கொண்டு செய்யக் குறை என்?' என்ன, இவரும் 'விடாய்த்தவன் * விலவறத் தண்ணீர் குடிக்குமா போலே இருப்பதொன்றிறே இது; ஆகையாலே, ஸ்வவ்யாதி₄ ஶாந்த்யர்த்த₂மான ப்ரபத₃நமும் ஸ்வரூபஹாநி; பரவிஷய ஶாந்த்யர்த்த₂மான ப்ரபத₃நமும் ஸ்வரூபஹாநி. எங்ஙனேயென்னில்:— ஸ்வவிஷயமாக ப்ரவர்த்திக்கில் ஸ்வஸ்வரூபபாரதந்த்ர்ய தூ₃ஷணமாமித்தனை; பரவிஷயமாக ப்ரவர்த்திக்கில் பரஜ்ஞாந பரஶக்திகளுக்கு தூ₃ஷணமாம்' என்று அருளினார்; ஆகையால் தொடக்குழையும் பூப்போலே மந்த்ராந்தர ஸ்பர்ஶம் பொருத த்₃வயைகநிஷ்டா₂திஶயமும், த்₃வயத்தை மற்றொன்றுக்கும் ஸாத₄நமாக்கிப் பிசக்கி முசிக்கப் பெருமையும், ஸ்வபரவிஷயவ்யாதி₄ ஶாந்த்யர்த்த₂ப்ரபத₃நதோ₃ஷவிஶேஷமும் சொல்லப்பட்டதிறே.

5. நடாதூரம்மாள் அருளிய தத்வஸாரம்—முதல் ஶ்லோகம். இதுவே ஐ நி உல் காட்டப்பட்ட தனியனும் அமைந்தது.

6. வார்த்தாமாலை—17. a எங்களாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே அம்மங்கியம்மாள் சென்று தண்டனிட்டு, 'அடியேனுக்கு b த₃ர்ஶநமிருக்கும்படி அருளிச்செய்யவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய; எங்களாழ்வானும், 'c த₃ர்ஶநாந்தரிகளை நிரஸிக்கவோ? ஸ்வb த₃ர்ஶநஸ்தா₂பநம் பண்ணவோ, b த₃ர்ஶநமிருக்கும்படி கேட்கவோ?' என்று அருளிச்செய்ய; இவரும், ''c த₃ர்ஶநாந்தரிகளை நிரஸிக்கவும் ஸ்வb த₃ர்ஶநஸ்தா₂பநம் பண்ணவும் தேவரீர் எழுந்தருளியிருந்தீர்; அடியேனுக்கு b த₃ர்ஶநமிருக்கும்படி அருளிச்செய்யவேணும்'' என்ன; எங்களாழ்வான், அம்மங்கியம்மாளுக்கு அருளிச்செய்த ஸாரார்த்த₂சதுஷ்டயம்;—

எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்றிருக்கும் நம் பூர்வாசார்யர்கள், தங்களுக்குத் d தஞ்சமாகவும் e உத்தாரகமாகவும் போ₄க்₃யமாகவும் அநுஸந்தி₄த்தும் உபதே₃ஶித்தும் போருவது f நாலிரண்டு அர்த்த₂முண்டு. அவையாவன-ஸ்வரூபஜ்ஞாநமென்றும், ஸ்வரூப யாதா₂த்ம்யஜ்ஞாநமென்றும், விரோதி₄ஜ்ஞாநமென்றும், விரோதி₄யாதா₂த்ம்யஜ்ஞாநமென்றும், ப₂லஜ்ஞாநமென்றும், ப₂லயாதா₂த்ம்யஜ்ஞாநமென்றும், உபாயஜ்ஞாநமென்றும் உபாயயாதா₂த்ம்ய ஜ்ஞாநமென்றும்.

இதில், ஸ்வரூபஜ்ஞாநமாவது – ஜ்ஞாநாநந்தங்களும் g புறவிதழ் என்னும்படி பகவதநந்யார்ஹ ஶேஷத்வமே ஸ்வரூபமென்றிருக்கை. ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநமாவது- பகவச்சேஷத்வமும் புறவிதழ் என்னும்படி பாகவதஶேஷத்வமே ஸ்வரூபமென்றிருக்கை. விரோதிஜ்ஞாநமாவது – பரமபாகவத h விஶ்லேஷத்திலே நெஞ்சழியாத நினைவு. விரோதியாதாத்ம்ய ஜ்ஞாநமாவது – வருந்தி ஒரு பாகவதனோடே i ஸம்ஶ்லேஷிக்கத்தொடங்கி, அவன்பக்கல் j தோஷதர்ஶநம் பண்ணுகை. k பலஜ்ஞாநமாவது – ஒரு பாகவதன் நியமநத்தை வெறுத்தல், பொறுத்தல் செய்கையன்றிக்கே, விஷய ப்ரவணனுக்குப் படுக்கைத்தலையில் விஷயபாருஷ்யம் போக்யமாமாபோலே யாகிலும் போக்யமென்றிருக்கை. l பலயாதாத்ம்யஜ்ஞாநமாவது – ஆர்த்தப்ரபத்தியைப் பண்ணி அக்கரைப்பட ஒருப்பட்டிருக்கச்செய்தே, மாதாபிதாக்களுங்கூட அநாதரிக்கும்படியான ஆர்த்தியையுடைய ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால், அவர்களுடைய ரக்ஷணத்துக்கு உறுப்பாக இங்கேயிருக்கையிலே ஒருப்படுகை. உபாயஜ்ஞாநமாவது – ஸம்பந்தஜ்ஞாநம்; ஸம்பந்தஜ்ஞாநந்தான் – ஸம்பந்த ஜ்ஞாநமென்றும், ஸம்பந்த யாதாத்ம்யஜ்ஞாநமென்றும், ஸம்பந்த ஸ்வரூபஜ்ஞாநமென்றும், ஸம்பந்தஸ்வரூப யாதாத்ம்யஜ்ஞாநமென்றும் நாலு வகையாயிருக்கும் இதில் ஸம்பந்தஜ்ஞாநமாவது – அவனுடைய m நிருபாதிகஶேஷித்வத்தையும், தன்னுடைய நிருபாதிக ஶேஷத்வத்தையும் தெளிய அறிகை. n ஸம்பந்த யாதாத்ம்ய ஜ்ஞாநமாவது – அவனுடைய நிருபாதிகஶரீரித்வத்தையும், தன்னுடைய நிருபாதிக ஶரீரத்வத்தையும் தெளிய அறிகை. o ஸம்பந்த ஸ்வரூபஜ்ஞாநமாவது – அவனுடைய நிருபாதிக தர்மித்வத்தையும், தன்னுடைய நிருபாதிக தர்மத்வத்தையும் தெளிய அறிகை. p ஸம்பந்த ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞாநமாவது – தர்மி தர்மங்களினுடைய ஐக்யத்தைத் தெளிய அறிகை; அதாவது – விஶிஷ்ட வேஷத்திலே அவனொருவனுமேயாய், தான் இல்லையென்னலாம்படியிருக்கை. q உபாயயாதாத்ம்ய ஜ்ஞாநமாவது – தந்நிஷ்டை; அதாவது – ஶேஷத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும், ஜ்ஞாத்ருத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும், போக்த்ருத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும் பிறக்கை. ஶேஷத்வத்தில் கர்த்ருத்வமாவது – r ராஜா

ஶ்ரயத்தையிட்டு ஜக3த்தைப் பீடி3க்கும் மந்த்ரிகளைப் போலே. s ப4க3வத3ாஸத்தியையிட்டு t ஸத3ாசாரத்தை நெகிழ்கை; அதாவது - ஶப்3த3ாதி3விஷயஸ்பர்ஶத்தில் அச்சமும், ப4க3வத்3ப4ாக3வதகைங்கர்ய விஶ்லேஷத்தில் ஆர்த்தியும் விளையாதொழிகை; தந்நிவ்ருத்தியாவது - u ப்ரமாதி3கமான விஷயத்திலே அச்சமும், ப்ரமாதி3கமான கைங்கர்யவிஶ்லேஷத்தில் ஆர்த்தியும் விளைகை. ஜ்ஞாத்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது-நாம் ஜ்ஞாதாவாகையாலேயன்றோ நம்மை அவன் அங்கீ3கரித்தது என்று தன் ஜ்ஞாநத்தையிட்டு v இறுமாக்கை; தந்நிவ்ருத்தியாவது-'தே3ஹாத்மாபி4மாநிகளிலும் கடையாய். w அசித்கல்பனாய், x முதலழித்துக்கொண்டு அஸத்கல்பனாய்க்கிடந்த என்னை, இரும்பைப் பொன்னாக்குவாரைப் போலே, y கருந்தரையிலேபுகுந்து, ஆத்மஜ்ஞானத்தைப் பிறப்பித்து அங்கீ3கரிப்பதே!' என்று க்ருதஜ்ஞனாய்ப்போருகை. கர்த்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது - 'நாம் நிஷித்3த4ங்களை விட்டு விஹிதங்களைப் பற்றுகையாலேயன்றோ நம்மை அவன் அங்கீ3கரித்தான்' என்று தன் ப்ரவ்ருத்திநிவ்ருத்தியையிட்டு இறுமாக்கை; தந்நிவ்ருத்தியாவது - 'நம் வ்யாபாரங்கள் ஒன்றுமில்லை. மரப்பாவையை ஆட்டுவாரைப்போலே தானே நிஷித்3த4ங்களின்னும் விடுவித்து விஹிதங்களைப் பற்றுவித்தான் என்றிருக்கை. போ4க்த்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது-நாம் அவனுக்கு அடிமை செய்கிறோம் என்றிருக்கை; தந்நிவ்ருத்தியாவது- z தன் கையாலே தன் மயிரை வகுத்தால் அந்யோந்யம் உபகார ஸ்ம்ருதி பண்ணாதாப்போலே, அவயவபூ4தனான ஆத்மா அவயவியான எம்பெருமானுக்கு அடிமைசெய்கிறான் என்றிருக்கை. இவ்வர்த்த2ங்கள் ஓராசார்யன் அங்கீ3கரித்த முமுக்ஷுக்கு ஜ்ஞாதவ்யம். [ a எங்களாழ்வான் - திருவெள்ளறையில் பூர்வசிக2 ஶ்ரீவைஷ்ணவ ப்3ராஹ்மண குலத்தில் அவதரித்தவராய், அஸ்மத்குலகூடஸ்த2ராய். 'விஷ்ணுசித்தர்' என்னும் திருநாமமுடையவராய், எம்பெருமானாராலே 'எங்களாழ்வான்' என்று ஆழ்வானுக்குத் துல்யராக அபி4மானிக்கப்பெற்று, 74 ஸிம்ஹாஸநாதி4பதிகளில் ஒருவராக நியமிக்கப்பெற்றவராய், 'தினவுகெடச் சொல்லுவர் திருவெள்ளறைச்சோழியர்' என்று புகழ்பெற்றவர். b த3ர்ஶனம்-மதம். c த3ர்ஶநாந்தரிகள்-பிற மதங்களைச் சேர்ந்தவர்கள். d தஞ்சம் - இங்கிருக்கும் நாள் காலக்ஷேபத்துக்கு உறுப்பானது. e உத்தாரகம்-பரம புருஷார்த்த2த்தை அளித்து உய்விப்பது. f நாலிரண்டு அர்த்த2ம்— நாலு ஜ்ஞானங்களும் நாலு யாத2ாத்ம்ய ஜ்ஞானங்களுமாக எட்டு

அர்த்த₂ங்கள். g புறவிதழ்-ஒரு மலருக்கு வெளியிலிருக்கும் இதழ் கள்போலே பா₃ஹ்ரங்க₃மாயிருப்பவை; ஶேஷத்வம உள்ளிதழ்போல் இருப்பது; ஜ்ஞாநாநந்த₃ங்களைக்காட்டிலும் அந்தரங்க₃மாயிருப்பது என்று கருத்து: h விஶ்லேஷம் – பிரிவு. i ஸம்ஶ்லேஷிக்க – உற வாட. j தோ₃ஷத₃ர்ஶனம் பண்ணுகை-குற்றங்களைக் காண்கை. k ப₂லஜ்ஞானமாவது...பே₄க்₃யமென்றிருக்கை ஒரு பரமபா₄க₃வ தர் நமக்கு ஒரு நியமனத்தைச் செய்தால். அது நம் மனத்துக்கு ஏற்காமையாலே அந்த நியமனத்தை நாம் வெறுத்து அதை வெளிக்காட்டுவதுண்டு; வெறுப்பை உள்ளேயே அடக்கிக்கொண்டு பொறுத்திருப்பதுமுண்டு ப₂லஜ்ஞானமுள்ளவன் இவ்விரண்டை யும் செய்ய மாட்டான்; காதலியோடு புணரும்போது அதில் பல தாழ்ச்சிகள் இருந்தபோதிலும் அவற்றைப் பொறுத்துக்கொண்டு அவற்றை இனியவையாகவும் நினைப்பதுபோலேயாவது தம் மனத் துக்கு ஏற்காத அந்த பா₄க₃வத நியமனத்தை இனியது என்றிருப் பான் என்றுகருத்து. l ப₂லயாதா₂த்ம்யஜ்ஞானமாவது...ஒருப்படுகை-ஸம்ஸாரத்தில் பொருந்தாமையாலே "கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ" [திருவாய் 6-9-9] என்று ஆழ்வாரைப் போலே ஆர்த்தி விளைந்து உடனே எம்பெருமானைப்பெறவேணும் என்று ஆர்த்தப்ரபத்தி செய்ய ஸித்₃த₄மாயிருக்கும்போதும், தாய் தந்தையராலும் கைவிடப்பட்ட அநாத₂ர்களான ஸ்ரீவைஷ்ணவர் களைக் கண்டால் மோக்ஷமடையவேண்டும் என்னும் பேரார்வமும் அடங்கப்பெற்று, அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை ரக்ஷிப்பதற்காகத் தனக்குப் பொருந்தாத இந்த ஸம்ஸாரத்திலேயே இருக்க உறுதி கொள்பவன் ப₂லயாதா₂த்ம்யஜ்ஞானம் (ப₂லத்தைப்பற்றிய உண் மையறிவு) உடையவன் என்று கருத்து. ப₄க₃வத₃நுப₄வ கைங் கர்யங்களைக் காட்டிலும் பா₄க₃வதாநுப₄வ கைங்கர்யங்களே பரம ப்ராப்யம் என்றபடி. m நிருபாதி₄க-ஒரு காரணத்தை முன்னி டாத; அதாவது-இயல்வான என்றபடி. n ஸம்ப₃ந்த₄யாதா₂த்ம்ய ஜ்ஞானம்-எம்பெருமான் இயல்வான ஶரீரியாயிருந்துகொண்டு ஶேஷியாயிருப்பவன் என்றும், தான் இயல்வான ஶரீரமாயிருந்து கொண்டு ஶேஷமாயிருப்பவன் என்றும், தெளிவாக அறிவது உறவை உள்ளபடி அறிவதாகும். o ஸம்ப₃ந்த₄ஸ்வரூபஜ்ஞானம்—நம்முடைய ஶரீரம் நமக்கு ஶரீரமாயிருந்தபோதிலும், என்றும் நம்மைவிட்டுப் பிரிக்கமுடியாத த₄ர்மமாய் (ப்ரகாரமாய்) இராது; நாமும் அதற்கு த₄ர்மியாய் (ப்ரகாரியாய்) இல்லை. நமக்கும் எம் பெருமானுக்குமுள்ள ஸம்ப₃ந்த₄ஸ்வரூபம் இத்தகைய ஶரீர ஶரீரி

கள்போலிருப்பது மாத்திரமல்லாமல், த₄ர்மத₄ர்மிகளைப்போலும் இருப்பது என்றறிவது-ஸம்ப₃ந்த₄ஸ்வரூபஜ்ஞானம் என்று கருத்து. p ஸம்ப₃ந்த₄ ஸ்வரூப யாதா₂த்ம்யஜ்ஞானம் – உலகில் த₄ர்மங்கள் த₄ர்மியைவிட்டுப் பிரிக்கமுடியாவிடினும், த₄ர்மியைக்காட்டிலும் தனித்து அறியலாம்படியிருக்கும். உதா₃ஹரணமாக வெண்மை நிறம் வஸ்த்ரத்தைவிட்டுப் பிரியாத த₄ர்மமாயினும், பால் முத லான மற்ற பொருள்களிலும் அது இருக்கையாலே, த₄ர்மியா கிற வஸ்த்ரத்தைவிட்டுப் பிரித்து அறியலாம்படியிருக்கும். இங்கு எம்பெருமானுக்கு ப்ரகாரமான நாம், வேறொன்றுக்கும் ப்ரகார மாயில்லாமையாலே உலகிலுள்ள ப்ரகாரங்களைப்போலே அவனை விட்டுப் பிரித்தறியக் கூடியவர்களல்ல. ஆகையால் 'விஶிஷ்ட வேஷத்திலே அவனொருவனே இருக்கிறான். அவனைப் பிரிந்து நமக்கு நிலையில்லை' என்றறிவது ஸம்ப₃ந்த₄ஸ்வரூபத்தை உள்ள படி அறிவது என்று கருத்து ஆக, இத்துடன் உபாயமான எம்பெருமானைப் பற்றிய ஜ்ஞானத்தில் நாலு வகை விளக்கப்பட் டது. q உபாயயாதா₂த்ம்யஜ்ஞானமாவது - முற்கூறிய உபாய மான எம்பெருமானை உட்புகுந்து அறிவது. r ராஜாஶ்ரயம்-அர சனை அண்டை கொண்ட ப₃லம். s ப₄க₃வத₃ாஸத்தி-ப₄க₃வானை அண்டைகொண்டப₃லம். t ஸதா₃சாரம்-நல்லோர்களின் ஒழுக்கம்; அதாவது-ஶப்₃த₃ம் முதலான விஷயங்களோடு தொடர்பு ஏற்பட் டால் ப₄யப்படுவதும், ப₄க₃வத்₃ ப₄ாக₃வத கைங்கர்யமில்லாமற் போனால் வருந்துவதும். u ப்ராமாதி₃கமான விஷயத்திலே-கவனக் குறைவினால் ஶப்₃த₃ாதி₃விஷய ஸ்பர்ஶம் ஏற்படும்போது. v இறு மாக்கை-க₃ர்வம்கொள்ளுகை. w அசித்கல்பன்-ஏறக்குறைய அசே தனத்தையொத்தவன், x முதலழித்துக்கொண்டு-ஸ்வரூபத்தை அழித்துக்கொண்டு. y கருந்தரை-தரிசுநிலம்; (இங்கு) ஜ்ஞானம் வெளிப்படாத ஆத்மஸ்வரூபம். z தன்கையாலே...பண்ணுதாப் போலே-ஒருமனிதன் தன் கையாலே தன் மயிரை வாரிவிட்டால் அந்தக் கைக்கு அவனோ. அவனுக்கு அந்தக்கையோ, கைக்கு மயிரோ நன்றிகாட்டவேண்டிய அவஶ்யமில்லாததுபோலே, எம் பெருமான் தனக்குக்கைங்கர்யம் செய்யும் சேதனனுக்கு நன்றி காட்டவேண்டிய அவஶ்யமில்லை என்று கருத்து ]

7. வார்த்தாமாலை 118 வார்த்தை ச விவரணம். நடாதூரம் மாள் பிள்ளையெங்களாழ்வார் ஸ்ரீபாத₃த்திலே சரமஶ்லோகார்த்த₂ம் கேளாநிற்கச்செய்தே. பிள்ளை, "ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய" என்று அருளிச்செய்ய; அம்மாள், 'இதொரு ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யமிருந்த படியென்!' என்ன; பிள்ளையும் "நீர் இப்படி சொல்லுவானென்?

அதி₄காரிக்குச் சேர்ந்ததைவிடச் சொல்லிலன்றோ நீர் இப்படி சொல்லவேண்டுவது; அதி₄காரிக்குச் சேராததையன்றோ விடச் சொல்லிற்று. ஆகையால் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யமன்று காணும் இது; அதி₄காரிக்கு ஸ்வரூபஹாநியாகையாலே காண் இத்தை விடச்சொல்லிற்று'' என்று அருளிச்செய்தார். [எம்பெருமானுடைய மருமகனை 'வரத₃விஷ்ணு' என்னும் திருநாமமுடைய நடாதூராழ்வானுடைய பேரரான நடாதூரம்மாள் என்னும் வரத₃ாசார்யர் தம் ஆசார்யராய், விஷ்ணுசித்தரென்னும் திருநாமமுடையவராய், திருவெள்ளறையில் எழுந்தருளியிருந்தவரான எங்களாழ்வான் திருவடிகளிலே அமர்ந்து சரமஶ்லோகார்த்த₂ம் கேட்டுவரும்போது "'எல்லா உபாயங்களையும் வாஸனையோடு விட்டே என்னைப் பற்றவேண்டும்' என்கிறான் எம்பெருமான்'' என்று அருளிச் செய்தார் எங்களாழ்வான். இதைக்கேட்ட அம்மாள், "தானே ஶாஸ்த்ரங்களில் விதி₄த்த எல்லா உபாயங்களையும் விடச்சொல்லி ஈஶ்வரனுக்கு இப்படி ஒரு ஸ்வாதந்த்ர்யமா!'' என்று ஆஶ்சர்யப் பட்டார். அதற்கு எங்களாழ்வான் "அத்யந்தபரதந்த்ரனான இச் சேதனனுடைய ஸ்வரூபத்துக்குப் பொருந்தியதை விடச்சொன்னலன்றோ நீர் இப்படி ஆஶ்சர்யப்படலாம். இவனுடைய அத்யந்த பாரதந்த்ர்யஸ்வரூபத்துக்குப் பொருந்தாத ஸ்வப்ரவ்ருத்தி ரூபமான இவ்வுபாயங்களையன்றோ விடச்சொல்லுகிறான். ஆகவே ஈஶ்வரன் தன் ஸ்வாதந்த்ர்யத்தாலே இவற்றை விடச்சொல்லவில்லை, சேதனனுடைய ஸ்வரூபத்துக்குத் தகாது என்னும் காரணத்தாலேயே விடச்சொல்லுகிறான். ஆகையால் நீர் சொன்ன வார்த்தை சரியல்ல'' என்று அருளிச்செய்தார்.]

8. வார்த்தாமாலை 143 வார்த்தை விவரணம், அதி₄காரி க்ருத்யம், ஆசார்ய க்ருத்யம், புருஷகார க்ருத்யம், உபாய க்ருத்யம் என்று நாலு. இதில் அதி₄காரி க்ருத்யமாவது—ஆசார்ய ஶுஶ்ருஷையும் க்ருதஜ்ஞதையும், உபாயத்தில் அத்₄யவஸாயமும்; உபாய க்ருத்யமாவது—விரோதி₄ நிவர்த்தகத்வமும், ப்ராப்ய ஸித்₃தி₄கரத்வமும்; புருஷகார க்ருத்யமாவது—அபராத₄க்ஷாமகத்வமும் கைங்கர்ய வர்த்த₄கத்வமும்; ஆசார்யக்ருத்யமாவது — அஜ்ஞாத ஜ்ஞாபநமும், ருசிப்ரவர்த்தகத்வமும். [இவ்வார்த்தையில் ஶரணமடையும் அதி₄காரி, ஶரணமடையப்படும் உபாயமான எம்பெருமான், புருஷகாரஞ்செய்யும் பிராட்டி, ஶரணமடைபவனுக்கு அறிவு அளித்த ஆசார்யன் என்னும் நால்வர் செய்யும் கார்யங்கள் சுருங்கக் கூறப்படுகின்றன. I அதி₄காரி செய்யவேண்டியவை—(1) ஆசார்ய கைங்கர்யம், (2) ஆசார்ய விஷயத்தில் நன்றி (3) எம்பெருமானை உபாயமாகக் கொள்வதில் உறுதி. II உபாயமான எம்பெருமான் செய்பவை- (1) ஶரணமடைபவனுடைய விரோதி₄களான அவித்₃யா

கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்ப$_3$ந்த$_4$ங்களைப் போக்குவது. (2) பரமப்ராப்யமான பரார்த்த$_2$ாநுப$_4$வ கைங்கர்யங்களை அளிப்பது. III புருஷகாரமான பிராட்டி செய்பவை— (1) ஶரணாக$_3$தன் செய்த குற்றங்களை எம்பெருமானைப் பொறுப்பிக்கை. (2) அவன் செய்யும் (ப்ராப்யமான) கைங்கர்யங்களை வளர்க்கை, IV ஆசார்யன் செய்பவை— (1) ஶிஷ்யன் அறியாத அர்த்த$_2$ங்களை அறிவிக்கை, (2) பரார்த்த$_2$ாநுப$_4$வ கைங்கர்யங்களில் ருசியை வளர்க்கை.

9. வார்த்தாமாலை 174, இது பெரும்பாலும் ஐதிஹ்ய நிர்வாஹம் – 1ல் உள்ள ஆருயிரப்படி வாக்யங்களையொட்டியே அமைந்துள்ளது.

10. முதல் திருவந்தாதி 44 வ்யாக்யானம். (எப்பேர் மற்றப்பேர்) எங்களாழ்வார்பாடே ஆயர்தேவு சென்று நாவற்பழம் வேண்ட, "நீயார்" என்று அவர்கேட்க, "ஜீயர்மகனை ஆயர் தேவு" என்ன, ஜீயரைக்கண்டு "உம்முடைய பிள்ளை எங்களைக் குடியிருக்க வொட்டுகிறிலன்" என்றார்,

11. பகவத்விஷயம் முதல் ஶ்ரிய:பதி-ப்ரமாணத்திரட்டு.— விஷ்ணுபுராணே ப்ரத$_2$மேம்ஶே ஏகோநவிம்ஶே அத்$_4$யாயே ப்ரஹ்லாத$_3$சரிதே — "தத் கர்ம யந்ந ப$_3$ந்த$_4$ாய ஸா வித்$_3$யா யா விமுக்தயே | ஆயாஸாய அபரம் கர்ம வித்யாந்யா ஶில்பநைபுணம் |" [1-19-41] அஸ்யார்த்த$_2$: ஸ்ரீவிஷ்ணுசித்தார்யை ரபி$_4$ஹித: — "கா தர்ஹி வித்$_3$யா? இத்யத்ராஹ (தத கர்ம) இதி| யா வித்$_3$யா முக்தயே ஸா வித்$_3$யா | அர்த்த$_2$ஶாஸ்த்ராதி$_3$வித்$_3$யா ஶில்பநைபுணம் | தத் கர்ம யந்ந ப$_3$ந்த$_4$ாய — அபிது வித்$_3$யாங்க$_3$த்வேந மோக்ஷாய | அபரம் கர்ம— ப்ரவ்ருத்திகர்ம" இதி || [விஷ்ணு புராணத்தில் முதல் அம்சம் பத்தொன்பதாம் அத்தியாயத்தில் ப்ரஹ்லாத சரித்திரத்தில் "தத்கர்ம" என்று தொடங்கும் ஶ்லோகம் உள்ளது. இதற்குப்பொருள் ஸ்ரீவிஷ்ணு சித்தார்யரால் (எங்களாழ்வானால்) "அப்படியானால் வித்யை எது? என்னும் கேள்வி எழக் கூறுகிறார் (தத் கர்ம) என்று தொடங்கும் ஶ்லோகத்தை, எந்த வித்$_3$யை மோக்ஷத்தின் பொருட்டு ஆகிறதோ அதுவே வித்$_3$யை; அர்த்த$_2$ஶாஸ்த்ரம் முதலான வித்$_3$யை கைத்தொழில் திறமைபோன்றது. எது ஸம்ஸார ப$_3$ந்த$_4$த்தின் பொருட்டு அமையாமல், வித்$_3$யைக்கு அங்க$_3$மாயிருந்துகொண்டு மோக்ஷத்தின்பொருட்டு ஆகிறதோ அதுவே கர்மமாகும், மற்ற கர்மம்-உலகியல் செயல்கள் (வெறும் தே$_3$ஹ ஶ்ரமத்தின் பொருட்டே அமைகின்றன.)" என்று அருளிச் செய்யப்பட்டது.

12. பகவத்விஷயம் ஈடு 2-9-9 ப்ரமாணத்திரட்டு, விஷ்ணு புராணம் இரண்டாம் அம்சப் பனிரண்டாம் அத்தியாயத்தில் 44, 45, 46 வது ஸ்லோகங்களும் அவற்றுக்கு எங்களாழ்வான் வ்யாக்யானமும் காட்டப்பட்டுள்ளது.

13 பகவத்விஷயம் ஈடு 3-1-5 அரும்பதவுரைகள். — விஷ்ணுபுராணம் (5-1-50) ஸ்லோகத்திற்கு எங்களாழ்வான் வ்யாக்யானம் எடுக்கப்பட்டுள்ளது.

14, பகவத்விஷயம் ஈடு 3-1-8 ப்ரமாணத்திரட்டு. விஷ்ணு புராணம் (1-2-1) ஸ்லோகத்திற்கு எங்களாழ்வான் வ்யாக்யானம் எடுக்கப்பட்டுள்ளது.

15. பகவத்விஷயம் ஈடு 3-2-7 ப்ரமாணத்திரட்டு விஷ்ணு புராணம் (6—5—87) ஸ்லோகமும் (1—19—40, 41) ஸ்லோகங்களும் அவற்றுக்கு எங்களாழ்வான் வ்யாக்யானமும் எடுக்கப்பட்டுள்ளன.

16. பகவத்விஷயம் 3-3-7 ப்ரமாணத்திரட்டு. விஷ்ணு புராணம் (6—5—84) ஸ்லோகமும் அதற்கு எங்களாழ்வான் வ்யாக்யானமும் எடுக்கப்பட்டுள்ளன,

17. பகவத்விஷயம் 3—6 ப்ரவேசம் ப்ரமாணத்திரட்டு & ஜீயர் அரும்பதவுரை, விஷ்ணுபுராணம் (5-17-4) ஸ்லோகமும் அதற்கு எங்களாழ்வான் வ்யாக்யானமும் எடுக்கப்பட்டுள்ளன.

18. பகவத்விஷயம் 5-6-11 ஈட்டில் ''விஷ்ணோ: ஸ்ரீ'' என்றதின் அரும்பதவுரைகள். ''நித்யைவைஷா ஜக₃ந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ| யதா₂ ஸர்வக₃தோ விஷ்ணுஸ்ததை₂வேயம் த்₃விஜோத்தம ||'' இதி ப்ரத₂மேऽம்ஸே அஷ்டமே, ''(யதே₂தி) ஸர்வக₃தோ விஷ்ணு யதா₂—யத் ஸ்வபா₄வ: இயமபி ததா₂-தத்ஸ்வபா₄வேதி விஷ்ணோ: ஸர்வக₃தத்வ ஸத்யஜ்ஞாநாதி₃ ஸ்வரூபகல்யாண கு₃ணதீ₃நாம் அதிதே₃ஶ: || அத₂வா ப₄க₃வாந் விபு₄த்வேந ஸர்வக₃த:, அஸ்யாஸ்து ஶக்திவஶாத், அணுத்வேऽபி தத்ர தத்ர ஸந்நித₄நாத் ஸர்வக₃தத்வம் உக்தம்'' (இதி ஸ்ரீவிஷ்ணுசித்தீயம்)

[ 'நித்யைவைஷா '...... த்₃விஜோத்தம'' என்னும் ஸ்லோகம் விஷ்ணுபுராணத்தில் முதல் அம்சத்தில் எட்டாம் அத்தியாயத்தில் 17-வது ஸ்லோகம். இதன் பொருள் ''(யதே₂தி) எங்கும் வியாபித்திருக்கும் விஷ்ணு யதா₂—எத்தகையவனோ, இயம் ச—இவ

ளும், ததா₂—அத்தகையவளே என்று விஷ்ணுவின் (விக்₃ரஹத்தால்) எங்கும் வியாபித்திருக்கும் தன்மையும், ஸத்யா, ஜ்ஞாநம் முதலான ஸ்வரூபகல்யாணகு₃ணங்கள் முதலியவையும் இவளுக்கும் உண்டென்று அதிதே₃ஶம் செய்யப்படுகிறது. அப்படியன்றிக்கே, எம்பெருமான் இயல்பாகவே விபு₄வாயிருந்து கொண்டு, ஸ்வரூபத்தால், எங்கும் வியாபித்திருக்கிறான். இவளுக்கோவெனில், அணுவாயிருந்தபோதிலும், (அக₄டிதக₄டநா) ஶக்தியினாலே பகவானிருக்கும் இடமனைத்திலும் இருக்கையால் ஸர்வவ்யாபித்வம் சொல்லப்பட்டது'' என்று விஷ்ணுசித்தரால் (எங்களாழ்வானால்) அருளிச்செய்யப்பட்டது.

19. வாதிகேஸரி ஜீயர் அருளிய ரஹஸ்யத்ரயகாரிகாவளீ ஶ்லோகம் 45 — 49

நநு, ஶ்ரியோ விபு₄த்வேந ஸ்ரீஶஸ்ய ச ததா₂த்வத: ।
ஸர்வப்ரதே₃ஶஸம்ப₃ந்தே₄ா நித்யயோக₃ இதீஷ்யதே ॥
'யதா₂ ஸர்வக₃தோ விஷ்ணு: ததை₂வேயம் த்₃விஜோத்தம ।
'ஸர்வபூ₄தஸ்தி₂தா' இத்யாதே₃: ஸ்ரீவிபு₄த்வே ப்ரமாணதா ॥
இதி சேத் தந்ந, தத்₃வாக்யாத் அவிபு₄த்வேந ச ஶ்ரிய: ।
'ஶக்த்யா ஸர்வத்ர ஸாந்நித்₄யாத் ஸர்வக₃த்வமுதீ₃ரிதம் ॥
இதி ஸ்ரீவிஷ்ணுசித்தார்யைர் வ்யாக்₂யாநாத் து ந ஸாத₄நம் ।
அந்யதா₂ ஸர்வக₃த்வஸ்ய ஜீவேऽபி ப்ரதிபாத₃நாத் ॥
'நித்ய: ஸர்வக₃த: ஸ்தா₂ணு:' இத்யாதே₃ஸ் தத்ர தத்₃ப₄வேத் ।
நேஷ்டாபத்திஶ்ச ராத்₃தா₄ந்தவிரோதா₄ऽணுத்வமாநத: ॥

[ஆக்ஷேபம்: பிராட்டியும், எம்பெருமானும் எங்கும் வியாபித்திருக்கும் விபு₄க்களாகையால், இங்கு சொல்லப்படும் நித்யயோக₃ம் எல்லாவிடங்களிலும் இருவரும் சேர்ந்திருப்பதைக்காட்டுமே; 'யதா₂ஸர்வக₃த:' என்று தொடங்கும் ஸ்ரீவிஷ்ணு புராண(9-8-17) ஶ்லோகமும், ''ஸர்வபூ₄தஸ்தி₂தா'' என்னும் ஸ்ரீஸஹஸ்ரநாமமும் பிராட்டியின் விபு₄த்வத்தில் ப்ரமாணமன்றோ. ஸமாதா₄நம்: இது சரியல்ல; அந்த விஷ்ணு புராண ஶ்லோகத்தை விளக்கும் போது ''ஶக்தியினால் இவள் எங்கும் வியாபித்திருக்கையால் இவளுக்கு விபு₄த்வம் கூறப்பட்டது'' என்று எங்களாழ்வான் அருளிச்செய்கையாலே, இந்த வாக்யங்கள் பிராட்டியின் ஸ்வரூப விபு₄த்வத்துக்கு ப்ரமாணமாக மாட்டா. இல்லாவிடில், 'நித்ய: ஸர்வக₃த: ஸ்தா₂ணு:' முதலான ப்ரமாணங்களில் ஜீவனும் எங்கும் வியாபித்திருப்பவன் என்று சொல்லப்படுகையால் ஜீவனையும் விபு₄வென்று கொள்ளவேண்டிவரும். ஜீவன் 'அணு' என்று ப்ரமாணங்கள் கூறுகையால், ஜீவனை 'விபு₄' என்று இசைவது ஸித்₃தா₄ந்த விரோத₄மாகும்.]

# எழுபத்து நாலு ஸிம்ஹாஸநாதிபதிகள்

ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : எம்பெருமானார் திருவடிகளிலே அச்ரயித்த முதலிகளான எழுபத்து நாலாசார்யர்களாமிரென்னில் .— ஆளவந்தார் குமாரர் சொட்டைநம்பி. அவர் குமாரர் என்னுச்சான். அவர் குமாரர் பிள்ளையப்பன் 1, பெரிய நம்பி குமாரர் புண்டரீகர் 2, திருக்கோட்டியூர் நம்பி குமாரர் தெற்காழ்வான் 3, திருமலையாண்டான் குமாரர் சுந்தரத்தோளுடையார் 4, பெரிய திருமலைநம்பிகுமாரர் ராமாநுஜனும் பிள்ளை திருமலைநம்பியும் 5, கூரத்தாழ்வான், குமாரர் பட்டரும் சீராமப்பிள்ளையும் 6, முதலியாண்டான், அவர் குமாரர் கந்தாடையாண்டான், நடுவிலாழ்வான் 8, கோமடத்தாழ்வான் 9, திருக்கோவலூராழ்வான் 10, திருமோகூராழ்வான், பிள்ளைப்பிள்ளையாழ்வான், நடாதூராழ்வான், எங்களாழ்வான், அநந்தாழ்வான் 15, மிளகாழ்வான், நெய்யுண்டாழ்வான், சேட்டலூர்ச்சிறியாழ்வான், வேதாந்தியாழ்வான், கோயிலாழ்வான் 20, உக்கலாழ்வான், அரணபுரத்தாழ்வான், எம்பார், கிடாம்பியாச்சான், கணியனூர்ச்சிறியாச்சான் 25, ஈச்சம்பாடியாச்சான், கொங்கிலாச்சான், ஈச்சம்பாடிசீயர், திருமலைநல்லான், சட்டம்பள்ளிச்சீயர் 30, திருவெள்ளறைச்சீயர், ஆட்கொண்டவில்லிசீயர், திருநகரிப்பிள்ளான், காராஞ்சிஸோமயாஜியார், அலங்கார வேங்கடவர் 35, நம்பிகருந்தேவர், சிறுப்புள்ளிதேவராஜபட்டர், பிள்ளையுறந்தையுடையார், திருக்குருகைப்பிரான்பிள்ளான், பெரியகோயில்வள்ளலார் 40, திருக்கண்ணபுரத்தரையர், ஆசூரிப்பெருமாள், முனிப்பெருமாள் அம்மங்கிப்பெருமாள், மாருதிப்பெரியாண்டான் 45, மாறொன்றில்லாமாருதிச் சிறியாண்டான், ஸோமாசியாண்டான், சீயராண்டான், ஈச்வராண்டான், ஈயுண்ணிப் பிள்ளையாண்டான் 50, பெரியாண்டான், சிறியாண்டான், குறிஞ்சியூர்ச்சிறியாண்டான், அம்மங்கியாண்டான், ஆளவந்தாராண்டான் 55, அருளாளப்பெருமாளெம்பெருமானார், தொண்டனூர்நம்பி, மருதூர்நம்பி, மழுவூர் நம்பி, திருக்குறுங்குடி நம்பி 60, குரவைநம்பி, முடும்பைநம்பி, வடுகநம்பி, வங்கிப்புரத்து நம்பி, ஸ்ரீபராங்குசநம்பி 65, அம்மங்கியம்மாள், பருத்திக் கொல்லையம்மாள், உக்கலம்மாள், சொட்டையம்மாள், முடும்பையம்மாள் 70, கொமாண்டூர்ப்பிள்ளை, கொமாண்டூரிளையவில்லி, கிடாம்பிப்பெருமாள், ஆற்காட்டுப்பிள்ளான் 74.

இவர்களில் ப்ரதான சிஷ்யர்களின் வைபவம் இந்த பாகத்தில் 208-ம் பக்கம் ஈருக வெளியிடப்பட்டுள்ளது. பட்டர் போன்ற முக்கியமானவர்கள் வைபவம் மூன்றும்பாகத்தில் வெளிவரும். மற்றவர்களைப்பற்றிய பூர்வ க்ரந்தங்களில் குறிப்புகள் அறிந்த வரையில் இங்கு கொடுக்கப்படுகின்றன.

## I. சொட்டை நம்பி

**1. பெரிய திருமுடியடைவு:** சொட்டை நம்பிக்குத் திருவவதார ஸ்தலம் சோழ தேசத்தில் வீரநாராயணபுரம். திருத்தகப்பனர் ஆளவந்தார். திருத்தமயனர் திருவரங்கப்பெருமாளரையர். குலம் வடமாள். குடி சொட்டை, குமாரர் என்னுச்சான். அவர் குமாரர் பிள்ளையப்பன். இவர்களுக்கு ஆசார்யர் எம்பெருமானர். இருப்பிடம் கோயில். இவர் நம்பெருமாளுக்கு விண்ணப்பஞ் செய்வார்.

**2. தேசிகர் அருளிய குருபரம்பரா ஸாரம்:** ஆளவந்தார் பிள்ளை சொட்டைநம்பி.

**3. நாச்சியார் திருமொழி [11-5]:** ஆளவந்தார் மகனர் சொட்டை நம்பி, ஓரளவிலே திருக்கோட்டியூர் நம்பியை நெகிழ ஒரு வார்த்தை சொன்னராய், 'நீ கடக்க வர்த்தி' என்றருளிச் செய்ய, அவரும் படைவீட்டிலே ராஜஸேவை பண்ணித் திரிந்தாராய், பின்பு இவருடைய சரம ஸமயத்திலே இவருடைய அத்யவஸாயமறிய வேணுமென்று, "நீ நினைத்துக்கிடக்கிறதென்?" என்று கேட்டார்களாய்; "ஆளவந்தார் ஸ்ரீபாதத்தின் ஸம்பந்தம் பரமபத ப்ராப்தி பண்ணித்தந்தல்லது விடாது; அங்கே போனல் ஸ்ரீ வைகுண்டநாதன் முகம் நம்பெருமாள் திருமுகமண்டலம்போலே குளிர்ந்திருந்ததில்லையாகில் முறிச்சுக்கொண்டு வருவதாக நினைத்திருந்தேன்" என்றாராம். "நச புநராவர்த்ததே" என்கிற மர்யாதையை இடறிப் போரவேணுமே" என்றாராம்.

**4. திருவிருத்தம் [44]:** (உருவும்) ஆளவந்தார் மகனர் சொட்டைநம்பி அந்திமதசையிலே முதலிகளடையப்புக்கிருந்து 'நீர் நினைத்துக்கிடக்கிறதென்?' என்ன, ஸ்ரீவைகுண்டத்திலே சென்றால் நம்பெருமாளுடைய குளிர்ந்த முகம்போலே ஸ்ரீவைகுண்டநாதன் முகம் குளிர்ந்திருந்ததில்லையாகில் முறித்துக்கொண்டு இங்கேற ஓடிப்போருமித்தனையென்று கிடக்கிறேன்" என்றார்.

5. பகவத் விஷயம் [4-5-7] (தன்றனக்கின்றிநின்றுணே) எம்பெருமானுர் தெற்கே யெழுந்தருளுகிற நாளிலே ஆளவந்தார் மகனுர் சொட்டைநம்பி ப்ரஸாதித்த வார்த்தை : ''தன்றனக்கென்றது –தானுனதனக்கென்றபடி. ஒருவகைக்கொப்பின்றிக்கேயிருக்கிறது பரத்வத்திலல்ல, 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்கிற படியே-அவதரித்து மனிச்சேறிட்டுக்கொண்டு நிற்கிற நிலேயிலே'' என்ருராம்.

## 2. புண்டரீகாக்ஷர் (புண்டரீகர்)

**பெரிய திருமுடியடைவு :** புண்ட₃ரீகாக்ஷருக்குத் திருவவதார ஸ்த₂லம் நம்பெருமாள் கோயில். திருத்தகப்பனுர் பெரியநம்பி. திருநக்ஷத்ரம் ஆனிமாஸம் உத்தராட₄ம். திருத்தமக்கையார் அத்துழாய். குலம் ப்₃ருஹச்சரணம். குடி சாத்தனுார். கோ₃த்ரம் ப₄ாரத்வாஜம். ஆசார்யர் எம்பெருமானுர், திருவாராதனம் அழகிய சிங்கர். இருப்பிடம் கோயில்.

**இவருக்குத் தனியன்**

**வந்தே₃ ஸ்ரீபுண்ட₃ரீகாக்ஷம் மஹாபூர்ண கு₃ரோஸ் ஸுதம் |**
**ப₄ாரத்₃வாஜகுலோத்₃பூ₄தம் யதிநாத₂பத₃ாஶ்ரிதம் ||**

[பாரத்வாஜ குலத்தில் உதித்தவராய், பெரியநம்பிகளின் திருக்குமாரராய், எம்பெருமானுரை ஆஶ்ரயித்தவரான ஸ்ரீபுண்டரீகாக்ஷரை வணங்குகிறேன்]

## 3. தெற்காழ்வான்

**1. பெரியதிருமுடியடைவு :** தெற்காழ்வானுக்குத் திருவவதார ஸ்த₂லம் பாண்டிய மண்டலத்தில் திருக்கோட்டியூர். திருநக்ஷத்ரம் ஆடி-மீ ஶ்ரவணம், திருத்தகப்பனுர் திருக்கோட்டியூர் நம்பி, திருத்தமக்கையார் தேவகிப்பிராட்டியார். குலம் பூர்வசிகை. குடி திருக்கோட்டியூர். காஶ்யபகோ₃த்ரம். த₃ாஸ்யநாமம் நாராயண த₃ாஸர். ஆசார்யர் எம்பெருமானுர். இருப்பிடம் கோயில்.

**இவர்க்குத் தனியன்**

**ஸ்ரீகோ₃ஷ்ட₂பூர்ண ஸத்புத்ரம் யதிராஜ பத₃ாஶ்ரிதம் |**
**காஶ்யபாந்வய ஸம்பூ₄தம் நாராயண கு₃ரும் ப₄ஜே ||**

[திருக்கோட்டியூர் நம்பியின் நல்ல பிள்ளேயாய், யதிராஜரின் திருவடிகளே அடைந்தவராய், காஶ்யப கோத்ரத்தில் உதித்தவரான நாராயணன் என்னும் திருநாமமுள்ள தெற்காழ்வானே ஆஶ்ரயிக்கிறேன்.]

2. அமலனாதிபிரான் [1-30] (கையினார் சுரிசங்கனலாழியர்)— பட்டர் திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருக்கிற காலத்திலே ஒரு விசேஷ திவஸத்தினன்று கோளரியாழ்வானைப் பார்த்து தெற்காழ்வார் சொன்ன வார்த்தையை ஸ்மரிப்பது.

3. பகவத் விஷயம் [1-42] திருக்கோட்டியூரிலே தெற்காழ்வான் கோளரியாழ்வானுக்குத் தீர்த்தத் துறையிலே சொன்ன வார்த்தை: "ஒரு முழுக்காலும் இரண்டு முழுக்காலும் போகாதுகாண்-தெற்காழ்வார் கையிற்றிருவாழியாலே வினையை அறுத்துக் கொண்டு போகிலத்தனையொழிய, ஒன்றிரண்டு முழுக்கால் போகாதுகாண் நான் பண்ணின பாபம்".

4. சுந்தரத்தோளுடையான் (பெரியாண்டான்)

1. பெரிய திருமுடியடைவு: சுந்தரத்தோளுடையானுக்குத் திருவவதார ஸ்த₂லம் அழகர் திருமலை. திருநக்ஷத்ரம் சித்திரை மாஸம் சித்திரை. திருத்தகப்பனார் திருமாலையாண்டான். திருவாராத₄னம் சுந்தரத்தோளுடையான். ஆசார்யரெம்பெருமானார். இருப்பிடம் அழகர் திருமலை.

இவருக்குத் தனியன்

**மாலாத₄ரகு₃ரோ: புத்ரம் ஸௌந்த₃ர்யபு₄ஜ தே₃ஶிகம் |**
**ராமானுஜார்ய ஸச்சி₂ஷ்யம் வந்தே₃ வரக₄ருணாநிதி₄ம் ||**

[திருமாலையாண்டானின் திருக்குமாரராய், எம்பெருமானாரின் நல்ல சீடராய், சிறந்த கருணைக்கு இருப்பிடமான சுந்தரத்தோளுடையார் என்னும் ஆசார்யரை வணங்குகிறேன்.]

2. ப்ரமேயரத்னம். "ஆஶ்ரயண தசையில் ஈஶ்வரனுக்கு அதி₄காரி ரக்ஷ்யன்; அதி₄காரி பூர்த்தியில் ஈஶ்வரன்தான் குழைச்சரக்கு (ரக்ஷ்யப்பொருள்)" என்று பெரியாண்டான் அருளிச்செயல்.

3. ப்ரமேயரத்னம். "மருகாந்தாரத்தில் தண்ணீர்ப்பந்தலோபாதி ஸம்ஸாரத்தில் வைஷ்ணவஸஹவாஸம்" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

4. ப்ரமேயரத்னம். பெரியாண்டான் திருத்தோரணம் தொடங்கி அழகர் திருவடிகளளறுதியாகப் பத்தெட்டு தி₃வஸம் த₃ண்ட₃னிட்டுக் கிடப்பர். ராத்ரி மனுஷ்யர் போகும்போது

"ஆண்டான் கிடக்கிருரோ, பசுகிடக்கிறதோ, வழிபார்த்துப் போங்கோள்" என்னும்படியிறே சலியாமல் ப$_4$க வத்$_3$நுப$_4$வம் பண்ணும்படி.

**5. ப்ரமேயரத்னம்.** "இதரோபாய நிஷ்டஉர்களுடைய தீர்த்த$_2$ ப்ரஸாத$_3$ஸ்த்$_3$யங்கீ$_3$காரமும் ஜ்ஞாநமாந்த்$_3$யஹேது; ப$_4$க$_3$வது$_3$பாஸநநிஷ்டஉருடைய தீர்த்த$_2$ப்ரஸாத$_3$ஸ்த்$_3$யங்கீ$_3$காரமும் ஜ்ஞாநமாந்த்$_3$யஹேது" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

**6. ப்ரமேயரத்னம்.** "ஶரணாகதியும், திருவாய்மொழியுமாக இரண்டுமிறே த்$_3$வயம் என்று போருகிறது" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

**7. ப்ரமேயரத்னம்.** "கருந்துறையில் உபதே$_3$ஶிக்கிற ஆசார்யன் திருவிளையாட்டமாம்படி (விளையாடுமிடமாம்படி), திருவாழிக்கல் நாட்டினுப்போதி, இவனைத் திருத்துகிற ஆசார்யன திருவிளையாட்டத்தைத் திருநந்த$_3$வனமாக்கி அதில் உண்டான திருப்படித் தாமத்தை (புஷ்பங்களை) ப$_4$க$_3$வதே$_3$கபோ$_4$க$_3$மாம்படி பண்ணுகிறவனுப்போதி" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

**8. ப்ரமேயரத்னம்.** பெரியாண்டான் ப$_4$ாஷ்யகாரர் ஸ்ரீபாத$_3$த்திலே ஆஶ்ரயித்து எம்பார் பக்கலிலே ஜ்ஞாநோபஜீவநம் பண்ணினுர்.

**9. ப்ரமேயரத்னம்.** "வ்யவஸாயாத்மக ஜ்ஞாந விஶேஷம் ப்ரபத்தி" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

**10. ப்ரமேயரத்னம்.** "ஒரு கிணற்றிலே விழுந்தானொருத்தனை இரண்டு பேராக எடுக்குமோபாதியிறே ப$_4$ாஷ்யகாரரும் எம்பாருமாக என்னை உத்$_3$த$_4$ரித்தபடி" என்று பெரியாண்டான் அருளிச்செய்தார்.

**11. ப்ரமேயரத்னம்.** "இதில் (பெருமாளும் பிராட்டியுமாகிற மிது$_2$னத்தில்) ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்ற நினைத்தாலுகில் மாத்ருஹீநனுன புத்ரனுப்போதி, பித்ருஹீநனுன புத்ரனுபோதி அநாத$_2$னுயுமிருக்கும். இருவரும் கூடினபோதிறே ஸ்ரீமத்புத்ரனுவது" என்று பெரியாண்டான் அருளிச்செய்தார்.

**12. ப்ரமேயரத்னம்.** அழகர் திருவோலக்கத்திலே பிள்ளையழகப் பெருமாள் வந்து புகுந்து பெரியாண்டானைப் பார்த்து 'பரமபத$_2$மிருக்கும்படியென்?' என்று கேட்க, 'இப்படியேயிருக்கும்'

என்ன, 'ஆனால் இத்தைவிட்டு அங்கே போவானென்?' என்ன, 'இங்கிருந்தால் முதுகு கடுக்கும்; அங்குப்-போனால் அது செய்யாது' என்று அருளிச்செய்தார்.

**13. ப்ரமேயரத்னம்.** ப₄க₃வத்₃கு₃ணாநுப₄வத்துக்குப் படிமா (எடுத்துக்காட்டாயிருப்பவர்கள்) பெரியாண்டானும், எம்பாரும்.

**14. ப்ரமேயரத்னம்.** "ப₄க்திக்கு ஆயாஸகௌ₃ரவம் உண்டாகிறவோபாதி ப்ரபத்திக்கும் விஸ்வாஸகௌ₃ரவம் உண்டு. பித்தோபஹதனுக்கு ரஸ்யபதா₃ர்த்த₂ம் திக்தமாமோபாதி (கசப்பது போலே) பா₄க்₃யஹீனர்க்கு ப்ரபத்தியில் விஸ்வாஸகௌ₃ரவம் பிறவாது" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

## 5. பிள்ளை திருமலை நம்பி

**பெரியதிருமுடியடைவு:** பிள்ளை திருமலை நம்பிக்குத் திருவவதார ஸ்த₂லம் திருமலை. திருநக்ஷத்ரம் வைகாசி விசாகம். திருத்தகப்பனார் பெரிய திருமலை நம்பி. குலம் வடமாள், குடி திருமலை. ஆசார்யர் எம்பெருமானார். திருவாராத₄னம் மலைகுனிய நின்றபெருமாள். திருத்தாயார் அலர்மேல் மங்கைநாச்சியார், திருமங்கைநாயகி இரண்டு திருநாமம். திருவவதாரம் திருவேங்கடமுடையான் வரப்ரஸாத₃த்தினாலே. இருப்பிடம் திருமலை.

இவர்க்குத் தனியன்

ஸ்ரீசைலபூர்ண ஸத்புத்ரம் ஸ்ரீலக்ஷ்மணபதா₃ஸ்ரிதம் ।
ஸ்ரீசைலாந்வய ஸம்பூ₄தம் ஸ்ரீசைலார்யமஹம் ப₄ஜே ॥

[பெரிய திருமலை நம்பியின் நல்ல பிள்ளையாய், இளையாழ்வாரான உடையவரின் திருவடிகளை ஆஸ்ரயித்தவராய், திருமலைக்குடியில் அவதரித்தவரான பிள்ளை திருமலை நம்பியை ஆஸ்ரயிக்கிறேன்.]

## 6. கந்தாடை ஆண்டான்

**1. ஆறாயிரப்படி குருபரம்பரை :** (1) ஆசார்ய வைபவ மஞ்ஜரி முதல் பாகம் பக்கம் 308, 309 இரண்டு பாராக்கள் காண்க. (2) ஷ முதல் பாகம் 327 to 331 பக்கங்களில் உள்ள பாராக்கள் காண்க.

**2. பெரிய திருமுடியடைவு :** ஸத்ருக்₄நாம்ஸஸம்பூ₄தரான கந்தாடையாண்டானுக்குத் திருவவதார ஸ்த₂லம் கோயில். திருநக்ஷத்ரம் ஸர்வத₄ாரி வருஷம் மாசி மாஸம் புனர்பூசம். திருத்தகப்பனார்

முதலியாண்டான். ஆசார்யர் எம்பெருமானுர். குமாரர் கந்தாடை தோழப்பர். திருநாமங்கள் ராமாநுஜதாஸர், கந்தாடையாண்டான். இவருக்கு வேதசாஸ்த்ர ப்ரபந்த ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்கள் ஸாதித்தவர் திருநதகப்பனுர். ஸகல ரஹஸ்யார்த்தங்கள் ஆட்கொண்ட வில்லி ஜீயர். இருப்பிடம் கோயில். இவர் செய்தருளின கைங்கர்யம் கோயிலிலும், ஸ்ரீபெரும்பூதூரிலும் எம்பெருமானுரை விக்ரஹமாக ஏறியருளப் பண்ணினுர். இவர் சிஷ்யர் கந்தாடை தோழப்பர் முதலானவர்கள். இவர் நூற்றைந்து திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார்.

தனியன்

ஸ்வாவதாரஸ்தலேऽர்ச்சாபூத் ஸ்ரீரங்கே ச யதீஸ்வர: ।
யந்முதே தம் குணாவாஸம் ராமாநுஜகுரும் பஜே ॥

[தம்முடைய அவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரிலும், ஸ்ரீரங்கத்திலும் எவருடைய உகப்புக்காக யதிராஜர் அர்ச்சாவதாரமாக எழுந்தருளினரோ, குணங்களுக்கு இருப்பிடமான அந்த ராமாநுஜார்யர் என்னும் கந்தாடையாண்டானிடம் பக்தி செய்கிறேன்.]

3. வார்த்தாமாலை : இருநூற்று முப்பத்தஞ்சாம் வார்த்தை. கந்தாடையாண்டான் அருளிச்செய்த வார்த்தை : ஸ்ரீவைஷ்ணவன் ஸம்ஸார மண்டலத்திலே இருக்கும் இருப்பை, பிராட்டி ராவண பவநத்திலேயிருந்து காட்டினுள்; எங்ஙனேயென்னில், (1) a பிராட்டி இளையபெருமாள் திறத்தில் அருளிச்செய்த வார்த்தை பெருமாள் திருவடிகளை அகற்றினுற்போலே இவனுக்குத் ததீயாபராதம் எம்பெருமான் திருவடிகளை அகற்றும்; (2) பிராட்டிக்கு ராவண ஸ்பர்ஶம்போலே இவனுக்கு தேஹஸம்பந்தம்; (3) பிராட்டிக்கு b தர்ஜந பர்த்ஸநாதிகளைப் பண்ணின ராக்ஷஸிகள் ஸஹவாஸம் போலே இவனுக்குக் களத்ரபுத்ராதி ஸஹவாஸம்; (4) பிராட்டிக்கு மாரீசதர்ஶநம்போலே இவனுக்கு விஷயப்ராவண்யம்; பிராட்டிக்கு ராவண தர்ஶநம்போலே இவனுக்கு இந்த்ரியங்கள்; (5) பிராட்டிக்குத் திருவடி c தோற்றரவுபோலே இவனுக்கு ஆசார்யன் தோற்றரவு; (6) பிராட்டிக்குத் திருவடி ராமகுணங்களைச் சொன்னுற்போலே இவனுக்கு ஆழ்வார்களருளிச்செயல்; (7) பிராட்டிக்குத் திருவாழி மோதிரத்தின் வரலாறு சொன்னுற்போலே இவனுக்கு ஆசார்யன் அருளிச்செய்த குருபரம்பரை; (8) பிராட்டிக்குத் திருவாழி மோதிரம் கொடுத்தாற்போலே இவனுக்கு ஆசார்யன் அருளிச்செய்த திருமந்த்ரம்; (9)

பிராட்டிக்கு a விபீ$_4$ஷணாழ்வான் பெண்பிள்ளைகள் உசாத்துணையா
னாற்போலே இவனுக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் உசாத்துணை; (10)
பிராட்டிக்கு விரோதி$_4$யான ராவணாதி$_3$களை நிரஸித்துப் பெருமாள்
பிராட்டியை எழுந்தருளுவித்துக்கொண்டு போனாற்போலே இவ
னுக்கு விரோதி$_4$யான ப்ரக்ருதி ஸம்ப$_3$ந்த$_4$த்தை அறுத்து எம்பெரு
மான் பரமபத$_3$த்தேறக்கொண்டு போகை; c' இப்பத்து வார்த்தை
யையும் அநுஷ்டா$_2$நபர்யந்தமாகவுடைய ஸ்ரீவைஷ்ணவன் ஶரீரத்
தளவும் நிரபாயமாக இருந்து எம்பெருமான் திருவடி சேரப்பெறும்.

[விவரணம்: a மாரீசனாலே பெருமான் பிரிக்கப்பட்டபோது பிராட்டி இளைய பெருமாளைக் குறித்துச் சொன்ன கடுஞ்சொல் பெருமாளைவிட்டு அவளை அகற்றினதுபோலே, ஜீவனுக்கும் பா$_4$க$_3$வதாபசாரம் எம்பெருமானைவிட்டு அகற்றிவிடும். b தர்ஜனப$_4$ர்த்ஸனாதி$_3$களை—மிரட்டுதல் ப$_4$யமுறுத்தல் முதலானவைகளை. c தோற்றரவு-காட்சி. d இந்தப் பத்துவார்த்தைகளையும் அறிவதோடல்லாமல் அநுஷ்டி$_2$க்கவும் வல்ல ஸ்ரீவைஷ்ணவன் உயிரோடிருக்கும் வரையில் யாதொரு ஆபத்துமில்லாமலிருந்து எம்பெருமான் திருவடிகளைப் பெறுவான் என்பது உறுதி]

4. வார்த்தாமாலை: இருநூற்றைம்பதாம் வார்த்தை: கந்தாடையாண்டான் வார்த்தை; ப்ரபத்தி நிஷ்டர் மூவர்—ஶப்$_3$த$_3$ நிஷ்டரும், அர்த்த$_2$நிஷ்டரும், அபி$_4$மாநநிஷ்டரும்

[விவரணம்: ப்ரபத்தி நிஷ்டர் மூவகைப்படுவர். (1) த்$_3$வய ஶப்$_3$த$_3$ாநுஸந்தா$_4$னத்தில் ஊன்றியிருப்பவர்கள். (2) த்$_3$வயத்தின் அர்த்த$_2$த்தில் ஊன்றியிருப்பவர்கள். (3) த்$_3$வயத்தின் அர்த்த$_2$த்தில் ஊன்றியிருக்கும் ஒரு பா$_4$க$_3$வதனின் அபி$_4$மானமே உத்தாரகம் என்றிருப்பவர்கள். இவர்கள் மேன்மேலே சிறந்தவர்கள்]

5. வார்த்தாமாலை: இருநூற்றெண்பத்தஞ்சாம் வார்த்தை: a த்ரிபு$_1$வநவீரதே$_4$வன் ப$_4$ட்டருடைய a$_2$ ஆபி$_4$ஜாத்யங்கண்டு, 'நீர் நம்பக்கல் ஒருநாள் வந்து போகீர்' என்று அபேக்ஷிக்க, a$_3$ 'பள்ளிகொண்டருளுகிறவர் கைமறுத்தால் உன்னுடைய வாசலொழிய வேறு போக்குண்டோ' என்றருளினார்; a$_4$ இவ்வர்த்த$_2$த்திலே கந்தாடையாண்டான் பெரிய ஜீயர்க்கு 'ந்யஸ்த ப$_4$ரனானவன் உடுத்த புடவைக்கு, ப்ரதிகூலர் பக்கலிலே கஞ்சியரிசி (சில) வேண்டிநிற்கையாவது படிபெற்றுண்ணும் பதிவ்ரதை, மேல் அழிவுக்குப் பரப$_4$ர்த்ருஸ்வீகாரம் பண்ணினை மாத்ரம்'' என்றருளிச் செய்தார்;

b ஸாத்4யஸாத4நபு3த்3த்4யா கைங்கர்யமாவது - பணிகொள்ளக் கூலியின்றிக்கே பணிசெய்து கூலி வேண்டுகை; இவ்வர்த்த2த்தில் கந்தாடையாண்டான், கோ3பால ஜீயர்க்கு அருளிச்செய்த வார்த்தை; கைங்கர்யம் பண்ணி ப2லம் வேண்டுகையாவது? நாடும் ஊருமறிய ஒருவனுக்குக் கைகொடுத்த ஸ்த்ரீயானவள் தன் ப4ர்த்தாவோடே ராத்ரி ஸம்ஶ்லேஷித்து விடிந்தவாறே அதுக்குக் கூலி தாவென்று அவனை மடிபிடித்து வளைத்த மாத்ரம்; b2 அது வென்? கைங்கர்யம் பண்ணுமவனுக்கு ஜீவிக்கவேண்டாவோ? என்ன; கொட்டையிட்டுப் பணிசெய்யாநின்றால், கொட்டின்வாய் தேய்ந்தால் கொட்டுடையவன் இரும்பிட்டுக் கொள்ளுமித்தனையல்லது, கொட்டு, தானே இரும்பிட்டுக் கொள்ளக்கண்டிலோமே; அப்படியே இவனைக் கைக்கொண்டு பணி கொள்ளுமவனுக்கே யன்றோ ஜீவநமிடுகையும் ப4ரமாயிருப்பது என்று அருளிச் செய்தார்.

[விவரணம் : a2 ஆபி4ஜாத்யம்-நற்குடிப் பிறப்பு. a3 பெரியபெருமாள் அஞ்சலென்றகையை மாற்றினால்தான் உன்னைப்போன்ற அரசனுடைய வாசலுக்கு வருவேன். அவர் மாற்றமாட்டாராகையாலே வருவதற்கு இடமில்லை என்று கருத்து a4 ''ப்ரபந்நன் தன் வாழ்வுக்காக அவைஷ்ணவர்களிடம் சிலவற்றை வேண்டி நிற்பது ஜீவனம்சம் பெற்று வாழும் பதிவ்ரதை வேறொருவனைக் கணவனாக ஏற்றுக்கொள்வதுபோலே அழிவுக்கே காரணமாகும்'' என்று முதலியாண்டான் குமாரரான கந்தாடையாண்டான் ஆழ்வானுக்கும் ப4ட்டருக்கும் ஶிஷ்யரான பெரியஜீயரென்னும் கூர நாராயண ஜீயருக்கு அருளிச்செய்தார். b வயிற்றுப் பிழைப்புக்காக எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதாவது — ''ஒன்று நூறுயிரமாக் கொடுத்துப் பின்னுமாளுஞ்செய்வன்'' [நாச். திரு. 9-7] என்று மேலும் மேலும் எம்பெருமானுக்கும் கொடுத்துக் கைங்கர்யம் செய்யவேண்டும் என்னும் மனப்பான்மையோடு இருக்கவேண்டியிருக்க, அவனுக்குக் கைங்கர்யம் செய்து கூலி வாங்கவேண்டும் என்ற மனப்பான்மையோடு இருப்பது மிகத் தாழ்ந்தது என்று கருத்து. கந்தாடையாண்டான் கோபால ஜீயர்க்கு அருளிச்செய்த வார்த்தை இதை விவரிக்கிறது. b2 முற்கூறிய விஷயத்துக்குமேல் ஏற்படும் ஓர் ஆக்ஷேபத்துக்குப் பரிஹாரத்தை உரைக்கிறது. ''கைங்கர்யம் பண்ணுமவனும் உயிர்

வாழ்ந்துதானே ஆகவேண்டும். ஆகையால் கைங்கர்யத்துக்குக் கூலி எதிர்பார்ப்பது எப்படித் தவறாகும்?'' என்பது ஆக்ஷேபம். இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு—களைக்கொட்டு முதலான ஆயுதங்களைக்கொண்டு ஒருவன் கார்யங்கொள்ளும்போது, அவ்வாயுதத்தில் தேய்மானமேற்பட்டால், அதை ஆயுதத்தையுடையவன் சீர்திருத்திக்கொள்ளவேண்டுமேயொழிய ஆயுதம் தன்னைத்தானே சீர்திருத்திக்கொள்ளாது. அதுபோலே ப்ரபந்நனிடம் கைங்கர்யம் கொள்ளும் எம்பெருமானுக்கே ப்ரபந்நனுக்குச் சோறிடும் பொறுப்பே தவிர ப்ரபந்நன் அதில் எப்பொறுப்பையும் ஏற்பது தகாது என்றபடி.]

**6. வார்த்தாமாலை : முந்நூற்றறுபத்தேழாம் வார்த்தை :** தர்ஶநரஹஸ்ய மிருக்கும்படி;-உறங்குகிறபோது நம்மை நோக்கு கிறவன் உணர்ந்தாலும் நம்மை நோக்குமென்று கந்தாடையாண்டான்.

[விவரணம் : உறங்குகிறபோது விஷஜந்துக்கள் நம்மைத் தீண்டாமலும், இடி முதலானவை தலையில் விழாமலும் நம்மை ரக்ஷிக்கும் எம்பெருமான் விழித்திருக்கும்போதும் நம்மை ரக்ஷிப்பான் என்று நினைத்து, உறங்குகிறபோது கவலையற்று உறங்குவதுபோலே விழித்திருக்கும்போதும் 'நமக்கு ரக்ஷகர் யார்' என்னும் கவலையில்லாமல் வாழவேண்டும். இதுவே நமது தர்ஶனத்தின் ஸாரமான ரஹஸ்யம் என்பது முதலியாண்டானது குமாரரான கந்தாடையாண்டானின் வார்த்தை.]

**7. வார்த்தாமாலை : முந்நூற்றுத்தொண்ணூற்றோராம் வார்த்தை:** எம்பெருமான் சிலரைப் போவென்னும்; சிலரை வாவென்னும்; சிலரைப் போது என்னும்; ப்ரயோஜநாந்தர நிஷ்டரைப் பலத்தைக் கொடுத்துப் போவென்னும்; கர்மஜ்ஞாந நிஷ்டரைக் கர்மங் கழித்தவாறே வாவென்னும்; அநந்ய ப்ரயோஜநரைப்போது என்னும். இந்த தேஶத்தில் ஒரு அநந்யப்ரயோஜநரை உண்டென்றிருந்தோமோ? உண்டாகில் அங்கே கண்டு கொள்ளுகிறோம். எங்ஙனேயென்னில்;-ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் எம்பெருமானென்றால் விஶ்வஸிப்பாரில்லை, விஶ்வஸித்தால் க்ருதஜ்ஞராயிருப்பாரில்லை, க்ருதஜ்ஞராகப் பெற்றதாகில் பகவத்கைங்கர்யம் விரஸமாயிருக்கும்; இவை மூன்றுங் கூடிற்றாகிலும் ராக

த்3வேஷோபஹததராகையாலே ப4ரக3வத கைங்கர்யத்துக்கு இசை யார்கள், அதுவுங்கூடிற்றாகில் ஆசார்யனுடைய தே3ஹயாத்ரை யைக் கண்டு நெகிழ நினைப்பர்கள், இதுவுங்கூடிற்றாகில் தங்களை ஸார்த்தராக நினைப்பர்கள்; ஆகையாலே ப4க3வத்3 கு3ணஞ் சொல் லுகைக்கும் கேட்கைக்கும் இவ்விடத்தில் ஆளில்லை காணும்— என்று கந்தாடையாண்டான், ப4ட்டருக்கு ஸரஸ்வதீ ப4ண்டா3ரத் திலே எழுந்தருளியிருந்து பணித்த வார்த்தை.

[விவரணம்: இவ்வார்த்தை முதலியாண்டான் குமாரரான கந்தாடையாண்டான் ப4ட்டருக்கு அருளிச்செய்தது. மற்ற பயன் களை விரும்புகிறவர்கள் அப்பயன்களைப் பெற்றுக்கொண்டு எம் பெருமானை விட்டு அகல வந்தவர்களாகையால், எம்பெருமான் அவர்களுக்கு அப்பயனைக் கொடுத்து 'போ' என்பான். 'மோக்ஷத்தில் தனக்கு ஆநந்த3ம் வேணும்' என்னும் எண்ணத் தாலே கர்மம் ஜ்ஞானம் ப4க்தி முதலான தன் முயற்சிகளில் ஈடு படும் உபாயாந்தரநிஷ்ட2னைத் திருத்துவதற்காக 'ஶேஷத்வாநு ஸந்த4ானம், ஜீவபரர்களைப் பற்றிய உண்மையறிவு த்ரிவித4பரித் யாக3ங்கள், ஶரணாக3தி முதலானவற்றை அங்க4மாகக்கொண்ட உபாயாந்தரங்களை அநுஷ்டி2த்து ப்ராரப்3த4கர்மம் கழிந்த பிறகு வா' என்பான். எம்பெருமானையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாக வும் கொண்ட ஸித்3தோ4பாய நிஷ்ட2னை "போதுவீர் போது மினோ" [திருப்பாவை 1] என்ற ஆண்டாளைப்போலே 'உடனே வாருங்கள்' என்று கை நீட்டி வரவேற்பான் எம்பெருமான். இந்த லீலாவிபூ4தியில் ஓர் அநந்ய ப்ரயோஜனனைக் கண்டுபிடிப்பது மிகவும் அரிது 'ஸ மஹாத்மா ஸுது3ர்லப4:" [கீ3தை 7-19] [அத்தகைய மஹாத்மாவான ஜ்ஞானி மிகவும் கிடைத்தற்கரிய வன்] "மாம் து வேத3 ந கஶ்சந" [கீ3தை 7-26] [என்னை உள்ளபடி அறிந்தவன் ஒருவனுமேயில்லை] என்று அவனே அரு ளிச்செய்தானன்றோ. ஆகையால், அத்தகையவர்களை நித்ய விபூ4தியிலேயே காணலாம். இவ்வுலகில் 'ப்ராப்ய ப்ராபகங்கள் எம்பெருமான் ஒருவனே' என்றால் நம்புவார் எவருமில்லை. நம்பு வார் சிலர் உண்டானாலும், எம்பெருமான் நமக்கு அநாதி3கால மாகச் செய்துவரும் நன்மைகளை உணர்ந்து நன்றி காட்டுகிறவர் கள் இல்லை; நன்றி காட்டுவார் இருந்தாலும் ப4க3வத் கைங்கர் யத்தில் சுவையறிவார் எவருமில்லை. முற்கூறிய நம்பிக்கை, நன்றி காட்டுதல், கைங்கர்யச்சுவை ஆகிய மூன்றும் சேர்ந்திருந்தாலும்,

ராக₃த்₃வேஷங்களாலே மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பெருமை களை இசைவாரில்லாமையாலே ப₄ாக₃வத கைங்கர்யத்துக்கு இசைவார் எவருமில்லை. அதுவும் கூடினாலும் ஆசார்யன் வாழ்க்கை நடத்துவதைப் பார்த்து 'இவரும் நம்மைப்போல் ஒரு மனிதர் தானே' என்று நினைப்பவர்களாகவே அனைவரும் இருக்கிறார்கள். அப்படி நினைக்காமலிருக்கையாகிற சிறப்புக் கூடினாலும், தன்னை எல்லா நற்குணங்கள் உடையவனாகவும் தீயகுணங்கள் இல்லாதவனாகவும் நினைக்கிறார்களேயொழிய ''அடியேன் சிறிய ஞானத்தன்'' [திருவாய் 1-5-7] ''நீசனேன் நிறை வொன்றுமிலேன்'' [திருவாய் 3-3-4] என்ற ஆழ்வாரைப்போலே மனப்பூர்வமாகத் தம் தாழ்வுகளை அநுஸந்தி₄க்கையாகிற ஆகிஞ்சந்யாநுஸந்த₄ானம் செய்வார் எவருமில்லை. ஆகையால் இவ்விபூ₄தியில் எம்பெருமானுடைய கு₃ணங்களைச் சொல்லுவதற்கும் கேட்பதற்கும் எவருமில்லை என்று கருத்து.

## 7. நடுவிலாழ்வான்

1. ஆறாயிரப்படி குருபரம்பரை : நடுவிலாழ்வான், திருநாராயணபுரத்திலேயிருந்து ஸ்ரீப₄ாஷ்யம் வாசிப்பிக்கிற காலத்திலே வங்கிப்புரத்தாய்ச்சி சொட்டையம்மாளுக்கிட்டார். ஸ்ரீப₄ாஷ்யத்தைக் கேட்டு, 'இது அரிதாயிருந்தது' என்ன, 'ஆகில், இது அருளிச்செய்தருளின எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்' என்றருளினார்.

2. ஆறாயிரப்படி குருபரம்பரை : நடுவிலாழ்வான் தனியன். ''யேந ப்ரோத்ஸ்க₂லதே நித்யம் கா₃ர்க்₃யவம்ஶமஹாம்பு₃தி₄: | மந்மஹே தம் ஸதா₃ சித்தே மத்₄யமாா்யகலாநிதி₄ம் ||'' [கா₃ர்க்₃யகோ₃த்ரமாகிற பெருங்கடல் எவரைக் கண்டவுடன் எப்போதும் பொங்குகிறதோ, அத்தகைய நடுவிலாழ்வானாகிற சந்திரனை நெஞ்சில் எப்போதும் நினைக்கிறோம்.]

## 8. கோமடத்தாழ்வான் (கோமடத்துப்பிள்ளான்)

ஆறாயிரப்படி குருபரம்பரை : கோமடத்துப்பிள்ளான், தம் ஸ்ரீபாத₃த்தில் காக்கைப் பாடியாச்சான்பிள்ளை மூன்று உரு ஸ்ரீபாஷ்யம் வாசித்து அத்தால் மிகவும் மேன்மையையுடையராயிருக்குமது கண்டு, இவர்க்கு இம்முக₂த்தாலே அபசாரம் வருமென்று அஞ்சி 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்று அருளிச் செய்தருளினார்.

## 9. பிள்ளைப் பிள்ளையாழ்வான்

1. ஆறாயிரப்படி குருபரம்பரை : பிள்ளைப்பிள்ளையாழ்வான் ஆழ்வான் திருவடிகளிலே ஆஶ்ரயித்தவளவில். ஆழ்வான் ஆசார்யத₃க்ஷிணையாக "த்ரிவித₄கரணங்களையும் பரிஹரித்துக் கொண்டு ப₄ாக₃வதர்களிடத்தே ஆநுகூல்யைகரஸராய்ப்போரும்" என்று அருளிச்செய்ய; அவரும் 'இது பரிஹரித்து முடியாது' என்று ப₄யப்பட்டு முசித்துக் கிடக்க, ஆழ்வான் அவரையழைத்து, 'எதிரியைக் குத்தினால் எதிரி கூடக் குத்தும்; ராஜத₃ண்ட₃மும் வரும்; ஆகையாலே, காயிகாபராத₄ம் செய்யக்கூடாது; "யதீ₃ச்ச₂ஸி வஶீகர்த்தும் ஜக₃தே₃கேந கர்மணா : பராபவாத₃ ஸஸ்யேப்₄யோ கா₃ம் சரந்தீம் நிவாரய ||" [உலகனைத்தையும் ஒரே செயலால் வசப்படுத்த விரும்பினாயாகில் பிறர் குற்றம் கூறுவதாகிற பயிரில் மேய்கின்ற இயல்வையுடைய மாடுகளாகிற உன் சொற்களை அப்படி மேயாதபடி தடுப்பாயாக.] என்கிறபடியே பராபவாத₃ஞ் சொல்லுகிற வாக்கு ஒன்றையும் பரிஹரித்துக்கொள்ளும்' என்று அருளிச்செய்து, 'இனி மநஸ்ஸாலே நினைத்தீராகில் அநுதபித்து, இது எம்பெருமான் திருவுள்ளத்தே படாதபடி எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்று அருளிச் செய்தருளினார்.

2. வார்த்தாமாலை [400] வீரஸுந்த₃ரப்₃ரஹ்மராயன் காலத்திலே ப₄ட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, வீரஸுந்த₃ரன் பட்டானென்று பிள்ளைப் பிள்ளையாழ்வான் ஆண்டாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, போர க்லேஶித்தார்; 'ப₄ட்டரைக் கோயிலிலிருக்கவுங்கூட வொண்ணாதபடி பண்ணின இவன் பட்டானென்றதுக்கு இதுவென்?' என்ன; 'பிள்ளையோடுண்டான விரோத₄த்தாலே அத்₃ருஷ்டத்தை இழந்தான்; சிலநாளிலிருந்து த்₃ருஷ்டஸுக₂மாகிலும் அநுப₄விக்கிறானே என்றிருந்தோம். அதுவுங்கூட இழந்தானாகாதே! என்று க்லேஶமாயிற்று' என்று அருளிச்செய்தார்.

[விவரணம். கூரத்தாழ்வான் சிஷ்யருடைய வீரஸுந்தரப்ரஹ்மராயன் ஒரு மதிள் கட்டும்போது ஆழ்வான் சிஷ்யரான பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகைக்கு இடையூறு செய்ததையால் மனவருத்தம் கொண்டு பட்டர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளிவிட்டார். அங்கே பல வருடங்கள் வாழ்ந்திருந்தார். அதற்கிடையில் வீரஸுந்தரன் இறந்துவிட்டான் என்று பிள்ளைப்பிள்ளையாழ்வான் பட்டருடைய தாயாரான ஆண்டாளிடம் விண்ணப்பித்தபோது ஆண்டாள் மிகவும் வருந்தினள். அப்போது பிள்ளைப்பிள்ளையாழ்வான் 'பட்டரை ஸ்ரீரங்கத்தில் இருக்கவும் முடியாதபடி விரட்டின அந்தப் பாபி இறந்ததற்கு வருந்துவானேன்' என்று கேட்டார். அதற்கு ஆண்டாள் 'பட்டரிடம் அபசாரப் படுகையாலே மறுமையில் நற்கதியை இழந்தான். ஏதோ இவ்வுலகில் சில வருடங்கள் இருந்து அரசாட்சியையாவது அநுபவித்துக் கொண்டிருக்கட்டும் என்று நினைத்தேன். அதுவும் இல்லாமல் போய்விட்டதே என்று வருந்துகிறேன்'' என்று அருளிச்செய்தாள். இதன் விவரணம் குருபரம்பராப்ரபாவம் பக்கம் 351-ல் வந்துள்ளது. ''ஆழ்வான் திருவடிகளில் ஸம்பந்தமுடையது ஒரு ஆத்மா இப்படி தட்டுப்பட்டுப்போவதே! என்று இத்தை நினைத்து என் வயிறு எரிகிறபடி உங்களொருவர்க்கும் தெரிகிறதில்லை'' என்று ஆண்டாள் அருளிச்செய்தாள்; ''குற்றஞ்செய்தவர்கள் பக்கலிலுமகப்பட ஹிதபரராய் து:கார்த்ரசித்தராய்ப் போருவது ஆழ்வான் ஸம்பந்தமுடையவர்களுக்கே உள்ளதொன்றிறே.'' என்னும் குருபரம்பராப்ரபாவ ஸ்ரீஸூக்திகள் மிகவும் குறிக்கொள்ளத்தக்கவை.]

**3. திருப்பாவை [6]** (மூவாயிரப்படி) (புள்ளும்சிலம்பின காண்) பிள்ளைப்பிள்ளையாழ்வான் 'பகவத் ஸமாச்ரயணத்துக்கு அநுகூலமான காலத்தை ஸூசிப்பிக்கிற பக்ஷிநாதமல்லது இவ்வாத்மாவுக்கு உத்தேச்யமில்லை' என்று பணிக்குமென்றருளிச்செய்வர்.

4. திருமாலை [37] 'தெளிவிலாக்கலங்கல்நீர்' வ்யா: (அளியன் நம் பையல் என்னார்) ''பிள்ளைப்பிள்ளையாழ்வான் வாயாலே 'தம்பி அப்பிள்ளையாழ்வான் நம்மாண்' என்னப்பெற்றேன்'' என்றாரிறே. [விவரணம் : பிள்ளைப்பிள்ளையாழ்வானாலே 'தம்பி அப்பிள்ளையாழ் வான் நம் பையல்' என்னப் பெற்றேன் என்று அப்பிள்ளையாழ் வான் அருளிச்செய்தார்.]

5. திருமாலை [43] (அமரவோர்—தாம்பூலயர்) ஜாதிசண்டாளனுக்கு ஒரு காலத்திலே வைஷ்ணவனாகைக்கடுப்புகாருமுண்டு; இவன் உசரவேறித் தகர விழுந்தவனாகையாலும், பாகவதாபசாரமாகிற மஹாபாபத்தைப் பண்ணினவனாகையாலும் அவனிலும் தண்ணியன் கர்மசண்டாளனிறே. பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆத்மஹிதஞ் சொன்ன ஸமநந்தரத்திலே ஆழ்வான் பணித்த வார்த்தையை ஸ்மரிப்பது.

6. ஸ்ரீவசநபூஷணம் சூர்ணை [203] இவ்விடத்திலே பிள்ளைப் பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்தவார்த்தையையும் ஸ்மரிப் பது.

[5,6க்கு விவரணம்: பிள்ளைப்பிள்ளையாழ்வான் கூரத்தாழ்வானை ஆஶ்ரயித்தவன்று, இவர் பிறப்பு முதலானவற்றில் தமக்குள்ள பெருமையைப் பார்த்து பா₄கவதாபசாரப்படுவதைக் கண்ட கூரத்தாழ்வான் இவரைப் படுகுழியில் வீழ்த்திவிடக்கூடிய பா₄கவதாபசாரத்தில் ஈடுபடாமல் வேலியிட்டு வைக்கவேணும் என்று திருவுள்ளம் பற்றி ஒரு புண்ய தினத்திலே ''நீர் எனக்கு ஒரு தா₃னம் செய்ய வேணும்'' என்று கேட்க, ''எல்லாம் தேவரீருடையதாயிருக்க அடியேன் எதை தா₃னம் பண்ணுவது?'' என்று பிள்ளைப்பிள்ளை யாழ்வான் பதில் சொல்ல, ''முக்கரணங்களாலும் பா₄கவதாபசாரம் பண்ணாமல் வாழக்கடவேன் என்று தம் கையில் நீர்வார்த்துத் தரவேணும்'' என்று கூரத்தாழ்வான் அருளிச்செய்ய, இவரும் அப்படியே செய்து கொடுத்தார். பிறகு ஒருநாள் நெடுநாள் பழக்கத்தாலே ஒரு பா₄கவதருடைய தோ₃ஷத்தைப் பிள்ளைப் பிள்ளையாழ்வான் நினைத்துவிட்டார். உடனே நடுங்கி முட்டாக் கிட்டுக் கொண்டு தம் திருமாளிகையிலேயே இருந்தார். இவர்

வரக்காணாத ஆழ்வான் இவரிருக்குமிடம் எழுந்தருளி 'ஏனிப்படிக் கிடக்கிறீர்?' என்று கேட்டார். தாம் மனத்தாலே ப₄ாக₃வதாப சாரப்பட்டதை விண்ணப்பம் செய்து 'மனோ வாக்காயங்கள் மூன்றாலும் ப₄ாக₃வதாபசாரம் வராதபடி பார்த்துக்கொண்டு இவ்வுடம்போடு வாழ்வது அரிதாயிருக்கிறதே!'' என்று ஆழ்வான் திருவடிகளைக் கட்டிக்கொண்டு அழுதார். ''இத்தனை அநுதாபம் இவர்க்கு உண்டாகப் பெற்றதே!'' என்று உகந்த ஆழ்வான் ''மனத்தாலே உண்டான அபசாரத்துக்கு அநுதாபம் பிறந்து விட்டதால், நேரே எம்பெருமான் க்ஷமித்துவிடுவான். மேலே தண்டனை ஏற்பட்டு விடும் என்னும் ப₄யத்தாலே நீரே உடம்பைக் கொண்டு ப₄ாக₃வதாபசாரம் செய்ய மாட்டீர்; வாய் ஒன்றை மாத்திரம் அதி ஜாக்ரதையாகப் பாதுகாத்துக்கொண்டு ப₄ாக₃வதர் விஷயத்தில் அபவாத₃ம் சொல்லித்திரியாதேயிரும்'' என்று அருளிச்செய்தார் என்னும் ஐதிஹ்யம்.]

**7.** திருவிருத்தம் [43] கண்ணும் செந்தாமரை—(வண்ணம்) ''ப்ரஜை முலையிலே வாய் வைத்துத் தாய் முகத்தைப் பார்க்குமாபோலே'' என்று பிள்ளைப்பிள்ளையாழ்வான்.

**8.** பகவத் விஷயம் [1-1-1] (உடையவன்) ஆழ்வான் பிள்ளைப்பிள்ளையைப் பார்த்து 'நிர்க்கு₃ணமென்பார் மிடற்றைப் பிடித்தாப்போலே ஆழ்வார் 'நலமுடையவன்' என்றபடி கண்டாயே'' என்று பணித்தான்.

**விவரணம்: நிர்க்குணமென்பார்—அத்வைதிகள். மிடறு—கழுத்து.**

**9.** பகவத் விஷயம் [3-5-4] (வம்பவிழ்கோதை) [தம் பிறப்பால் இத்யாதி₃] வைஷ்ணவர்கள் நடுவே இவர்கள் சரீர பரிக்ரஹம் பண்ணிற்று என்ன ப்ரயோஜநத்துக்காக? 'திருப்புன்னைக் கீழே ஒருவர் இருக்குமிடத்திலே நம் முதலிகள் பத்துப்பேர் கூட நெருக்கிக் கொண்டிருக்கச் செய்தே, க்₃ராமணிகள், மயிரெழுந்த பிசல்களும், பெரிய வடிவுகளும், மேலே சுற்றின இரட்டைகளுமாய் இடையிலே புகுந்து நெருக்குமாபோலே காண்' என்று பிள்ளைப்பிள்ளை.

## 10. மிளகாழ்வான்

[மிளகாழ்வான் மேல்கோட்டை திருநாராயணபுரம் கோயிலில் சிறிய உருவத்துடன் எழுந்தருளியிருக்கிறார்.]

1. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபா4வம் : மிளகாழ்வான், முதலியாண்டானை 'என்னோடு தர்க்கிக்க வாரும்' என்ன, முதலியாண்டானும் 'நீர் தோற்றீராகில் செய்வதென்?' என்ன, மிளகாழ்வானும் 'நான் தோற்றேனாகில் உம்மை என்தோளிலே சுமந்து கொண்டு போகிறேன்' என்ன, அநந்தரம் உப4யரும் தர்க்கிக்க, மிளகாழ்வான் தோற்று முதலியாண்டானை ஸ்ரீ பாத3ந்தாங்கிக் கொண்டு சுற்றிடம் போய் 'இனி அடியேனை இரங்கியருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, ஆண்டானும் உடையவர் திருவடிகளிலே காட்டிக்கொடுத்து ஆஶ்ரயிப்பித்தருளி 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்று அருளிச்செய்தருளினார்.

2. வார்த்தாமாலை [197] : மிளகாழ்வானை, முதலிகள் 'a கீழையூருக்குப் பலகாலும் போவானேன்?' என்று கேட்க; 'நான் அங்கே போனால் ப4க3வத்3 விஷயத்துக்கு அநுகூலமான வார்த்தைகள் அவர்களுக்குச் சொல்லுவேன்; அத்தாலே b இங்குத்தைக்கு விரோதி4யார்கள்' என்றும், 'அவர்கள் பக்கலிலே c சில கொண்டு போந்து பா4க3வத விஷயத்துக்கு உறுப்பாக்கினால் d அவர்களுக்கு ஓராநுகூல்யம் பிறக்குமென்றும் போனேன்' என்ன; e 'அப்படியாகிலும் அவர்கள் பதா3ர்த்த2ங்கள் ஆமோ?' என்ன? f 'நான் எல்லாவற்றையும் நாராயண ஸம்ப3ந்த4 நிப3ந்த4நமாகக் காணுமத்தனையல்லது ப்ரக்ருதி ஸம்ப3ந்த4 நிப3ந்த4நமாகக் காணேன்; அத்தாலே ஒரு வஸ்துவும் அந்ய ஸம்ப3ந்த4மாயிராதே' என்று அருளிச்செய்தார்.

[விவரணம் : a கீழையூர்-ஸ்ரீரங்க3த்துக்குக் கிழக்கேயுள்ள திருவானைக்கா. b இங்குத்தைக்கு-ஸ்ரீரங்கம் கோயிலுக்கும், அதிலுள்ளார்க்கும். c சில கொண்டு போந்து-சில த்3ரவ்யங்களைப் பெற்றுவந்து. d அவர்களுடைய த்3ரவ்யம் பாகவதர்களுக்கு உபயோகப்பட்டதாகையாலே அவர்களுக்கு ஸத்வகுணம் மிகுதியாகி எம்பெருமானிடம் ஈடுபாடுண்டாகும் என்று கருத்து. e அப்படியானாலும் ஶைவர்கள் த்3ரவ்யத்தை வைஷ்ணவர்கள் உபயோகப்படுத்தலாமா? என்பது கேள்வியின் கருத்து. f எல்லாம் எம்பெருமான் உடைமையாகையாலே அது அவர்கள் பொருளன்று; எம்பெருமானுடையதே என்பது பதிலின் கருத்து.]

**3. வார்த்தாமாலை [324]**: பக்கம் 44, 45-ல் உள்ள முதலியாண்டான் வார்த்தையைக் காண்க.

**4. பகவத் விஷயம் [3-5-5]**: (வீதிகள் தோறும் துள்ளாதார்) **மிளகாழ்வான்** வார்த்தையை நினைப்பது.

**5. பகவத் விஷயம் [3-5-8]**: (பிறர் கூற) வைஷ்ணவர்களங்கீகாரம் பெறுமதிலும் அவைஷ்ணவர்கள் 'இவன் நமக்கு உடலல்லன்' என்று கைவிடுகைதான் உத்தேச்யமாயிருக்குமிறே; ராவணன் *த்வாம் து திக் குலபாம்ஸநம்* என்றதுதன்னை உத்தேச்யமாக நினைத்தானிறே விபீஷணாழ்வான். மிளகாழ்வான் வார்த்தை—ராஜா அகரம் வைக்கிறுருய் அங்கே செல்ல, 'உமக்குப் பங்கில்லை' என்ன, 'அதுவென்? வேத பரீக்ஷை வேணுமாகில் அத்தைச் செய்வது, சாஸ்த்ர பரீக்ஷை வேணுமாகில் அத்தைப் பரீக்ஷிப்பது' என்ன, 'உமக்கு அவையெல்லாம் போதும்; அதுக்கு உம்மைச் சொல்லவொண்ணாது' என்ன, 'ஆனால் எனக்குக் குறையென்?' என்ன, 'நீர் வைஷ்ணவரன்றோ; ஆகையாலேகாண்' என்ன, புடவையை முடிந்து ஏறிட்டுக் கூத்தாடுகுறுயிற்று, தன்னை அவர்கள் கைவிட்டதுக்கு.

[அகரம்—அக்ரஹாரம். ராஜாக்கள் அக்ரஹாரம் ஸ்தாபிப்பதற்காக, வேத சாஸ்த்ரங்களில் வல்ல அந்தணர்களுக்குப் பரீக்ஷை வைத்தல் அகரம் வைத்தலாகும்.] (இது முன் வார்த்தையின் விவரணம் )

**6. பகவத் விஷயம் [3-8]** முடியானே ப்ரவேசம்: [குஹேந ஸார்த்தம் தத்ரைவ ஸ்த்திதோஸ்மி திவஸாந் பஹூந்]—ஸ்ரீ குஹப்பெருமாளோடே கூடி, பெருமாளைப் பிரிந்தவிடத்தில் நின்றும் கால் வாங்க மாட்டாதே நின்றுயிற்று ஸுமந்த்ரன்; அங்கு நின்றது ஒன்றிரண்டு நாளாயிருக்கச்செய்தே (பஹூந்) என்று நின்றதாயிற்று; பிரிவாலே காலம் நெடுகினபடி. 'குஹப்பெருமாளோடே நிற்க, காலம் நெடுகுவானென்?' என்று மிளகாழ்வானைக் கேட்க, 'ஸ்மாரக ஸந்நிதியில் ஆற்றுமை இரட்டிக்குமிறே' என்று அருளிச்செய்தாராம்.

**விவரணம்**: ஸ்மாரக ஸந்நிதியிலே ஆற்றுமை இரட்டிக்குமிறே—குஹனைப் பார்க்கும் போதெல்லாம் அவனது நண்பனுன ஸ்ரீராமன் நினைவு வந்து பிரிவுத்துன்பம் அதிகமாகும் என்று கருத்து.

**7. பகவத் விஷயம் [10-9-4] எதிரெதிரிமையவர் :** (எதிரெதிரித்யாதி) வைகாரிகளை படைவிட்டிலே அரங்கத்துக்குச் செல்ல, 'நீ ஆந்தராளிகன், உனக்குப் பங்கில்லை' என்ன; 'நன்மையில் குறையுண்டாய்ச் சொல்லுகிறீகோளோ அன்றோ' என்ன; 'நன்மையில் குறையில்லை இதிறே ஹேது' என்ன; 'நம்நெஞ்சில் இல்லையாகிலும் இவர்கள் வைஷ்ணவர்களென்று கைவிடப்பெற்றோமிறே' என்று புடைவையை முடிந்து ஏறவிட்டுக் கூத்தாடினன்.

**விவரணம் :** ஆந்தராளிகன்—இரண்டும் கெட்டான்; அதாவது எல்லாம் தெரிந்தவனாயிருந்தும் உலகத்தோடு ஒட்டாமல் வைஷ்ணவனாயிருப்பவன். 4, 5 வார்த்தையும் இவ்வார்த்தையும் ஒன்றே.

## 11. கணியனூர் சிறியாச்சான்

**1. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரப$_4$ாவம் :** கணியனூர்ச் சிறியாச்சான், ஸசேலஸ்நாந பூர்வகமாக ஆர்த்தியோடே உபஸந்நராய் தி$_3$வ்யாஜ்ஞையிட்டு 'எம்பெருமானார் திருவடிகளொழிய வேறு தஞ்சமில்லை' என்றருளினார்; எங்ஙனே யென்னில்,

**ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம் யதிராஜோ ஜக$_3$த்$_3$கு$_3$ரு: |**
**ஸ ஏவ ஸர்வலோகாநாமுத்$_3$த$_4$ர்த்தா நாத்ர ஸம்ஶய: ||**

[முக்காலும் சத்தியம் செய்து கூறுகிறேன்! யதிராஜரே உலக குருவாவார். எல்லாவுலகையும் உய்விக்கச் செய்யவல்லவர் அவரே] என்று இவர் தாமே பெரிய பெருமாள் திருவோலக்கத்திலே ஸ்ரீஶடகோபனைத் தம் திருமுடியிலே நிறுத்திக்கொண்டு அருளிச்செய்தருளினார்.

**2. சரமோபாய நிர்ணயம் :** முன் ஐதிஹ்யத்தில் வந்த விஷயமே சரமோபாய நிர்ணயம் பக்கம் 534 ல் வந்துள்ளது.

**3. வார்த்தாமாலை [68] :** பக்கம் 57-ல் 10-ம் எண்ணுள்ள எம்பார் வார்த்தை காண்க.

**4. வார்த்தாமாலை [127] :** "சிறியாச்சான் கலங்குகைக்கு யோக்யதையுண்டாயிருக்கச் செய்தே தெளிந்திருப்பர்; அடியேன் யோக்யதையில்லாமையாலே தெளிந்திருப்பது" என்று ஜீயரருளிச் செய்தார்.

**விவரணம் :** சிறியாச்சான் என்பவர் ப$_4$க்தியை உபாயமாக அநுஷ்டி$_2$க்கத்தக்க ஜ்ஞான ஶக்திகளையுடைய அதி$_4$காரி. அவ

ரைக் குறித்து நஞ்ஜீயர், "சிறியாச்சான் ப₄க்தியை அநுஷ்டி₂க்க ஶக்தியிருந்தமையாலே, 'அதுவும் உ-பாயமாகும்' என்று கலங்கு வதற்குத் தகுதியிருந்தும் உ-பாயாந்தரங்கள் அத்யந்தபரதந்த்ர ஸ்வரூபத்துக்கு முரண்பட்டவையாகையாலே அநுஷ்டி₂க்கத்தகா தவை என்று தெளிவு பெற்றிருப்பவர். அவ்வுபாயங்களை அநுஷ்டி₂க்கத் தகுதியேயில்லாமையாலே எம்பெருமானே உ-பாயமென்று தெளிந்திருப்பேன் அடியேன்" என்று அருளிச்செய்வர்.

**5.** வார்த்தாமாலை [128] : பக்கம் 184 அமுதனார் வார்த்தை காண்க.

**6.** வார்த்தாமாலை [369] : ஒரு ப்₃ராஹ்மணன் இறப்பில் நின்றும் விழ, அவ்வளவிலே சிறியாச்சான் அங்கேற எழுந்தருள, ப்₃ராஹ்மணன், 'ஆச்சான்! பெருமாள் என்னைத் தள்ளினபடி கண்டீரே' என்ன, "அங்ஙனன்றுகாண், கர்மத்தாலே நாம் விழுந்தோம்; பெருமாளெடுத்தார்' என்று நினைத்திராய்" என்றருளினார்.

விவரணம் : ஒரு ப்₃ராஹ்மணன் கூரையிலிருந்து விழுந்து விட்டான். அப்போது சிறியாச்சான் என்னும் ஸ்ரீவைஷ்ணவர் அங்கேயெழுந்தருளினார். அவரைப் பார்த்த ப்₃ராஹ்மணன் அடி பட்ட மயக்கத்தாலே "ஆச்சான்! பெருமாள் என்னைத் தள்ளி விட்டார் பார்த்தீரா" என்றான். அதற்கு ஆச்சான் "அப்படி நினைக்காதீர். 'முன்செய்த தீவினையாலே கீழே விழுந்தோம். பெருமாள் தம் கருணையாலே பூ₄மியில் இருந்து தாங்கி, கைகால் முறியாதபடி எழுந்திருக்கச்செய்து காப்பாற்றினார்' என்று நினைத்திரும்" என்று அருளினார்.

**7.** வார்த்தாமாலை [370] : a ஒருநாள் திருவீதியிலே ப₄ட்டரும் ஸ்ரீவைஷ்ணவர்களும் திரளாக எழுந்தருளியிருந்து ப₄க₃வத்₃ கு₃ணம் நடவாநிற்க, ஒரு ஸ்ரீவைஷ்ணவர், 'நாய பண்ணின ஸுக்ருதம் கண்டதே! இப்படியிருக்கப் பெற்றோமே!' என்ன; சிறியாச்சான் எழுந்திருந்து "இது நெடுநாள் பெருமாள் ரக்ஷகர் என்று ஶிக்ஷித்தோம்; இப்போது ஒரு ஸுக்ருதஹேதுவருண்டா வதே!" என்றார்; b எம்பெருமான் ரக்ஷகனென்றிருக்கையும் ஸ்வ ரூபமன்று; எம்பெருமான் ரக்ஷ்யமென்றிருக்கையும் ஸ்வரூபமன்று; எங்ஙனேயென்னில்; — ரக்ஷகனென்றிருந்தானாகில் அநந்யார்ஹ ஶேஷத்வத்துக்குச் சேராது; ரக்ஷ்யமென்றிருந்தானாகில் ஸ்வ ஸ்வாமி ஸம்ப₃ந்த₄த்துக்குச் சேராது.

விவரணம் : a இப்பகுதி ஆறுயிரப்படி கு3ருபரம்பராப்ரப4ாவம் 357-ம் பக்கத்தில் வந்துள்ளது. 'இங்கு ப4க3வத்3 கு3ணம் நடவா நிற்க' என்றது 'அங்கு ப4க3வத்3 கல்யாண கு3ணநுஸந்த4ானம் நடவாநிற்க' என்றுள்ளது. இப்பகுதியின் கருத்து — "இத்தால் உஜ்ஜிஜீவயிஷுவான ஈஶ்வரனிருக்க, ஆநுகூல்யங்களுக்கு ஸுக்ருதம் அடியென்கை ஸ்வரூபநாஶம் என்றபடி" என்று விவரிக்கப் பட்டுள்ளது. இதன் பொருளாவது—அஜ்ஞாதமாகவும், ஆநுஷங்கி3கமாகவும், ப்ராஸங்கி3கமாகவும் சில ஸுக்ருதங்கள் ஜீவன் பண்ணியிருப்பவற்றைக் கணக்கிட்டு அவற்றை மேன்மேலே வளர்த்து இந்த ஜீவனை உய்விப்பதற்கு எம்பெருமான் அநாதி3 காலமாகப் பாடுபட்டுக்கொண்டிருக்கும்போது, நமக்கு எம்பெருமானிடமுள்ள ஈடுபாட்டுக்கு இந்தப் புண்யங்களைக் காரணமாகச் சொல்லுவது எம்பெருமான் விஷயத்தில் செய்ந்நன்றிகொன்ற குற்றத்தின்பாற்படுமாகையாலே நம் ஸ்வரூபத்தை அழித்துவிடும் என்றபடி. 'ஸுக்ருத தே3வர் உண்டாவதே!' என்று சிறியாச்சான் அருளியது—"பரமசேதனனாய் தே3வாதி3 தே3வனான எம்பெருமான் நமக்கு ரக்ஷகன் என்று இவ்வளவு நாளாக நமக்கு ஆசார்யர்கள் கற்பித்திருக்க, இப்போது இவர் அசேதனமாய் க்ஷணத்தில் அழிவதான நம்முடைய செயலாகிற ஸுக்ருதத்தை ஒரு தெய்வம்போலே ரக்ஷகமாகச் சொல்லுவதே!" என்னும் கருத்துடையது. b முன் பகுதியை மேலெழுந்தவாரியாகக் காண்பார் சிலர் எம்பெருமான் எப்போதும் நாம் விரும்புகிறவற்றைக் கொடுத்து நம்மை ரக்ஷித்துக் கொண்டிருப்பான் என்று நினைக்கக் கூடும். இப்படி நினைப்பது நம்முடைய அநந்யார்ஹஶேஷத்வமாகிற ஸ்வரூபத்துக்குப் பொருந்தாது. ஸ்வாமியாயிருப்பவன் உகப்பது, கோபிப்பது, பரிசளிப்பது, த3ண்டி3ப்பது முதலான எதைச் செய்தாலும், தா3ஸபூ4தனாயிருப்பவன் கலங்காமல் அதை ஏற்றுக் கொள்வதே அவனுக்கு ஸ்வரூபமாகும். கோபிக்கும்போதும் த3ண்டி3க்கும்போதும் கலங்கி ஸ்வாமியை வெறுத்தானாகில் அநந்யார்ஹஶேஷத்வமாகிற ஸ்வரூபத்துக்கு முரண்படும். ஆகையால் கோபிப்பது, த3ண்டி3ப்பது முதலானவையும் நமக்கு ப்ரியமாயில்லாவிடினும் முடிவில் நன்மையையே செய்து ஹிதமாயிருக்குமாகையாலே அவையும் ரக்ஷணத்தின்பாற்படும் என்று எண்ண வேண்டும். ரக்ஷகனான எம்பெருமானைப் பரிவாலே ரக்ஷ்யமாக எண்ணி அவனுக்கு மங்க3ளாஶாஸநம் செய்து ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபமாயினும், எம்பெருமானை எப்போதும் ரக்ஷ்யப்பொருளாகவே நினைத்துவிடக்கூடாது. ப்ரேமதஶையில் பரிவு எனப்படும் ப்ரே

மம் ஏற்படும்போது ரக்ஷகனென அவனை ரக்ஷ்யமாகக் கலங்கி மங்களாசாஸனம் செய்தாலும், ஜ்ஞானதசையில் அவனை ஸர்வரக்ஷகனென்று உணரவும் வேண்டும். இப்படி உணராவிடில் 'எம்பெருமான் ஸ்வாமி; நாம் அவனால் ரக்ஷிக்கப்படும் உடைமை' என்னும் ஸம்பந்தத்தோடு பொருந்தாது. ஆக ஜ்ஞானதசையும் ப்ரேமதசையும் மாறிமாறி நடக்கவேணும் என்று கருத்து. பெரியாழ்வார்க்குப் போலே சிலர்க்கு ப்ரேம தசை விஞ்சியும், மற்ற ஆழ்வார்களுக்குப்போலே சிலர்க்கு ஜ்ஞானதசை விஞ்சியுமிருக்கும் என்று கண்டுகொள்வது.

8. வார்த்தாமாலை [441 X] ''நெருப்பெழுந்து தாக்கினபோது ஒன்றுண்டோ'' என்றார் சிறியாச்சான். [ப்ரகரணம் விளங்க வில்லை.]

9. திருவிருத்தம் [44] பெரியவாச்சான்பிள்ளை வ்யா: (பேரும்) திருமலைநம்பி அந்திமதசையிலே கணியனூர் சிறியாத்தானை ''பிள்ளை தமக்குத் தஞ்சமாக நினைத்திருக்கும் திருநாமமென்? அத்தைச் சொல்லவேணும்'' என்ன, ''இவர் முன்னே நாமெத்தைச் சொல்லுவது'' என்று கூசியிராநிற்க, 'தாசரதீ! பேசாதிருக்கும் அவஸ்தையன்று காண் இது'' என்ன, 'நாராயணாதி நாமங்களுஞ் சொல்லிப் போருவர்; ஆகிலும் விரும்பியிருப்பது அழகிய மணவாளப் பெருமாள் என்னும் திருநாமத்தை' என்ன, 'பூர்த்திருநாமத் தோபாதியாயிராநின்றது; ஆகிலும் பிள்ளை நினைத்திருந்தது போக்கித் தஞ்சமில்லை' என்று 'அழகிய மணவாளப் பெருமாளே சரணம்' என்று திருநாட்டுக்கு நடந்தார். கூரத்தாழ்வானோபாதி யாகையாலே பட்டரைப் பிள்ளையென்பர்

10. பெரியதிருவந்தாதி [61]: (இறை) லோகயாத்ரையை அநுஸந்திக்கப் புக்காலும் அவனை முன்னாகவல்லது காணமாட்டாமை சொல்லுகிறது. சிறியாச்சான், 'சப்தாதி விஷயங்களில் நின்றும், நாம் மீளமாட்டாதாப்போலே ஆழ்வார்கள் பகவத் விஷயத்தில் நின்றும் மீளமாட்டார்கள்' என்று பிள்ளைக்குப் பணித்தான்.

## 12. ஈச்சம்பாடி ஆச்சான். 13. ஈச்சம்பாடி ஜீயர்

[செங்கற்பட்டில் கருடபுரம் திருமலை ஈச்சம்பாடி வீரராகவசர்மனால், அவரது ''மாகலின் அக்ஷரசாலையில் கலி 5034 (கி.பி. 1937) ஸ்ரீமுக-ஞு ஐப்பசி-மீ 4-வ அச்சிடப்பட்ட ''திருமலை ஈச்சம்பாடி அழகப்பிரான் என்கிற ஸ்ரீஸௌந்தர தேசிகன் வைபவம்'' எனும் நூலிலிருந்து சில பகுதிகள் பின்வருமாறு :—]

இப்படிக்கொத்த ஸ்ரீ ஆளவந்தார் ஸ்ரீ பாதத்து முதலிகளான 20 திருநாமங்களில் ஒருவராயும் நமக்காசார்யராயும், ஸ்ரீ ஆளவந்தாராலே தாஸ்யநாமம் சாத்தப்பட்ட திருமாலிருஞ்சோலை தாஸர் என்னும் பேருடைய ஸ்ரீஅழகப்பிரான் என்கிற ஸ்ரீ சுந்தர தேசிகன் புரட்டாசி மாஸம் ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் திருமலைக்கு ஸமீபத்திலிருக்கிற ஈச்சம்பாடி என்கிற அக்கிரகாரத்தில் ஸ்ரீநிவாஸாசார்யர்க்குத் திருக்குமாரராகத் திருவவதாரம் செய்தருளினர். திருத்தகப்பனர் இக்குமாரருக்கு ஜாதகர்மம் நாமகரணம் அந்நப்பிராசன செளள உபநயநாதிகளை அந்தந்தக் காலங்களில் சாஸ்த்ரக்கிரமப்படி செய்தருளினர். இம்மஹாப்ரபாவமுடையரான இவ்வழகப்பிரான் ஸகல வித்யைகளையும் காலக்ரமேண அப்யஸித்தருளினர். இக்குமாரரைக் கண்டுகந்து திருமலை நம்பிகள் தன் குமாரத்தியைக் கொடுப்பதாக அத்யவஸிக்க அதை உகந்து இவர் திருத்தகப்பனர் ஸ்ரீநிவாஸாசார்யரும் தம் குமாரரான ஸுந்தர தேசிகனுக்குத் திருக்கல்யாணமும் செய்தருளினர். பிறகு ஸுந்தர தேசிகனும் க்ருஹஸ்தாச்ரம தர்மத்தை நன்ருக அனுஷ்டித்திருந்து திருத்தகப்பனர் நியமனத்தாலே ஆளவந்தார் திருவடிகளை ஆச்ரயித்து பஞ்சஸம்ஸ்காரங்களைப் பெற்று யமுனைத் துறைவராலே தாஸ்யநாமம் சாற்றப்பட்டவராய் அவரிடத்தில் திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் முதலிய ரஹஸ்யார்த்தங்கள் வேதவேதாந்தார்த்த வியாஸஸூத்ரார்த்த ஸகல புராண இதிஹாஸ திவ்ய ப்ரபந்தார்த்தங்கள் தன் ஆசார்யரான ஸ்ரீ ஆளவந்தார் செய்தருளின ஆகம ப்ராமாண்யம், புருஷநிர்ணயம், ஆத்மஸித்தி, ஈச்வரஸித்தி, ஸம்வித் ஸித்தி. கீதார்த்த சங்க்ரகம், ஸ்ரீஸ்தோத்ர ரத்னம், சதுச்ச்லோகீ முதலிய க்ரந்தங்கள் இன்னமும் வேண்டுவன அத்யாத்ம வித்யைகளையும் நன்ருக அப்யஸித்தார்.

ஆசார்யரான யமுனைத் துறைவரையே தமக்கு ப்ராப்ய ப்ராபகமாக அத்யவஸித்து, அவரிடத்திலேயே ஸகல அடிமைகளும் செய்துகொண்டு போருங்காலத்தில் ஆசார்யரான ஸ்ரீஆளவந்தார் அழகப்பிரான் என்கிற ஸுந்தர தேசிகனுக்கு 'தெண்ணீர்பாய் வேங்கடம்''. ''குளிர் அருவி வேங்கடம்'' ''வேயேய் பூம்பொழில் சூழ் விரையார் திருவேங்கடம்'' ''பொங்குநீர் செங்கயல் திளைக்கும் சுனைத் திருவேங்கடம்''........ இப்படிக்கு ஆழ்வார்கள் ஈடுபட்டதும் புராணங்களிலும் ''வேங்கடாத்3ரிஸமம் ஸ்தா2நம் ப்3ரஹ்மாண்டே3 நாஸ்தி கிஞ்சந, வேங்கடேஸஸமோ தே3வோ நபூ4தோ ந பூ4விஷ்யதி'' என்றும், ''மாயாவீ பரமாநந்த3ம் த்யக்த்வா

வைகுண்டமுத்ரமம். ஸ்வாமி புஷ்கரிணீதீரே ரமயா ஸஹமோ த³தனெல்லாரும புகழ்பெற்றதுமான திருவேங்கடமலை ஆகிய திருப்பதியில் திருமஞ்சனம் திருத்துழாய் புஷ்பம் சாத்துப்படி தூபதீபம் வேதபாராயணம் மந்த்ர புஷ்பம் புராணம் முதலிய ஸகல கைங்கர்யங்களையும் நீரும் நம்பியைப்போல் திருவேங்கடத்தானுக்குச் செய்து கொண்டு போரும் என்று ஆசார்யரான ஆளவந்தார் நியமித்தபடி, திருவேங்கடம் என்னும் திருப்பதியில் திருமலைமேல் எந்தைக்குச் செண்பகப்பிராகாரத்தில் தக்ஷிணபாகத்தில் ஒரு பூவலவாபி எடுத்து அந்தக் கூபத்திற்குத் தம்முடைய திருநாமத்தைச் சாத்தி அந்த கூபத்திலிருந்து பெருமாளுக்குத் திருமஞ்சனம் நித்யம் ஸமர்ப்பித்துக்கொண்டு இருந்தார்.

இப்போதும் அந்த ஸௌந்தர கூபத்திலிருந்து திருவேங்கடத்தான் திருவாராதனம் கண்டருளுகிறார்.

இவ்வழகப்பிரான் திருமலையில் ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் திருமலை நம்பிகள் திருமாளிகைப் பக்கத்தில் இருந்துகொண்டு ஸந்நிதி ப்ராகார வெளியில் அனேகம் திருநந்த வனங்களின் நடுவே தாமும் ஓர் உத்₃யானவனம் செய்து அந்த தோட்டத்திற்குத் தம்முடைய திருநாமமான திருமாலிருஞ்சோலை தாஸர் என்னும் பேர்சாத்தி அந்தத் தோட்டத்தில் நின்றும் நாநாவித புஷ்பங்கள் திருத்துழாய் தவனம் மருகு முதலான மாலைகளும் மலையப்பனுக்கு நித்யம் ஸமர்ப்பித்துக்கொண்டு திருவாராதன காலத்தில் வாசிக கைங்கர்யமான திருப்பல்லாண்டு பாடுகை வேதபாராயணம் மந்திரபுஷ்பம் முதலான ஸகல கைங்கர்யங்களிலும் அந்வயித்து எழுந்தருளியிருக்கும் காலத்தில் நம் இராமாநுசன் ஒருகால் திருவேங்கட யாத்ரையில் இம் மஹாப்ரபாவரான இந்த ஸௌந்தர தேசிகரிடத்தில் நம்பிகளின் நியமனத்தால் தாபநீயோபநிஷத்தையும் ந்ருஸிம்ம மந்த்ரம் முதலியவைகளையும் பெற்றுக்கொண்டபடியால் ஸௌந்தர தேசிகன் இராமாநுஜனுக்கும் குருவாகி விளங்கினர்.

பிறகு கோவிந்தன் கைங்கர்யத்தைப் பண்ணிக்கொண்டு போகும் இந்த ஸௌந்தர தேசிகனுக்குச் சிலநாளில் ஒரு குமாரர் தைமாஸம் ஹஸ்த நக்ஷத்திரத்தில் அவதரித்தார். அதற்குப் பிறகு நாலைந்து வருஷம் கழித்து மற்றொரு குமாரர் ஆனிமாஸம் திருவோண நக்ஷத்திரத்தில் அவதாரம் செய்தார்.

திருத்தகப்பனுர் ஸுந்தரதேசிகன் இக்குமாரர்களுக்கு ஜாதகர்மம் நாமகரணம் முதலியவைகளை அந்தந்தக் காலங்களில் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாய் சாஸ்த்ர விஹிதப்படி செய்தருளினுர். முதலில் திருவவதரித்தவருக்கு ஆச்சான் ஸ்ரீனிவாஸாசாரியர் என்றும், மற்றொருவருக்கு ஸ்ரீவேங்கடேசன் என்றும் திருநாமம் சாற்றினுர். மேலும் இக்குமாரர்களுக்கு, காலக்ரமமாக அந்தந்தக் காலங்களில் செய்யவேண்டிய அந்நப் பிராசனம் சௌளம் உபநயநாதிகளை எல்லாம் அந்தந்தக் காலங்களில் சாஸ்திர விதிப்படி செய்து வேதாத்யயனம் முதலான ஸகல வித்யைகளேயும் அப்யஸிக்கும்படிக்கும் திருத்தகப்பனுர் செய்தருளினுர். திருக்குமாரர்களும் ஸகல வித்யைகளிலும் ஸமர்த்தர்களாய் விளங்கும் ஸமயத்திலே இவர்களைக் கண்டுகந்து கன்னிகைகளைக் கொண்டு கொடுக்க, திருத்தகப்பனுரும் உகந்து 2 திருக்குமாரர்களுக்கும் திருக்கல்யாண மஹோத்ஸவத்தையும் சாஸ்திர விஹிதப்படி செய்தருளினுர்.

அனந்தரம் திருக்குமாரர்களும் க்ரஹஸ்தாச்ரம தர்மத்தை அடைந்து விளங்கும் காலத்தில் திருத்தகப்பனுரான ஸ்ரீஅழகப்பிரான் தன் குமாரர்களைக் கடாக்ஷித்து நீங்கள் இனி நம் இராமானுஜன் திருவடிகளை அடைந்து உய்ம்மின் என்று நியமிக்க, அப்படியே இக்குமாரர்களும் இராமானுஜன் திருவடிகளை அடைந்து பஞ்ச ஸம்ஸ்காராதிகளைப் பெற்று திருமந்த்ர த்வய சரமச்லோகார்த்த₂ரஹஸ்யாதிகளேயும் உபநிஷத்—அர்த்தங்களேயும் வியாஸ ஸூத்ரார்த்தங்களேயும் ஸ்ரீபாஷ்யம் திவ்ய ப்ரபந்தார்த்தங்களேயும் ஸகல இதிஹாஸ சாஸ்திர புராண வ்யாகரண தர்க்க மீமாம்ஸாதி ஸகல சாஸ்த்ரங்களேயும் ஆளவந்தார் ஸாதித்த க்ரந்தங்கள் இன்னம் மற்றுமுள்ள அத்யாத்மக்ரந்தங்களேயும் யதிராஜரிடத்தில் அதிகரித்து இராமானுசனேயே எல்லா உறவுமாகப் பெற்று எல்லா வடிமைகளும் செய்து காலக்ரமேண புத்ர பௌத்ர சிஷ்ய ப்ரசிஷ்ய யுக்தர்களாய், பகவத் பாகவத கைங்கர்ய விசிஷ்டர்களாய், ஸ்ரீபாஷ்யாதி திவ்யப் பிரபந்தார்த்த காலக்ஷேபாதிகளுடன் கூடினவர்களாய், சதுஸ் ஸப்ததி பீட ஸ்தர்களில் தலைவர்களாயும் எழுந்தருளியிருந்தார்கள்.

இப்படி சிலகாலம் கழிந்தபிறகு ஸுந்தர தேசிகனுடைய த்விதீய குமாரர் ஜ்ஞான பக்தி விரக்தி யுக்தராய் யதிராசரிடத்

திலே ஸந்யாஸாச்ரம ஸ்வீகாரமும் மந்த்ர த்ரிதண்ட கமண்டலாதிகளையும் பெற்று அதுமுதல் ஈச்சம்பாடி ஜீயர் என்று பெயர் விளங்கி மிகவும் நிஷ்டையுடன் அதிவிரக்தராய் சிஷ்ய ப்ரசிஷ்யர்களுக்கு ஸ்ரீபாஷ்ய திவ்ய ப்ரபந்தார்த்தங்கள் ரஹஸ்ய மந்த்ரார்த்தங்கள் எல்லாம் ஸாதித்துக்கொண்டு ந்ருஸிம்ஹன் திருவாராதனத்துடன் எழுந்தருளியிருந்தாரென்பது ப்ரஸித்தமிறே.

### திருவவதார காலம்

அழகப்பிரான் கலி-4089 சர்வஜித் ஸூ ஸ்வாதி புரட்டாசி-மீ சுக்லபக்ஷம் திருதியை திதி

ஈச்சம்பாடி ஆச்சான்-4126 ரக்தாக்ஷி ஸூ தை-மீ க்ருஷ்ண பக்ஷம் பஞ்சமி திதி ஹஸ்தம்

ஈச்சம்பாடி ஜீயர்ஸ்வாமி கலி-4131 சுக்ல-ஸூ ஆனி-மீ க்ருஷ்ணபக்ஷம் சதுர்த்தி திதி ச்ரவணம்.

### ஸௌந்தர தேசிகன் — வாழித் திருநாமம்

1. புரட்டாசிச் சோதிதனில் புவிவந்தோன் வாழியே.
2. பொழிலமரும் வேங்கடவர் புரோகிதனுர் வாழியே.
3. ஆளவந்தார் தாளிணையாய் அமர்ந்தருள்வோன் வாழியே.
4. வேங்கடமாம் விண்ணகரை விரும்புமவன் வாழியே.
5. செண்பகத்தில் பொற்கூபம் செய்துகந்தான் வாழியே.
6. யதிராசர்க்குத் தாபநீயம் ஈந்தருள்வோன் வாழியே.
7. மாதவனை மறையதனுல் வாழ்த்துமவன் வாழியே.
8. திருவழகப் பிரானுர் தம்—திருத்தாள்கள் வாழியே.

### ஈச்சம்பாடி ஆச்சான் — வாழித் திருநாமம்

1. ஏராரும் தையத்தம் இங்குதித்தோன் வாழியே.
2. சுந்தரேசன் திருமகனுய்த் துலங்குமவன் வாழியே.
3. பார்புகழும் யதிராஜன் பதம்பணிவோன் வாழியே.
4. சீராரும் வேங்கடத்தில் திகழுமவன் வாழியே.
5. பார்மகிழும் பாடியத்தைப் பகருமவன் வாழியே.
6. உத்தமமாம் குலமதனில் உதித்தபிரான் வாழியே.
7. தொண்டர் குழாம் கண்டுகக்கும் தொல்புகழோன் வாழியே.
8. நல் ஈச்சம்பாடி வாழ் நம்மாச்சான் வாழியே.

ஈச்சம்பாடி ஜீயர் — வாழித் திருநாமம்

ஆனிதனில் ஓணத்தில் அவதரித்தோன் வாழியே.
வேங்கடத்தைப் பதியாக விரும்புமவன் வாழியே.
பூவார்ந்த கழல்களையே போற்றுமவன் வாழியே.
பதின்மர்கலை யுட்பொருளைப் பகருமவன் வாழியே.
அனவரதம் அரியுருவன் அடி தொழுவோன் வாழியே.
எப்பொழுதும் யதிபதியை யேத்துமவன் வாழியே.
முத்திதரும் முந்நூலும் முக்கோலும் வாழியே.
எழில்ஈச்சம் பாடிஉறை ஜீயர்தாள் வாழியே.

## 14. திருமலை நல்லான்

குருபரம்பராப்ரபாவம் 241 முதல் 246 வரை உள்ள பக்கங்களிலும், வார்த்தாமாலை 190-ம் வார்த்தையிலும் திருமலை நல்லான் சிஷ்யர்கள் ப்ரபாவம் காணப்படுகிறது. ஆசார்ய வைபவ மஞ்ஜரி முதல் பாகம் 250 முதல் 255 வரை கொடுக்கப்பட்டுள்ளது காண்க.

## 15. ஆட்கொண்டவில்லி ஜீயர்

1. பெரிய திருமுடியடைவு : ஆட்கொண்டவில்லி ஜீயருக்குத் திருநக்ஷத்ரம் சித்திரை மாஸம் திருவாதிரை. இவருக்குத் தனியன் :—

ஜ்ஞாந வைராக்₃ய ஸம்பந்நம் ராமாநுஜ பத₃ாஶ்ரிதம் |
சதுர்த்த₂ாஶ்ரம ஸம்பந்நம் ஸம்யமீந்த்₃ரம் நமாம்யஹம் ||

[ஜ்ஞான வைராக்₃யம் நிறைந்தவராய், எம்பெருமானாரின் திருவடிகளைப் பற்றியவராய், ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொண்டவரான முனிவர் தலைவராம் ஆட்கொண்டவில்லி ஜீயரை வணங்குகிறேன்.]

2. வார்த்தாமாலை [96] ஸ்வஸ்வாதந்த்ர்யம் பீ₃ஜபூ₄தமான ஸம்ஸாரத்தில் அருசியும், ஸ்வபாரதந்த்ர்ய மூலமான உசித கைங்கர்யத்திலே ருசியும், தன்னுடைய ஜ்ஞாநாநுஷ்டா₂நங்களில் ஏ்ராவண்ய பு₃த்₃தி₄யும், இதுக்கு அடியான முமுக்ஷுக்களோட்டை ஸஹவாஸத்தில் கர்த்தவ்யபு₃த்₃தி₄யும், இதினுடைய விபாக து₃ஶையான நித்ய முக்தர் பரமபத₃த்தில் உத்₃தே₃ஶ்ய பு₃த்₃தி₄யும்,

இவை ப்ரபந்ந நிஷ்டை₃; ஸ்வரூபம் ஒருமிது₂நமென்றிருக்கையும், ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்த₂ம் மிது₂ந விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமென்றிருக்கையும், ஸ்வரூபவிரோதி₄ ஸ்வாதந்த்ர்யமென்றிருக்கையும் இவை பரமைகாந்தி நிஷ்டை₂: இவையிரண்டு வார்த்தையும் ஆட்கொண்டவில்லி ஜீயர் அருளிச்செய்தவை.

[விவரணம் : ப்ரபந்நனுக்குத் தொடக்கத்தில் இருக்கவேண்டிய தன்மைகளும், ப்ரபத்தி நிஷ்டை நிறைவடைந்து பரமைகாந்தியான பிறகு ஏற்படும் தன்மைகளும் இங்கு இரண்டு வாக்யங்களால் விவரிக்கப்படுகின்றன. ப்ரபந்நனுக்கு இருக்கவேண்டிய தன்மைகளாவன : (1) 'நானே ஸ்வதந்த்ரன்' என்னும் நினைவாலே ஏற்படும் இவ்வுலக வாழ்க்கையில் உண்டான ருசி நீங்கப் பெறுகை. (2) 'நான் எம்பெருமானுக்குப் பரதந்த்ரன்' என்னும் நினைவாலே, ஸ்வரூபத்துக்குத் தகுந்த ப₄க₃வத்₃ ப₄ாக₃வத கைங்கர்யங்களிலே ருசியுண்டாகை. (3) ப்ரபந்நனுக்கு உரிய ஜ்ஞானமும் அநுஷ்ட₃ானமும் தனக்கு உண்டாகவேணும் என்று ஆசைப்படுகை. (4) அந்த ஜ்ஞாநாநுஷ்ட₂ானங்கள் உண்டாவதற்காக, மோக்ஷமடையவேண்டும் என்னும் விருப்பமுள்ள மற்ற ப்ரபந்நர்களோடு கூடியிருக்க வேண்டுமென்னும் எண்ணம். (5) இவ்வெண்ணத்தின் முற்றிய நிலையான—நித்யர், முக்தர், அவர்கள் வாழும் பரமபத₃ம் ஆகியவற்றை அடையவேணும் என்னும் எண்ணம். பரமைகாந்திக்கு இருக்கவேண்டிய தன்மைகளாவன : (1) நம் கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் ஶேஷி ஸ்வரூபம் பெருமானும் பிராட்டியுமான ஒரு மிது₂னம் என்று நினைத்திருக்கை. (2) அந்த மிது₂ன விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமே ஸ்வரூபத்துக்குத் தக்க புருஷார்த்த₂ம் என்று நினைத்திருக்கை. (3) ஸ்வரூபத்துக்கு முரணான தே₃வதாந்தரம், ப்ரயோஜநாந்தரம், தன் ஆநந்த₃த்துக்காக மோக்ஷத்தை விரும்புவது ஆகியவற்றிலே மூட்டும் ஸ்வாதந்த்ர்யம் (தான் ஸ்வதந்த்ரன் என்னும் நினைவு) ஸ்வரூபவிரோதி₄யாகும் என்று நினைத்திருக்கை. இரு வாக்யங்கள் கொண்ட இவ்வார்த்தை அருளிய ஆட்கொண்டவில்லி ஜீயர் எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களிலொருவர்.]

3. வார்த்தாமாலை [350] ஸ்ரீவைஷ்ணவத்வமாவது—மூன்று ப்ரகாரமாயிருக்கும். எங்ஙனேயென்னில்; ஸத்காரயோக்₃யரென்றும், ஸஹவாஸ யோக்₃யரென்றும், ஸதா₃நுப₄வயோக்₄யரென்றும், ஸத்காரயோக்₃யர்-ரூபநாமப்ரத₄ாநர், உச்சாரணப்ரத₄ாநர்,

அபி₄மானப்ரத₄ர்நர்; ஸஹவாஸயோக்₃யர் - ஜ்ஞானப்ரத₄ர்நர், அநுஷ்டா₂நப்ரத₄ர்நர், அங்கீ₃காரப்ரத₄ர்நர்; ஸத₃ர்நுப₄வயோக்₃யர்-ஆர்த்திப்ரத₄ர்நர், அபி₄நிவேஶப்ரத₄ர்நர், அபி₄ருசிப்ரத₄ர்நர் என்று ஆட்கொண்டவில்லி ஜீயர்.

[விவரணம் : ஸ்ரீவைஷ்ணவர் மூன்று வகைப்படுவர். (1) ஸத்காரயோக்₃யர். (2) ஸஹவாஸயோக்₃யர். (3) ஸத₃ர்நுப₄வயோக்₃யர். இவர்கள் மேன்மேலே சிறப்புற்றவர்கள். (1) ஸத்காரயோக்₃யராவார்-வைஷ்ணவத்தின் முதல்படியிலே நிற்பவர். வைஷ்ணவரென்னும் பெருமையையிட்டு ஸத்காரம் (உபசாரம்) செய்யலாமேயொழிய அடுத்த அதி₄காரிகளைப்போலே கூடிவாழ்வதற்கோ, அதற்கடுத்த உத்தமாதி₄காரிகளைப்போலே எப்போதும் அநுப₄விப்பதற்கோ தகுதியற்றவர்கள் இவர்கள். இவர்களை எப்படிக் கண்டுபிடிப்பது? எனில்; இவர்கள் வைஷ்ணவ ரூபநாமங்களை த₄ரிப்பதை முக்₂யமாகக் கொண்டிருப்பார்களேயொழிய வைஷ்ணவர்களுக்குரிய ஆத்ம கு₃ணங்களையும் அநுஷ்டா₂னங்களையும் கொண்டிருக்கமாட்டார்கள். திருமந்த்ரம் முதலானவற்றை உச்சரித்துக் கொண்டிருப்பார்களேயொழிய, அவற்றின் அர்த்த₂த்தில் ஊன்றி நிற்கமாட்டார்கள். 'நான் வைஷ்ணவன்' என்று க₃ர்வங்கொண்டிருப்பார்களேயொழிய வைஷ்ணவர்களுக்கு வேண்டிய அடக்கத்தோடு இருக்கமாட்டார்கள். சுருங்கக் கூறினால் அடுத்த அதி₄காரியிடமுள்ள ஜ்ஞானமும், அநுஷ்டா₂னமும், அங்கீகாரமும், உத்தமாதி₄காரியிடம் உள்ள ஆர்த்தியும் அபி₄நிவேஶமும் அபி₄ருசியும் இவர்களிடம் இராது. (2) ஸஹவாஸயோக்₃யராவார்—கூடிப் பழகுவதற்குத் தகுதியுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள். முற்கூறியவர்களைக் காட்டிலும் சிறந்தவர்கள். ஞானம் அனுட்டானமிவை நன்றாகவேயுடையவர்கள். ஒரு ஸத₃ாசார்யனால் அங்கீ₃கரிக்கப்பட்ட பெருமையையுடையவர்கள். ஆகையால் இவர்களோடு கூடிப்பழகுவதால் நன்மையுண்டு. (3) ஸத₃ர்நுப₄வயோக்₃யராவார் — "ஆஹ்லாத₃ஶீத நேத்ராம்பு₃: புலகீக்ருதகா₃த்ரவாந்| ஸதா₃ பரகு₃ணாவிஷ்ட: த்₃ரஷ்டவ்யஸ்ஸர்வதே₃ஹிபி₄:||" [விஷ்ணுதத்வம்] [ஆநந்த₃க்கண்ணீர் பெருகாநிற்பவராய், உடம்பெங்கும் மயிர்க்கூச்செறியாநிற்பவராய், இதற்குக் காரணமாக எப்போதும் ப₄க₃வத்₃ கு₃ணாநுப₄வம் செய்பவர்களான ஸ்ரீவைஷ்ணவோத்தமர்கள், ஶரீரம் படைத்த அனைவராலும் கண் காது முதலான ஸகலேந்த்₃ரியங்களாலும் எப்போதும் அநுபவிக்கத்தக்கவர்கள். (உடம்பைப் படைத்த பயன் இவர்களை அநுப₄விப்

ப்தேயென்கை)] என்கிறபடியே முற்கூறிய இருவகையினரைக் காட்டிலும் சிறந்த உத்தம ஸ்ரீவைஷ்ணவர்கள். இவர்கள் ப₄க₃வத்₃ பாகவதர்களைப் பிரிந்தால் ஆர்த்தி (வருத்தம்) விஞ்சியிருப்பார்கள். பகவத் பா₄க₃வதர்களோடு கூடி நிற்கவேணும் என்னும் அபி₄நிவேஶம் (பெருவிருப்பம்) மிக்கிருப்பார்கள். ப₄க₃வத் பா₄க₃வத கைங்கர்யங்களைச் செய்வதில் அபி₄ருசி (பெருத்த ஈடுபாடு) உடையவர்களாயிருப்பார்கள். ஆகையால் இவர்கள் உடம்பு படைத்த அனைவராலும் எப்போதும் அநுப₄விக்கத்தக்கவர்கள் என்பது எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களில் ஒருவரான ஆட்கொண்டவில்லி ஜீயரின் வார்த்தை.

4. வார்த்தாமாலை [441] ''பாய்ந்த பாய்ச்சலே தஞ்சமென்றிருந்தேன்'' என்றார் ஆட்கொண்டவில்லி ஜீயர்.

5. திருப்பாவை [7] (ஆறாயிரப்படி அவதாரிகை) ஆட்கொண்டவில்லி ஜீயர் எழுந்தருளாநிற்கச்செய்தே நஞ்சீயர் தண்டனிட்டு நிற்க, 'பகவத் விஷயத்தில் ருசி நமக்கு மெய்யாகப் பிறந்ததில்லை காணும்' என்றருளிச்செய்ய, 'உம்மைப்போலே ஆசார்யவான்களுண்டோ? இங்ஙனே அருளிச்செய்வதேன்? என்ன; ''பகவத் விஷயத்திலே மெய்யே ருசியுண்டென்றிருக்கையாவது—பாகவதர்களைக் கண்டால் உகக்குமன்று காணும்'' என்றருளிச் செய்தார்.

[காஞ்சீ P B A ஸ்வாமியின் குறிப்பு : ஆட்கொண்டவில்லி ஜீயரென்பவர் எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்தவர்களில் ஒருவர்; அவர் நஞ்சீயர் காலத்திலும் எழுந்தருளியிருந்தார். அவர் ஒரு நாள் நம்பெருமாளை மங்களாசாஸனம் செய்துவிட்டுத் திரும்புகையில் நஞ்சீயர் அவரைத் தண்டனிட்டு நல்வார்த்தை கேட்டருளுகையில், ''எம்பெருமான் திறத்தில் நமக்கு மெய்யான ருசி உண்டாகவில்லையே'' என்று அவர் குறையுடன் பணித்தாராம்; அதைக் கேட்டு நஞ்சீயர், ''தேவரீரும் இப்படி ஸாதிக்கலாமோ? ஸாக்ஷாத் எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயிக்கும் பாக்கியம் பெற்ற தேவரீருக்கு பகவத் விஷயத்தில் மெய்யான ருசியில்லை என்னப்போமோ?'' என்றாராம். அதற்கு அவர் அருளிய மறுமாற்றம்—'நாம் எம்பெருமான் ஸன்னிதிக்குப் போய்வருகிறோம்;

அப்பெருமானை ஸேவித்து வருகிறோம், அவனது வடிவழகில் ஈடு பட்டுக் கண்ணீர் பெருக்குகிறோம் என்பதெல்லாம் வாஸ்தவமே; பாகவதர்களைக் கண்டால் நிலாத்தென்றல் சந்தனம் புஷ்பம் முத லானவற்றைக் கண்டாற்போல் உகந்திருக்கப் பெற்றாலன்றோ பகவான் திறத்தில் நமக்கு உண்மையான ருசியுண்டாகப் பெற்ற தாவது; அது இல்லையே! ஆதலால் சொன்னேன்' என்று. இத ளுல் பாகவதர்கள் விஷயத்தில் ப்ரதிபத்தியுண்டாவது மிகவுமரிது— என்றதாயிற்று.]

ஆட்கொண்டவில்லி வம்சஸ்தரான ஸ்ரீவில்லிபுத்தூர் A R ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி எழுதியவை :—

ஸ்ரீவில்லிபுத்தூரில் வாதூல வீரராகவர் என்ற மஹான் இருந் தார். வில்லிபுத்தூரிலிருந்து பலரை ஆட்கொண்டதால் அவருக்கு ஆட்கொண்டவில்லி என்ற திருநாமம் ஏற்பட்டது. இவர் குமாரர் ஆட்கொண்டவில்லி அம்மங்கியார். இவர் ஆளவந்தார் சிஷ்யர். இவர் குமாரர் வகுளாபரணர் என்ற ஆட்கொண்டவில்லி ஜீயர். எம்பெருமானார் சிஷ்யரான இவர் ஸிம்ஹாஸநாதிபதிகளில் ஒருவ ராக நியமிக்கப்பட்டார்.

## 16. பெரியகோயில் வள்ளலார்

**1. வார்த்தாமாலை [203]** நஞ்ஜீயரைப் பெரியகோயில் வள்ளலார் திருவாய்மொழியிலே ஓரர்த்தப்ரஸ்தாபத்திலே ஜீய ரருளிச் செய்தபடியொழிய இங்ஙனேயாளுலோவென்ன; 'நான் சொன்னபடி அழகிதென்று திருக்கலிகன்றி தாஸர் சொல்லுவர்' என்று ஜீயர் அருளிச்செய்ய; 'உம்முடைய ஶிஷ்யர் அழகியதென்ப ரென்றது ப்ரமாணமாகச் சொல்லுவானென்?' என்ன; 'அதி லொரு நிர்பந்தமில்லைகாணும், ஸதாசார்ய ஸந்நிதியோடு ஸச்சிஷ்யஸந்நிதியோடு வாசியில்லைகாணும் ஒருவனுக்குத் திருத் தம் பிறக்க' என்றருளினர்.

[விவரணம் : 'நல்ல ஆசார்யன் மூலமாக நம்முடைய ஜ்ஞா னத்தைச் சீர்திருத்திக்கொள்வதுபோலே, நல்ல ஶிஷ்யன் மூல மாகவும் நாம் அறியாத ஓர் அர்த்தம் கிடைத்தால் அதைக் கொண்டு நம்முடைய ஜ்ஞானத்தைத் திருத்திக்கொள்ளலாம்' என்ற பரந்த மனப்பான்மையை உடையவர் நஞ்ஜீயர் என்பது

இவ்வார்த்தையிலிருந்து விளங்குகிறது. அருளிச்செயல் வ்யாக்யானங்களிலும் சில இடங்களில் நம்பிள்ளையாகிற திருக்கலிகன்றிதாஸர் தம் ஶிஷ்யரென்றும் பாராமல் சில அபூர்வார்த்த₂ங்களை அவர் சொல்லும்போது அவற்றை ஏற்று நஞ்சீயர் அவரைக் கொண்டாடினார் என்று காணப்படுகிறது ]

**2.** வார்த்தாமாலை [358] ஸ்ரீவைஷ்ணவர்களென்று இவர்களுக்குப் பேராகைக்கு அடி ஏதென்று கேட்க; "ஸ்ரீமத்புத்ரராகையாலும், ஸ்ரீமாந் பிதாவாகையாலும், ஸ்ரீ புருஷகாரமாகையாலும், ஸ்ரீமாந் வைப₄வத்தையறிகையாலும், இவர்கள் ஸ்ரீமத்பத₃த்தே பிறக்கையாலும் ஸ்ரீவைஷ்ணவர்களென்று நிருபகம்"—என்று பெரியகோயில் வள்ளலார் அருளிச்செய்வர்.

[விவரணம் : ஸ்ரீவைஷ்ணவர்கள் என்னும் திருநாமம் எம்பெருமானடியார்களுக்கு ஏற்படுவதற்குப் பின்வரும் காரணங்கள் சொல்லலாம் :— (1) ஸ்ரீமானான எம்பெருமானுக்கு இவர்கள் செல்லப்பிள்ளைகள். (2) ஶ்ரிய:பதியான எம்பெருமான் இவர்களுக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருப்பவன். (3) பிராட்டி இவர்களுக்குப் புருஷகாரமாயிருப்பவள்; இப்படி ஸ்ரீஸம்ப₃ந்த₄த்தால் வைஷ்ணவர்கள் ஆனவர்கள் என்றபடி. (4) ஸ்ரீமானான் எம்பெருமானுடைய பெருமையை அறிந்தவர்கள். (5) "ஸ்ரீமந் நாராயண" என்று தொடங்கும் த்₃வயத்தாலே ஜ்ஞானஜன்மமடைந்தவர்கள். இக்காரணங்களாலே இவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள். இது எழுபத்து நாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளில் ஒருவரான பெரியகோயில் வள்ளலார் அருளிச்செய்த வார்த்தை.

**3.** வார்த்தாமாலை [440 h] நம்பிள்ளை ப்₃ரஹ்மதே₃ஶத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தே பெரியகோயில் வள்ளலார் காணவர, "குலந்தரும்" என்கிற பாட்டில் முதல் பத₃த்துக்குத் தாத்பர்யமருளிச்செய்யவேணுமென்று பிள்ளையைக் கேட்க, "முரட்டுத் திருப்பதியானான உன்னை நம்மூர் குலத்துக்கு ஶேஷமாக்கின குலம் தரும்" என்று விண்ணப்பஞ் செய்தார்.

## 17. மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டான்

1. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: மஞ்ஜரி முதல் பாகம் பக்கம் 266-ல் முதல் பாரா இறுதியையும், அடுத்த பாராவில் பக்கம் 267-ல் ''மீளவும் த்3வயத்தையே அவர்களுக்குப் பரிசிலாக இரங்கியருளி'' என்பது வரையிலும் காண்க.

2. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: மாருதிச் சிறியாண்டான் தம்முடைய அந்திமத3ஶையிலே பணித்த வார்த்தை :— திருவேங்கடமுடையான் தன் ஸ்வரூபத்தை மறந்து என் ஸ்வரூபத்தை நினைத்தானாகில், பழைய நரகங்களொழிய வேறே எனக்கென்று சில நரகங்களை ஸ்ருஷ்டிக்கவேணுமிறே; அன்றிக்கே, என் ஸ்வரூபத்தை மறந்து தன் ஸ்வரூபத்தை உணர்ந்தானாகில், பழைய திருநாடு போராது; எனக்கென்று வேறே ஒரு திருநாடு ஸ்ருஷ்டிக்க வேணுமிறே; அதாவது—ஸ்வக்ருத தோ3ஷஸ்மரணம் அநந்தது3:க்க2ப்ரத3ாநஹேது; ஈஶ்வர வாத்ஸல்யஸ்மரணம் அநந்தாஶ்சர்யஸுக2ப்ரத3ாநஹேது என்றபடி.

இவர் தனியன் ''ஜ்ஞாதும் கூரகுலாதி4பம் க்ரிமிக3ளாத் ப்ராப்தாபத3ம் ப்ரேஷித: | ஸ்ரீராமாவரஜேந கோஸலபத3ாத் த்3ருஷ்ட்வா ததீ3யாம் ஸ்தி2திம் || ஸம்ப்ராப்தஸ்த்வரயா புராந்தகபுராத் கல்யாணவாபீதடே யோऽஸௌ மாருதிரித்யஸம்ஸத வயம் தஸ்மை நமஸ்குர்மஹே ||''

[கிரிமிகண்டனிடம் ஆபத்தடைந்த கூரத்தாழ்வானைப் பற்றி அறிய, கோஸலராஜ்யத்தினின்றும் எம்பெருமானாராலே அனுப்பப் பெற்றவராய் அவருடைய நிலையை அறிந்து புராந்தக புரத்தினின்றும் அதிவேகமாகக் கல்யாணி ஸரஸ்ஸின் கரையை (நல்ல செய்தியுடன்) வந்தடைந்தமையாலே '(மாறொன்றில்லா) மாருதி' என்று எவரொருவர் எம்பெருமானாராலே கொண்டாடப்பட்டாரோ, அத்தகைய மாருதிச் சிறியாண்டானை நமஸ்கரிக்கிறோம்.]

3. வார்த்தாமாலை [91]: a சிறியாண்டான் தம்முடைய அந்திமத3ஶையிலே பணித்த வார்த்தை ;— திருவேங்கடமுடையான், தன் ஸ்வரூபத்தை மறந்து என் ஸ்வரூபத்தை நினைத்தானாகில் பழைய நரகங்களொழிய வேறே எனக்கொரு நரகம் ஸ்ருஷ்டிக்க வேணும்; அன்றிக்கே, என் ஸ்வரூபத்தை மறந்து தன் ஸ்வரூபத்தை உணர்ந்தானாகில் பழைய திருநாடு போராது, எனக்கென்ன ஒரு திருநாடு ஸ்ருஷ்டிக்கவேணும்.

[விவரணம் : a சிறியாண்டான்—எம்பெருமானாருடைய ஶிஷ்யராய் க்ருமி கண்ட₂ன் அழிந்த நற்செய்தியைத் திருநாராயண புரத்தில் எம்பெருமானாருக்குச் சொல்லி, 'அவரால் மாறொன்றில்லா மாருதி' (ஸீதா பிராட்டியால் கைம்மாறு காணமுடியாத அனுமனைப் போன்றவர்.) என்று கொண்டாடப் பெற்ற சிறியாண்டான். ஐ. நி. 2-ல் இவ்வார்த்தையின் விவரணம் காண்க.]

## 18. காராஞ்சி ஸோமயாஜியார்

**சரமோபாய நிர்ணயம் :** காராஞ்சியில் ஸோமயாஜியார், எம்பெருமானார் திருவடிகளிலே ஆஶ்ரயித்துச் சிலநாள் ஆசார்ய கைங்கர்யம் பண்ணிக்கொண்டிருந்து, பின்பு தம்முடைய ஊரான காராஞ்சியிலே எழுந்தருளிச் சிலநாள் கழித்தவாறே. ஸ்வாசார்யரைத் தேட்டமாய், தே₃வியாருடைய உபாதி₄யினாலே ஸ்வாசார்யருடைய ஸன்னிதி₄க் கெழுந்தருளக் கூடாமையாலே, எம்பெருமானார்க்கு ப்ரதிநிதி₄யாக ஒரு விக்₃ரஹம் ஏறியருளப்பண்ண, அந்த ஸம்ஸ்த₂ானம் நன்றாக வகுப்புண்ணாமையாலே அத்தையழித்து வேறே ஏறியருளப்பண்ண, அற்றைக்கு ராத்ரி இவர் ஸ்வப்னத்திலே உடையவர் எழுந்தருளி, "நீர் ஏன் இப்படி நம்மை நலிந்து உருவழிக்கிறீர். எங்ஙனேயிருந்தாலும் நம்முடைய அபி₄மானமே உத்தாரகமென்று அத்₄யவஸிக்கமாட்டாத நீரோ நம் விக்₂ரஹத்திலே ப்ரதிபத்தி பண்ணப்போகிறீர்" என்று அருளிச்செய்ய, திடுக்கிட்டு எழுந்திருந்து அப்போதுதானே அந்த விக்₃ரஹத்தை சேமத்திலே எழுந்தருளப்பண்ணி, தே₃வியாரையும் அறத்துறந்து, அங்கு நின்றும் புறப்பட்டுக் கோயிலேற எழுந்தருளிக் கண்ணும் கண்ணீருமாய்க் கைகால் பதறி வந்து உடையவர் திருவடிகளிலே வேரற்ற மரம்போலப் புகல் அற்று விழுந்து பெருமிடறு செய்து அழப்புக்கவாறே. இது ஏதென்று கேட்டருள, அங்குற்றை வ்ருத்தாந்தத்தை ஸப்ரகாரமாக விண்ணப்பம் செய்ய, உடையவரும் முறுவல் செய்தருளி, "வாரீர் அஜ்ஞசதாவே! உம்முடைய ஸ்த்ரீபாரவஶ்யத்தை அறுக்கவேண்டிச் செய்தோமித்தனை; நீர் இகழ்ந்தாலும் நாம் உம்மை நெகிழவிடத்தக்கதில்லை. நீர் எங்கேயிருந்தாலும் நம்முடைய அபி₄மானத்தாலே உம்முடைய பேற்றுக்குக் குறைவாராது. ஸர்வப₄ரங்களையும் நம் பக்கலிலே பொகட்டு நிர்ப்ப₄ரராய் மார்விலே கைபொகட்டு உறங்கும்" என்று அருளிச்செய்தார்,—என்று நம்முடைய பிள்ளை அருளிச்செய்வர். [நம்முடைய பிள்ளை—பெரியவாச்சான் பிள்ளை.]

## 19. தொண்டனூர் நம்பி

1. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : அங்கே அத்தேசத்திற்கு அதி₄பதியான விடலதே₃வராயன் மகள் பிராசாவிஷ்டையாயிருக்க, அவனும் மந்த்ரவாதி₃கள் பலரையுங்கொண்டு தீர்க்கத் தேடினவிடத்திலும் தீராதபடியாலே து₃:க்கி₂தனுயிருக்க, தத்பத்னியும் நிர்வாணமாய் ஓடித்திரிகிற தன் பெண்ணைக் கண்டு மிகவும் வ்யாகுலப்பட்டிருக்குமளவிலே தொண்டனூர் நம்பி உபாத்₃ாநார்த்த₂மாக ராஜக்₃ருஹத்தேற எழுந்தருளினவர். து₃:க்கி₂தையான ராஜபத்நியைக் கண்டு 'து₃:க்க₂ஹேது என்?' என்று கேட்டருள, அவளும் தத்காரணத்தைச் சொல்ல, நம்பியும் கேட்டருளி 'நம் ஆசார்யர் எம்பெருமானுர் எழுந்தருளினுர்; அவர் கடாக்ஷித்தால் இப்பேய் காடேறிப்போம்' என்று ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸின் கதையை ஸவிஸ்தாரமாக அவளுக்கு அருளிச்செய்ய, அவளும் கேட்டு ஆஶ்சர்யப்பட்டுத் தன் ப₄ர்த்தாவுக்கு அறிவிக்க, அவனும் 'உடையவர் இப்பேயை விடுவிக்கில், அவரே நமக்கு ஆசார்யர்; அவர் திருவடிகளில் ஆஶ்ரயிக்கக்கடவேன்' என்ன, அவ்வளவிலே அவன் ஸ்வகு₃ருக்களுக்கு விருந்திடத்தேட, இவளும் தன் ப₄ர்த்தாவைக் குறித்து. 'நீர் அங்கு₃ஹீநரென்று அவர்கள் இங்கே வாரார்கள்; சொல்லாதேகொள்ளும்' என்ன, அவனும் 'அவர்கள் வாராதிருப்பார்களோ?' என்று இவள் வார்த்தையை அதிக்ரமித்துச் சொல்லிப்போகவிட, அவர்களும் முன்பு டில்லீஶ்வரனுன துருஷ்கன் இவனை ஆக்ரமித்துப் பிடித்துக் கொண்டுபோய், பட்டார்ஹனன்றிக்கே போம்படி ஒரு அங்கு₃லிச்சே₂த₃ம் பண்ண. அத்தால் 'விடல தே₃வராயன்' என்று ப்ரஸித்₃த₄மாகையாலே, ஹீநாங்க₃னகத்தே பு₄ஜிக்க வொண்ணுதென்று தவிர்த்துவிட்டார்கள்; அதுகண்டு அவன் அவர்களிடத்தே அதிகுபிதனுய் அவர்களைத் திரஸ்கரித்திருக்குமளவிலே, அவனுடைய ஸ்த்ரீயும் அவனைக் குறித்து 'உடையவர் திருவடிகளில் ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கலாகாதோ? இவர்களால் என்ன ப்ரயோஜனமுண்டு?' என்ன; அவனும் இசைந்து உடையவரை 'ஸ்வக்₃ருஹத்தேற எழுந்தருளவேணும்' என்று ப்ரார்த்தி₂க்க, இராமாநுசனும் 'நாம் ராஜத₄ாநியை மிதிக்கக் கடவோமல்லோம்' என்று அருளிச்செய்ய, அவ்வளவிலே தொண்டனூர் நம்பி முதலான முதலிகள் 'இவனை விஶேஷ கடாக்ஷஞ் செய்தருளினுல் த₃ர்ஶநத்துக்கு ப₃ஹுஉபகாரமுண்டு' என்று ப₃ஹுஶ: வேண்டிக்கொள்ள, உடையவரும் ஸம்மதித்து அவனகத்தேற எழுந்தருளினவளவிலே அவனும் அதிஸந்துஷ்ட

ணாய்த் திருவடிகளிலே ஸாஷ்டாங்க₃ ப்ரணாமம்பண்ணி ஸவிநய ராய் நிற்க. முதலிகளும் உடையவர் ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தை அவன் புத்ரிக்கு ப்ரஸாதி₃த்துத் தத்தீர்த்த₂த்தாலே ப்ரோக்ஷிக்க, அவளு டைய சித்தப்₄ரமம்போய்த் தெளிந்துவந்து சேலையும் உடுத்து உடையவரை ஸேவிக்க, இத்தை விடலதே₃வராயன் கண்டு அத் யாஶ்சர்யப்பட்டுத் தத்க்ஷணமே ஸ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயிக்க, அவனை யும் இரங்கியருளித் திருவடிக்கு அந்தரங்க₃னும்படி கடாக்ஷித் தருளினார்.

2. **சரமோபாய நிர்ணயம் :** அருளாளப் பெருமாளெம்பெரு மானார் திருவடிகளிலே ஆஶ்ரயித்த அனந்தாழ்வானும் எச்சானும், தொண்டனூர் நம்பியும், மருதூர் நம்பியும் உடையவர் திருவடி களிலே த₃ண்ட₃ம் ஸமர்ப்பித்து, "இவ்வாத்மாவுக்கு ஆசார்யன் ஒருவனோ பலரோ?, இத்தனை பேருண்டென்று நிஶ்சயித்து அருளிச் செய்யவேணும்" என்று கேட்க, 'பொன்னாச்சியாரைக் கேளுங் கோள்' என்று அருளிச்செய்ய, அவர்களும் அங்கே எழுந்தருளி, "எம்பெருமானார் தேவரீரைக் கேட்கச்சொல்லி அருளிச்செய் தார். இவ்வாத்மாவுக்கு ஆசார்யன் ஒருவனோ பலரோ? இத் தனை பேருண்டென்று தேவரீர் நிஶ்சயித்தருளிச்செய்யவேணும்" என்ன, அவரும் திருக்குழற்கற்றையை உதறி ஒன்றாக ஒட்ட முடிந்து போகட்டுக்கொண்டு. "அடியேனாலே இது நிஶ்சயித் துச் சொல்லக்கூடாது. அப₃லையான அடியேனுக்குத் தெரியுமோ? எம்பெருமானார் தாமே அருளிச்செய்ய வேணுமித்தனை" என்று அருளிச்செய்து, தரையிலே கிடந்த காவி நூலை எடுத்துத் தலை யிலே வைத்துக்கொண்டு உள்ளே எழுந்தருளினார். இவர்களும் அப்ராப்தமநோரத₂ராய், உடையவர் ஸன்னிதி₄யிலே சென்று த₃ண்ட₃ம் ஸமர்ப்பித்து நிற்க, போன கார்யம் என்னென்று கேட்டருள, அவர் — தமக்குத் தெரியாது. எம்பெருமானார் தாமே அருளிச்செய்ய வேணுமித்தனை — என்று அருளிச்செய் தார் என்ன, நீங்கள் போனபோது அவர் செய்த வ்யாபாரம் என்னென்று கேட்க, "திருக்குழற்கற்றையை உதறி ஒன்றாக முடித்துத் தரையிலே கிடந்த காவிநூலை எடுத்துத் தலையிலே வைத்துக்கொண்டு எங்களை அனுப்பி உள்ளே எழுந்தருளினார்." என்ன, "அவர் வெறுமனே எழுந்தருளவில்லை. நீங்கள் பண் ணின ப்ரஶ்னத்துக்கு ஸது₃த்தரமாகப் பொருள் சொல்லிப் போனார். உங்களுக்குத் தெரிந்ததில்லையே" என்றருளிச்செய்ய, ஆகிலும் அந்த அர்த்த₂த்தை தேவரீர் வெளியிட்டருள வேணு

மென்ன, உடையவர் அருளிச்செய்தபடி—"அவர் திருக்குழற் கற்றையை உதறினத்தினுலே—இவ்வாத்மாவுக்கு ஆசார்யனைப் பார்க்கும்போது ஓரோராகாரத்தாலே பலராயிருக்குமென்றபடி, ஒன்ருக முடிந்து பொகட்டத்தாலே—இவனுக்கு ஆசார்யனுய் நின்று பேற்றைப் பண்ணிக்கொடுக்கிறவன் ஒருவனென்றபடி; தரையிலே கிடந்த காவிநூலை எடுத்ததினுலே பேற்றுக் குடலாக அறுதியிட்ட ஆசார்யனை விசேஷிப்பதாக நினைத்துப் பேற்றுக் குடலாக அறுதியிட்ட ஆசார்யர் சதுர்த்த₂ாஶ்ரமத்தை ப்ரா பித்துக் காஷாயம் சார்த்தியிருக்கிற எம்பெருமானுரென்று நம்மைச் சொன்னபடி. தலையிலே வைத்ததினுலே நமக்கு மூர்த்த₄ந்யரான இவர் அனைவர்க்கும் அதிஶயாவஹர் என்னுமிடத்தை வெளியிட்ட படி; அங்கிராமல் உள்ளே புகுந்ததினுலே இப்படிப்பட்ட ஆசார்யனை ஹ்ருதயத்துக்குள்ளே, ''பேணிக் கொணர்ந்து புகுத வைத்துக்கொண்டேன் பிறிதின்றி'' என்கிறபடியே பேணியிட்டு வைத்துக்கொண்டு அநுஸந்தி₄த்துக்கொண்டு இருக்கையே தத் ஸம்ப₃ந்தி₄களுக்கு ஸ்வரூபமென்னும் அர்த்த₂த்தை வெளியிட்ட படி. ஆகையாலே நீங்களும் இவ்வர்த்த₂த்திலே நிஷ்ட₂ராய்ப் போருங்கோளென்று அருளிச்செய்தார். இத்தாலே பொன்னுச்சி யாரையிடுவித்துத் தம்முடைய உபாயதாத்மகமான ஆசார்யத் வத்தை வெளியிட்டபடியிறே.

3. வார்த்தாமாலை [44] : தொண்டனூர் நம்பி 'பின்னுட்டி யாகப் பெற்றிலேன்' என்ருர். [வரலாறு விளங்கவில்லை.]

4. வார்த்தாமாலை [450] : a 'ப₄க₃வச்சே₂ஷமாய் வைத்து அகன்றுபோன ஆத்மாவை எம்பெருமானேடே சேர்க்கைக்குப் பற்ருசாகப் பிராட்டியுளள்' என்று அத்₄யவஸித்திருக்கை. தொண்டனூர் நம்பி தம்முடைய அந்திமத₃ஶையிலே மருதூர் நம்பி நடக்க, ''இவ்வாத்மா எம்பெருமானைப் பற்றிக் கரைமரஞ்சேரும் ப+ ஒரு வார்த்தை சொல்லவல்லையோ?'' என்று கேட்க; ''எம் பெருமானுக்கு இல்லாததுமாய் இவ்வாத்மாவுக்கு உள்ளதொன்று மாய், எம்பெருமானைப் பெறுகைக்குப் பொருள் விலையுந்தானேயா யிருப்பது ஒரு அஞ்சலியேகாண்'' என்றருளிச்செய்தார். அதெங் ஙனேயென்னில்;-அடித்துப் பறிக்கும் த₃ஶையிலே ஓரறிமுகம் பெற்ருற்போலேயும், க₃ருட₃முத்₃ரைக்கு விஷம் தீருமாப்போலே யும், நமக்குப் புருஷகாரபூ₄தையான பிராட்டி உளள் என்று அத்₄ யவஸித்திருக்கையே வேண்டுவது.

[விவரணம் : அநாதி$_3$காலமாக எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருந்தும் அகன்றிருந்த இவ்வாத்மாவை எம்பெருமானோடே சேரவைப்பதற்குப் புருஷகாரபூ$_4$தையான பிராட்டி இருக்கிறாள் என்று உறுதிபூண்டிருக்கையே ஜீவன் செய்யவேண்டியது என்னும் அர்த்த$_2$த்தை ஐதிஹ்யத்தைக் காட்டி நிரூபிக்கிறது இவ்வார்த்தை. தொண்டனூர் நம்பியினுடைய அந்திம காலத்தில் மருதூர்நம்பி எழுந்தருள, தொண்டனூர்நம்பி அவரிடம் தமக்கு உய்யும் வகையொன்றைக் கேட்க, 'அஞ்ஜலிரூபமான காயிகப்ரபத்தியே அது' என்று மருதூர்நம்பி அருளிச்செய்தார். இந்த அஞ்ஜலியைப் பரமாத்மா ஒருவரைக் குறித்துச் செய்யமுடியாது. நாம் அவனைக் குறித்துச் செய்யக்கூடியது இது. "அம் ஜலயதி இதி அஞ்ஜலி:" [அகாரவாச்யனான எம்பெருமானை நீர்போலே உருக்குகிறதாகையால் 'அஞ்ஜலி' எனப்படுகிறது.] என்னும் வ்யுத்பத்தியின்படி எம்பெருமானைப் பெறுகைக்கு எளிய உபாயமாயிருப்பது அஞ்ஜலி. தன் கையில் ஒன்றுமில்லை என்பதைக் காட்டுவதாயிருப்பதாலே காயிகப்ரபத்தியாகவேயிருப்பது அஞ்ஜலி என்று கருத்து. இந்த அஞ்ஜலியையும் பிராட்டியைப் புருஷகாரமாக வரித்துச்செய்யவேண்டும். வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் நம்மிடம் உள்ளதையெல்லாம் அடித்துப் பறிக்கும் காலத்தில், அவர்களை விரட்டவல்ல ஒரு துணைவன் அங்கு வந்தது போலவும், பாம்பு கடிக்கப் பெற்றவனுடைய விஷம் க$_3$ருட$_3$முத்$_3$ரையால் தீருவதுபோலவும், புருஷகார பூ$_4$தையான பிராட்டி ஸந்நிதியாலே நமக்குப் பேறு தப்பாமற் கிடைக்கும். ஓர் அஞ்ஜலிமாத்ரத்திலே எம்பெருமான் தன்னை நிர்ஹேதுகமாக அளிப்பான் என்று உறுதி பூண்டிருப்பதே இவன் செய்யவேண்டுவது. தொண்டனூர் நம்பியும் மருதூர் நம்பியும் எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களாய் அவரால் நியமிக்கப்பெற்ற ஸிம்ஹாஸநாதி$_4$பதிகளாய் அவருக்குப் பின் அருளாளப் பெருமாள் எம்பெருமானார் திருவடிகளை ஆஶ்ரயித்தவர்கள்.]

## 20. மருதூர் நம்பி

**1. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் :** மருதூர் நம்பி தம்முடைய அந்திமத$_3$ஶையிற் பணித்த வார்த்தை : 'மூன்று ஜந்மம் தம் திருவடிகளிலே அபராத$_4$ம் பண்ணின ஶிஶுபாலன் திருவடிகளையடைந்தான். அநந்த ஜந்மம் திருவடிகளிலே அபராத$_4$ம் பண்ணின நான் இழந்திருக்கை வழக்கோ?' என்ன, சிங்கர்

அன்றே திருவடிகளைத் தந்தருளினார்; அதாவது—இத்தலையில் அபராத₄மே அவன் அங்கீ₃காரத்திற்குப் பச்சையென்று உணர்கை சரம ஜ்ஞாநபரியாகமென்றபடி.

2. சரமோபாய நிர்ணயம் : தொண்டனூர் நம்பி 2-வது ஐ. நி. காண்க.

3. வார்த்தாமாலை [89] : a மருதூர் நம்பி தம்முடைய அந்திம த₃ஶையிலே பணித்த வார்த்தை; "மூன்று ஜந்மம் திருவடிகளிலே அபராத₄ம் பண்ணின ஶிஶுபாலன் திருவடிகளைப் பெற்றான்; அநாதி₃ காலம் திருவடிகளிலே அபராத₄ம் பண்ணின நான் பெறு திருக்கை வழக்கோ?" என்று அழ, அப்போதே பரமபத₃த்தேற எழுந்தருளினார்.

[விவரணம் : a மருதூர் நம்பி—எம்பெருமானார் ஶிஷ்யர்களில் ஒருவர்.]

4. வார்த்தாமாலை [450] : a தொண்டனூர் நம்பி 4-வது ஐ. நி. காண்க.

## 21. வங்கிப்புரத்து நம்பி

1. பெரிய திருமுடியடைவு : மணக்கால் நம்பி திருவடிகளிலாஶ்ரயித்தார் வங்கிபுரத்தாச்சி; குமாரர் எம்பெருமானார் திருவடிகளிலாஶ்ரயித்த வங்கிபுரத்து நம்பி. அவர் குமாரர் வங்கிபுரத்தாச்சி. அவர் குமாரர் வங்கிபுரத்தாச்சான். அவர் குமாரர் ஸ்ரீரங்க₃ராஜர், அவர் குமாரர் கரிகி₃ரீஶர். அவர் குமாரர் தே₃வராஜர். அவர் குமாரர் வரத₃ராஜர். அவர் குமாரர் ஸ்ரீரங்க₃ராஜர். அவர் குமாரர் பெரிய திருவேங்கடாசார்யர், சிறிய திருவேங்கடாசார்யர், பெரிய திருவேங்கடாசார்யர் குமாரர் வேங்கடாசார்யர்.

### வங்கிபுரத்து நம்பிக்குத் தனியன்

பா₄ரத்₃வாஜகுலோத்₃பூ₄தம் லக்ஷ்மணார்ய பதா₃ஶ்ரிதம் |
வந்தே₃ வங்கி₃புராதீ₄ஶம் ஸம்பூர்ணார்யம் க்ருபாநிதி₄ம் ||

[பாரத்வாஜ குலத்துதித்தவராய், ராமாநுஜ முனிவரின் திருவடிகளை ஆஶ்ரயித்தவராய், கருணைக்கோர் இருப்பிடமான வங்கிபுரத்து நம்பியை வணங்குகிறேன்.]

**2. சரமோபாய நிர்ணயம் :** "சரம பர்வத்துக்கு ஆளாகாதவன் ப்ரத$_2$ம பர்வத்துக்கு ஆளாகான்; ப்ரத$_2$ம பர்வத்துக்கு ஆளாகாதவன் சரம பர்வத்துக்கு ஆளாவானிறே" என்று வங்கிபுரத்து நம்பி வார்த்தை. "ததீ$_3$ய ஶேஷத்வஜ்ஞானமில்லாதவனுக்குத் தச்சே$_2$ஷத்வ ஜ்ஞானமும் இல்லையாய்விடும். ப$_4$க$_3$வத்$_3$ விஷயத்தில் ஜ்ஞானமில்லாதவன் தத்ப்ராப்த்யர்த்த$_2$மாக ஆசார்யோபஸத்தி பண்ணும். ஆசார்யாபி$_4$மான நிஷ்ட$_2$ன் ப்ரத$_2$மபர்வத்தில் கைவையான்" என்றபடி. அன்றிக்கே, "ஆசார்ய ஸம்ப$_3$ந்த$_4$ம் குலைந்தவன் ப$_4$க$_3$வத் க்ருதமான ஸ்வரூப ஸங்கோசத்தை உடையனும். ஈஶ்வராபி$_4$மானத்தைக் குலைத்துக்கொண்ட இவனுக்கு ஆசார்யாபி$_4$மானத்திலே ஒதுங்கவேணும். சரமோபாய நிஷ்ட$_2$னுக்கு ஈஶ்வராபி$_4$மானம் வேண்டுவதில்லை" என்று இங்ஙனே பொருளாகவுமாம். இத்தால் "எம்பெருமானாரோடு ஸம்பந்தமில்லாதவனை ஈஶ்வரன் கைவிடும். ப்ரத$_2$மபர்வமான ஈஶ்வரன் தே$_3$ாஷத$_3$ர்ஶநத்தாலே சேதனனைக் கைவிடும். சரமபர்வமான எம்பெருமானார் கைவிடுவதில்லை. எம்பெருமானாரோடு ஸம்ப$_3$ந்த$_4$முண்டானவனுக்குப் பேற்றுக்கு உடலாக ஈஶ்வரன் கைபார்த்திருக்கவேண்டாவிறே" என்றபடி. "தேவுமற்றறியேன் — மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே" என்றிருந்தால், பின்னை அங்ஙனல்லது இராதிறே. 'பொன்னடி' என்றருளிச்செய்தாரிறே. இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் ஸர்வர்க்கும் உத்தாரகர் எம்பெருமானாரேயாகக் குறையில்லை. இப்படி உத்தாரகரான எம்பெருமானாருடைய அபி$_4$மானத்திலே அந்தர்ப்ப$_4$வியாதார் நித்ய ஸம்ஸாரிகளாய்ப் போருவர்கள்.

**3. வார்த்தாமாலை [71] :** வங்கிப்புரத்து நம்பி, யதிவர சூடா$_3$மணி தா$_3$ஸர்க்கு. "ஒரு ஸர்வ ஶக்தியை ஒரு அஶக்தன் பெறும்போது, தானும் பிறரும் தஞ்சமன்று; ஆசார்யன் அநுக்$_3$ரஹபூர்வகமாக த்$_3$வயத்தில் அர்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$த்துப் பிழைத்தல், நித்ய ஸம்ஸாரியாய் முடிதல் செய்யுமதுக்கு மேற்பட்டதில்லை" என்று அருளிச்செய்தார்.

[**விவரணம் :** வங்கிப்புரத்து நம்பி எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களில் ஒருவர். மணக்கால் நம்பியின் ஶிஷ்யரான வங்கிப்புரத்தாச்சியின் குமாரர்.]

**4.** வார்த்தாமாலை [441] : "அத்தீட்டை யாருக்குச் சொல்லு வேன்" என்றார் வங்கிபுரத்து நம்பி [வரலாறு விளங்கவில்லை.]

**5.** நாச்சியார் திருமொழி வ்யாக்யானம் 9—6 : (ஏறு திரு வுடையான்) வங்கிப்புரத்து நம்பி ஸ்ரீபாத₃த்திலேயாய்த்துச் சிறி யாத்தான் ஆஶ்ரயித்தது. போஶள ராஜ்யத்தில் நின்றும் வந்த நாளிலே ராஜகேஸரியிலே ஆச்சான் நடந்திருந்தானாய், காண வேணுமென்று அங்கே சென்று கண்டிருக்கிறவளவிலே, நம்பி எனக்கு இங்ஙனே பணிக்கக்கேட்டேன்;—"பா₃ஹ்ய ஸமயங்களி லுள்ளாரும் ஒரு வஸ்துவைக்கொண்டு அது தனக்கு ஜ்ஞாநாதி₄க் யத்தையும் உண்டாக்கிக் கொள்ளாநின்றார்கள். அவர்களிற் காட்டில் வைதி₃க ஸமயமான நமக்கேற்றம் 'ஶ்ரியːபதி ஆஶ்ர யணீயன்' என்று பற்றுகிற இதுகாண்" என்று பணித்தானும்.

[விவரணம்: எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களில் 'வங்கிப் புரத்து நம்பி என்பவர் ஒருவர். சிறியாத்தான் அல்லது சிறியாச் சான் என்று அழைக்கப்படும் மஹாநுப₄ாவர் அந்த நம்பியின் ஶிஷ்யராவார். ஒரு ஸமயம் சிறியாச்சான் போசளராஜ்யத்தி லிருந்து தமிழ் நாட்டுக்கு வந்திருந்தபோது, 'ராஜகேஸரி' என் னுமிடத்திலே எழுந்தருளியிருந்த நம்பியைக் காணச்சென்று, அவரோடு வார்த்தை சொல்லும்போது அவர் ஆச்சானிடம் "ஶைவம் முதலான புறச்சமயங்களிலுள்ளவர்களும் ஶிவனைப் போன்ற ஒரு தெய்வத்தைப் பரம் பொருளாகக்கொண்டு, அவனை ஸர்வஜ்ஞனாகவும் கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர் களைக் காட்டிலும் வைதி₃க மதத்திலுள்ளவர்களான நமக்குச் சிறப்பு 'லக்ஷ்மீநாத₂னே ஆஶ்ரயிக்கத்தக்கவன்' என்று ஒரு மிது₂ னத்தைப் பற்றுகிற இதுவேயாகும்" என்று சொன்னதாக ஆச் சான் அருளினார்.]

**6.** பெரிய திருமொழி 6-7-4 : முதல் பாகம் எம்பெருமானார் வைபவம் பக்கம் 390 ஐ. நி. 54 காண்க.

**7.** திருவிருத்த ப்ரவேசம் : (வ்யாக்யானம் 8 ஈடு) அரு ளாளப்பெருமாள் எம்பெருமானார் வைபவம் பக்கம் 106 ஐ. நி. 10 காண்க.

8. திருவிருத்தம் 56 : (வ்யாக்யானம் & ஈடு) முதல் பாகம் பக்கம் 392 ஐ. நி. 66 காண்க.

9. திருவிருத்தம் 83 : (வ்யாக்யானம் & ஈடு) (முன்றில் பெண்ணை) 'முன்றில்' என்று முற்றத்துக்கும், வாசலுக்கும் பேர். 'முற்றத்தில் பனை நடலாமோ?' என்று இவ்விடம் நிர்வஹியா நிற்கச் செய்தே வங்கிப்புரத்து நம்பியைச் சிலர் கேட்க, "அதுவோ! இவள் கார்யம் தளிரும் முறியுமாய்ச் செல்லுகிறது" என்று பணித்தாராம்.

10. ப்ராப்யஸ்ய ப்₃ரஹ்மணோ ரூபம் ப்ராப்துஶ்ச ப்ரத்யகா₃த்மந: |
ப்ராப்த்யுபாயம் ப₂லம் ப்ராப்தே: தத₂ா ப்ராப்திவிரோதி₄ ச ||
வத₃ந்தி ஸகலா வேதா₃: ஸேதிஹாஸ புராணகா: |
முநயஶ்ச மஹாத்மாந: வேத₃வேதா₃ர்த்த₂வேதி₃ந: ||

[அடையத்தக்கதான ப்ரஹ்மஸ்வரூபத்தையும், அடைபவனுகிற ஜீவஸ்வரூபத்தையும், அடைவதற்கு உபாயத்தையும், அடைந்து பெறும் பயனையும், அடைவதற்குத் தடையையும் இதிஹாஸ புராணங்களோடு கூடிய எல்லா வேதங்களும், வேதத்தையும் அதன் பொருளையும் அறிந்த மஹாத்மாக்களான முனிவர்களும் கூறுகின்றனர்.] என்று ஸகலவேத₃தாத்பர்யம் இவ்வர்த்த₂பஞ்சகம் என்னுமிடத்தைப் பெரிய வங்கிப்புரத்து நம்பி திருவாய்மொழிக்கு வாக்யார்த்த₂மாக அருளிச்செய்தார்.

11. பகவத் விஷயம் ஈடு [7-2-7] : (கொழுந்து) "இப்பாட்டில் ஒருதலைக்கட்டின்றிக்கேயிருக்குமிதுக்குக் கருத்து—பரிஹரிக்குமெல்லைகழிந்தாள்; நாம் இவர்க்குச் சொல்லுவதென்?—என்று தன்னிலே நோவுபடுகிறாள்" என்று வங்கிப்புரத்து நம்பி பணிக்கும்.

12. பகவத் விஷயம் ஈடு [9-2-8] : 48-ம் பக்கம் 43-வது ஐ. நி. காண்க.

13. முமுக்ஷுப்படி சரமஶ்லோக ப்ரகரணம் சூர்ணை 265 : "இதுதான் அநுவாத₃ கோடியில்" என்று வங்கிப்புரத்து நம்பி வார்த்தை ।

[விவரணம் : இந்தச் சரம ஶ்லோகார்த்த₂த்தில் நம்பிக்கை பிறப்பது மிகவும் அரிது என்பது இச்சூர்ணையில் காட்டப்படுகிறது. அதாவது—முன்பு அறியப்படாத ஒரு பொருளை அறி

வித்து அதைச் செய் என்று கட்டளையிடுவது விதி₁ எனப்படுகிறது. அறிந்ததொரு அர்த்தத்தையே திருப்பிச் சொல்லுவது அநுவாத₃மெனப்படுகிறது, மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது "என்னையே சரணமடைவாய்" என்று இந்த ஶ்லோகத்தில் கண்ணன் அர்ஜுநனைக் குறித்து விதி₄ப்பதாகத் தோன்றினாலும், அர்ஜுநன் ஏற்கனவே அறிந்த விஷயத்தையே இதில் கண்ணன் அநுவாத₃ம் செய்கிறான் என்பதே உண்மை என்று மிகவும் ஆப்தரான வங்கிப்புரத்து நம்பி இவ்வார்த்தையில் திருவுள்ளம் பற்றுகிறார் என்கிறது இச்சூர்ணை. வங்கிப்புரத்து நம்பி எம்பெருமானாரால் நியமிக்கப்பெற்ற எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதிபதிகளில் ஒருவர் என்பது இங்கு குறிக்கொள்ளத்தக்கது.]

**14. ரஹஸ்யத்ரய ஸாரம். ஸாத்₄யோபாயஶோத₄நாதி₄காரம்**

**அபி₄க₃ச்ச₂ந் ஹரிம் ப்ராத: பஶ்சாத் த்₃ரவ்யாணி சார்ஜயந் |**
**அர்ச்சயம்ஶ்ச ததோ தே₃வம் ததோ மந்த்ராந் ஜபந்நபி ||**
**த்₄யாயந்நபி பரம்தே₃வம் காலேஷ்வேக்தேஷு பஞ்சஸு |**
**வர்த்தமாந: ஸதா₃ சைவம் பாஞ்சகாலிகவர்த்மநா ||**
**ஸ்வார்ஜிதை: க₃ந்த₄புஷ்பாத்₃யை: ஶுபை₄: ஶக்த்யநுரூபத: |**
**ஆராத₄யந் ஹரிம் ப₄க்த்யா க₃மயிஷ்யாமி வாஸராந் ||**

[காலைவேளையில் எம்பெருமானை அடைந்து, அவனுடைய திருவாராதனத்திற்கு வேண்டிய பொருள்களைச் சேகரித்து, பிறகு அவனை ஆராதனம் செய்து, அதற்குப்பின் மந்திரங்களை ஜபித்து, கடைசியில் பரமாத்மாவான அவனை தியானம் செய்து, இப்படியே விதிக்கப்பட்ட ஐந்துகாலங்களிலும் அவனை ஆராதித்துக்கொண்டு ஒவ்வொரு நாளையும் அபி₄க₃மநம், உபாத₃ானம், இஜ்யை, ஸ்வாத்₄யாயம், யோக₃ம் என்னும் ஐந்து பாகங்களாகப் பிரித்துக்கொண்டு, அவற்றில் செய்யவேண்டிய கைங்கர்யங்களைச் செய்துகொண்டு, சக்திக்குத் தக்கபடி ஸம்பாதிக்கப்பட்ட சந்தனம், புஷ்பம் முதலான மங்களத்ரவ்யங்களாலே எம்பெருமானை பக்தியுடன் ஆராதித்துக் கொண்டே நாட்களைப்போக்குவேன்.] என்று பாஷ்யகாரர் அருளிச்செய்யக்கேட்டு, வங்கிபுரத்துநம்பி (தம்) நித்யத்திலே ஸங்க்ரஹித்தார்.

**15. ரஹஸ்யத்ரயஸாரம்—சரமஶ்லோகாதிகாரம் :** வங்கிபுரத்து நம்பியும், ப்ரபந்நனுக்கு அஹோராத்ர க்ருத்யமான ப₄க₃வத்ஸமாராத₄னத்தைச் சொல்ல இழிந்து,

க₃ாயத்ரீஜபபர்யந்தம் மந்த்ராசமநபூர்வகம் |
ஸாந்த்₄யம் கர்மாகி₂லம் ஸாது₄ ஸமாப்ய ச யத₂ாவிதி₄ ||
ஸமித₃ாஜ்யாதி₃பி₄ர் த்₃ரவ்யை: மந்த்ரைரபி யதே₂ாதி₃தை: |
ஹுத்வாக்₃நிம் அக்₃நிஹோத்ராத₃ாவுக்தம் காலமபி க்ஷிபந் ||

[மந்த்ரத்தோடு ஆசமநம் தொடங்கி க₃ாயத்ரீஜபம் வரையிலுள்ள ஸந்த்₄யா காலக் கடமைகளனைத்தையும் முறைப்படி நன்குசெய்து, ஸமித் நெய் முதலான த்ரவ்யங்களைக் கொண்டு அதற்கு ஏற்பட்ட மந்த்ரங்களால் அக்₃நிஹோத்ரம் முதலான கர்மங்களில் அக்னிகளில் ஹோமம் செய்துகொண்டு, ஶாஸ்த்ரம் விதித்த முறையிலே காலத்தைக் கழித்துக்கொண்டு.] என்றும்,

ததோ மாத்₄யந்தி₃நம் கர்ம ஸ்வோதி₃தம் ஶ்ருதிசோதி₃தம் |
ஸ்நாநாதி₃ ப்₃ரஹ்மயஜ்ஞாந்தம் க்ருத்வாகி₂லமதந்த்₃ரித: ||

[மத்₄யாஹ்னத்தில் செய்யவேண்டியதாய், ஶாஸ்த்ரங்களில் தனக்கு விதி₄க்கப்பட்ட கர்மங்களை ஸ்நாநம் முதல் ப்₃ரஹ்மயஜ்ஞம் வரை எல்லாவற்றையும் சோம்பலின்றிச் செய்து முடித்து.] என்றும்,

ஹோமம் பித்ருக்ரியாம் பஶ்சாத் அநுயாக₃ாதி₃கம் ச யத் |

[பிறகு தேவயஜ்ஞத்தையும், பித்ருயஜ்ஞத்தையும் செய்து, எம்பெருமானுக்கு அமுது செய்விக்கப்பட்ட உணவை ஸ்வீகரிக்க வேண்டும்.] என்றும் இப்ரகாரங்களிலே தத்தந் மந்த்ரபூர்வகங்களான வர்ணாஶ்ரமத₄ர்மங்களை அருளிச்செய்தார்.

## 22. அம்மங்கியம்மாள்

1. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : முதல்பாகம் பக்கம் 267 காண்க.

2. வார்த்தாமாலை—பதினேழாம் வார்த்தை : எங்களாழ்வான் வைபவம் பக்கம் 200 ஐ. நி. 6 காண்க.

3, வார்த்தாமாலை—132-ம் வார்த்தை : முதல் பாகம் எம்பெருமானார் வைபவம் 366-ம் பக்கம் ஐ. நி. 11 காண்க.

4. வார்த்தாமாலை—163-ம் வார்த்தை : அம்மங்கியம்மாள், பரமபத₃த்துக்கு எழுந்தருளுகிற காலத்திலே, அவர் திருமாளிகை

யிலே பிள்ளை எழுந்தருள; அவருடைய தேவியார் ப்ரஸந்நை யாயிருக்க, ஸ்ரீபாதத்திலே ஸேவித்துப் போந்த முதலிகள் 'இதுக்கு நிதாநம் என்?' என்று கேட்க; 'அம்மாள், தேவியார் விஷயத்தில் இதுக்கு முன்பு பண்ணின ப்ராதிகூல்யம் உண்டாகி லன்றோ அவர் பேற்றுக்கு இவர் வெறுக்கவேண்டுவது' என்று அருளிச்செய்தார்.

[விவரணம்: அம்மங்கியம்மாள் தேவியார் ஆர்த்ததிகாரி யாகையாலே தமது பர்த்தா பரமபதமடைந்ததற்கு உகந்து, தாமும் விரைவில் அவரை அடைந்துவிடுவதில் உறுதியுடனிருந் தார்.]

5. வார்த்தாமாலை—174, ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: எங்களாழ்வான் வைபவம் பக்கம் 198 ஐ. நி. 3 காண்க.

6 வார்த்தாமாலை—244-ம் வார்த்தை: அம்மங்கியம்மாள் வார்த்தை;—a உடம்பைப்பற்றிச் சோறு தேடுவாரும், b உறவு முறைபற்றிச் சோறு தேடுவாரும், c உடம்பரைப்பற்றிச் சோறு தேடுவாரும், d உடம்பு(பர்)களைப்பற்றிச் சோறு தேடுவாரும், e லோகத்தைப்பற்றிச் சோறு தேடுவாரும், f உயிரைப்பற்றிச் சோறு தேடுவாரும், g அவனைப்பற்றிச் சோறு தேடுவாரும், h அவளைப்பற்றிச் சோறு தேடுவாரும், i அவனையும், அவளையும் பற்றிச் சோறு தேடுவாரும், j தன்னையும் அவனையும்பற்றிச் சோறு தேடுவாரும், k தன்னையும் அவனையும் அவளையும்பற்றிச் சோறு தேடுவாருமாயிறேயிருப்பது என்று.

[விவரணம்: இவ்வார்த்தையில் மேன்மேலே சிறந்த புரு ஷார்த்தங்களைப் பெறுகின்ற பலர் காட்டப்படுகின்றனர். அவர் களாவார் — a தேஹாத்மாபிமானிகளாய் இருந்துகொண்டு, உடம்புக்கு நன்மையை விரும்பி ஐச்வர்யத்தை ஸம்பாதிப்பவர் கள். b பெண்டுபிள்ளை முதலான உறவுமுறையார்க்கு நன்மையை விரும்பி இவர்களுடைய உடலை வளர்க்க ஐச்வர்யத்தை ஸம் பாதிப்பவர்கள். c தேஹத்திற்காட்டிலும் மேற்பட்ட ஆத்மா ஒன்று உண்டு என்று உணர்ந்து, உடம்பையுடைய அவ்வாத்மா வுக்கு நன்மையை விரும்பி ஸ்வர்க்கமாகிற மறுமைச் செல்வத்தை யடைய இஷ்டாபூர்த்தங்களை (புண்யகார்யங்களை)ச் செய்பவர் கள். d உடம்பையுடைய தமக்கு மாத்திரமல்லாமல் தமது பெண்டு பிள்ளைகள் முதலான உறவுமுறையாருடைய ஆத்மாக்

களுக்கும் நன்மையை விரும்பி, அதற்குரிய புண்ய கார்யங்களை அநுஷ்டிப்பவர்கள். e உலகத்துக்கே நன்மையை விரும்பி, தம் உடல், பொருள் ஆவிகளாலே பாடுபடுபவர்கள். f தம் உயிருக்கு நன்மையை விரும்பிக் கைவல்ய மோக்ஷத்தையடைய எம்பெருமானைக் குறித்து ஸாத₄நாநுஷ்டா₂னம் செய்பவர்கள், முந்தியவர்கள் எம்பெருமானைப் பற்றாதவர்களாகையாலே இவர்களை விடத் தாழ்ந்தவர்கள். மோக்ஷத்தை விரும்பி எம்பெருமானைப் பற்றுகையால் இவர்கள் அவர்களைவிட உயர்ந்தவர்கள். இனி, அடுத்தபடியாக எம்பெருமானையும், பிராட்டியையும் பற்றி ஐஶ்வர்யங்களை விரும்புகிறவர்களை இவர்களைக் காட்டிலும் உயர்வாகச் சொல்லுவது "ஏடுநிலத்தில்" [திருப்பல். 4] பாசுர வ்யாக்₂யானத்தில் சொன்ன ரீதியில், இக்கைவல்யார்த்தி₂க்கு என்றுமே ப₄க₄வத₃நுப₄வம் இல்லாமற் போகையாகிற துர்க்கதியைக் கண்டு என்று கொள்ள வேண்டும். g எம்பெருமானைப் பற்றி ஐஶ்வர்யத்தைப்பெற ஸாத₄நாநுஷ்டா₂னம் செய்பவர்கள். h ஐஶ்வர்யத்தைக் கொடுப்பதையே இயல்வாகக் கொண்ட பெரிய பிராட்டியாரைப்பற்றி ஐஶ்வர்யத்தைப்பெற ஸாத₄நாநுஷ்டா₂னம் செய்பவர்கள். பிதாவாய் ஹிதபரனான எம்பெருமானைப்பற்றி ஐஶ்வர்யத்தைப் பெறுவதைக் காட்டிலும், மாதாவாய் ப்ரியபரையான இவளிடம் பெறுவது எளிதாகையாலே இவர்கள் முந்தியவர்களைக் காட்டிலும் சிறந்தவர்கள். i இருவருமான சேர்த்தியிலே அவளைப் புருஷகாரமாகக்கொண்டு அவனிடம் ஐஶ்வர்யத்தைப் பெறவிரும்புகிறவர்கள், இது ஸ்வரூப ப்ராப்தமாகையாலே, மோக்ஷத்தில் ருசியை விளைவித்துவிடும். ஆகையாலே இவர்கள் முந்தியவர்களைவிடச் சிறந்தவர்கள். j தனக்கு நன்மையை விரும்பி அவனை உபாஸித்து ப₄க₃வத₃நுப₄வரூப மோக்ஷத்தைப் பெறுவதற்கு ஸாத₄நாநுஷ்டா₂னம் செய்கிறவர்கள். k இருவருமான சேர்த்தியில் அவர்களுடைய முகமலர்த்திக்காகவும், அதைக் கண்டு தான் களிப்பதற்காகவும் பரமபுருஷார்த்த₂மான பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களை அவனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே பெறவிரும்புகிறவர்கள். இவர்கள் அனைவரிலும் உயர்ந்தவர்கள் என்பது சொல்லாமலே விளங்கும்.]

7. பெரிய திருமொழி [3-6-9]: அம்மங்கியம்மாளுடைய சரமதசையிலே நஞ்சீயரறிய எழுந்தருளினவர், அவர் படுகிற க்லேசங்களைக் கண்டு "இக்குத்தை ஆசார்ய ஸேவைகளும் பகவத் குணங்களைக் கொண்டு போது போக்கின படிகளுமெல்

லாங்கிடக்க, அல்லாதாரைப்போலே இப்படி படவேண்டுவதே!'' என்ன, '''நீயாளவனையாள மாட்டோமே' என்றன்றோ. பகவத் பரிக்ரஹமானுல் க்லேசப்பட்டே போமித்தனை காணும்'' என்றார். புறப்பட்ட பின்பு, நஞ்சீயர் நம்பிள்ளையைப் பார்த்து, ''முடிகிற விவ்வளவிலேயும் இவ்வார்த்தை சொல்லுகிறது விச்வாஸத்தின் கனமான ப₄ாவப₃ந்த₄த்தில் ஊற்றமிறே'' என்றருளிச்செய்தார்.

8. பகவத் விஷயம் [2-1-7] : முதல் பாகம் எம்பெருமானுர் வைபவம் பக்கம் 395 ஐ. நி. 78 காண்க.

9 பகவத் விஷயம் [4-5-1] : (வெம்மாபிளந்தான்றன்னை) ''ஆற்றல்மிக்கானும்படி சொல்லுகிறது'' என்று பட்டரருளிச்செய்யுமபடி; ''ஆற்றல்மிக்காளுமம்மான் ஆரெனருல், இன்னுனென்கிறது''—என்று அம்மங்கியம்மாள் நிர்வஹிக்கும்படி.

10. பகவத் விஷயம் [4-6-11] : (தொழுதாடித் தூமணி வண்ணனுக்காட் செய்து நோய்தீர்ந்த) என்றதற்கு அம்மங்கியம்மாள் பணிக்கும்படி—மோஹித்தவள் அல்பம் ஆச்வஸித்தவாறே மோர்க்குழம்பு குடித்தாள், தரித்தாள், கண் விழித்தாள், வார்த்தை சொன்னுள் என்பர்களிறே; அது போலே காணும் என்று.

11. பகவத் விஷயம் [5-9-10] : [நல்வினையால்]''.........நா நீரற்றிருக்கை பாபப₂லமிறே; நா நீருண்டதாய்த் திருநாமம் சொல்லவல்லோமே என்கிருள்'' என்று அம்மங்கியம்மாள் வாக்யார்த்தமாகச் சொல்லும் என்றருளிச் செய்வர்.

12. பகவத் விஷயம் [7-4-4] : (அப்பனூளியெழ) ஒரோ க்ஷோப₄ங்களுண்டானுல் நம்முடைய அடையவளைந்தானுக்கு உள்ளே புகும்போது திருவாசலில் பிறக்கும் ஆரவாரம்போலே திருவயிற்றிற் புதுகிறபோது ப்ராணிகளுக்கு உண்டான ஸம்ப்₄ரமத்₄வநிகள் கிளர. அன்றியே 'இவற்றையுறிஞ்சுகிற போதை த்₄வநி காண்' என்று அம்மாள் பணிக்கும்படி என்றருளிச்செய்வர்.

13. பகவத் விஷயம் [7 6] ப்ரவேசம் : அம்மங்கியம்மாள் இத்திருவாய்மொழி பாடக்கேட்டு அநுபவித்துப் போரு மிதுக்கு மேற்பட இதிலோடுகிற ஆர்த்திக்கு நம்மாற் பாசுரமிட்டுச் சொல்லப்போகாது' என்று பணிக்கும் என்றருளிச்செய்வர்.

14. பகவத் விஷயம் [7-6-10] : (கூற்றியல் கஞ்சனைக் கொன்று) ''விகளத் கிரீட மவநீதலே பாதயாமாஸ'' [கிரீடம் விழப்பெற்ற கம்ஸனைக் கண்ணன் பூமியில் விழச்செய்தான்.] 'ராஜ த்ரோஹிகளைக் கொல்லும்போது ராஜசிஹ்நங்களை வாங்கிக் கொல் லுவாரைப்போலே காண்' என்று அம்மாள்.

15. பகவத் விஷயம் [8-3-11] : (தவிர அருள் நீண்முடியானை) 'இவருடைய பயம்போம்படி உம்முடைய அபேக்ஷிதம் செய்கிறோம் என்று ஶிரஃகம்பனம் பண்ணினான்போலே காண்' என்று அம்மங்கியம்மாள்.

16. பகவத் விஷயம் [8-4-11] : (கஞ்சனைத்தகர்த்த) 'ராஜ த்ரோஹிகளைக் கொல்லும்போது ராஜசிஹ்நங்களை வாங்கிக்கொல் லுமாபோலே தான் கொடுத்தமுடியை வாங்கிக்காண் கொன்றது' என்று அம்மங்கியம்மாள் பணிப்பர்.

17. பகவத் விஷயம் [8-5-5] : (அல்லல் இத்யாதி) 'உன்னைக் காட்டாதே அருமைப்படுத்தப் பார்த்தாயாகில், நாட்டார் தண்ணிது என்கிற அஜ்ஞானம் வருவதோருபாயம் ஏதோ!' என்றருளிச்செய்வர் பட்டர்; இப்போது மறந்து பிழைக்கலாமென்னுமத்தாலே 'திருவடிகள் என் ஹ்ருதயத்திலே ப்ரகாசியாநிற்க, து:கா த்மகமாம் அஜ்ஞாநம் வருகைக்கு உபாயமுண்டோ' என்னும் அம்மாள்; உண்டாகில் உண்டுடுத்துத் திரியலாமே நாட்டாரோபாதி.

18. பகவத் விஷயம் [8-7-9] : (மதியாலே) a''இவன்படியை அறிந்துகொண்டேனென்கிறார்'' என்னும் அம்மாள். b அன்றிக்கே, 'மதி: அநுமதி:' என்றுக்கி 'அநுமதிமாத்ரத்தாலே' என்பர் பட்டர். அதாவது அவன் புகுருகிறவிடத்தில் விலக்கிற்றிலனென்கை.

[விவரணம் : a 'மதி' என்று அறிவைச் சொல்லும்; 'மதியாலே மன்னவைத்தேன்' என்றது 'அறிவாலே அவனை நெஞ்சில் வைத்தேன்' என்று பொருள்படும்; அதாவது—அவன் (நிர்ஹேதுகமாக அங்கீகரிக்கும்)தன்மையை அறிந்து 'இனி விலக்கமாட்டேன்' என்றிருக்கிறார் என்று கருத்து. b 'மதி' என்னும் சொல்லை 'அநுமதி' என்னும் அர்த்தத்தில் வழங்கியிருப்பதாகக் கொண்டு, 'விலக்கிற்றிலேன்' என்னும் இதே பொருளை அருளுகிறார் பட்டர்.]

## 23. ஸ்ரீபராங்குஶநம்பி
## (எம்பார் தம்பி சிறிய கோவிந்தப்பெருமாள் குமாரர்)

1 ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : அநந்தரம் எம்பார் திரும்தம்பியார் சிறிய கோவிந்தப் பெருமாளுக்கு ஒரு குமாரர் அவதரித்தருள, அத்தைக்கேட்டு உகந்து உடையவர் 'ஆளவந்தார் க்ருஷி பலிக்கப்பெற்றதே!' என்று அவர் திருமாளிகையேற எழுந்தருளி, அவர் குமாரரையும் க்ருபையாலே கடாக்ஷித்தருளி, அக்குமாரருக்கு 'ஸ்ரீபராங்குஶநம்பி' என்று நம்மாழ்வார் திருநாமஞ்சாத்தியருளி ஆளவந்தாருடைய மூன்றுமிழவையும் தீர்த்தருளினர். "கோ₃விந்த₃ராஜாந்வயஜோ மநீஷீ பராங்குஶோ யாமுநவைமநஸ்யம் | அபாசகார ப்ரஸப₄ம் த்ருதீயம் விரராஜதே வ்ருத்தமணி ப்ரதீ₃ப: ||" [கோவிந்தராஜரின் வமிசத்தில் பிறந்தவராய், நல்லறிவுடைய பராங்குஶபட்டர், ஆளவந்தாருடைய மூன்றுவது குறையை அடியோடு போக்கினர். ஆகையாலே வட்ட மணிகுலத்துக்கு விளக்காக விளங்கினர்.] என்று இதுவும் லக்ஷ்மீ காவ்யத்திலே சொல்லப்பட்டதிறே.

2. ப்₄கவத் விஷயம் [1-5-11] : (பாலேய்தமிழர்) ஆழ்வான் ஓருருவிலே "ஸ்ரீபராங்குஶ நம்பியைப்பாலேய் தமிழர் என்கிறது..." என்று ப₄ணித்தானும்.

## 24. பருத்திக் கொல்லை அம்மாள்

[ப்ரபந்நாம்ருதம் 27, 28 அத்தியாயங்களில் இவருடைய வைபவம் விளக்கப்படுகிறது. நம்பதிப்பில் அப்பகுதியின் தமிழ் மொழி பெயர்ப்பு கீழே அளிக்கப்படுகிறது.]

**அஷ்டஸஹஸ்ரக்₃ராமத்தில் இரு சிஷ்யர்கள்**

*15* - *19* அப்போது சைவர்களால் சித்ரகூடம் ஆக்ரமிக்கப் பட்டிருப்பதை விசாரித்து அறிந்த அவர், 'இந்த தி₃வ்யதே₃ஶத்தைப் பழையபடி ஆக்குவதற்கு (விஷ்ணு த்₃வேஷியான அரசன் ஆட்சி செலுத்தும்) இக்காலம் தக்கதல்ல' என்று நினைத்து, (அந்த ப்ராந்தத்திலுள்ள) *அஷ்டஸஹஸ்ர வகுப்பினர் வாழும் அஷ்டஸஹஸ்ர க்₃ராமத்தைக் குறித்துப் புறப்பட்டார். வித்வான்

---

*வடமர், ப்ருஹச்சரணம்போலே, எண்ணாயிரம் குடியினர் கொண்ட 'அஷ்டஸஹஸ்ர வகுப்பு' என்பது அந்தணர்களில் ஒரு தனிப்பிரிவாயிருந்துவந்தது.

கள் நிறைந்த அவ்வூரில், 'வரத₃ாசார்யர்' என்றும், 'யஜ்ஞேஶர் (எச்சான்)' என்றும் பெயர் பெற்றவர்களாய், உலகம் நிறைந்த புகழுடையவர்களாய், யதிராஜருடைய சிஷ்யர்களான இரு அந்தணர் தலைவர்கள் வாழ்ந்து வந்தனர். அவ்விருவருள் 'பருத்திக்கொல்லை அம்மாள்' என்று பெயர் பெற்ற வரத₃ாசார்யர் ஏழையாயிருந்தார். பேரறிவாளராய், கு₃ருப₄க்தியுடைய யஜ்ஞேஶரோ செல்வமுடையவராயிருந்தார்.

### யஜ்ஞேஶரின் செல்வச்செருக்கு

19*-23. (தம்முடன் கூடவந்த ஸ்ரீவைஷ்ணவர்களை ஆராதி₄ப்பதற்காக, செல்வம் நிறைந்த சிஷ்யரான யஜ்ஞேஶரைக் குறித்து இரு ஶிஷ்யர்களை முதலில் அனுப்பினர் ஸ்ரீராமானுஜர். அவர்களும் விரைவில் அவ்வூருக்குச் சென்று, யஜ்ஞேஶரிடம் எல்லாச் செய்தியையும் கூறினர். வைஷ்ணவரான அவரும் யதிராஜர் ஶிஷ்யர்களோடு எழுந்தருளியிருப்பதைக் கேள்விப்பட்டு, தம் ஆசார்யரின் நியமனத்தால் அங்கு வந்தவர்களாய், கௌ₃ரவிக்கத்தக்கவர்களாய், வழிநடந்து களைத்தவர்களான அவ்விருவரையும் தாம்பூலம், ஆஸனம், உணவு ஆகியவற்றை அளித்து கௌ₃ரவிக்காமல், ராமாநுஜரை ஆராதி₄ப்பதற்காகப் பொருள்களைச் சேகரிப்பதில் ஈடுபட்டிருந்தார். ஆஶாப₄ங்க₃மடைந்த அவ்விரு ஶிஷ்யர்களும் திரும்பி வந்து எம்பெருமானாரிடம் அச்செய்தியைக் கூறினார்கள்.

### பருத்திக்கொல்லை லக்ஷ்மியின் ஏழ்மை நிலை

24.-*35. காரேய் கருணையிராமாநுசர் அச்செய்தியைக் கேட்டு, ஶிஷ்யரான யஜ்ஞேஶரிடம் செல்லும் நினைவைக் கைவிட்டு, கூட வந்த சிஷ்யர்களோடு கூட ஏழையான பருத்திக் கொல்லையம்மாளின் வீட்டிற்குச் சென்றார். அப்போது ஏழை வைஷ்ணவரான அந்த வரத₃ாசார்யர் உஞ்சவ்ருத்தி செய்வதற்கு அவ்வூரில் ஸஞ்சரிப்பதற்காக அக்ஷயபாத்ரத்தை எடுத்துக் கொண்டு வெளியில் சென்றிருந்தார். பருத்திக்கொல்லை லக்ஷ்மி

---

||கார்ப்பாஸம் என்பது பருத்தி; ஆராமம் என்பது கொல்லை. வரத₃ாசார்யர் என்று பெயருள்ளவர்கள் 'அம்மாள்' எனப்படுவர். ஆகையால், எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளில் ஒருவரான பருத்திக்கொல்லையம்மாளே கார்ப்பாஸாராம வரத₃ாசார்யரென்று ப்ரபந்நாம்ருதத்தில் குறிப்பிடப்படுகிறார்.

அம்மாள் என்னும் பெயருள்ள அவருடைய பத்னியாகிற மங்கை நல்லாள், கிழிந்த கீழ் வஸ்திரத்தை மாத்திரம் உடுத்துக்கொண்டு (ஏழ்மையாலே) மேல் வஸ்த்ரமில்லாமல் வீட்டினுள் த்₃வயாநுஸந்த₄ானம் செய்துகொண்டு வீற்றிருந்தாள். ஶிஷ்யர்களோடு அந்த வீட்டிற்கு வந்த யதிராஜர், வீட்டுக்குரியவரான வரத₃ாசார்யரைக் காணுமல், "வரதாசார்யர் எங்கே இருக்கிறுர்"? என்னும் கேள்வியை (வெளியிலிருந்தபடியே) கேட்டார். யதிராஜரின் குரலைக்கேட்ட ப₄க்திமிக்க அந்த மங்கைநல்லாளான பருத்திக்கொல்லை லக்ஷ்மி, மேல்வஸ்த்ரமில்லாதவளாய், உடல் நடுங்கி, லஜ்ஜையாலே சிறிது கவிழ்தலையிட்டுக்கொண்டு, "ஶிஷ்யவத்ஸலரான ஆசார்யர்' என் குடிசைக்கு இன்று கருணையோடு எழுந்தருளியிருக்கிறுர். மேல்வஸ்த்ரமில்லாத நான் எப்படி ஸேவிப்பேன்? பேசாமலிருந்தால், ஆசார்யர் ஆஶாப₄ங்க₃மடைந்து சென்று விடுவாரே" என்று நினைத்து, அப்போதே கையைக்கொட்டி ஒலியை எழுப்பினுள். அவளுடைய கையொலியைக்கேட்டு இங்கித₃தமுணர்ந்தவரான ஆசார்யர், தம் தலையைச் சுற்றிக் கட்டியிருந்த வஸ்திரத்தை உடனே வேக₃மாக வீட்டினுள் எறிந்தார். அந்த மங்கை நல்லாள், மஹாபுருஷரான அவர் அளித்த அதை எடுத்து மேலே போர்த்திக்கொண்டு, மஹாத்மாவான யதிராஜரை முதலில் வணங்கி, அவருக்கு அர்க்₄யம், பாத்₃யம், ஆசமனீயம், நமஸ்காரம் ஆகியவற்றை அளித்து ப₄க்தியோடு ஆராதி₄த்தாள்.

**பருத்திக்கொல்லை லக்ஷ்மியின் ஆசார்ய நிஷ்டை**

*35*. - 54. அவர்கள் அனைவர்க்கும் முறைப்படி அர்க்₄யம் முதலானவற்றை அளித்து, அவர்களுக்கு அவ்வந்தணப் பெண்பிள்ளை விருந்துபடைக்க எண்ணங்கொண்டாள். "முற்பிறவியில் நாம் என்ன புண்ணியம் செய்தோம்? என்ன பெருந்தவம் புரிந்தோம்? நல்ல பாத்திரத்திற்கு என்ன பெருந்த₃ானம் செய்தோம்? விஷ்ணுவினுடைய நேர் அம்ஶாவதாரமாக இப்புவியில் லோகக்ஷேமத்தின் பொருட்டு அவதரித்த மஹானுன யதிராஜர் இப்போது என்னிடத்தில் பெருங்கருணை வைத்து, ஶிஷ்யர்களோடு என் வீட்டிற்கு வந்திருக்கிறுர். 'கு₃ருவே தே₃வனுை பரப்₃ரஹ்மம்; கு₃ருவே மேலான ப்ராப்யமாவார்'. 'உடல், பொருள், ஆவி ஆகியவற்றை நல்ல ஆசார்யனுக்கு ஸமர்ப்பிக்கவேண்டும்'. 'உடல், செல்வம், அறிவு, வஸ்திரம், த₄ான்யம் முதலானவை, ப்ராணன் ஆகியவையனைத்தையும் கு₃ருவிற்காக எவன் கொண்டிருக்கிறுனே, அவனே ஶிஷ்யன் எனப்படுகிறுன்; வேறு எவனும் ஶிஷ்யனல்லன்' என்று

வேதங்களிலும் புராணங்களிலும் பலகால் கூறப்பட்டிருக்கிறது. என்னிடமோ ஒரு நாழி நெல்கூட, ஏன், ஒரு குந்துமணி நெல் கூட இல்லை. யதிராஜரோ பெருத்த ச்ரமத்துடனிருக்கிறார். என்ன செய்வேன்? கணவரோ உஞ்சவ்ருத்தி செய்யப்போய் விட்டார். அவர் தானியம் கொண்டு வந்தாலும் இவர்களுக்கு அது எப்படிப் போதும்? ஆகையால், இக்கட்டான நிலையில் உள்ள நான் தகாக கார்யத்தையாவது செய்து ஆசார்யருடைய ஆராத$_4$னத்தைச் செய்வேன். இது விஷயத்தில் நமது ஆழ்வார்களில் ஒருவரான திருமங்கையாழ்வார் எனக்கு வழிகாட்டியாகிறார். கலி கன்றியான அவ்வாழ்வார் திருடுவதாகிற தகாத கார்யத்தைச் செய்து பணம் ஸம்பாதி$_3$த்து எப்போதும் பெரிய ததீ$_3$யாராத$_4$னத்தை முன்பு செய்தாரன்றோ. ஸமர்த்த$_2$ரான அவர், திருட்டுத் தொழிலை மேற்கொண்டவராய், பல திருடர்களைக் கூட்டிக்கொண்டு அடர்ந்தகாட்டில் ஒளிந்திருந்து வழியை அடைத்து, அவ்வழியில் செல்லும் தீயவர்களுடைய பெருந்த$_4$னத்தை வழிப்பறி செய்து, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எப்போதும் ததீ$_3$யாராதனம் செய்தாரன்றோ. முன்னொருநாள் பெருமுயற்சி செய்து ரங்க$_3$நாத$_2$னுடைய செல்வத்தையும் அவனடியாரை ஆராதி$_4$ப்பதற்காக வழிப்பறிக் கொள்ளையடித்தாரன்றோ. அதனால் சிறிது குற்றமும் உண்டாக வில்லையே; அதைக்கண்டு அரங்கன் அவருக்கு முக்தியையே யன்றோ அளித்தான். இந்த ஸம்ஸாரமாகிற சக்கரத்தில் தன் கர்மங்களால் சுழற்றுவிக்கப்படுகிறான் ஜீவன். நல்லறிவை உபதே$_3$சித்து அவனுக்கு ஆசார்யன் மோக்ஷத்தை அளிக்கிறான். ஒரு மனிதனுடைய ஆயுள் முழுவதும் முயன்றாலும் அவ்வாசார்யனுக்குக் கைம்மாறு செய்யமுடியாது. ஆகையால், உடலை விற்றாவது ஆசார்யபூஜை செய்யப்படவேண்டும். "என் பொருட்டுச் செய்யப்பட்ட பாபமும் புண்யமாகும்; என்னை அலட்சியம்செய்து புரிந்த புண்யமும் பெரும்பாபமாகும்" என்று எம்பெருமானே அருளியிருக்கிறான். ஆகையால், ஆசார்யன் எம்பெருமானைக் காட்டிலும் சிறந்தவன். இந்த கிராமத்தில் வைஶ்யஜாதியில் பிறந்த ஒருவன் பணக்காரனாகவும், காமவசப்பட்டவனாகவும் வாழ்கிறான். அழகும், யௌவனமும் நிறைந்த என்னை அடைய எப்போதும் விரும்புகிறான் அவன். மலம் மூத்ரம் முதலானவை நிறைந்த இவ்வழுக்குடம்பை அவனுக்கு வசப்படுத்தி, அவனிடமிருந்து பணத்தைப்பெற்று, மஹாபுருஷரான ஆசார்யருக்கும், அவருடன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் விரைவில் ஆராத$_4$னம் செய்யக்கடவேன் நான்" (என்று உறுதி பூண்டாள் பருத்திக்கொல்லை லக்ஷ்மி).

## லக்ஷ்மியும் வைஶ்யனும்

55. *65. இவ்வண்ணமாக உறுதிபூண்ட லக்ஷ்மி, யதிராஜரைப் பார்த்து, "ஐயா! தேவரீருடைய அருளாலே, உமது அடியார்களை ஆராதிப்பதற்குரிய எல்லாப் பொருள்களும் தாமே இப்போதே நிஶ்சயமாக வந்து சேரும். கவலையில்லாமல் அடியார்களோடு இங்கேயே சிறிது நேரம் இளைப்பாறுவீர்" என்று விண்ணப்பித்தாள். நற்குணமுடையவளும், நல்லொழுக்கமுடையவளுமான அம்மங்கைநல்லாள் அப்போதே அந்த வைஶ்யனுடைய வீட்டிற்கு விரைவில் சென்றடைந்து, புன்முறுவல் கொண்டவளாய் அவனைக்குறித்துப் பின்வருமாறு பேசினள். — "உமக்கு நல்வார்த்தை சொல்லுகிறேன் கேட்பீர். உமது நீண்டநாள் மநோரதமும் இன்று நிறைவேறப் போகிறது. ஶிஷ்யஸமூஹத்தோடு கூடியவராய் எமது ஆசார்யர் எம் வீட்டிற்கு வந்திருக்கிறுர். அவர்களுடைய ஆராதனத்திற்காக எல்லா திரவியங்களையும், எல்லா சமையல் பாத்திரங்களையும் இப்போதே விரைவில் அனுப்புவீர்" என்று. அழகிய அம்மங்கையர் திலகத்தைப் பார்த்த அந்தப் பணக்கார வைஶ்யன் காமவஶப்பட்டவனுய்ப் பேரானந்தங் கொண்டு "ஏற்கனவே என்னல் அழைக்கப்பட்ட இவள் வந்ததுமில்லை; பேசியதுமில்லை. இனிய ஆபரணங்கள், வஸ்த்ரம் முதலானவற்றை நான் அனுப்பிய போதும் அவற்றை ஏற்றதில்லை. அத்தகைய இவ்வழகி ஏழு கட்டுகளைத் தாண்டி, என்னுடைய அந்தபுரத்திற்கே புன் முறுவலோடு தன்னிச்சையாக வந்துவிட்டாள். நெடுங்காலம் பலமுறை என்னுல் (இவளிடம்) வெளிப்படுத்தப்பட்ட மநோரதமும் இன்று பரிபூர்ணமாக நிறைவேறப்போகிறது என்பது நிஶ்சயம்" என்று பலவாறு எண்ணி, தன் அருகிலிருப்பவளும், நெஞ்சையீர்ப்பவளும், நற்குணவதியும், நல்லவளுமான அவளைப் பார்த்துப் பேரானந்தங் கொண்டான் அந்த வைஶ்யன்.

## லக்ஷ்மியின் ததீயாராதனம்

65*. 71. அதற்குப்பின் அந்த வைஶ்யன் வரதாசார்யரின் வீட்டிற்கு அரிசி, பருப்பு, காய்கறிகள் முதலான பலவகைப் பொருள்களையும், பால், தயிர், நெய் முதலானவற்றையும் ஆர்வத்தோடு விரைவில் அனுப்பினன். அப்போது அந்தப் பதிவ்ரதா ஶிரோமணியும், பக்தியோடு கூடியவளாய் யதிராஜரின் திருமுன்பே எல்லாப் பொருள்களையும் வைத்து, கைகூப்பியவளாய் நின்றுள்.

யதிராஜரான ராமாநுஜர் அந்த வஸ்துக்களையும் அந்தப் பதிவ்ரதையையும் கடாக்ஷித்து, அவளுடைய ஆசாரஜ்ஞானம், ஒழுக்கம், ப₄க்தி, ஶாஸ்த்ரஸாரஜ்ஞானம் ஆகியவற்றைக் கண்டுவியப்புற்ற நெஞ்சினராய், விநயத்தால் விளங்காநிற்கும் அவளைக் குறித்து, "பேரருளாளனை எம்பெருமானுடைய திருவாராத₄னத்தின் பொருட்டு, நீயே விரைவில் குளித்துச் சமையலைச் செய்வாய்" என்று நியமித்தார். இவ்வண்ணம் உரைத்தபின்பு, தமது சிஷ்யர்களான சில பெரியவர்களை சமையல் செய்யத் துணையாயிருக்கும்படி நியமித்தார். தாமும் விரைவில் நீராடி, ஊர்த்₄வபுண்ட்₃ரம் த₄ரித்தவராய், மஹாத்மாவான ஸ்ரீராமாநுஜர் வரத₃னுக்கு (அவ்வன்னத்தைப்) படைத்துத் திருவாராத₄னம் செய்து, வேத₃ப் பொருளறிந்தவர்களில் சிறந்தவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களோடு கூட அவ்வன்னத்தை அமுது செய்தார். ப₄க்தியோடு அளிக்கப் பெற்றதாய், (அதனாலேயே) பரமபவித்ரமானதான அவ்வன்னத்தை அமுது செய்த ஸ்ரீராமாநுஜரான ஆசார்யஶ்ரேஷ்ட₂ர், அடியார்கள் அனைவரோடும் அங்கேயே இனிது எழுந்தருளியிருந்து, அம்மங்கைநல்லாளாலே உபசரிக்கப்பட்டு மிகவுகந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில்,
அஷ்டஸஹஸ்ரக்₃ராமத்தில் பருத்திக் கொல்லையம்மாளின் வீட்டில்
ராமாநுஜாசார்யருக்கு நடந்த ஆராத₄னத்தை விளக்கும்
இருபத்தேழாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# வைச்யன் ஸ்ரீவைஷ்ணவனாதல்

### வரத₃ாசார்யரின் ஆனந்த₃ம்

1-5. சந்திரன் போன்ற யதிராஜர் திருப்தியடைந்த நெஞ்சுடையவராய் அவ்வீட்டில் இனிது எழுந்தருளியிருந்து, தம் ஶிஷ்யர்களுக்கு அரும்பொருள்களை உபதே₃ஶித்து வருகையில், உஞ்சவ்ருத்தி செய்து முடித்த வரத₃ாசார்யர் வீட்டிற்கு எழுந்தருளினார். மனைவியிடமிருந்து நடந்த செய்தி முழுவதையும் அறிந்து மிகவும் பரபரப்படைந்தவராய், வைஷ்ணவரான அவ்வரதாசார்யர், தமது ஆசார்யரான யதிராஜர் திருப்தியடைந்திருப்பதைக் கண்டு மனைவியிடம் பின்வருமாறு கூறினார்.—"அபலைப்பெண்ணே!

நீ பா₃லையாயிருந்தபோதிலும் உன் அறிவு மிகப்பெரிதாயிருந்தது. உன்னால் பெரிய அற்புதம் நிகழ்த்தப்பெற்றுவிட்டது. அழகியவளே! நீ எனக்கு மனைவியல்லள்; நான் செய்த சிறிது பா₄க்₃யத்தால் என்னை இப்பிறவியில் அடைந்த பரதே₃வதையே நீ. எவனொருவன் ஆசார்யனுக்காக ஏதாவதொரு வழியில் உடலையும், செல்வத்தையும், உயிரையும்விட்டு அவ்வுத்தமரை ஆராதி₄க்கிருனே அவனே ஶிஷ்யன்; மற்றவன் ஆசார்யனை வஞ்சிப்பவனே. ஏதாவதொரு வழியில் தன் உடலையும், பொருளையும், உயிரையும் மஹாபுருஷரான ஆசார்யனின் பொருட்டு ஸமர்ப்பிப்பது நல்லதேயாகும்'' என்று.

## யதிராஜ ஸ்துதி

6-16. நல்லொழுக்கமுடைய தமது மனைவியை, (இவ்வண்ணமாகப்) பலவாறு கொண்டாடி, அவ்வைஷ்ணவோத்தமர் விரும்பியே மனிதவுருவை ஏற்றுக்கொண்டிருக்கும் அந்த யதிராஜருடைய திருவடிகளைப் பிடித்துக்கொண்டார். கைகூப்பிநின்று மிகவுகந்தவராய், யதிராஜரைப் பின்வருமாறு துதித்தார் :—''புருஷர்களில் சிறந்தவரே! உமக்கு நமஸ்காரம்; யதீஶ்வரரே! உமக்குப் பலகால் நமஸ்காரம். ஸ்ரீராமாநுஜரே! ஸ்த₂ாவரஜங்க₃மங்களடங்கிய இவ்வுலகின் நன்மையின் பொருட்டே உமது அவதாரம் ஏற்பட்டுள்ளது. உலகிற்கு ஆத₄ாரமானவனாய், பாபங்களைப் போக்கடிப்பவனாய், ஸர்வவ்யாபியான எம்பெருமானுடைய அவதாரம் உலகின் நன்மைக்காகவே ஆவதுபோல், உம் அவதாரமும் ஆகிறது. நீர் எல்லாம் அறிந்தவர்; எல்லாமறிந்தவர்களில் தலைவர்; எம்பெருமானுடைய வடிவாகவேயிருப்பவரென்று அனைவராலும் இசையப்பெற்றவர். ஸ்ரீராமாநுஜாசார்யரே! இக்காரணத்தினாலேயே உமது செயல்கள் ஆஶ்சர்யமானவையாய், சிறப்புற்று விளங்குகின்றன. விஷ்ணுவின் மாயையாகிற ஶரீரஸம்ப₃ந்த₄த்தால் உண்டான பிள்ளை, மனைவி, உற்றார் உறவினர் ஆகியவர்களிடம் ஈடுபட்ட நெஞ்சையுடையவனாய், பாழுங்கிணற்றில் விழுந்த பிராணிபோல் இவ்வுலகில் ஸம்ஸாரி ஜீவன் மயங்கி நிற்கிறான். பார்வையினாலேயே விஷத்தைக் கக்கும் பாம்பினால் கடிக்கப்பட்ட மனிதனை உயிர்ப்பிக்க வைத்₃யராஜனைத் தவிர வேறெவராலும் ஆகாததுபோல், மயங்கும் அந்த ஜீவஸமூஹத்தைத் தன் ஶக்தியால் ரக்ஷிக்கவல்லவர் உம்மையொழிய வேறு யார் உளர்? இருளை அழிப்பதற்கு ஸூர்யனைத் தவிர வேறு எவ

ராலும் ஆகாதது போலும், கோடையில் வெயிலால் வருந்துமவனின் தாபத்தைப் போக்குவதற்குச் சந்திரனைத் தவிர வேறு எவராலும் ஆகாததுபோலும், ஸம்ஸாரத்தில் வருந்துகிறவனுடைய வருத்தத்தைப் போக்குவதற்கு உமது திருவடியை ஆராதிப்பது தவிர வேறு வழியில்லை. எவருடைய திருவடிகளின் ஸ்பர்ஶத்தால் ப்3ரஹ்மரக்ஷஸ்ஸானது தான் பிடித்திருந்த உடலைத்தானே விட்டு தே3வர்களும், ஸித்3த4ர்களும் வாழும் புண்யலோகத்தை அடைந்ததோ, அத்தகைய பெருமையுடைய மஹாசார்யரான உமக்கு நமஸ்காரம். யோகி3யர் தலைவரே! தேவரீர் இன்று இவ்வுலகில் அவதரித்திராவிடில், என்னைப் போன்றவர்கள் எப்படி நற்கதியடையமுடியும்! கலி சென்ற வழியில் நெஞ்சு செல்லப் பெற்று, படித்தவர்களும் பாஷண்டி3களின் ஒழுக்கத்தில் ஈடுபட்டு நரகில் வீழ்கிறார்களே! எந்தக் கைம்முதலுமற்ற என்னிடம் கருணைவைத்து, பருத்திக்கொல்லை வீட்டைத் தேடிவந்து உமது திருவடித் தாமரைத்துகள்களாலே புனிதப்படுத்துவதற்காக ஶிஷ்யர்களோடு கூடியவராய் இங்கு எழுந்தருளியுள்ளீரே! யதிராஜரே! உம்மைக் கண்டதால் அடியேனது முந்தைவல்வினைகளெல்லாம் அழிந்து விட்டன. அடியேன் த4ன்யனானேன். செய்யவேண்டியதையெல்லாம் செய்தவர்களில் தலைவனானேன். எனது பித்ருக3ணங்கள் அனைவரும் வானவர் நாட்டை அடைந்துவிட்டனர்" என்று.

### ஶேஷப்ரஸாத3 ஸ்ரீபாததீர்த்தங்களால் வைஶ்யன் திருந்தியது

**17. *25.** அதற்குப்பின் யதிராஜரால் நியமிக்கப்பெற்ற வரத3ாசார்யர், மனைவியோடு கூடியவராய், அவருடைய பரமபவித்ரமான ஸ்ரீபாத3தீர்த்த2த்தைப் பருகி, ஶேஷ ப்ரஸாத3த்தையும் உண்டு உகந்தார். த3ம்பதியான அவ்விரு சிஷ்யர்களும் கருத்தொருமித்து வாழ்வதைக்கண்டு உகந்தவராய், அனைத்தையும் அறிவதில் வல்லவராய், மனிதர்களின் பாபங்களாகிற ஸமித்துக்களை எரிக்கும் அக்3னியென்று உலகெங்கும் புகழ்பெற்றவரான யதிராஜர், அவர்களால் எப்போதும் ஆராதி4க்கப்பட்டு, சிஷ்யர்களோடுகூட அவ்வீட்டிலேயே தங்கினார். யதிராஜருடைய ஸ்ரீபாத3தீர்த்த2த்தையும், ஶேஷப்ரஸாத3த்தையும் அன்போடு எடுத்துக்கொண்டு, த3ம்பதிகளிருவரும் அந்த வைஶ்யனின் வீட்டிற்குச் சென்றனர். வைஶ்யனைத் திருத்துவதில் உறுதிகொண்டவளான லக்ஷ்மி, அந்தத் தீர்த்த2ப்ரஸாத3ங்களை அவனுக்கு அளித்தாள்.

அறிவு கெட்டுக்கிடந்த அந்த வைஶ்யனுக்கு, அந்த ஸ்ரீபாத தீர்த்தத்தைப் பருகியதாலும், அந்த ஶேஷப்ரஸாதத்தை உண்டதாலும் பெருநல்லறிவு ஏற்பட்டது. அவன்—லக்ஷ்மியைக் குறித்து ப்ரதக்ஷிணமும், நமஸ்காரமும் செய்து, கைகூப்பிநின்று, 'தாயே! எனக்கு நற்குணவதியான நீயே தாயும், தந்தையும், ரக்ஷகமுமாயிருக்கிறாய். இதில் ஐயமில்லை. அஜ்ஞானமாகிற இருட்டினால் குருடாகி அறிவுகெட்ட நான் காமவசப்பட்டு, உனது தன்மையை அறியாமல் உன்னிடம் கெட்ட எண்ணம் கொண்டேன். அதைப் பொறுத்தருள்வாய். உன் பிள்ளையான என்னை ரக்ஷிப்பாய். பேரறிவுடையவளே! உனது ஆசார்யரின் திருவடித் தாமரையில் என்னைச் சேர்ப்பித்து, நான் செய்த பாபங்களுக்கு ப்ராயஶ்சித்தம் செய்வித்து, வருந்தத்தக்க நிலையிலுள்ள அடியேனை எப்படியாவது நல்வழிப்படுத்துவாய்'' என்று வார்த்தை சொன்னான்,

### வைஶ்யன் வைஷ்ணவனாதல்

25. *32. அந்த மங்கை நல்லாள் வைஶ்யனுடைய அவ்வார்த்தையைக் கேட்டுப் பெருவியப்புற்று, மஹாத்மாவான தன் கணவருக்கு அச்செய்தியைச் சொன்னாள். அவள் சொன்னது அனைத்தையும் கேட்டு வியப்புற்ற கருணைக்கடலான பருத்திக் கொல்லை அம்மாளும், எம்பெருமானார்க்கு ப்ரியஶிஷ்யராகையாலே, வைஶ்யர்களிற் சிறந்த அவனை உடனே அழைத்துச்சென்று யதிராஜரின் திருவடித்தாமரைகளில் சீடனாக ஸமர்ப்பித்தார். நிர்ஹேதுகமாகச் சேதனரை ரக்ஷிக்கும் சிறப்புமிக்க யதிராஜரும் அந்த வைஶ்யனுக்கு உடனே பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்து கருணையோடு அவனை ரக்ஷித்தார். வைஶ்யனும் அவரது கருணையால் ஸ்ரீவைஷ்ணவனாகி, காமத்தை வென்று, ஆசார்ய கைங்கர்யமாகிற பெரிய தவத்தைச் செய்பவனாய், குற்றமற்ற ஶரத்கால

சந்திரன்போலே பிரகாஸித்தான். பலவகைப்பட்ட தனது செல்வங்கள் அனைத்தையும் ஆசார்யன் திருமுன்பே ஸமர்ப்பித்து, அவற்றை அங்கீகரிக்கவேண்டுமென்று அவரைப் பலவாறு பிரார்த்தித்தான். கருணைக்கடலான யதிராஜரும் அப்பெரும் பொருளைக் கருணையோடு ஏற்றுக்கொண்டு, அந்த வைஶ்யனுக்கு த்ருப்தியை விளைத்தார். திக்கெட்டும் பரவிநின்ற புகழுடையவராய், அனைத்துலகையும் ரக்ஷிப்பவராய், ஶிஷ்யர்கள் அனைவராலும் நன்கு ஸேவிக்கப்படுமவரான யதிராஜர் அப்போது வரதாசார்யர் திருமாளிகையில் இனிது வாழ்ந்தார்.

**ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜ சரித்திரத்தில்**
**வைஶ்யன் ஸ்ரீவைஷ்ணவனுதலாகிற**
**இருபத்தெட்டாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.**

## 25. கொ(கு)மாண்டூர் இளையவில்லி

**சரமோபாய நிர்ணயம் :** குமாண்டூர் இளையவில்லி என்கிறவர் திருப்பேருரிலே எழுந்தருளியிருக்கச் செய்தே, ஒருநாள் ராத்ரி ஸ்வப்னத்திலே உடையவர் அநேகமாயிரம் ஆதித்யர்கள் சேர உதித்தாப்போலே நிரவதிகதேஜோரூபமான திவ்ய விமானத்திலே ஏறியருளி நிற்கப் பரமபதத்துக்கும் பூமிக்கும் நடுவே நிரவகாஶமாம்படி பரமபதநாதன், அநந்தகருடவிஷ்வக்ஸேனாதிகள் தொடக்கமான அநேகமாயிரம் நித்யஸூரிகளும், ஆழ்வார் நாதமுனிகள் தொடக்கமான அளவிறந்த முக்தரும் தாமுமாக ஶங்ககாஹளபேரிகள் தொடக்கமான வாத்ய கோஷங்களுடனே வந்து உடையவரை எதிர்கொண்டு திவ்ய விமானம் முன்னே நடக்கத் தாமும் பரிகரமும் பின்தொடர்ந்து போகிறதாகக் கண்டு திடுக்கிட்டு எழுந்திருந்து, அசலகத்தில் வள்ளல் மணிவண்ணனை அழைத்தருளி, "எங்களாசார்யரான எம்பெருமானார் திவ்யவிமானத்திலே ஏறியருளி, பரமபதநாதன் நித்யஸூரிகளும் தானுமாக எதிர்கொள்ளப் பரமபதத்துக்கு

எழுந்தருளுகிறதாகக் கண்டேன். தரியேனினி'' என்றருளிச் செய்து 'எம்பெருமானார் திருவடிகளே ஶரணம்' என்று மூச் சடங்கினாரிறே. இப்படி இருந்த இடங்களிலே மூச்சடங்கினார் பலரும் உண்டிறே. அருகிருந்தாரை ஏற்கவே ஆணையிட்டு விலக்குகையாலும் தர்ஶநார்த்தங்களை ப்ரவர்த்திப்பிக்க வேண் டிப் பெருமாள் வலிய விட்டுவைக்கையாலும் அருகிருந்த முதலி கள் ஆற்றாமைப்பட்டிருந்தார்கள். இப்படித் தம்முடைய விஶ்லேஷத்தில் ஸ்வாஶ்ரிதர் மூச்சடங்கும்படியான வைலக்ஷண்ய முடையராயாயிற்று உடையவர்தாமிருப்பது.

## 26. உக்கலாழ்வான்

ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: (எம்பெருமானார் வைப வம்) உக்கலாழ்வான் (எம்பெருமானாருக்கு) ப்ரஸாதகல மெடுப்பர்.

## 27. உக்கலம்மாள்

ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: (எம்பெருமானார் வைப வம்) உக்கலம்மாள் (எம்பெருமானார்க்குத்) திருவாலவட்டம் பரி மாறுவர்.

## 28. மாருதிப் பெரியாண்டான்

ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: (எம்பெருமானார் வைப வம்) மாருதிப் பெரியாண்டான் (எம்பெருமானாருக்குத்) திருக் கைச் செம்பு பிடிப்பர்.

## 29. ஆஸூரிப் பெருமாள்

'ஆயி' என்னும் ஜநந்யாசார்யர் வம்சத்தவர் கூறும் விபரம்: எம்பெருமானார் திருவவதரித்த வம்சம் ஹாரீத வம்சம். 'ஆஸூ ரிப்பெருமாள்' 'ஆஸூரிதேவர்' என்று ப்ரஸித்தரான ஆஸூரி புண்டரீகாக்ஷர் இந்த ஹாரீத வம்சத்தில் அவதரித்து எம்பெரு மானாரை அடிபணிந்து போந்த மஹாநுபாவர். இவர் 74 ஸிம்

ஹாஸநாதிபதிகளில் ஒருவர். **"குடீம் க்ருத்வா தஸ்மிந் யது₃ கி₃ரிதடே நித்ய வஸதி:"** [யாதவகிரியில் ஓர் குடில் அமைத்துக் கொண்டு அதில் நித்யவாஸம் செய்யவேண்டும்.] என்று எம் பெருமானர் பரமபதத்திற்கு எழுந்தருளுவதற்கு முன்பு கட்டளை யிட்ட ஆறு உபதேசங்களில் நான்காவதான ஸ்ரீயாதவகிரியில் நித்யவாஸத்தை ஆதரித்து, இந்த ஆஸூரிப்பெருமாள் திரு நாராயணபுரத்துக்கு எழுந்தருளி, எம்பெருமானர் திருவுள்ளத் துக்கு உகப்பாக அங்கே நிலையாக நின்று, பெருமாளுக்கு மங்களாசாஸன்பரராய் த₃ர்ஶந நிர்வாஹகராய் எழுந்தருளி யிருந்தார். இவர் வம்சத்தில் அவதரித்தவர் ஜநந்யாசார்யர் (ஆய்).

## 30. முடும்பை நம்பி

பிள்ளையுலகாரியர், எறும்பியப்பா, ப்ரதிவாதி பயங்கர மண்ணன் ஆகியோர் இவர் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்பர்.

# முடிவுரை

இதுவரையில் எம்பெருமானருடைய முக்கிய சீடர்களைப் பற்றியும், மற்ற ஸிம்ஹாஸனாதிபதிகளைப் பற்றியும் குறிப்புகள் கொடுக்கப்பட்டன. மேலும் சிலரைப் பற்றிய குறிப்புகள் பிற் காலத்தில் தெரியவந்தால் அடுத்த பதிப்பில் சேர்க்கப்படும். இனி, பட்டர் தொடங்கியுள்ள ஆசார்யர்களைப் பற்றிய விளக் கங்கள் ஆசார்ய வைபவ மஞ்ஜரியின் மேல் பாகங்களில் அளிக்கப்படும்.

